# இதழியல் உலகம்

முனைவர் முகிலை இராசபாண்டியன்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி சென்னை – 600 113

வ.உ.சி. அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியோர் : பலர்)

வரிசை எண் : 11

## BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | : | Italiyal ulakam |
| Author | : | Dr. Muhilai Rajapandian<br>Professor of Tamil<br>Presidency College, Chennai - 600 005 |
| General Editor | : | Dr. T. Mahalakshmi<br>Associate Professor<br>Faculty of Tamil Literature and Manuscriptology<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 712 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2011 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | x+262 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 120/- (Rupees One hundred and twenty only) |
| Printed by | : | United Bind Graphics<br>42/93, Millers Road<br>Kilpauk, Chennai - 600 010. |
| Subject | : | Journalism |

பேரா. முனைவர் கரு. அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# அணிந்துரை

பேராசிரியர் முனைவர் முகிலை இராசபாண்டியன் அவர்கள் எழுதியுள்ள 'இதழியல் உலகம்' என்னும் இந்நூல்

**பழங்காலத்தில் செய்தி பரவிய முறை,**
**இந்திய இதழ்கள்,**
**தமிழ் இதழ்கள்,**
**இதழ் ஆசிரியர்கள்,**
**இதழ்களின் பணிகள்,**
**மக்களாட்சியில் இதழ்களின் பங்கு,**
**சமுதாய மறுமலச்சி இதழ்கள்,**
**விடுதலை இயக்க இதழ்கள்,**
**இதழ்களின் வகைகள்,**
**இதழ்களின் நிருவாகம்,**
**இதழ்களின் சட்டங்கள்,**
**இதழ்களின் சுதந்திரம்,**
**செய்தியாளரும் செய்தியும்,**
**செய்தி வகைகள்,**
**செய்தி நிறுவனங்கள்,**
**செய்தியைச் செப்பனிடுதலும் பிழைதிருத்தலும்,**
**செய்தி அமைப்பு,**
**பக்க வடிவ அமைப்பு,**
**ஆசிரியர் குழுவும் இதழ் நடையும்,**
**இதழ்களின் விளம்பரம்**

எனப் பொருண்மைக்கேற்பத் தலைப்புக்களில் அமைந்து, ஏராளமான தரவுகள் கொண்டு விரிவாக அமைந்துள்ளது.

இதழ் வரலாறு, இதழ்வழி சமூகப்பணி, இதழ் எவ்வாறு நடத்துவது, இதழ் குறித்த சட்டங்கள் யாவை எனுமாறு பல ஐயங்களுக்கேற்ற தெளிவுகளை இந்நூலை வாசிப்போர் அறிய இடம் தரும் அரிய நூலாக இது அமைகிறது.

செய்திகளை விரித்தும் தொகுத்தும் வகுத்தும் பொருத்தமான தலைப்புகள் இட்டும் விரிவுற எழுதப்பட்டுள்ள இந்நூல் இதழ்கள் குறித்த பல நூல்கள் வந்துள்ள போதிலும் தனித்தொரு இடம்பெற்று விளங்கும் என்பதில் ஐயமில்லை.

தொடக்கம் முதல் இறுதி வரை இந்நூலை வாசிக்க த் தூண்டும் வகையில் இவர் தந்துள்ள தலைப்புகள் நம்மைச் சுண்டி இழுக்கும் உத்தி முறைகளைக் குறுந்தலைப்புகள் வழி செய்திருப்பது நூலாசிரியரின் சிறப்பாகும்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் **இந்து சமய அறநிலையம் மற்றும் தமிழ் வளர்ச்சி பண்பாட்டுத் துறை அமைச்சர் மாண்புமிகு சுப. சண்முகநாதன்** அவர்களுக்குத் தமிழுலகம் என்றும் நன்றிக் கடன்பட்டுள்ளது.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழக அரசின் **தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறைச் செயலாளர் திரு. து.நா. இராமநாதன் இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இச்சொற்பொழிவின் எழுத்துருவை மெய்ப்புத் திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும் இச்சொற்பொழிவு மற்றும் நூல் தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்கள் மற்றும் கணிப்பொறியாளர் திருமதி எ.ம. லட்சுமி ஆகியோருக்கும் எம் நன்றிகள் என்றுமுண்டு. இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த யுனைடெட் பைண்ட் கிராபிக்ஸ் அச்சகத்தாருக்கு எம் பாராட்டுகள்.

இயக்குநர்

# ஆசிரியர் குறிப்பு



கன்னியாகுமரி மாவட்டத்தில் முகிலன் குடியிருப்பு என்னும் ஊரில் பிறந்த இவர் மதுரை, அண்ணாமலை, பெரியார், சென்னைப் பல்கலைக்கழகங்களில் தமிழ், இதழியல், மொழியியல், கல்வியியல் ஆகியவற்றில் எம்.ஏ. பட்டமும் எம்.ஃபில்., பிஎச்.டி., பி.எட். ஆகிய பட்டங்களையும் பெற்றுள்ளார். தமிழ்நாடு அரசின் கல்லூரிக் கல்வித் துறையில் திருவாரூர், விருத்தாசலம், சென்னை - நந்தனம் அரசு கலைக் கல்லூரிகளில் தமிழ் விரிவுரையாளராகப் பணியாற்றி, தற்போது சென்னை மாநிலக் கல்லூரியில்தமிழ்ப்பேராசிரியராகப்பணியாற்றுகிறார்.

சென்னை, தரமணியில் உள்ள தமிழ் இணையப் பல்கலைக் கழகத்தில் மூன்று ஆண்டுகள் உதவி இயக்குநராகவும் பணியாற்றியுள்ளார்.

5 நாவல்கள், 2 சிறுகதைத் தொகுதிகள், 3 நாடக நூல்கள், 3 கவிதைத் தொகுதிகள், 5 திறனாய்வு நூல்கள், 2 ஆய்வு நூல்கள், 2 உரை நூல்கள், 2 இலக்கண நூல்கள், 3 வரலாற்று நூல்கள், 5 சிறுவர் நூல்கள் முதலாக 33 நூல்களையும் 10க்கும் மேற்பட்ட பாடநூல்களையும் 70க்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளையும் படைத்துள்ளார். தமிழ் இணையப் பல்கலைக் கழகத்தின் மின் நூலக உருவாக்கத்தில் பெரும்பங்காற்றிய துடன் 20க்குமேற்பட்ட பாடங்களையும் படைத்து வழங்கியுள்ளார்.

மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்தின் பாரதியார் அறக்கட்டளைப் பரிசையும் (1999) பாரதிதாசன் அறக்கட்டளைப் பரிசையும் (2000) பெற்றுள்ளார். இவரது 'அலைகளின் காலம்' என்னும் நாவலுக்கு இராசபாளையத்தில் உள்ள திருவள்ளுவர் மன்றம் 'கதைச் செம்மணி' என்னும் விருதையும் முதல் பரிசையும் (2003) வழங்கி யுள்ளது. அருகருகே நான்கு வீடுகள் என்னும் நாவலுக்கு இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் மீனாட்சி சங்கரலிங்கம் விருது (2003) கிடைத்துள்ளது. இவரது போகிறவழி என்னும் நாவலைக்கோவையிலுள்ள கஸ்தூரி சீனிவாசன் அறநிலையம் 2003-2004ஆம் ஆண்டுகளில் வெளிவந்த தமிழ் நாவல்களில் சிறந்த நாவலாகத் தேர்வு செய்து பரிசு வழங்கியுள்ளது.

தமிழ்க்கலை இலக்கியப் பேரவையும் தாராபாரதி அறக்கட்டளையும் இணைந்து இவருக்குத் தாராபாரதி கவிதை விருது (2003) வழங்கியுள்ளன. அறநூல்கள் என்னும் நூலுக்கு இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் மீனாட்சி சங்கரலிங்கம் விருது (2005) வழங்கியுள்ளது. குலம் என்ற நாடக நூல் பாரத ஸ்டேட் வங்கியின் முதல் பரிசினைப் (2005) பெற்றுள்ளது. இதழியல் களத்தில் ஆதித்தனார் என்ற நூலுக்குச் சேலத்திலுள்ள கே.ஆர்.ஜி. நாகப்பன் இராஜம்மாள் அறக்கட்டளைச் சிறந்த இதழியல் நூலுக்கான விருது (2006) வழங்கியுள்ளது. தமிழக எல்லைப் போராட்டங்கள் என்ற நூலுக்கு திருப்பூர் தமிழ்ச் சங்கம் இலக்கிய விருது-2007 வழங்கியுள்ளது.

# முன்னுரை

மக்களாட்சியின் மூன்று தூண்கள் என்று போற்றப்படுபவை நாடாளுமன்றம், நீதிமன்றம், அரசு நிர்வாகம் என்பவை ஆகும். நான்காவது தூணாகக் குறிப்பிடப்படும் தகுதி கொண்டவை இதழ்கள். அச்சு எந்திரத்தின் கண்டுபிடிப்பால் உலகம் முழுவதும் செய்திப் பரிமாற்றத்திற்கு வழிவகுத்த இதழ் இன்று தொழில்நுட்ப மேம்பாட்டால் கணினியின் துணையுடன் அச்சிடப்பட்டு வெளிவருகிறது. இதயத்திலிருந்து உடலின் எல்லாப் பாகங்களுக்கும் செல்லும் இரத்தக் குழாய்களைப் போல் உலகின் பல பாகங்களுக்கும் சென்று செய்தியாளர்கள் செய்திகளைத் திரட்டிக் கொண்டுவந்து இதழ்களின் வாயிலாகத் தருகிறார்கள்.

செய்தியை அறிந்துகொள்வதற்கு வானொலி, தொலைக்காட்சி, இணையம் என்று பல்வேறு மின்னணு ஊடகங்கள் இன்று இருந்தாலும் அச்சு ஊடகமான இதழ்களின் வாயிலாக ஒரு செய்தியைப் படிக்கும்போதுதான் செய்தி படித்த முழுமை ஏற்படுகிறது. வானொலி வாயிலாகச் செய்தியைக் கேட்க வேண்டும் என்றால் செய்தி ஒலிபரப்பாகும் நேரத்திற்குச் சரியாக வானொலியை இயக்கி அச்செய்தியினைக் கேட்க வேண்டும். தொலைக்காட்சியின் வாயிலாகச் செய்தியினை அறிந்துகொள்ள வேண்டும் என்றால் தொலைக்காட்சிப் பெட்டியின் முன்பாக அமர வேண்டும். இணைய இதழ்களின் வாயிலாகப் படிக்க வேண்டும் என்றால் கணினியின் முன்பு அமர்ந்து இணைய இணைப்பின் வாயிலாகப் பார்க்க வேண்டும். ஆனால் அச்சு ஊடகமான இதழ்களின் வாயிலாகச் செய்தியினைப் படிக்கவேண்டும் என்றால் இத்தகைய கட்டுப்பாடு எதுவும் கிடையாது. நாளிதழ் ஒன்றையோ மாலை இதழ் ஒன்றையோ வார இதழ் ஒன்றையோ நாம் வாங்கிவிட்டோம் என்றால் நம் மனப்போக்கின்படி செய்திகளைப் படிக்கமுடியும்.

முதலில் தலைப்புச் செய்திகளை மட்டும் படித்துவிட்டு, பின்னர் நேரம் கிடைக்கும்போது செய்தி விளக்கங்களைப் படிக்கலாம். அல்லது தேர்ந்தெடுத்த செய்திகளை மட்டும் முதலில்

படித்துவிட்டுப் பிற செய்திகளைப் பின்னர்ப் படித்துக் கொள்ளலாம். வீட்டிலிருந்தபடியே படிக்கலாம்; பேருந்தில் பயணம் செய்து கொண்டே படிக்கலாம்; அலுவலக ஓய்வு நேரத்தில் படிக்கலாம்; முன் அறையில் உட்கார்ந்துகொண்டே படிக்கலாம்; படுக்கை அறையில் படுத்துக்கொண்டே படிக்கலாம். ஒரு குறிப்பிட்ட செய்தி நமக்குப் பிடிக்கவில்லை என்றால் அந்தச் செய்தியை அல்லது அந்தச் செய்தி இடம்பெற்ற பக்கத்தை ஒதுக்கி விட்டுத் தொடர்ந்து படிக்கும் வசதியும் நம்மிடம் இருக்கிறது. இவ்வாறு எங்கே எதனைப் படிக்க நினைக்கின்றோமோ அங்கே அப்படி அதனைப் படிக்கக் கூடிய வசதி இந்த அச்சு ஊடகத்தின் வாயிலாக நமக்குக் கிடைக்கிறது.

இதழ்கள் வெளிவருவதற்கு முன்பே செய்திகளை மனிதன் பல வகைகளில் அறிவித்து வந்தான். தனிச்செய்தி அறிவிப்பு, பொதுச் செய்தி அறிவிப்பு என்று இருவகையில் செய்தி அறிவிக்கப்பட்டது. செய்கை எனப்படும் சைகையாலும் உரையாடலாலும் கடிதத்தாலும் தொலைபேசியின் துணையாலும் தனிச்செய்திகள் பரிமாறப்பட்டன. பொதுச் செய்திகள் தண்டோரா போடுதல், முரசு அறைதல், மணி அடித்தல், சங்கு முழங்குதல் முதலிய பல வகைகளில் அறிவிக்கப் பட்டு வந்தன. இரகசியச் செய்திகளைப் புறாக்கள் மூலம் மன்னராட்சிக் காலத்தில் அனுப்பி வந்ததையும் அனைவரும் அறிவோம். இந்தச் செய்தி அறிவித்தலின் வளர்ச்சியானது இதழ்களின் பெருக்கத்தால் ஒரு தனித்துறை என்னும் தகுதியைப் பெற்றுள்ளது.

இதழியல் என்னும் துறை தோன்றிய பிறகு அதற்கான நூல்களும் எழுதப்பட்டன. பெரும்பாலும் ஆங்கில நூல்களின் துணையினால் ஆங்கிலத்தில் கற்பிக்கப்பட்டு வந்த இதழியல் துறை தமிழ் இதழ்களின் பெருக்கத்தின் காரணமாகத் தமிழிலும் கற்பிக்கப்பட்டு வருகிறது. தமிழில் கற்பிக்கப்படும் இதழியல் துறை மேம்பாட்டிற்கு ஆங்கிலத்திலிருந்து மொழிபெயர்க்கப்பட்ட இதழியல் நூல்களினால் பெரும்பயன் கிடைக்கவில்லை. தமிழ் இதழ்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்ட தமிழ் நூல்களால் மட்டுமே தமிழ் இதழியல் துறையினைப் பற்றித் தெளிவாக விளக்கிட இயலும். அந்த வகையில் இதழியல் வரலாற்றினைத் தமிழ் இதழ்களின் எடுத்துக்காட்டுகளுடன் இந்த நூலினை உருவாக்கியுள்ளேன்.

நாட்டு விடுதலை, தொழிலாளர் இயக்கம், இதழ்ப் பணி என்னும் முப்பரிமாணம் கொண்டவர் வ.உ.சிதம்பரனார். அவரது பெயரில் அமைக்கப்பட்டுள்ள வ.உ.சி. அறக்கட்டளைச் சொற்பொழிவின் வாயிலாக 'இதழியல் உலகம்' என்னும் இந்த சொற்பொழிவினையும் நூலினையும் வெளியிடுவதற்குக் கிடைத்த இந்த வாய்ப்பு ஒரு நல்வாய்ப்பு என்றே கருதுகிறேன்.

இந்த அறக்கட்டளைச் சொற்பொழிவினை எனக்கு வழங்குவதற்குக் காரணமாக இருந்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் முன்னாள் இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்களுக்கும் அறக்கட்டளைப் பொறுப்பாளர் முனைவர் தி. மகாலட்சுமி அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். நிறுவன இயக்குநர் முனைவர் கரு.அழ. குணசேகரன் அவர்கள் இந்த இதழியல் நூல் விரைவில் வெளியாவதற்கு ஊக்கம் தந்துள்ளார். அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**முகிலை இராசபாண்டியன்**

# பொருளடக்கம்

# 1. பழங்காலத்தில் செய்தி பரவிய முறை

உலகில் உள்ள உயிர்கள் ஒவ்வொன்றும் ஏதோ ஒரு வகையில் தங்களுக்குள் தகவல்களைப் பரிமாறிக் கொள்கின்றன. பறவைகள், விலங்குகள் முதலான உயிரினங்கள் பல்வேறு ஒலிகளின் மூலம் தகவல்களைப் பரிமாறுகின்றன. தாவரங்கள் மணம், நிறம் முதலியவற்றின் துணையுடன் தகவல் பரிமாற்றம் செய்கின்றன. மனிதன் தனது பேச்சின் வாயிலாகத் தனது கருத்தை மற்றவர்களுக்குத் தெரிவித்தான். பின்னர்த் தனது அறிவின் துணையுடன் பல்வேறு தகவல் தொடர்பு ஊடகங்களை உருவாக்கிக் கொண்டான். அவற்றின் வாயிலாக எளிமையாகத் தகவல்களைப் பரிமாறிக் கொள்கிறான்.

## மக்கள் தொடர்பு

எல்லா உயிர்களும் தகவல் பரிமாற்றம் செய்கின்றன என்றாலும் அவற்றின் தகவல் பரிமாற்றம் பழங்காலத்தில் எப்படி இருந்ததோ அப்படியே தற்காலத்திலும் இருக்கிறது. இயல்பாக அமைந்துள்ள இந்தத் தகவல் தொடர்பு என்பது அவற்றின் தனிப்பட்ட வாழ்க்கைக்குப் பெரிதும் உதவுகின்றது. மனிதன் தனது இயல்பான சைகை, பேச்சு முதலிய நிலையைக் கடந்து தகவல் தொடர்புக்கென்று பல புதிய முறைகளை உருவாக்கியுள்ளான். இவ்வாறு மனிதன் உருவாக்கியுள்ள தகவல் தொடர்பு முறையில் முதன்மையானது இதழியல் துறை ஆகும்.

## மனிதன் செய்தி அறிந்த விதம்

மனிதன் தோன்றிய காலத்திலேயே செய்தியும் தோன்றி விட்டது. ஒரு மனிதன் மற்றவருக்குத் தனது கருத்தையோ பிறர் கருத்தையோ தெரிவித்ததே செய்திப்பரவலை அடிப்படையாகக் கொண்டதுதான். ஆனால் அக்காலத்தில் செய்தி பரவிய முறை இதழியல் என்று தனித்த ஒரு துறையாக வழங்கப்பெறவில்லை. செய்தியைப் பரப்புவதற்கும் தற்காலத்தில் உள்ளது போன்ற தகவல் தொடர்பு ஊடகங்களும் இல்லை.

மொழி தோன்றுவதற்கு முன்பு சைகைகளாலும் ஒலிகளாலும் மனிதன் தனது கருத்தைப் பரப்பி வந்தான். நேருக்கு நேர் செய்தி பரப்பு

வதற்குச் சைகைகளையும் ஒலிகளையும் பயன்படுத்திய மனிதன் தொலைவில் உள்ளவர்களுக்குச் செய்தி வழங்குவதற்கும் நிரந்தரச் செய்தியாக இருப்பதற்கும் சித்திரங்களைப் பயன்படுத்தினான். ஒலியை அடிப்படையாகக் கொண்டு பேச்சு மொழியும் சித்திரங்களை அடிப்படையாகக் கொண்டு எழுத்து மொழியும் தோன்றின எனலாம்.

இவ்வாறு தோன்றிய செய்திப் பரவல் தற்காலத்தில் காணப்படும் செய்தித்தாள் நிலையை அடைவதற்குப் பல்லாயிரம் ஆண்டுகள் கடந்தன.

## செய்தி அறிவித்த முறை

உலகில் நிகழ்கின்ற நிகழ்ச்சிகள் ஒவ்வொன்றும் செய்தியாகின்றன. அச்செய்தி மக்களின் தன்மைக்கும், செய்தியின் தன்மைக்கும் ஏற்பப் பரபரப்பாகப் பேசப்படலாம் அல்லது வெளிவராமலேயே மறையலாம். ஒருவர் மற்றொருவரிடம் ஒரு கருத்தை வெளிப்படுத்தும் போது ஒரு செய்தி அறிவிக்கப்படுகிறது. இது நேருக்கு நேர் செய்தியை அறிவிக்கும் முறை ஆகும். இங்கே செய்தி அளிப்பவர் – கேட்பவர் என்னும் இருவர் மட்டுமே இருக்கின்றனர். ஒருவர் ஒரே நேரத்தில் பலருக்குச் செய்தியைத் தெரிவிக்க விரும்பும் போது அவர் ஒரு பொது இடத்தில் நின்று அனைவரின் கவனத்தையும் ஈர்த்து, செய்தியைத் தெரிவிப்பார். இது நேருக்கு நேர் பலரிடம் செய்தியைத் தெரிவிக்கும் முறை ஆகும். ஒருவரால் ஒரு செய்தியை நேரில் சென்று தெரிவிக்க இயலாத போது அச்செய்தியைக் கடிதத்தின் மூலம் தெரிவிக்கலாம். இது கடிதத்தின் வாயிலாகச் செய்தி தெரிவிக்கும் முறை ஆகும். கடிதச் செய்தி பெரும்பாலும் தனி மனிதச் சார்பு அல்லது குடும்பச் சார்புடையது ஆகும். ஆனால் தற்காலத்தில் கடித இலக்கியம் என்ற இலக்கிய வளர்ச்சிக்குப் பிறகு அது பொதுவான செய்திகளையும் தாங்கி வருகிறது.

செய்தியைப் பரப்புவதற்கு ஒலியையும் சித்திரங்களையும் பயன் படுத்திய பண்டைக்கால மக்கள் சில ஒலிகளையும், பொருள்களையும் செய்தியைத் தெரிவிப்பதற்கு அடையாளங்களாகப் பயன்படுத்தி யுள்ளனர்.

பழங்காலத்தில் செய்திகளைத் தெரிவிப்பதற்கு மக்கள் கூவியுள்ளனர். மக்கள் தங்கள் குறையைத் தெரிவிப்பதற்குக் கூவும் வழக்கமும் இருந்திருக்கிறது. கூவியவனை மன்னன் அழைத்து அவனது குறையைக் கேட்டறிந்து அக்குறையைத் தீர்த்துள்ளான். இதைத் தற்போதும் 'கூவேகூ' என்னும் விளையாட்டாக விளையாடு வதைக் காணலாம்.

விசில் அடித்தலும் செய்தியின் அடையாளமாக இருந்துள்ளது. ஒரு குழுவினர் தங்களிடையே செய்தியைத் தெரிவிப்பதற்கு அடையாளமாக விசில் அடிப்பதைத் தற்காலத்திலும் காணலாம்.

சங்கு, மணி, பறை, கொடி முதலியவையும் செய்தியின் அடையாளமாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**சங்கு**

சங்கு ஒலித்தலைச் செய்தியின் அடையாளமாகப் பழங்காலத்தில் பயன்படுத்தியுள்ளனர். மகாபாரதத்தில் கண்ணன் 'பாஞ்ச சன்னியம்' என்ற சங்கை வைத்திருந்ததாகவும் அதைப் போரின் போது ஒலித்ததாகவும் அறிய முடிகிறது. தமிழ்நாட்டின் தென்பகுதியில் வாழ்ந்த 'அய்யா வைகுண்டர்' என்னும் முத்துக்குட்டி சுவாமிகள் நல்ல செய்திகளை அறிவிப்பதற்குச் சங்கு ஒலிக்கச் செய்துள்ளார். அவரது கோயில்களில் பூசையை அறிவிப்பதற்குத் தற்காலத்திலும் சங்கு முழங்கப்படுகிறது.

தமிழ்நாட்டில் தற்காலத்தில் சங்கு ஒலித்தல் இறப்புச் செய்தியை அறிவிக்கப் பயன்படுத்தப்படுகிறது. தொழிற்சாலைகளில் வேலை நேரத்தை அறிவிக்கும் அடையாளமாக மின்சாரச் சங்கு ஒலிப்பதையும் அபாய அறிவிப்பாகச் சங்கு ஒலிக்கப்படுவதையும் காணமுடிகிறது.

கிராமப் பஞ்சாயத்து அலுவலகங்களில் அதிகாலையை அறிவிப்பதற்கும் பகல் முடிவதை அறிவிப்பதற்கும் மின்சாரச் சங்கு பயன்படுத்தப்படுகிறது.

*எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்*
*மங்காத தமிழென்று சங்கே முழங்கு*

என்னும் பாரதிதாசனின் பாடலும் செய்தி அறிவித்தலின் அடையாளமாகச் சங்கைத் தெரிவிக்கிறது.

**மணி**

செய்தியின் அடையாளமாக அக்காலத்தில் மணியும் ஒலிக்கப் பட்டிருக்கிறது. வீரபாண்டிய கட்டபொம்மன், திருச்செந்தூரில் கோயில் கொண்டுள்ள முருகனின் நண்பகல் வழிபாடு முடிந்த பின்னரே உணவு உண்ணும் பழக்கத்தைக் கொண்டிருந்தான். அவ்வாறு வழிபாடு முடிந்ததை அறிந்துகொள்வதன் அடையாளமாக மணி ஒலிக்கச் செய்தான். அதற்காக அவன் திருச்செந்தூரிலிருந்து பாஞ்சாலங்குறிச்சிவரை மணி மண்டபங்களை அமைத்துள்ளான்.

மதுரையை ஆண்ட திருமலை மன்னனும் ஒவ்வொரு நாள் இரவிலும் திருவில்லிபுத்தூர் ஆண்டாளின் வழிபாடு முடிந்த பின்னரே உணவு உண்டான். ஆண்டாளுக்கு இரவு வழிபாடு முடிந்ததை அறிந்து கொள்வதற்குத் திருவில்லிபுத்தூரிலிருந்து மதுரைவரை மண்டபங்களைக் கட்டி, மணி ஒலிக்கச் செய்துள்ளான்.

தற்காலத்திலும் இந்துக் கோயில்களிலும் கிறித்தவத் தேவாலயங்களிலும் பூசையின் அடையாளமாக மணி ஒலிப்பதைக் காண முடிகிறது.

இரயில் நிலையங்களில் இரயில் புறப்படுவதை அறிவிப்பதற்கும் பள்ளிக் கூடங்களில் வகுப்பு தொடங்குவதை அறிவிப்பதற்கும் மணி ஒலிக்கப்படுகிறது.

ஏலம் நடத்தும் இடத்தில் ஏலம் தொடங்குவதையும் முடிவதையும் அறிவிக்கவும் மணி பயன்படுத்தப்படுகிறது.

தற்காலத்தில் பெரும்பாலான வீடுகளில் அழைப்பு மணி காணப்படுகிறது. வெளியிலிருந்து வரும் ஒருவர் தனது வருகையை அறிவிக்க அழைப்பு மணியை அடிப்பதை நாம் காண்கிறோம்.

**பறை**

பறையறைதலையும் அக்காலத்தில் செய்தியின் அடையாளமாகப் பயன்படுத்தியுள்ளனர். கோட்டை மதிலின் மேலிருந்து அல்லது கோட்டை வாயிலின் முன்பிருந்து பறை ஒலித்துள்ளனர். பறை ஒலி என்பது செய்தியின் முன் அறிவிப்பாகப் பயன்பட்டுள்ளது. பறை ஒலி கேட்டுக் கூடிய மக்களின் முன்பு, மன்னனின் அறிவிப்புகள் படிக்கப் பட்டுள்ளன.

பறையறைந் தல்லது செல்லற்க என்னா
இறையே தவறுடையான்

என்னும் கலித்தொகை அடிகள் இதை விளக்கும்.

தமயந்தியின் திருமண அறிவிப்பை அவளது தந்தை வீமன் முரசறைந்து மக்களுக்கு அறிவிக்கக் காவலர்களை ஏவினான் என்பதை,

மங்கை சுயம்வர நாள் ஏழ்என்று வார்முரசம்
எங்கும் அறைக என்று இயம்பினான்

என்னும் நளவெண்பாப் பாடலும் பறையின் வகைகளில் ஒன்றாகிய முரசறைதலைத் தெரிவிக்கிறது.

பறையறைதல் முறை தற்காலத்திலும் கிராமங்களில் செயல்பாட்டில் இருக்கிறது. பஞ்சாயத்து அலுவலகங்களிலிருந்து குடிமக்களுக்கு வழங்கப்படும் செய்திகள் முரசறைவோர் மூலம் முரசறைந்து தெரிவிக்கப்படுகின்றன. இதைத் 'தண்டோரா போடுதல்' என்கின்றனர்.

## கொடிகள்

பழங்காலத்தில் செய்தி அறிவிப்பின் அடையாளமாகப் பல கொடிகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. கோவில் திருவிழாவின் அடையாளமாகக் கொடியேற்றப்பட்டதைப் பட்டினப்பாலை தெரிவிக்கிறது. அக்கொடி வெள்ளை நிறமாக இருந்திருக்கிறது என்பதை,

*கரும்பின் ஓண்பூப்போல*

என்னும் அடி தெரிவிக்கிறது. இதே கருத்தை,

*சாறயர்ந் தெடுத்த உருவப் பல்கொடி*

என்னும் மதுரைக் காஞ்சி அடியும் அறிவிக்கிறது.

பழங்காலத்தில் பட்டிமண்டபத்தின் அடையாளமாகவும் கொடி பறந்துள்ளது என்பதை,

*பல் கேள்வித் துறை போகிய*
*தொல்லாணை நல்லாசிரியர்*
*உறழ்குறித்து எடுத்த உருகெழு கொடியும்*

என்னும் பட்டினப்பாலை அடிகள் உணர்த்துகின்றன.

மீன்கடை, கள்ளுக்கடை, பிற வணிக இடங்களை அறிவிப்பதற்கும் பலவகைக் கொடிகள் பறந்துள்ளன எனச் சங்க இலக்கியம் தெரிவிக்கிறது.

மூவேந்தர்களும் வில், புலி, மீன் பொறித்த கொடிகளைக் கொண்டிருந்திருக்கின்றனர். தற்காலத்தில் ஒவ்வொரு நாடும் அடையாளக் கொடியைக் கொண்டிருப்பதைக் காண்கிறோம். அரசியல் கட்சிகளும் தங்கள் கட்சிக் கொடியை அடையாளமாக ஏற்றிப் பறக்க விடுகின்றன. ஒரு குறிப்பிட்ட கட்சிக்கொடி பறக்கிறது என்றால் அந்தப் பகுதியில் அந்தக் கட்சியைச் சார்ந்தவர்கள் இருக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்ள முடியும்.

தற்காலத்திலும் இரயில் நிலையங்களில் சிவப்புக் கொடியும் பச்சைக் கொடியும் பயன்படுத்தப்படுவதைக் காணமுடிகிறது. இக்கொடிகளைப்போன்றே போக்குவரத்திற்காகப் பச்சை விளக்குகளும் சிவப்பு விளக்குகளும் பயன்படுத்தப்படுகின்றன.

செய்தி இதழ்களின் வளர்ச்சியால் தற்காலத்தில் வட்ட, மாவட்ட, மாநில, நாடு, உலக அளவிலான செய்திகள் அனைவரையும் நாள் தோறும் எட்டுகின்றன. வானொலி, தொலைக்காட்சி, இணையத் தளங்கள் போன்ற மின்னியல் பொருட்களின் பெருக்கத்தால் தற்போது செய்திகள் ஒரு நாளில் பலமுறை அறியக்கிடைக்கின்றன. தற்காலத்தைப் போல் செய்தி இதழ்களோ மின்னியல் பொருட்களோ இல்லாத காலத்திலும் செய்திகள் அறிவிக்கப்பட்டுள்ளன என்பதை அறிகிறோம்.

## யானை மேலிருந்து அறிவித்த செய்தி

பழங்காலத்தில் செய்தியைப் பறை அறைந்து அறிவிக்கும் வழக்கம் இருந்து வந்தது. அவ்வாறு முழக்கப்படும் பறையைக் கோட்டைச் சுவர்மேல் வைத்து முழக்குவது வழக்கம். இவ்வாறு அசையாப் பொருளின்மேல் வைத்துப் பறையை முழக்கிச் செய்தியை அறிவித்தால், அறிவிக்கப்படும் குறிப்பிட்ட பகுதியில் மட்டும் செய்தி சென்றுசேரும். நகரின் பல இடங்களுக்கும் சென்று செய்தியை அறிவிக்க எண்ணும்போது மன்னரின் செய்தி அல்லது மன்னருக்கு இணையானவர்களின் செய்தி என்றால் பறையை யானையின்மேல் வைத்து, நகரின் பல இடங்களுக்கும் சென்று முழக்கிச் செய்தி அறிவிக்கப்பட்டுள்ளது. இம்முறை சிலப்பதிகாரத்தில் மூன்று இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. புகார்க் காண்டத்தின் முதற்காதையாகிய மங்கல வாழ்த்துப் பாடலிலும் இந்திர விழவூரெடுத்த காதையிலும் வஞ்சிக் காண்டத்தின் காட்சிக் காதையிலும் யானையின் மேலிருந்து செய்தி அறிவிக்கப்பட்டுள்ளது. இவ்வாறு தெரிவிக்கப்படும் செய்திகள் பெரும்பாலும் பொதுமக்கள் அனைவருக்கும் தெரிவிக்கப்படுபவையாக இருக்கும்.

## செய்திப் போக்குவரத்து

ஒரு குறிப்பிட்ட பகுதிக்கு அல்லது ஊருக்குச் செய்தியை அறிவிப்பதன் அடையாளமாக மேற்கூறிய முறைகளைக் கண்டோம். ஓர் ஊரிலிருந்து வேறோர் ஊருக்கு அல்லது ஒரு நாட்டிலிருந்து வேறொரு நாட்டிற்குச் செய்தி அனுப்புவதற்குச் செய்திப் போக்குவரத்து தேவைப்பட்டிருக்கிறது. தற்காலத்தைப்போல் வாகனப் போக்குவரத்து இல்லாத பழங்காலத்தில் ஓட்டக்காரனையும் குதிரை, புறா முதலியவற்றையும் பயன்படுத்தியுள்ளனர்.

ஓர் இடத்திலிருந்து இன்னோர் இடத்திற்குச் சென்று செய்தியைச் சொல்வதற்குச் செய்திச் சுருளைக் கொண்டு செல்வர். அவ்வாறு செய்திச் சுருள் கொண்டு செல்வதற்கு ஓட்டக்காரர்கள் பயன்படுத்தப்பட்டுள்ளார்கள்.

குறுநில மன்னனைப் போல் வசதியாக வாழ்ந்த சில செல்வந்தர்கள் செய்தியைத் தெரிவிப்பதற்கு என்று ஓட்டக்காரர்களை வைத்திருந்தார்கள். அவர்கள் விரைவாக ஓடிப் போய்ச் செய்தியைச் சொல்லியிருக்கிறார்கள்.

இந்த ஓட்டக்காரன் சொன்ன தகவல் சரியாகச் சென்று சேராததால் கொலை நிகழ்ந்ததைச் 'சிதம்பர நாடார் கதை' என்னும் நாட்டுப்புறக் கதைப்பாடல் தெரிவிக்கிறது.

ஓட்டக்காரனைவிட வேகமாகச் செல்லும் இயல்பு கொண்டது குதிரை. எனவே குதிரை வீரர்கள் மூலமும் செய்தியை அனுப்பி யுள்ளார்கள். போர்ச் செய்திகளை உடனுக்குடன் குதிரை வீரர்கள் அரண்மனையில் இருப்போருக்குத் தெரிவித்திருக்கிறார்கள்.

குதிரையை விடவும் வேகமாகப்பறக்கும் தன்மை கொண்டது புறா. நன்கு பழக்கப்பட்ட புறாவின் காலில் அல்லது மறைவான வேறு பகுதியில் சிறு செய்திச் சுருளைக் கட்டிப் பறக்க விட்டிருக்கிறார்கள். பழக்கப்பட்ட அப்புறாக்கள் செய்தி தெரிவிக்க வேண்டியவரின் இல்லத்திற்குப் பறந்து போயிருக்கின்றன.

## ஒற்றர்கள்

குதிரை வீரர்களின் மூலம் செய்தியனுப்பிய மன்னர்கள், பிற நாட்டிலிருந்து மறைவாகச் செய்திகளை அறிந்துவர ஒற்றர்களை நியமித்தனர். பிறநாட்டு வீரர்கள் என்று தெரிந்தால் எல்லாச் செய்திகளையும் அறிய இயலாது என்று ஒற்றர்கள் அந்நாட்டு மக்களைப் போல் வேடமிட்டுச் சென்றனர்.

சிலப்பதிகாரத்தில் சேரன் செங்குட்டுவன் வடநாட்டின் மீது படையெடுத்துச் செல்ல இருப்பதைத் தம் நாட்டில் பறையறைந்து தெரிவிக்கச் செய்கிறான். வஞ்சியில் ஒலிக்கும் பறை வடநாட்டிற்கும் கேட்கும் என்று அவன் நம்பினான்.

வடநாட்டு ஒற்றர்கள் வஞ்சி மாநகரில் நடமாடுவார்கள். அவர்கள் இந்தச் செய்தியைக் கேட்டுத் தம் மன்னர்களிடம் தெரிவிப்பர் என்று நம்பினான். இதைச் சிலப்பதிகாரம்,

> *நாவலந் தண்பொழில் நண்ணார் ஒற்றுநம்*
> *காவல் வஞ்சிக் கடைமுகம் பிரியா*
> *வம்பணி யானை வேந்தர் ஒற்றே*
> *தஞ்செவிப் படுக்குந் தகைமைய வன்றோ*
> *அறைபறை யென்றே அழும்பில்வேள் உரைப்ப*

என்று தெரிவிக்கிறது.

**பாணர்கள்**

ஒரு நாட்டின் அரசியல் நிகழ்வுகளையும் கலை மற்றும் பண்பாட்டு வளர்ச்சிகளையும் கலைக்குழுவினர் இன்னொரு நாட்டிற்குச் செய்தியாக வழங்கினர்.

சங்ககாலத்தில் சிறப்பிடம் பெற்றிருந்த பாணர்கள் மன்னர்களுக்குச் செய்தி வழங்கினர். மக்களும் பாணர்களிடமிருந்து அண்டை நாட்டின் மழைவளம், செல்வவளம் போன்றவற்றைத் தெரிந்து கொண்டனர்.

அசோகர் காலத்தில் அரசாங்கக் கட்டளைகள், அறச்செய்திகள் மற்றும் புத்தமதச் செய்திகள் ஆகியவற்றைத் தூண்களிலும் பாறை களிலும் செதுக்கி வைத்தனர்.

ஔரங்கசீப் காலத்தில் வாக்யா நாவிஸ் (Vaquia Navis) என்போர் நாடு முழுவதும் திரிந்து செய்திகளைச் சேகரித்தனர். செய்திகளை அரசிடமிருந்து மக்களுக்கு வழங்கியவர்களைச் சவானிக் நாவிஸ் (Savanic Navis) என்றழைத்தனர். இரகசியச் செய்தியாளர்களைக் கோஃபியா நாவிஸ் (Cofia Navis) என்றழைத்தனர்.

வெனிஸ் நாட்டுப் பயணியான நிக்கோலா மேனுசி என்பார் ஔரங்கசீப்பின் அரண்மனையைப் பற்றி எழுதும்போது, ''செய்திக் கடிதங்கள் மொகலாய மன்னனின் அரசவையில் பெண்களால் படிக்கப்பட்டன. நடு இரவுவரை கூட அரசவை கூடிச் செய்திக் கடிதங்களைப் படித்து முடிவெடுப்பதுண்டு'' என்று குறிப்பிட்டுள்ளார்.

## அயல்நாடுகளில் செய்தி பரவிய முறை

எகிப்து நாட்டில் அடிமைகளை வைத்துச் செய்திகளைத் தொகுத்தனர். அந்த அடிமைகளின் வாயிலாகவே செய்திகள் பரப்பப் பட்டன.

கிரேக்க நாட்டில் குதிரை வீரர்கள் மூலமாகச் செய்திகள் பரப்பப்பட்டன.

உரோமநாட்டில் ஜூலியஸ்சீசர் காலத்தில் பொதுவிடங்களில் செய்தி அறிக்கைகள் ஒட்டப்பட்டுப் பரப்பப்பட்டன.

ஜூலியஸ் சீசர் 'கால்' என்ற நாட்டில் போரிட்டுக் கொண்டிருந்த போது அங்கிருந்தே செய்திகளை உடனுக்குடன் தலைநகருக்கு அனுப்பியதாகவும் கூறப்படுகிறது. எனவே ஜூலியஸ் சீசரை 'இதழியலின் தந்தை' என்று கூறுவர்.

சீனாவில் 6ஆம் நூற்றாண்டில் எழுத்துகளைச் செதுக்கிய பிளாக்குகளைக் கொண்டு 'டிஸிங் பவோ (Tsing Pao) என்ற அரசவைச் செய்தித்தாளை வெளியிட்டனர்.

## அச்சுப்பொறிக் கண்டுபிடிப்பு

1440ஆம் ஆண்டு ஜெர்மனியைச் சேர்ந்த ஜான்கூடன் பர்க் என்பவர் முதன்முதலில் அச்சு இயந்திரத்தைக் கண்டுபிடித்தார்.

> முதன் முதலாக அச்சடிக்கப் பயன்பட்டது மர அச்சுப் பொறியாகும். இது திருகுமுறையால் மேலிருந்து கீழே அழுத்தப்பட்டுப் பதிவு எடுக்கப்பயன்பட்டு வந்தது. அடுத்து, 16ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் செம்பினாலான திருகுமுறை உண்டாக்கப்பட்டது. இது மரத்தைவிடக் கனமானதாகவும் அதைவிட நீடித்து உழைக்கக் கூடியதாகவும் இருந்தது. பின்னர் அச்சுப் பொறியில் நழுவிப் போகும் தட்டும் அச்சடிப்பதற்கான காகிதப் பொருத்தியும், காகிதம் பற்றியும், மரச்சட்டமும் அமைக்கப்பட்டு மாறுதல் செய்யப்பட்டன

என்று மா.சு.சம்பந்தன் என்பார் குறிப்பிட்டுள்ளார்.

1790ஆம் ஆண்டில் உருளி அச்சுப் பொறியை நிக்கோல்சன் என்பவர் உருவாக்கினார்.

1798ஆம் ஆண்டில் அனைத்துப் பாகங்களும் இரும்பாலான அச்சுப்பொறி தயாரிக்கப்பட்டது.

பிரடரிக் கோனிக் என்பவர் நீராவியால் இயங்கும் உருளி அச்சுப் பொறியை உருவாக்கினார். இப்பொறியின் மூலம் மணிக்கு 12,000 தாள் களைஅச்சடிக்க முடியும். அவரே மற்றோர் அச்சுப் பொறியையும் கண்டுபிடித்தார். இதில் இரு உருளிகள் அமைந்திருந்த காரணத்தால் ஒரே சமயத்தில் காகிதத்தின் இருபக்கங்களிலும் அச்சுப் பதிக்க முடிந் தது என்று குறிப்பிடுவர்.

### அச்சகம்

ஜெர்மனியிலுள்ள மெயின்ஸ் என்னும் நகரில் 1439ஆம் ஆண்டு முதன் முதலில் அச்சகம் தோற்றுவிக்கப்பட்டது. இத்தாலியில் 1465ஆம் ஆண்டும், பிரான்சில் 1470ஆம் ஆண்டும், ஸ்பெயினில் 1474ஆம் ஆண்டும், இங்கிலாந்தில் 1477ஆம் ஆண்டும், டென்மார்க்கில் 1482ஆம் ஆண்டும், சுவீடனில் 1483ஆம் ஆண்டும், போர்ச்சுக்கல்லில் 1495ஆம் ஆண்டும், ரஷ்யாவில் 1553ஆம் ஆண்டும் அச்சகங்கள் தொடங்கப்பட்டன.

இந்தியாவில் கோவா நகரில் 1556ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் ஆறாம் நாள் போர்த்துக்கீசியக் கத்தோலிக்கப் பாதிரியார்கள் முதன்முதலில் அச்சகத்தைத் தொடங்கினர்.

1557ஆம் ஆண்டில் கொல்லத்திலும் கொச்சியிலுள்ள அம்பலக் காட்டிலும் அச்சகங்கள் தொடங்கப்பட்டன.

1578ஆம் ஆண்டில் திருநெல்வேலியில் உள்ள புன்னைக்காயல் என்னும் இடத்திலும் அதை அடுத்து வைப்புக் கோட்டையிலும் அச்சகங்கள் தொடங்கப்பட்டன.

இந்தியாவில் முதன் முதலில் அச்சான புத்தகம் தமிழ்ப் புத்தகம் தான். 1578இல் அச்சிடப்பட்ட அப்புத்தகத்தின் பெயர் Doctrina Christam என்பது. இது ஹென்றிகுவிஸ் என்ற பாதிரியார் தமிழில் மொழிபெயர்த்து எழுதிய கிறித்தவ வேதப்புத்தகம். இப்புத்தகம் இந்தியாவில் இல்லை. அமெரிக்காவில் உள்ள ஹார்வார்டு கல்லூரி நூல் நிலையத்தில் உள்ளது. தற்போது இதன் நகல் தஞ்சையில் உள்ள தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் உள்ளது. இது கோவாவில் அச்சிடப் பட்டுள்ளது.

## முதல் இதழ்கள்

உலகில் முதன்முதலில் தோன்றிய இதழ் 'ரிலேசன்' (Relation) என்பதாகும். இவ்விதழ் ஜெர்மனியில் 1609ஆம் ஆண்டில் தோன்றியது.

இங்கிலாந்தில் முதன்முதலில் 'வாரச் செய்திகள்' (Courant or Weekly News) என்ற இதழ் 1621ஆம்ஆண்டில் வெளிவந்தது. இங்கிலாந்தில் 'தினசரிச் செய்திகள்' (Daily Courant) என்ற இதழ்தான் முதலில் நாளிதழாக 1702ஆம் ஆண்டு வெளிவந்தது.

'பொது நிகழ்ச்சிகள்' (Public Occurrences) என்ற இதழ் அமெரிக்காவில் பெஞ்சமின் ஹாரிஸ் என்பவரால் 1690ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

இந்தியாவின் முதல் இதழாக 1780ஆம் ஆண்டு சனவரி மாதம் 29ஆம் நாள் 'பெங்கால் கெசட்' என்னும் இதழ் வெளிவந்தது. ஆங்கிலேயரான ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கி என்பார் இவ்விதழைக் கொல்கத்தாவில் தொடங்கினார். இவ்விதழ் இரண்டு பக்கங்களுடன் 12 x 8" அளவில் வார இதழாக வெளிவந்தது. இவ்விதழைக் 'கல்கத்தா அட்வர்டைசர்' என்றபெயராலும் வழங்குவர்.

இந்தியாவின் இரண்டாவது செய்தித்தாளாகக் கொல்கத்தாவில் 'இந்தியா கெசட்' வெளிவந்தது. இந்தியாவின் மூன்றாவது செய்தித் தாளாக 1784ஆம் ஆண்டு 'கல்கத்தா கெசட் அண்டு ஓரியண்டல் அட்வர்டைசர்' வெளிவந்தது. இந்தியாவின் தொடக்ககால இதழ்கள் கொல்கத்தாவிலேயே வெளிவந்தன. ஏனெனில், அக்காலத்தில் கொல்கத்தா ஆங்கிலேயர்களின் நிர்வாக மையமாக இருந்தது.

சென்னையின் முதல் செய்தித்தாளாக 'மெட்ராஸ் கூரியர்' வெளிவந்தது. இவ்விதழை ரிச்சர்டு ஜான்சன் என்பார் 1785ஆம் ஆண்டு அக்டோபர் 12ஆம் நாள் வெளியிட்டார். இவ்விதழ் நான்கு பக்கங்களில் வார இதழாக வெளிவந்தது.

மெட்ராஸ் கூரியரின் ஆசிரியராக இருந்த ஹியூக் என்பார் 1791ஆம் ஆண்டு 'ஹாரகாரு' என்ற இதழைத் தொடங்கினார்.

இராபர்ட் வில்லியம்ஸ் என்பவர் 1795ஆம் ஆண்டு 'வீக்லி மெட்ராஸ் கெசட்' என்ற இதழைத் தொடங்கினார். சில மாதங்களுக்குப் பின்னர் ஹாம்ப்ரீஸ் என்பார் 'இந்தியன் ஹெரால்ட்' என்ற இதழைத் தொடங்கினார். இவர் அரசின் அனுமதி பெறாமல் இதழ் தொடங்கிய தால் நாடு கடத்தப்பட்டார்.

மும்பையில் 1789ஆம் ஆண்டு 'பாம்பே ஹெரால்டு' என்ற வார இதழ் முதல் இதழாக வெளிவந்தது. 1790ஆம் ஆண்டு லூக் ஆஸ்பர்னர் என்பார் 'பாம்பே கூரியர்' என்ற இதழைத் தொடங்கினார். பின்னர் இது 'பாம்பே டைம்ஸ்' எனப் பெயர் மாற்றம்பெற்றது.

கல்கத்தா, சென்னை, பம்பாய் என்று இந்தியாவில் அந்நாளில் புகழ்பெற்றிருந்த நகரங்களில் இதழ்கள் முதலில் வெளிவந்தாலும் அவை சிறப்பான வளர்ச்சியைப் பெறவில்லை.

# 2. இந்திய இதழ்கள்

மனிதன் தோன்றிய காலத்திலிருந்தே ஒருவருக்கொருவர் செய்திகளைப் பரிமாறிவருகிறார்கள் என்றாலும் அச்சுத் தொழிலின் வருகைக்குப் பின்னரே இதழ்கள் வெளிவரத் தொடங்கின. அச்சுத் தொழிலுக்கு அடிப்படையான காகிதத்தைக் கி.பி.105இல் சாய்லன் என்பவர் (சீனா) கண்டுபிடித்தார். காகிதம் முதன் முதலில் சீனாவில் கண்டுபிடிக்கப்பட்டது போன்றே அச்சிடும் முறையும் முதலில் சீனாவில் தான் தொடங்கியது.

மரக்கட்டைகளில் எழுத்துகளை உருவாக்கி அவற்றில் மையைத் தடவி அழுத்தி அச்சிட்டதால் 'Press' என்னும் சொல் அச்சுத் தொழிலைக் குறிப்பதாய் அமைந்தது. இவ்வாறு கி.பி.1041இல் சீனாவில் அறிமுகமான அச்சுத் தொழில் கி.பி.1450க்குப் பிறகு மறுமலர்ச்சி கண்டது.

கையினால் அழுத்தி அச்சிட்ட நிலைமாறி எந்திரத்தால் அச்சிடத் தொடங்கியதால் செய்தித்தாள் வெளிவரத் தொடங்கியது.

செய்தித்தாள் என்று பெயர் வழங்கப்பெற்றாலும் அக்காலத்தில் வெளிவந்த செய்தித்தாள்கள் தற்காலத்தில் வெளிவரும் செய்தித்தாள் போன்று வரையறைக்குட்பட்டுத் தொடர்ச்சியாக வரவில்லை. அச்சுப் பொறியின் துணையுடன் முதன் முதலில் ஜெர்மனியில் செய்தித் தாள் 'துண்டறிக்கை'யாக வெளியிடப்பட்டது.

முதன்முதலில் ரிலேசன் (Relation) என்னும் செய்தித்தாள் ஜெர்மனியில் வெளிவந்தது. இது 1609இல் ஸ்ட்ராஸ்பர்க் நகரத்திலிருந்து வெளிவந்தது.

'கோரன்ட்' (Corant) என்னும் இதழ் 1621இல் இங்கிலாந்தின் முதல் இதழாக வெளிவந்தது. 1665இல் வாரம் இருமுறை வரும் இதழாக 'ஆக்ஸ்போர்டு கெசட்' (Oxford Gazette) என்னும் இதழ் இங்கிலாந்தில் வெளிவந்தது. 1702ஆம் ஆண்டில் இங்கிலாந்தின் முதல் நாளிதழ் வெளிவந்தது. 'தி டெய்லி கோரண்ட்' (The Daily Courant) என்பதுதான் அந்த முதல் நாளிதழின் பெயர்.

அமெரிக்காவின் முதல் இதழைப் பெஞ்சமின் ஹாரிஸ் (Benjamin Harris) என்பார் 1690இல் தொடங்கினார். 'உள்நாட்டிலும்

வெளி நாட்டிலும் உள்ள பொது நிகழ்வுகள்' (Public Occurrences Both Foreign and Domestic) என்பதுதான் அவ்விதழின் பெயர்.

## இந்தியாவின் முதல் இதழ்

இந்தியாவில் 1780இல் முதல் இதழ் வெளிவந்தது. ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கி (James Augustus Hicky) என்னும் ஆங்கிலேயர் தொடங்கிய 'பெங்கால் கெசட்' என்பதுதான் இந்தியாவின் முதல் இதழ். 'வங்காள கெசட் அல்லது கல்கத்தா பொது விளம்பரம்' (Bengal Gazette or Calcutta General Advertiser) என்னும் பெயர் கொண்ட இந்த இதழ் வங்காளத்திலுள்ள செராம்பூரிலிருந்து வெளிவந்தது.

வங்காள கெசட் "12 x 8" அளவில் நான்கு பக்கங்களுடன் ஆங்கிலத்தில் வார இதழாக வெளிவந்தது. இங்கிலாந்து தொடர்பான செய்திகளையும் ஆங்கிலேய அதிகாரிகளின் தனி வாழ்க்கையின் இரகசியங்களையும் இந்த இதழ் வெளியிட்டது. வாசகர் கடிதங்கள், விளம்பரங்கள் முதலியவற்றுடன் வெளிவந்த இந்த இதழால் 'ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கி' இந்திய இதழியலின் தந்தை என்று அழைக்கப்பட்டார்.

## ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கி

கிழக்கிந்தியக் கம்பெனியின் வணிக மையமாகக் கொல்கத்தா விளங்கியபோது இங்கிலாந்திலிருந்து பல வணிகர்கள் கொல்கத்தாவிற்கு வந்தனர். ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கியும் வணிகராகக் கொல்கத்தாவிற்கு வந்தவர்தான். ஆங்கிலேய அதிகாரிகளின் தவறான போக்கைச் சுட்டிக்காட்ட 'வங்காள கெசட்' என்னும் இதழைத் தொடங்கினார். அவர் இதழ் தொடங்கியது பற்றி, ''செய்தித்தாளை அச்சிடுவதில் எனக்குத் தனி மோகம் எதுவுமில்லை; எனக்குப் பயிற்சியுமில்லை. நான் கடின உழைப்புக்குப் பழக்கப்பட்டவனும் இல்லை. இருந்தாலும் எனது ஆன்மாவிற்கும் அறிவுக்கும் விடுதலையை வாங்க இந்தப் பணியில் என்னை ஐக்கியப்படுத்திக் கொள்வதில் மகிழ்ச்சி அடைகின்றேன்'' என்று கூறியுள்ளார்.

''எல்லாப் பிரிவினருக்கும் உரிய அரசியல், வாணிப இதழ்'' எனத் தமது இதழ் பற்றி ஹிக்கி குறிப்பிட்டுள்ளார்.

ஆங்கிலேய அலுவலர்களின் சொந்த வாழ்க்கை தொடர்பான செய்திகளை ஹிக்கி தமது இதழில் தொடர்ந்து வெளியிட்டு வந்துள்ளார். வாரன் ஹேஸ்டிங்ஸ், சிமியோன் ட்ரோஸ் (Simeon Droz), தாமஸ் டீன் பியர்ஸ் (Thomas Dean Pearse) ஆகியோர் மீது பல அவதூறுகளை எழுதியுள்ளார். வாரன் ஹேஸ்டிங்ஸ் பற்றி எழுதியதுடன் அவரது துணைவியார் பற்றியும் அவதூறாக

எழுதியுள்ளார். அப்போது தலைமை ஆளுநராக (Governor General) இருந்தவர் வாரன்ஹேஸ்டிங்ஸ். எனவே, ஆங்கிலேய அரசு ஹிக்கி யின் இதழைத் தடுக்க நினைத்தது. அஞ்சலகத்தின் வாயிலாக 'வங்காள கெசட்' இதழை அனுப்பக் கூடாது என ஆணை பிறப்பித்தது.

ஜான் சக்காரியா கிர்னண்டர் (John Zacharaiah Kiernander) என்பவர் ஸ்வீடனைச் சேர்ந்த பாதிரியார். இவரைப் பற்றியும் ஹிக்கி தமது இதழில் அவதூறாக எழுதினார். ஹிக்கி மீது பாதிரியார் வழக்குத் தொடர்ந்தார். வழக்கின் இறுதியில் ஹிக்கிக்கு நான்கு மாதம் சிறைத் தண்டனையும் 100 ரூபாய் அபராதமும் விதிக்கப்பட்டன. தண்டனையை ஏற்றுக் கொண்ட ஹிக்கி சோர்ந்துவிடவில்லை. மீண்டும் தலைமை ஆளுநரையும் அப்போது தலைமை நீதிபதியாக இருந்த சர் எலிஜா இம்பே (Sir Ellijah Impey) என்பாரையும் தாக்கி எழுதினார். எனவே அவரைச் சிறைபிடிக்க அரசு ஆணையிட்டது. அதற்காக ஆயுதம் தாங்கிய காவலர்கள் நானூறு பேரை அனுப்பியது. ஹிக்கி அவர்களைத் தாக்கிஅனுப்பிவிட்டார். என்றாலும் அவரே நீதிமன்றத்திற்குச் சென்றார். அவர் பிணைத் தொகையாக ரூ.80,000 கட்ட வேண்டும் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. அத்தொகையைக் கட்ட இயலாததால் அவர் சிறையில் அடைக்கப்பட்டார்.

சிறைக்குள் இருந்தபடியே தமது இதழைத் தொடர்ந்து நடத்தினார் ஹிக்கி. தொடர்ந்து அவர் ஆங்கிலேய அதிகாரிகளைத் தாக்கி எழுதி வந்தார். எனவே அவர் மீது குற்றச்சாட்டுகளும் வழக்குகளும் தொடர்ந்தன. இதன் விளைவாக அவர் தமது செல்வத்தை இழந்தார். வறுமை நிலையை அடைந்தபோதும் ஹிக்கி ஆங்கிலேய அரசுக்கு வளைந்து கொடுக்கவில்லை.

## இந்தியா கெசட்

ஹிக்கி தொடங்கிய அதே ஆண்டிலேயே 1780இல் இந்தியா கெசட் என்னும் இதழும் வங்காளத்தில் தொடங்கப்பட்டது. பெர்னார்டு மெஸ்சிங், பீட்டர் ரீடு என்னும் இரு ஆங்கில வணிகர்கள் இவ்விதழைத் தொடங்கினார்கள். தங்கள் வணிகத்திற்கு விளம்பரம் தேடிக் கொள்ளும் நோக்கில் இவ்விதழ் தொடங்கப்பட்டது. அரசை எதிர்த்து ஹிக்கி பட்ட துன்பங்களைக் கண்ட இவர்கள் அரசுக்கு ஆதரவாக எழுதினார்கள். எனவே, அஞ்சல் வாயிலாக இவர்களின் இதழை அனுப்புவதற்கு அரசு கட்டணச் சலுகை அளித்தது.

'கல்கத்தா கெசட்' (Calcutta Gazette) என்னும் இதழ் 1784இல் கொல்கத்தாவிலிருந்து வெளிவந்தது. இதன் ஆசிரியர் ஹார்லி. 1785ஆம் ஆண்டு 'வங்காள ஜர்னல்' (Bengal Journal) என்னும் இதழ்

வெளிவந்தது. இதன் ஆசிரியர் தாமஸ் ஜோன்ஸ். 'ஓரியண்டல் மேகசின் அல்லது கல்கத்தா அம்யூஸ்மென்ட்' (Oriental Magazine or Calcutta amusement) என்னும் இதழ் இதே ஆண்டில் வெளிவந்தது. இதுதான் முதல் மாத இதழ் ஆகும். 1786ஆம் ஆண்டு 'கல்கத்தா கிரானிக்கிள்' (Calcutta Chronicle) என்னும் இதழ் வெளிவந்தது. 1794ஆம் ஆண்டு 'ஏசியாடிக் மிர்ரர்' என்னும் இதழ் வெளிவந்தது. இதன் ஆசிரியர் சார்லஸ் கே. புரூஸ் என்பவர் ஆவார். 'கல்கத்தா கூரியர்' என்னும் இதழ் 1795ஆம் ஆண்டு வெளிவந்தது. தாமஸ்ஹாலிங்பரி, ராபர்ட் கிலன் ஆகியோர் இதன் ஆசிரியர்கள் ஆவர். இதே ஆண்டில், வில்லியம் ஹண்டரை ஆசிரியராகக் கொண்டு 'வங்காள ஹர்க்காரு' என்னும் இதழ் வெளிவந்தது. 1796இல் ஹால் மெக்கலி என்பாரை ஆசிரியராகக் கொண்டு 'டெலிகிராப்' என்னும் இதழ் வெளியானது. இதே ஆண்டில் வெளியான 'கல்கத்தா மார்னிங் போஸ்ட்' என்னும் இதழுக்கு ஆர்ச்பால்ட் தாம்ஸன், பால்பெர்ரீஸ், மார்லி கிரீன்வே ஆகியோர் ஆசிரியர்களாக இருந்தனர். 1789ஆம் ஆண்டு 'ஓரியண்டல் ஸ்டார்' என்னும் இதழ் ரிச்சர்ட் பிளெமிங் என்பவரை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்தது.

## சென்னையின் முதல் இதழ்

வங்காளத்திற்கு அடுத்தபடியாக இதழ்கள் தொடங்கப்பட்ட நகரம் சென்னை.

வங்காளத்தில் 1780இல் முதல் இதழ் தொடங்கப்பட்டது. வங்காளத்தைத் தொடர்ந்து 1785இல் சென்னையில் 'மெட்ராஸ் கூரியர்' என்னும் இதழ் வெளிவந்தது. ஆங்கிலேய அரசில் அச்சகராகப் பணியாற்றிய ரிச்சர்டு ஜான்சன் என்பவர் இதன் ஆசிரியர் ஆவார். அக்டோபர்த் திங்கள் பன்னிரண்டாம் நாளில் வெளியான இது ஒரு வார இதழ் ஆகும். அரசினரின் ஒப்புதல் பெற்று வெளிவந்த மெட்ராஸ் கூரியரில் அரசின் அறிக்கைகளும் விளம்பரங்களும் இடம்பெற்றன. அரசின் ஒப்புதல் பெற்றுவெளிவந்ததால் இவ்விதழ் அஞ்சல் கட்டணமின்றி அனுப்பப்பட்டது. நான்கு பக்கங்களைக் கொண்ட இவ்விதழின் விலை ஒரு ரூபாய். மெட்ராஸ் கூரியர் இதனை அச்சிடுவதற்குத் தேவையான எந்திரம் இலண்டனிலிருந்து வரவழைக்கப் பட்டது. அவ்வாறு வரவழைப்பதற்கு அரசு வரி விலக்கும் அளித்தது.

கிழக்கிந்தியக் கம்பெனி தொடர்பான ஆதாரமற்றசெய்திகளை மெட்ராஸ் கூரியர் வெளியிட்டதால் அரசின் நெருக்குதல் ஏற்பட்டது.

தரங்கம்பாடியிலிருந்த டேனிஷ் மிஷன் தொடர்பான தவறான செய்தியை மெட்ராஸ் கூரியர் வெளியிட்டது. இதை டேனிஷ் மிஷன்

நிர்வாகிகள் எதிர்த்தனர். தவறாக வெளியிடப்பட்ட பகுதிகளை நீக்க வேண்டும் என்று அவர்கள் சென்னை அரசினரை வேண்டிக் கொண்டனர். அரசின் ஆணைக்கு ஏற்ப அச்செய்தி நீக்கப்பட்டதுடன், டேனிஷ் நிர்வாகிகளின் மறுப்பு அறிக்கையும் வெளியானது. இவ்வாறு தொடர்ந்து ஆதாரமில்லாத செய்திகளை வெளியிட்ட மெட்ராஸ் கூரியர் பலமுறை மன்னிப்பும் கேட்டுள்ளது. ஜேம்ஸ் ஸ்டூவர்ட் மில் என்பவர் மெட்ராஸ் கூரியரின் ஆசிரியராக இருந்த போது கம்பெனியின் சென்னை அலுவலரான இலண்டன் என்பவர் பற்றித் தவறான செய்தி வெளியிட்டது. இலண்டன் என்பவர் மெட்ராஸ் கூரியர் மீது நடவடிக்கை எடுக்காமல் இருப்பதற்காக அதன் ஆசிரியர் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

## மெட்ராஸ் கெசட்

1795ஆம் ஆண்டு 'மெட்ராஸ் கெசட்' என்னும் இதழ் சென்னையிலிருந்து வெளிவந்தது. இராபர்ட் வில்லியம்ஸ் என்பவரை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த இதுவும் வார இதழ் ஆகும். மெட்ராஸ் கூரியர் என்னும் இதழின் ஆசிரியர் இவ்விதழைப் போட்டி இதழாகக் கருதினார். எனவே மெட்ராஸ் கெசட் இதழ் பற்றி அரசிடம் புகார் செய்தார். ஆனால் அரசு அப்புகாரைக் கண்டு கொள்ளவில்லை.

1795ஆம் ஆண்டிலேயே 'இந்தியா ஹெரால்டு' என்னும் இதழும் தொடங்கப்பட்டது. இதை ஹாம்ப்ரீஸ் (Hampreys) என்பவர் தொடங்கினார். இந்த இதழைத் தொடங்குவதற்காக அரசிடம் ஹாம்ப்ரீஸ் அனுமதி கேட்டு விண்ணப்பித்திருந்தார். அரசு அனுமதி வழங்கவில்லை. எனவே அனுமதி இல்லாமலேயே இதழைத் தொடங்கி நடத்தி வந்தார். இவர் ஆங்கிலேய அரசைப்பற்றியும் இளவரசர் வேல்ஸ் பற்றியும் தவறான செய்திகளை வெளியிட்டார். எனவே அரசால் கைதுசெய்யப்பட்டார். கைது செய்யப்பட்ட மெட்ராஸ் கெசட் ஆசிரியரை நாடு கடத்த ஆணை பிறப்பிக்கப்பட்டது. அவ்வாறு நாடு கடத்தும்போது அவர் கப்பலிலிருந்து தப்பிச் சென்று விட்டார்.

1795ஆம் ஆண்டு ஜான் கோல்டின் ஹாம் என்பவர் 'கவர்ன்மெண்ட் கெசட்' என்னும் இதழைத் தொடங்கினார். இந்த இதழ் அரசு அச்சுக் கூடத்தில் அச்சிடப்பட்டு வெளியானது.

## மும்பை இதழ்கள்

மும்பையிலிருந்து வெளிவந்த முதல் இதழ் 'பாம்பே ஹெரால்டு' என்னும் இதழாகும். இது 1789ஆம் ஆண்டு வெளி வந்தது. இவ்விதழ் வார இதழாக வெளியானது.

1790ஆம் ஆண்டு 'பாம்பே கூரியர்' என்னும் இதழ் வெளிவந்தது. லூக் ஆஷ்பர்னர், ஆல்டெர்மென் ஆகியோர் இவ்விதழின் ஆசிரியர் ஆவர்.

1791 ஆம் ஆண்டு 'பாம்பே கெசட்' என்னும் இதழ் வெளிவந்தது. இவ்விதழ் மும்பைக் காவல் துறை ஆணையரைத் தவறாக விமர்சித்த தால் அரசு இவ்விதழின் மீது குற்றம் சுமத்தியது. 1792ஆம் ஆண்டு 'பாம்பே ஹெரால்டு' இதழுடன் 'பாம்பே கெசட்' என்னும் இவ்விதழ் இணைந்தது.

## இதழ்கள் ஒழுங்குமுறைச் சட்டம்

இந்தியாவின் பெருநகரங்களில் இதழ்கள் மிகுதியாக வெளிவரத் தொடங்கின. அவை வெளியிட்ட செய்திகள் அரசுக்கு எதிரானவையா கவும் இருந்தன. எனவே இதழ்களைக் கட்டுப்படுத்த வேண்டிய தேவை அரசுக்கு ஏற்பட்டது. அதற்காக ஓர் ஒழுங்கு முறைச் சட்டம் கொண்டுவரப்பட்டது.

13.5.1799இல் அப்போது தலைமை ஆளுநராக இருந்த வெல்லெஸ்லி (Lord Wellesley) இந்த ஒழுங்கு முறைச் சட்டத்தைக் கொண்டு வந்தார்.

1. ஒவ்வோர் இதழும் அதனை அச்சிடுவோர், ஆசிரியர், உரிமை யாளர் ஆகியோரின் பெயர்களை வெளியிட வேண்டும்.

2. இதழின் ஆசிரியரும் உரிமையாளரும் அரசின் தலைமைச் செயலாளரிடம் தங்கள் முகவரியைத் தெரிவிக்க வேண்டும்.

3. தாங்கள் அச்சிட விரும்பும் எல்லாச் செய்திகளையும் தலைமைச் செயலரிடம் காட்டி முன் ஒப்புதல் பெற்றே வெளியிட வேண்டும்.

4. இதழ்களை ஞாயிற்றுக் கிழமைகளில் வெளியிடக் கூடாது.

5. அரசின் செயலாளர் இதழ்களைக் கட்டுப்படுத்துபவராக விளங்குவார்.

6. மேற்கூறிய விதிகளை மீறும் இதழாளர் நாடு கடத்தப்படுவார்.

7. கிழக்கிந்தியக் கம்பெனிக்கும் இந்திய மக்களுக்கும் உள்ள உறவு பற்றிய செய்திகளை வெளியிடக் கூடாது.

8. செய்திகளை மறுபதிப்பாக மீண்டும் வெளியிடக் கூடாது.

வெல்லெஸ்லியின் இந்த ஒழுங்குமுறைச் சட்டம் அப்போதைய இதழாளர்களை அடக்கியது. எனவே இதை 'அடக்கு முறைச் சட்டம்' என்றே தெரிவித்தனர்.

## பொறுப்புத் தொகைச் சட்டம்

இதழ்களை அஞ்சல் வழியாக அனுப்பும் போது ஏற்படும் செலவு மிகுதியானது. அச்செலவைக் குறைப்பதற்காக அஞ்சல் வழியாக அனுப்புவதற்கு ஒவ்வோர் இதழும் முன்பணமாகப் பொறுப்புத் தொகை கட்ட வேண்டும் என்னும் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. 22.05.1800இல் வெல்லெஸ்லி கொண்டு வந்த இச்சட்டத்தின்படி பொறுப்புத் தொகை கட்டாத இதழ்களை அஞ்சல் துறை ஏற்றுக் கொள்ளவில்லை.

## செராம்பூர் பாதிரியார்களுக்குத் தடை

இதே காலகட்டத்தில் கேரி, தாமஸ், பிருந்தோன், மார்ஷ்மன், வார்டு முதலான செராம்பூர் கிறித்தவப் பாதிரியார்கள் அச்சகம் ஒன்றைத் தொடங்குவதற்கு அனுமதி கேட்டனர். அவர்களின் வேண்டுகோளை அரசு ஏற்றுக் கொள்ளவில்லை.

1807ஆம்ஆண்டில் தலைமை ஆளுநராக மிண்டோ பதவியேற்றார். அப்போது செராம்பூர் பாதிரியார்கள் பல துண்டறிக்கைகளை வெளியிட்டனர். அத்துண்டறிக்கைகளில் இந்து, முஸ்லிம் மத நம்பிக்கைகள் கேலி செய்யப்பட்டிருந்தன. இதனைப் பார்த்த மிண்டோ அப்பாதிரியார்களைக் கண்டித்தார். செராம்பூரை விட்டுக் கொல்கத்தாவிற்குப் போகுமாறு கட்டளையிட்டார். ஆனால் பாதிரியார்கள் 'இனிமேல் தங்கள் வெளியீடுகளை வெளியிடும் முன்னர்த் தணிக்கைக்கு அனுப்பி வைக்கிறோம் என்றும் கட்டளையைத் திரும்பப் பெற வேண்டும்' என்றும் வேண்டிக் கொண்டனர். அதன்படி அவர்கள் செராம்பூரிலேயே செயல்படுவதற்கு அனுமதிக்கப்பட்டனர்.

## ஒழுங்கு முறைச் சட்ட நீக்கம்

1813இல் ஹேஸ்டிங்ஸ் தலைமை ஆளுநரானார். இந்தியாவில் உள்ள இதழ்களுக்கு விதிக்கப்பட்டிருந்த சட்ட விதிகளின் கடுமையை அவர் அறிந்து அவற்றை நீக்குவதற்கு முயற்சி செய்தார். கிழக்கிந்தியக் கம்பெனியின் இயக்குநர்களிடம் இது தொடர்பாகக் கலந்து ஆலோசித்தார். அப்போது தலைமைச் செயலராக இருந்த ஜான் ஆடம் என்பவர் இதழ்களை அடக்குவதில் மிகுந்த ஆர்வத்துடன் விளங்கினார். அப்போது 'ஏசியாடிக் மிர்ரர்' என்னும் இதழின் பொறுப்பாளராக, சாமுவேல் ஜேம்ஸ் பிரைஸ் (Samuel James Bryce) என்னும் பாதிரியார் இருந்தார். இதழ்களுக்கு விதிக்கப்பட்டிருந்த ஒழுங்கு முறைச் சட்டத்தை நீக்குவதற்கு இவர் தொடர்ந்து முயற்சி செய்தார். இதனால் தலைமைச் செயலாளர் ஆடமுக்கும் பிரைசுக்கும் கருத்து வேறுபாடு ஏற்பட்டது.

பிரைஸ் பாதிரியாரின் இடைவிடா முயற்சியால் 1818ஆம் ஆண்டு வெல்லெஸ்லி கொண்டு வந்த இதழ்கள் ஒழுங்குமுறைச் சட்டத்தின் கடுமையான விதிகளை ஹேஸ்டிங்ஸ் நீக்கினார்.

## இந்திய மொழிகளில் இதழ்கள்

1780இல் இந்தியாவில் முதல் இதழ் தோன்றினாலும் அவ்விதழைத் தொடங்கியவர் ஆங்கிலேயர் ஆவார். அதனைத் தொடர்ந்து வெளிவந்த இதழ்களின் ஆசிரியர்களும் இந்தியர் அல்லாதவர்களே ஆவர்.

1816ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட 'பெங்கால் கெசட்' என்னும் ஆங்கில இதழே இந்தியரால் தொடங்கப்பட்ட முதல் இதழ் ஆகும். இவ்விதழைத் தொடங்கியவர் கங்காதர் பட்டாச்சாரியா என்பவர் ஆவார். இவ்விதழ் ஓராண்டு மட்டுமே வெளிவந்தது.

## வங்காள மொழி

இந்தியாவில் உள்ள மாநில மொழிகளில் முதன் முதலில் வங்காள மொழியில்தான் இதழ் வெளிவந்தது என்று குறிப்பிடுகின்றனர். 1818ஆம்ஆண்டு வெளிவந்த 'சமாச்சார் தர்பன்' தான் அவ்விதழ். ஆனால் 1802ஆம் ஆண்டே இலங்கையிலிருந்து 'சிலோன் கெசட்' என்னும் இதழ் ஆங்கிலம், தமிழ், சிங்களம் ஆகியவற்றுடன் வெளி வந்துள்ளது. தமிழ்ப்பகுதிக்கு 'அரசாங்க வர்த்தமானி' எனப் பெயரிடப் பட்டுள்ளது. 1812ஆம் ஆண்டு 'மாசத்தினச்சரிதை' என்னும் இதழ் தமிழ்நாட்டில் வெளிவந்தது என்று அ.மா.சாமி குறிப்பிட்டுள்ளார்.

1821ஆம் ஆண்டில் இராஜாராம் மோகன்ராய் 'சம்பாத் கௌமதி' என்ற வங்க மொழி இதழைத் தொடங்கியுள்ளார். 1831ஆம் ஆண்டில் 'சம்பாத் பிரபாகர்' என்ற நாளிதழ் தொடங்கப்பட்டுள்ளது. 1843ஆம் ஆண்டு அட்சயகுமார் தத்தா என்பவர் 'தத்துவ போதினி' என்ற இதழைத் தொடங்கினார். 1851ஆம் ஆண்டில் 'விவிதார்த்த சங்கிராக்' என்ற இதழும் 'சோம்பிரகாஸ்' என்ற இதழும் வெளிவந்துள்ளன. 1872 இல் 'அமிர்த பஜார் பத்திரிகா' தொடங்கப்பட்டது. 1878ஆம் ஆண்டு 'ஹிட்டாபாடி' என்னும் இதழ் தொடங்கப்பட்டுள்ளது. இதன் ஆசிரியர் இரவீந்திரநாத் தாகூர் ஆவார். சுரேந்திரநாத் பானர்ஜி 1879 ஆம் ஆண்டு 'பெங்காளி' என்ற இதழை நடத்தியுள்ளார்.

## கன்னடமொழி

கன்னட மொழியில் 1822ஆம் ஆண்டில் 'கன்னட சமாச்சார்' என்னும் இதழ் வந்துள்ளது என்று குறிப்பிட்டுள்ளார். இவ்விதழைக் கிறிஸ்தவப் பாதிரியார்கள் பெல்லாரியிலிருந்து வெளியிட்டுள்ளனர்.

இவ்விதழ் 'பாலபத்ரா', 'சத்திய தீபிகா' என்னும் பெயர்களில் பின்னர் வெளியாகியுள்ளது. 1865ஆம் ஆண்டில் 'கர்னாடக பிரகாசிகா' என்ற இதழ் வெளிவந்துள்ளது. 1881இல் 'ஹிட்டா போதினி' என்னும் இதழ் மைசூரிலிருந்து வெளியாகியுள்ளது. 1888ஆம் ஆண்டில் 'கர்னாடக கேசரி' என்னும் இதழ் வந்துள்ளது. 'விருத்தாந்த பத்ரிகா' (1887) 'சூரியோதய பிரகாசிகா' (1888), 'சவிநுதி' (1900), 'ஒக்கலிகா பத்ரிகா' (1907) முதலானவையும் கன்னட மொழியில் வெளியான இதழ்கள் ஆகும்.

## தெலுங்கு மொழி

1835இல் சென்னையிலிருந்து வெளிவந்த 'சத்திய தூதன்' என்னும் இதழ்தான் முதல் தெலுங்கு இதழ் ஆகும். இம்மாத இதழைக் கிறிஸ்தவ சமயப் பாதிரியார்கள் தொடங்கி நடத்தியுள்ளனர். 1840இல் 'விர்த்தாந்துனி', 1842இல் 'வர்த்தமான தரங்கினி' ஆகிய தெலுங்கு இதழ்களும் சென்னையிலிருந்தே வெளிவந்துள்ளன. 1861இல் 'தினவர்த்தமானி' என்னும் இதழ் வந்துள்ளது. 1886இல் 'ஆந்திர பிரகாசிகா' வார இதழாகத் தொடங்கப்பட்டுள்ளது. 'ஆந்திர சாகித்திய பரிஷத் பத்திரிகா' என்னும் இதழ் 1911ஆம் ஆண்டு வந்துள்ளது. 1913இல் 'ஹிதாபோதினி' என்னும் இதழ் தெலுங்கானா பகுதியில் வெளியாகியுள்ளது. 1938இல் 'ஆந்திர பிரபா' சென்னையிலிருந்து வெளிவந்துள்ளது.

## மலையாள மொழி

'விஞ்ஞான நிக்ஷேபம்' என்னும் மலையாள இதழ் கோட்டயத்தி லிருந்து வெளிவந்துள்ளது. 1840இல் வெளியான இவ்விதழ்தான் மலையாள மொழியில் வந்த முதல் இதழ் ஆகும். 'பாஸ்சீமா தாரிகா' என்னும் இதழ் 1862இல் வெளிவந்துள்ளது. 1876ஆம் ஆண்டில் எர்ணாகுளத்திலிருந்து 'சத்திய நாதம்' என்ற இதழ் வெளியாகியுள்ளது. 'கேரள பத்திரிகா' என்ற இதழ் 1884ஆம் ஆண்டு வந்துள்ளது. 1888ஆம் ஆண்டு 'மலையாள இராஜ்ஜியம்' என்னும் இதழ் வெளிவந்துள்ளது. 1910இல் 'கேரள கௌமதி', 1923இல் 'மாத்ரு பூமி', 1946இல் 'சந்திரிகா' ஆகிய மலையாள இதழ்கள் வெளிவந்துள்ளன.

## குஜராத்தி மொழி

1822இல் வெளிவந்த 'மும்பாய்னா சமாச்சார்' என்னும் குஜராத்தி மொழி இதழ் முதல் இதழாக வெளிவந்துள்ளது. 1830ஆம் ஆண்டு 'மும்பாய்னா வர்தமான்' என்ற இதழ் வந்துள்ளது. 'ஜாம் இ ஜாம்ஷெட்' என்ற வார இதழ் 1853இல் தொடங்கப்பெற்றது. 1860இல்

'ஹிதேச்சு' என்னும் இதழ் நாளிதழாக வந்துள்ளது. 1861இல் 'ஹிதாவர்தமான்', 'சூரத் மித்ரா' ஆகிய இதழ்கள் வெளிவந்துள்ளன. 1880இல் 'குஜராத்தி' என்ற இதழ் தொடங்கப்பட்டுள்ளது. 1902இல் 'சஞ்வர்தமான்' என்ற மாலை இதழ் வெளிவந்துள்ளது. 1932இல் 'குஜராத் சமாச்சார்' என்ற இதழ் வெளிவந்துள்ளது.

## மராத்தி மொழி

1832இல் வெளிவந்த 'பம்பாய் தர்பன்' என்னும் இதழ்தான் மராத்தி மொழியில் வெளிவந்த முதல் இதழ் ஆகும். இவ்விதழைத் தொடங்கியவர் பால் சாஸ்திரி ஜம்பேகர் என்பவர் ஆவார். கோவிந்த விதல் குந்தே என்பவர் 1841இல் 'பிரபாகர்' என்ற இதழைத் தொடங்கினார். 'தின்யான் பிரகாஷ்' என்ற இதழை 1849இல் ஹரி நாராயண ஆப்தே என்பார் தொடங்கினார். 'கேசரி' (1880), 'மராட்டா' (1881) ஆகிய வார இதழ்களைத் திலகர் தொடங்கி நடத்தினார். அம்பேத்கர் 'பாஷ்கிராத் பாரத்', 'சமதா' முதலிய இதழ்களை நடத்தினார். காடில்கார் என்பார் 1923இல் 'நவகல்' என்ற நாளிதழைத் தொடங்கினார்.

## உருது, இந்தி மொழி

'சையத் அல் அக்பர்' என்னும் இதழ்தான் உருதுமொழியில் வெளியான முதல் இதழ். இவ்விதழ் 1837இல் தொடங்கப்பட்டது. மௌலானா அபுல்கலாம் ஆசாத் 1912இல் 'அல்ஹிலால்' என்னும் இதழைத் தொடங்கினார். இவ்விதழ் கொல்கத்தாவிலிருந்து வெளிவந்தது. 1915இல் வெளிவந்த 'ஹம்தம்' என்னும் உருது இதழ் தேசிய உணர்வை ஊட்டியது. 1919இல் வெளியான 'பிரதாப்' என்னும் இதழ் தில்லி, ஜலந்தர் ஆகிய இடங்களிலிருந்து வெளியானது. 1923இல் 'மிலாப்' என்னும் இதழ் வெளிவந்தது. இதே ஆண்டில் 'தேஜ்' என்னும் இதழும் தொடங்கப்பட்டது. 'இந்துஸ்தான் இன்குலாப்' என்னும் இதழ் 1939இல் வெளிவந்தது.

இந்தி மொழியில் முதல் இதழ் 1826ஆம் ஆண்டு கொல்கத்தாவிலிருந்து வெளிவந்தது. 1844இல் 'பனாரஸ் அக்பர்' என்ற இதழ் வெளியானது.1854இல் 'சமாச்சார் சுதவர்ஷன்' என்னும் இதழ் இந்தி மொழியையும் வங்கமொழியையும் தாங்கி வெளிவந்தது.'சுதாகர்' என்னும் இதழ் 1850இல் வெளிவந்தது. இவ்விதழ் சமஸ்கிருத எழுத்தில் வெளியானது. 1861இல் 'கியான் பிரகாஷ்' என்னும் செய்தித்தாள் வெளிவந்தது. 1865இல் 'புத்தபிரகாசிகா', 'சர்வோபகாரக்' ஆகிய இதழ்கள் வெளிவந்தன. பால கிருஷ்ணபட் என்பவர் 'ஹிந்தி பிரதீப்'

என்ற மாத இதழைத் தொடங்கி நடத்தினார். 'கவிவாசன் சுதா' என்னும் இதழ் 1867இல் வெளிவந்தது. 1883இல் 'இந்துஸ்தான்' என்ற இதழ் வெளிவந்தது. 1914இல் திலகரின் 'கேசரி' என்னும் இதழ் இந்தியிலும் வெளிவந்தது. 1920 இல் இந்தியில் 'சரஸ்வதி' என்னும் இதழ் வெளிவந்தது, 'ஆஜ்' என்னும் இதழும் 1920 ஆம் ஆண்டு காசியில் தொடங்கப்பட்டது.

## பஞ்சாபி மொழி

பஞ்சாபி மொழியில் முதலில் வெளிவந்த இதழ் 'அக்பர் தர்பார் சாகிப்' என்பது ஆகும். இவ்விதழை முன்சி ஹரிநாராயணன் என்பவர் 1867ஆம் ஆண்டு அமிர்தசரசிலிருந்து வெளியிட்டார். 1875இல் 'சுகாவ்ய சம்போதினி' என்னும் இதழும் 1876இல் 'கவி சந்திரோதயா' என்னும் இதழும் வெளிவந்தன. 'குர்முகி அக்பர்' (1880), 'கால்சா அக்பர்' (1885) ஆகிய இதழ்கள் சீக்கிய அமைப்பினரால் தொடங்கப்பட்டன.1902இல் 'குர்மத் பர்சார்' என்னும் இதழும் 1905இல் 'அமிர்தபசார் பத்ரிகா' என்னும் இதழும் வெளிவந்தன. 'அகாலிரஞ்சித்' என்னும் இதழ் 1946இல் தொடங்கப்பட்டது. இவ்விதழ் அகாலி இயக்க இதழாக வெளிவந்தது.

## அசாமி, ஒரிய மொழி

1846இல் அசாமி மொழி இதழ் 'அருணோதயா' என்ற பெயரில் தோன்றியது. இவ்விதழைக் கிறித்தவ இயக்கம் நடத்தியது. 1872இல் 'அஸ்ஸாம் மிகிர்' என்னும் இதழ் கௌஹாத்தியிலிருந்து வெளிவந்தது. 1894இல் 'அஸ்ஸாம்' என்ற வார இதழ் தொடங்கப்பட்டது. 1918இல் 'அஸ்ஸாமியா' என்ற நாளிதழ் தொடங்கப்பட்டது.

ஒரிய மொழியின் முதல் இதழ் 1925இல் வெளிவந்த 'ஆஷா' ஆகும். இவ்விதழும் 1928இல் வெளிவந்த 'சமாஜ்' என்னும் இதழும் வார இதழ்கள் ஆகும். 'உத்கல் தீபிகா', 'சுவராஜ்', 'பிரதாப்' முதலிய செய்தித்தாள்கள் 1932இல் வெளிவந்தன. 1942இல் 'நவபாரத்' என்ற இதழ் வெளிவந்தது.

# 3. தமிழ் இதழ்கள்

இதழியல் வளர்ச்சி என்பது அச்சுத் தொழிலைச் சார்ந்திருக்கிறது. அச்சகம் அமைந்த பிறகுதான் இதழ்கள் வெளிவரத் தொடங்கின. இந்தியாவின் வேறு பகுதிகளில் ஏற்பட்டதைப் போன்றே தமிழகத்திலும் இங்கிருந்த ஆங்கிலேயர்களின் தேவைக்காக ஆங்கிலச் செய்தித்தாள்களை முதன்முதலில் வெளியிட்டனர். சென்னையில் 'மெட்ராஸ் கெசட்' 'கவர்ன்மென்ட் கெசட்' 'மெட்ராஸ் கூரியர்' ஆகிய மூன்றும் முதன் முதலில் இதழ்களாக வெளிவந்தன. இவற்றில் மெட்ராஸ் கூரியர் என்னும் இதழை ரிச்சர்ட் ஜான்சன் என்பவர் 1785-இல் தொடங்கினார். இதன் நோக்கம் வெள்ளையருக்கு வேண்டிய செய்திகளை வழங்குவதாகும்.

அக்காலக்கட்டத்தில் அதிகமாகச் செய்திப் போக்குவரத்து வளராமையால் செய்திகளைக் காலம் தாழ்த்தியே அச்சிட்டு வெளியிட்டனர். அரசின் கெடுபிடியும் சட்டத் திருத்தங்களும் கடுமையாக இருந்தன. எனவே இதழ்களின் வளர்ச்சி குன்றியது.

இதழ்கள் தோன்றிய காலம் தொட்டு இன்றுவரை வளர்ந்து வந்து கொண்டிருக்கும் தமிழ் இதழ்களைப் பற்றியும் அதன் பணிகளைப் பற்றியும் இங்குக் காண்போம்.

## சுதேசமித்திரன்

தமிழ் இதழ் வரலாற்றில் தனியொரு இடம்பெற்றுத் திகழும் சிறப்பான இதழ் 'சுதேசமித்திரன்'. இவ்விதழ் 1882-ஆம் ஆண்டு ஜி. சுப்பிரமணிய ஐயரால் தொடங்கப்பட்டது. இந்தியர்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளை மக்களுக்கு உணர்த்தும் விதமாகச் சுதேசமித்திரன் விளங்கியது. இவ்விதழ் நாட்டு மக்களுக்கு விழிப்புணர்வை ஏற்படுத்தும் உற்ற தோழனாக விளங்கியது. சுதேசமித்திரன் ''தமிழ் ஜன சமூகத்தாரின் அறிவை வளர்ப்பதே மேன்மை'' என்ற உறுதி மொழியைப் பின்பற்றும் இதழாகக் கருதப்பட்டது.

காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவில் நிகழ்த்திய அறப்போர் மற்றும் தென்னாப்பிரிக்க இந்தியர் போராட்டங்கள் முதலானவற்றிற்கு ஆதரவு தந்து செய்திகளை வெளியிட்டது. காந்தியடிகளைப் பற்றி முதன் முதலாகச் செய்தி வெளியிட்ட பெருமை சுதேசமித்திரனுக்கு உண்டு. வெள்ளையரின் கொடுமையைத் தாங்க முடியாத

இருநூறு தமிழ் மக்கள், தங்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளைத் தமிழிலேயே எழுதி அது சுதேசமித்திரனில் வெளிவந்தது.

இந்திய விடுதலை இயக்கச் சூழலில் அடக்குமுறைக்கு அஞ்சாமல் நாட்டுப்பற்றை மக்களின் உள்ளங்களில் கிளர்ந்தெழச் செய்த வகையிலும், உரிமைப் போராட்டங்களிலும், அரசியல் பொருளாதாரம் போன்றவற்றைத் தமிழிலேயே ஆராய முடியும் என்ற உண்மையை / நம்பிக்கையை ஏற்படுத்திய வகையிலும் சுதேச மித்திரன் செய்த தொண்டு போற்றுதற்குரியதாகும். விடுதலைப் பணியில் சக்தி மிகுந்த இவ்விதழ் தேசியக் குரலாக ஒலித்துச் சங்க நாதம் முழங்கியது. ''நம் தமிழை நன்கு எழுப்பச் செந்தமிழில் நம்முயர் சுதேசமித்திரனைத் தொடங்கியவர்'' என்று ஜி. சுப்பிரமணிய ஐயரை வ.உ. சிதம்பரனார் பாராட்டியுள்ளார்.

## சுதேசமித்திரனில் தலையங்கம்

நாட்டுப்பற்று, சமூகச் சீர்திருத்தப் பற்று, மொழிப் பற்று, பொருளாதாரச் சுரண்டல் எதிர்ப்பு முதலானவற்றை விளக்குகின்ற எண்ணற்ற தலையங்கங்கள் சுதேசமித்திரனில் வெளிவந்தன. எனவே இவ்விதழ் ஆங்கிலேய அரசின் கண்காணிப்பிற்கு ஆளாகியது. தலையங்கம் வெளியிடுவதிலேயே மிகப் பெரிய பிரச்சினையில் சிக்கித் தவித்தது.

இப்பத்திரிகை இறுதிவரை நடுத்தர, படித்த மக்களின் பத்திரிகை யாகவே விளங்கியது. இதன் அரசியல் போக்கு குறுகிய நோக்குடையதாக மாறியது. தேசிய சமுதாயப் பிரச்சினைகளில் இது குறுகிய நோக்குடையதாகவே விளங்கியது.

காந்தியடிகளின் புதிய அறப்போர் முறைகளாக உருவெடுத்த அகிம்சை, சத்யாக்கிரகம் முதலியவை தொடர்பான தலையங்கங்களை வெளியிட்டது. தென்னாப்பிரிக்க இந்தியர்களின் பிரச்சினைகள் மீதான அறப் போராட்டத்தையும், அங்குக் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த இந்தியர்களின் பிரச்சினைகளைப் பற்றியும் தமிழ் நாட்டு மக்கள் அறியும் வகையில் 1892 முதல் 1914 வரை ஏராளமான செய்திகளை வெளியிட்டுத் தலையங்கங்களையும் எழுதி வந்தது 'சுதே சமித்திரன்'.

## விவேக சிந்தாமணி

1892-இல் தோன்றிய இவ்விதழின் ஒரே நோக்கம் மக்களுக்கு அறிவை உண்டாக்குவதே ஆகும். இதன் ஆசிரியர் சி.வி. சாமிநாதையர் ஆவார்.

கிராமப்புறங்களில் பத்திரிகையைப் பரவச் செய்து அடித்தட்டு மக்களுக்குப் படிப்பறிவை வளர்க்க வேண்டும்; அம் மக்களின் படிப்பார்வத்தைப் பெருக்க வேண்டும் என்னும் நோக்கத்தோடு தொடங்கப்பட்ட இவ்விதழ் திங்களிதழாக 32 பக்கங்களுடன் தற்போது வெளிவரும் 'அமுத சுரபி' இதழைப் போல் வெளி வந்துள்ளது. இவ்விதழில் ஒவ்வொரு மாதமும் நீதி போதனைகளை வழங்கும் செய்திகள் இடம்பெற்றுள்ளன. மாணவர் பக்கம் என ஒரு தனிப் பகுதி அமைக்கப்பட்டு அதில் மாணவர்களுக்குப் பயன்படும் செய்திகள் வெளிவந்துள்ளன. 'தண்ணீர் சொல்லிய தன் வரலாறு', 'இலட்சியத்தில் கண்ணாயிரு', 'உண்மையில் பெருமைக்குரியவர் யார்?' முதலான கட்டுரைகள் மாணவர் பக்கம் என்னும் பகுதியில் வந்துள்ளன.

ஆசிரியர்களுக்கு அறிவுறுத்தும் செய்திகளை உள்ளடக்கியதாக உபாத்தியாயர் பக்கம் என்ற பகுதியும் தொடர்ந்து வந்துள்ளது.

மகளிருக்குத் தேவையான கருத்துகளைத் தெரிவிப்பதற்கு மாதர் மஞ்சரி என்ற பகுதி இடம்பெற்றுள்ளது. இந்தப் பகுதியில் இதழின் ஆசிரியர் சி.வி. சாமிநாத ஐயரே தொடர்ந்து எழுதியுள்ளார்.

திருமணம் செல்வக்கேசவராயர், வி.கோ. சூரியநாராயண சாத்திரியார், பி.ஆர். இராஜம் ஐயர், ஆ. மாதவையா, சரவணமுத்துப் பிள்ளை, வெ.ப.சுப்பிரமணிய முதலியார், ஜி.சுப்பிரமணிய முதலியார் போன்றோர் இவ்விதழில் எழுதிய தமிழறிஞர்களில் சிலர் ஆவர்.

தமிழ் நாவல் வரலாற்றில் சிறப்பிடம் பெறும் கமலாம்பாள் சரித்திரம் என்னும் நாவல் இவ்விதழில் தொடராக வந்தது ஆகும். தொடர்கதை வரலாற்றில் இதுவே முதலாவதாக வந்த தொடர் கதையாகக் கருதப்படுகிறது. இவ்விதழில் தமிழ்ப்புலவர் பலரின் வரலாற்றை வி.கோ.சூரியநாராயண சாத்திரியார் எழுதியுள்ளார். இது பின்னாளில் தமிழ்ப்புலவர் சரித்திரம் என்ற நூலாக வெளிவந்துள்ளது.

### லோகோபகாரி

1895இல் தொடங்கப்பட்ட இவ்விதழ் ஐம்பத்தைந்து ஆண்டுகளாகச் சென்னையிலிருந்து வெளிவந்துள்ளது. இவ்விதழைத் தோற்றுவித்தவர் வி. நடராச ஐயராவார். விசாலாட்சி அம்மாள், கோ. வடிவேலு செட்டியார், பரலி சு. நெல்லையப்பர், சாமிசிதம்பர னார் ஆகியோர் இவ்விதழுக்கு ஆசிரியராக இருந்துள்ளனர்.

அக்காலத்தில் ஏறத்தாழ இவ்விதழுக்கு 2000 பேர் சந்தாதாரராக இருந்துள்ளனர். லோகோபகாரியின் முதல் பக்கத்தில் இறை

நம்பிக்கை தொடர்பான செய்திகள் தொடர்ந்து வெளிவந்துள்ளன. சாதி, சமயப் பாகுபாடு இன்றி எல்லோருக்கும் பொதுவான கருத்துகளை இவ்விதழ் வெளியிட்டுள்ளது. இவ்விதழுக்கு ஆண்டுச் சந்தா மூன்று ரூபாயாக இருந்துள்ளது.

பிற மாநிலங்களிலிருந்து வெளிவரும் ஆங்கில இதழ்களில் உள்ள செய்திகளை இவ்விதழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளனர். மெட்ராஸ் மெயில், டைம்ஸ், ஸ்டாண்டர்ட், தி இந்து, கொல்கத்தாவி லிருந்து வெளிவந்த பவர், வங்காளி, அமிர்த பஜார் பத்திரிகா, மும்பையிலிருந்து வெளிவந்த வேறுசில இதழ்கள் ஆகியவற்றிலிருந்து செய்திகளை எடுத்துத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளனர்.

லோகோபகாரி இதழ் மிகச் சிறந்த தமிழ் நடையைப் பின்பற்றி யுள்ளது. 'இந்த லோகோபகாரி என்னும் பத்திரிகை யாதொரு இலக்கணப் பிழையுமின்றி நல்ல தெளிவான செந்தமிழ் நடையில் ஒரு அக்ஷரமேனும் பயனற்றதாய் இராமல் அர்த்த புஷ்டியுடன் கூடியது' என்று அதன் ஆசிரியர் எழுதியுள்ளார்.

தற்காலத்தில் வாசகர்களைக் கவரப் பல பரிசுத் திட்டங்களை அறிவிப்பதைப் போல் இவ்விதழ் சில சிறப்புத் திட்டங்களை அறிவித்துள்ளது. பத்திரிகையின் சந்தாதாரர் வீட்டில் திருமணம் என்றால் அதற்கு இவ்விதழ் நிதி உதவி வழங்கியுள்ளது.

இவ்விதழ் முப்பத்திரண்டு பக்கங்களுடன் வெளிவந்துள்ளது. லோகோபகாரி இதழ் நீதிக்கட்சியினரின் பிராமணர் அல்லாதோர் இயக்கத்தைத் தேசாபிமானம் அற்ற இயக்கம் என எதிர்த்துள்ளது. லோகோபகாரி இதழில் காந்தியச் சிந்தனைகளும் சமூகச் சீர்திருத்தச் சிந்தனைகளும் வெளியிடப்பட்டுள்ளன. கதர் இயக்கப் பிரச்சாரத்தி லும் லோகோபகாரி தீவிரமாக ஈடுபட்டுள்ளது. கதர் இயக்கம் தொடர்பான நிகழ்ச்சிகளை வெளியிட்டதுடன் '' கதர்க் கருத்துக்கள்'' என்னும் விளம்பரத்தையும் வெளியிட்டுள்ளது.

### தமிழர் நேசனும் தமிழ்நாடும்

1917-ஆம் ஆண்டு 'தமிழர் நேசன்' தொடங்கப்பட்டுள்ளது. இவ்விதழ் மேல்நாட்டாரின் அறிவியல், கலை, இலக்கியம் தொடர்பான செய்திகளை அறிமுகப்படுத்துவதை நோக்கமாகக் கொண்டு வெளிவந்துள்ளது. இயற்பியல், வேதியியல், உயிரியல், பயிரியல், நிலவியல்,புவியியல் முதலான அறிவியல் கட்டுரைகள் இவ்விதழில் இடம்பெற்றுள்ளன.

இவ்விதழின் எழுத்துகள் 10 புள்ளி அளவில் படிப்பதற்கு வசதியாக அச்சடிக்கப்பட்டுள்ளன. மயிலாப்பூரிலிருந்து வெளிவந்த

இவ்விதழின் அப்போதைய விலை எட்டணா. இவ்விதழைத் தொடர்ந்து வெளியிடுவதற்கு உ.வே. சாமிநாத ஐயர், பவானந்தம் பிள்ளை, சீனிவாச ஐயங்கார், ஏ.வி. சுப்பிரமணிய ஐயர் முதலியோர் முயற்சி மேற்கொண்டுள்ளனர். ஆங்கிலம் அறிந்தோரான ஏகாம்பர ஐயர், வீரராகவ ஐயர், நாராயண ஐயர், சா. சுப்பிரமணிய பிள்ளை முதலானோர் தொடர்ந்து கட்டுரைகள் எழுதியுள்ளனர்.

இவ்விதழில் மொழிபெயர்ப்புக் கவிதைகளும், சிறுகதைகளும், புதினங்களும், நாடகங்களும் இடம் பெற்றுள்ளன. இவ்விதழில் சிறுவர் பகுதிகள் தொடர்ந்து வெளியிடப்பட்டுள்ளன. சிறுவர் பகுதிகளின் எழுத்து 12 புள்ளிகளில் அமைந்துள்ளது. இவ்விதழில் வரலாற்றுச் செய்திகளும் தொடர்ந்து வெளியிடப்பட்டுள்ளன. மாஜினி, நெல்சன், நெப்போலியன், டால்ஸ்டாய், வாஷிங்டன், மார்ட்டின் லூதர், லிங்கன், கூட்டன்பர்க், கரிபால்டி முதலியோர் பற்றிய கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

## தமிழ்நாடு

1919-இல் 'தமிழ்நாடு' இதழ் பி.வரதராஜுலு நாயுடுவை ஆசிரியராகக் கொண்டு வார இதழாக வெளிவந்துள்ளது. இவ்விதழ் முதலில் சேலத்திலிருந்து வெளிவந்துள்ளது. தமிழ் நாடு இதழில் வரும் தலையங்கம் மிகவும் புகழ்பெற்றதாகும். தமிழ்நாடு பத்திரிகை யில் வரதராஜுலு எழுதும் தலையங்கத்தை இந்து பத்திரிகை மொழி பெயர்த்து வெளியிட்டுள்ளது. தமிழ்நாடு இதழில் வெளியாகும் கட்டுரைகளைச் சுதேசமித்திரனும் அவ்வப்பொழுது எடுத்து வெளியிட்டுள்ளது என்று டி.எஸ்.சொக்கலிங்கம் குறிப்பிட்டுள்ளார். தமிழ் நாடு இதழில் வரதராஜுலு பயன்படுத்திய மொழிநடை பிற இதழ்கள் பின்பற்றும் வகையில் அமைந்துள்ளது. Water falls என்னும் ஆங்கிலச் சொல்லை நீர் வீழ்ச்சி என்று மொழிபெயர்த்ததை வெறுத்த வரதராஜுலு அருவி என்றே குறிப்பிட்டுள்ளார். தேவையில்லாமல் எழுத்துகள் மிகுதியாகப் பயன்படுத்துவதையும் வரதராஜுலு விரும்பவில்லை. 'மகாத்மாவின் பிரசங்கம்' என்பதை 'மகாத்மா பிரசங்கம்' என்று எழுதினாலே போதும் என்பது அவருடைய கருத்து. 'போலீசாரின் துப்பாக்கிப் பிரயோகம்' என்று எழுதுவதைக் காட்டிலும் 'போலீசார் சுட்டனர்' என்று எழுதுவதே சிறப்புடையதாகும் என்று வரதராஜுலு குறிப்பிட்டுள்ளார்.

தமிழ்நாடு இதழுக்கு ஏர் உழவனைத் தாங்கிய மூவண்ணக் கொடி சின்னமாக இருந்துள்ளது. அதன்கீழ்ச் 'சுயராஜிய வாழ்வே சுக வாழ்வு' என்னும் தொடர் குறிப்பிடப்பட்டுள்ளது. காங்கிரஸ் இயக்கத்தின்

வளர்ச்சியைக் கருத்திற்கொண்டு கட்டுரைகள் வெளியிட்ட வரதராஜுலு காங்கிரஸ் கட்சியின் குறைகளையும் எழுதியுள்ளார்.

வ.வே.சு. ஐயர் நடத்தி வந்த சேரன்மாதேவி குருகுலத்தில் பிராமண மாணவர்களுக்கும், மற்றவர்களுக்கும் தனித்தனியாக உணவு பரிமாறியதைக் கண்டித்து எழுதியுள்ளார்.

1926இல் தமிழ்நாடு இதழ் நாளிதழாக வெளிவரத் தொடங்கியது. மக்கள் பேச்சுத் தமிழில் இதழ் நடத்தியதால் சுதேசமித்திரனுக்கு அது போட்டியாக அமைந்தது. காங்கிரசாரின் ஆதரவு இதழாக வெளிவந்த தமிழ்நாடு 1930-இல் மகாத்மா காந்தியின் சட்டமறுப்பு இயக்கத்தை எதிர்த்தது. எனவே தமிழ்நாடு இதழுக்குக் காங்கிரசாரின் ஆதரவு குறையத் தொடங்கியது. எனவே 1936-இல் தமிழ்நாடு இதழ் நின்று விட்டது.

## தேசபக்தனும் நவசக்தியும்

1917-ஆம் ஆண்டு திசம்பர்த் திங்கள் திரு.வி.க.அவர்களால் தொடங்கப்பட்டது 'தேசபக்தன்' இதழாகும். அன்னிபெசன்ட் அம்மையாரால் சென்னையில் தொடங்கப்பட்ட தன்னாட்சி இயக்கத்தின் (Home Rule Movement) ஆதரவு இதழாகத் தேசபக்தன் வெளிவந்தது. பழமையும், புதுமையும் கலந்த சிந்தனையாளரான திரு.வி.க. இனிய தமிழ்நடையைப் பின்பற்றினார். சுதேசமித்திரன் இதழுக்குப் போட்டியாக நல்ல தமிழில் வெளிவந்த இதழ் இதுவாகும். 1919-ஆம் ஆண்டு முதல் தேசபக்தனின் ஆசிரியர் பொறுப்பில் வ.வே.சு.ஐயர் அமர்ந்தார். வ.வே.சு.ஐயர் தீவிரவாத இயக்கத்தைச் சேர்ந்தவராதலால் தேசபக்தனிலும் தீவிரவாத எண்ணம் ஆரம்பித்தது. தேசபக்தன் இதழில் செய்தித்தலைப்புகள் தமிழில் மட்டுமே வெளியாயின. அதற்கு முன் வந்த தமிழ் இதழ்களில் ஆங்கிலத்திலும் தலைப்புச் செய்தி வெளியாகும் வழக்கம் இருந்து வந்துள்ளது.

திரு.வி.க தொழிற்சங்கத்துடன் தொடர்புடையவர் என்பதால் தேசபக்தனைத் தொழிலாளர்கள் வாங்கிப் படித்துள்ளனர். இவ்விதழ் 1920 வரை வந்து நின்று விட்டது.

### நவசக்தி

திரு.வி.க. அவர்களால் 1920-ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட இதழ் 'நவசக்தியாகும். நவசக்தி இதழுக்கென்றே சாது அச்சுக்கூடம் தொடங்கப்பட்டது. நவசக்தி இதழும் சாது அச்சுக்கூடமும்

தொடங்குவதற்குத் தொழிலாளர்களே நிதி உதவி செய்துள்ளனர். வார இதழாக வெளிவந்த இவ்விதழ் பத்தாண்டுகள் தொடர்ந்து வந்துள்ளது. அதன் பிறகு இவ்விதழ் வாரம் மும்முறை இதழாக வெளிவந்துள்ளது. அதன் பிறகு இதழ் வெளிவருவதில் சிக்கல் ஏற்பட்டதால் திங்கள் இதழாக வெளிவரத் தொடங்கியது.

## நவசக்தியின் அமைப்பு

நவசக்தி என்னும் தலைப்பின் மேலே 'வந்தே மாதரம்' என்னும் தொடரும் நவசக்தி என்னும் தலைப்பின் கீழே 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்னும் தொடரும் அமைக்கப் பெற்றுள்ளன. இதழ் வெளிவரும் ஆண்டைக் குறிப்பதற்குச் சிலம்பு என்றும் வாரத்தைக் குறிப்பதற்குப் பரல் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. நவசக்தியின் ஆண்டுச் சந்தா ரூபாய் ஐந்தாக இருந்துள்ளது.

## நவசக்தியின் குறிக்கோள்

1. மக்கள் சுதந்திரத்துக்கு அடிப்படையாக உள்ளது.
2. ஜனநாயக முறைக்கு அடிகோல வேண்டுவது தொழிலாளர் இயக்கமாதலால் அவ்வியக்கத்தை வளர்க்க முயலுதல்.
3. தொழிலாளர் இயக்கத்தை வலுப்படுத்தவும், அவர்களின் குறைகளை நிவர்த்தி செய்யவும், அவர்கள் வழி ஆட்சி முறையைத் திருப்பவும் அவர்களுக்கெனத் தனியாக உழைக்கவும் தொழிற்கட்சியை வகுத்தல்.
4. இந்தியாவில் விவசாயம், கைத்தொழில் முதலியவற்றை ஓம்பலும், விவசாயிகளின் கஷ்டங்களைப் போக்க முயலுதலும், தொழிற்சாலைகளைப் பெருக்குதலும்.
5. பெண்மக்கள் நலத்துக்குப் பாடுபடுதல்.
6. தமிழ் மொழியையும், தமிழ் நாட்டுப் பழைய பழக்க வழக்கங்கள் முதலியவற்றையும் செப்பம் செய்தல்.
7. தமிழ்நாட்டில் தோன்றியுள்ள சாதிப்பகை, வகுப்புத் துவேஷம் முதலியவற்றை ஒழித்துச் சகோதர நேயத்தை வளர்த்தல்.
8. தேசத்துக்குத் தீங்கிழைக்குங் கட்சிகளைக் கண்டித்து அக்கட்சித் தலைவர்களை நேசித்துத் தேச வளர்ச்சியை நாடும் கட்சியில் அவர்களைத் திருப்ப முயலுதல்.
9. இந்தியாவில் பிறந்த அனைவரையும் இந்தியராகக் கருதி அவரை ஓரினமாக்கி அவர் நலத்துக்காகத் தியாகம் செய்தல்.

இவ்வொன்பது கொள்கைகளையும் அடிப்படையாகக் கொண்டு நவசக்தி இதழ் வெளிவந்துள்ளது.

## செந்தமிழ்ச் செல்வி

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் திங்கள் இதழாக வெளிவருகிறது 'செந்தமிழ்ச் செல்வி'. இவ்விதழ் 1923-ஆம் ஆண்டு தமிழர் திருநாள் முதல் வெளிவருகிறது. இதன் ஆசிரியர் வ.சுப்பையா பிள்ளை ஆவார். தமிழ் மொழியில் வெளிவரும் இதழ்களில் சிறப்பிடம் பெறும் இதழ் செந்தமிழ்ச் செல்வியாகும்.

## இதழ் தோன்றக் காரணம்

1. பிறமொழிகள் முளைப்பதற்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தோன்றி முடியுடை வேந்தர் பலரால் வளர்க்கப்பட்டு, சொல்வளத்தாலும் பொருள் வளத்தாலும் ஒப்புயர்வின்றி ஒளிர்ந்த தமிழரசி அன்றிருந்த நிலையை எண்ணிப் பார்த்துத் தோன்றியதாகும்.

2. திருவள்ளுவர், நக்கீரர், நால்வர், ஆழ்வார், சேக்கிழார், கம்பர், மெய்கண்டார், சிவஞான முனிவர் முதலிய அறிவறிந்த மக்களைப் பெற்றும் இங்ஙனம் தனது வீறு குன்றியிருத்தலைக் கண்ணாரக் கண்டும் வாய் வாளாமை மேற்கொண்டிருத்தல் எற்றோ? இவற்றைப் பல்லாற்றானும் எண்ணி, எண்ணி ஏக்கமுற்றிருந்த சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினர் குறைகளை ஒருவாறு ஒழிக்கத் துணிந்து செந்தமிழ்ச் செல்வி என்னும் பெயரால் ஒரு மாதப் பத்திரிகையைத் தமது கழகத்தினின்று வெளியிட முன்வந்துள்ளனர்.

3. செந்தமிழ்ப் பாவையைத் தொழத்தகு தெய்வமாகச் செய்த சைவப் பெருமக்கள் தமிழ்ச் செல்வியைத் தமது கண்ணேபோல் ஓம்பிப் பலப்பல அரிய நூல்களையும் உரைகளையும் இயற்றிப் பண்டைக் காலத்தே வளர்த்தது போல இன்றும் சீராட்டிப் பாதுகாத்தலைத் தமது தலைமைக் கடனாகக் கொண்டனர். எனவே செந்தமிழ்ச் செல்விக்குத் தமிழ் ஒரு கண்ணும் சைவம் மற்றொரு கண்ணுமாகத் துலங்கும் என்பது சொல்லாமலே தெரியும் என்று இவ்விதழ் தோன்றியதன் காரணம் விளக்கப்பட்டுள்ளது.

### குடியரசு

'குடியரசு' இதழ் பெரியார் ஈ.வெ.ரா., வ.மு. தங்கப் பெருமாள் இருவரையும் ஆசிரியராகக் கொண்டு 1925 முதல் வார இதழாக வெளி

வந்துள்ளது. 16 பக்கங்களைக் கொண்ட இவ்விதழின் ஆண்டுச் சந்தா மூன்று ரூபாய் ஆகும். நாட்டுப்பற்று, மொழிப்பற்று,சமயப்பற்று ஆகியவற்றை வெளிப்படுத்தும் குறிக்கோளுடன் இவ்விதழ் வெளி வந்துள்ளது என்றாலும் சமூகச் சீர்திருத்தக் கருத்துகளுக்கு இவ்விதழ் முதன்மை கொடுத்துள்ளது. எல்லா உயிர்களையும் சமமாகக் கருதும் எண்ணத்தை வலியுறுத்தும் நோக்கில் கட்டுரைகளும் தலையங்கங்களும் இடம் பெற்றுள்ளன. தீண்டாமைக் கொடுமையை அகற்றவும் தமிழ் மொழிப் பெருமையைக் காக்கவும் இவ்விதழ் முயற்சி செய்துள்ளது. ஆங்கிலக் கல்வியால் எந்தப் பயனும் இல்லை என்பதை விளக்கச் சென்னைப் பல்கலைக்கழக விழாவை விமர்சித்துக் கட்டுரை வெளி யிட்டுள்ளனர்.

சமகால இதழ்களின் கருத்துகளைக் குறிப்பிடுதல், முரண்பட்ட கருத்துகளுக்கு மறுப்புரை வழங்குதல் முதலிய பணிகளையும் குடியரசு தொடர்ந்து செய்து வந்துள்ளது.

## சுதந்திரச் சங்கு

காலணா இதழ் என்று அழைக்கப்பட்ட இதழ் 'சுதந்திரச் சங்கு' என்னும் இதழாகும். இதன் ஆசிரியர் எஸ். கணேசனும் எஸ். சுப்பிரமணியனும் ஆவர். இவ்விதழ் 1930 ஆம் ஆண்டு சனவரி 26 ஆம் நாள் வெளிவந்தது. அவ்வப்போது வெளியிடும் நோக்கத் தோடு வெளிவந்த இவ்விதழ் மக்களின் ஆதரவால் வாரம் இருமுறை இதழாகி வாரம் மும்முறை இதழாக வெளிவந்துள்ளது.

காந்தியடிகளின் கருத்துகளைப் பரப்பும் நோக்கத்தில் வெளிவந்த இவ்விதழின் பெயர் ஆசிரியர்களின் பெயருக்கு முன்னால் இடம் பிடித்துக் கொண்டது. இவ்விதழாசிரியர்கள் சங்கு கணேசன் என்றும் சங்கு சுப்பிரமணியன் என்றும் அழைக்கப்பட்டனர். சங்கு கணேசன் தெலுங்கில் 'ஜென்ம பூமி' என்ற இதழையும் வெளியிட்டுள்ளார்.

## சுதந்திரச் சங்கு அமைப்பு

எட்டுப் பக்கங்களுடன் வெளிவந்த சுதந்திரச் சங்கு இரண்டு பத்திகளாகப் பிரிக்கப்பட்டது. சுதந்திரச் சங்கின் இலக்கிய இதழாக 'இலக்கியச் சங்கு' என்னும் இதழ் வெளிவந்துள்ளது. 24 பக்கங்களைக் கொண்ட இவ்விதழ் வெள்ளி தோறும் ஓரணா விலையில் வெளி வந்தது. இலக்கியச் சங்கின் ஒவ்வொரு பக்கமும் மூன்று பத்திகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

## காந்தி

1931ஆம் ஆண்டு டி.எஸ். சொக்கலிங்கத்தை ஆசிரியராகக் கொண்ட இதழ் காந்தியாகும். காலணா விலை கொண்ட இவ்விதழ்

வாரம் இரு முறை வெளிவந்துள்ளது. காந்தியின் கொள்கையைப் பரப்புவதற்கென்றே வெளியான இதழ் காந்தி என்று இதன் பெருமையை வ.உ. சிதம்பரனார் புகழ்ந்துள்ளார். 1931ஆம் ஆண்டு செப்டம்பர் முதல் இவ்விதழ் வாரம் மும்முறை இதழாக வெளி வந்துள்ளது. 1933ஆம் ஆண்டு வரை வெளிவந்த இவ்விதழ் நின்று விட்டது.

## மணிக்கொடி

1933ஆம் ஆண்டு கே. சீனிவாசன் என்பவரை ஆசிரியராகவும் பி.எஸ்.இராமையாவை நிர்வாக ஆசிரியராகவும் கொண்டு வெளி வந்த இதழ் மணிக்கொடி ஆகும். மணிக்கொடியில் அரசியல் கருத்துகளை விளக்கும் கருத்துப்படங்கள் வெளிவந்துள்ளன. அக்கருத்துப் படங்கள் தொடர்பான தலையங்கமும் வெளிவந்தது. மணிக்கொடியில் இலக்கியச் சோலை என்னும் பகுதியில் தொடர்ந்து இலக்கிய விமர்சனங்கள் நிகழ்ந்துள்ளன.கு.ப. ராஜகோபாலன், புதுமைப்பித்தன், பி.எஸ். இராமையா ஆகியோர் மணிக்கொடியில் தொடர்ந்து எழுதி வந்துள்ளனர். பாரதிதாசன், சுத்தானந்த பாரதியார் ஆகியோரது கவிதைகளும் இடம்பெற்றுள்ளன. அக்காலத்திலேயே சிறுகதைப் போட்டிகளை நடத்திப் பரிசும் வழங்கியுள்ளது.

## இன்றும் வெளிவரும் நாளிதழ்கள்

தமிழ்நாட்டின் தலைநகரான சென்னையை மையமாகக் கொண்டு பல நாளிதழ்கள் வெளிவருகின்றன. அவை ஒவ்வொன்றையும் தனித்தனியாகப் படிக்காமல் இப்பிரிவில் சேர்த்துக் காண்போம்.

## தினமணி

1934ஆம் ஆண்டில் வெளிவந்த தினமணி இதழின் ஆசிரியர் டி.எஸ். சொக்கலிங்கம் ஆவார். தினமணியின் முதல் இதழில் 'தின' 'மணி' என்னும் இரண்டிற்குமிடையே இரு மூவண்ணக் கொடிகள் குறுக்காக அச்சிடப்பட்டுள்ளன. எட்டுப் பக்கங்களைக் கொண்ட இவ்விதழின் அப்போதைய விலை அரையணா. இவ்விதழின் ஆசிரியரான சொக்கலிங்கமும் உதவியாசிரியராக இருந்த ஏ.என். சிவராமனும் சுதந்திரப் போராட்ட வீரர்கள் ஆவர். 1940இல் தினமணி இதழுக்கு ஏ.என். சிவராமன் ஆசிரியரானார். தொடர்ந்து நாற்பது ஆண்டுகள் இவ்விதழில் பணியாற்றியவர் ஏ.என்.சிவராமன் ஆவார்.

இத்தினமணி இதழில் புதுமைப்பித்தனும் உதவி ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார். 1943இல் நிர்வாகத்தினருடன் ஏற்பட்ட பிரச்சினை காரணமாக அவர் வெளியேறிவிட்டார். தினமணி இதழ்

தற்பொழுதும் வெளிவந்து கொண்டிருக்கிறது. தினமணி நிறுவனத்தைச் சார்ந்த இதழாக வெளிவந்து கொண்டிருந்த தினமணி கதிர் இப்போது ஞாயிற்றுக்கிழமை தோறும் இலவச இணைப்பாக வெளிவருகிறது.

## தினத்தந்தி

1942-இல் சி.பா. ஆதித்தனாரால் தொடங்கப்பட்ட இதழ் தினத்தந்தி. இவ்விதழ் முதன்முதலில் தந்தி என்ற பெயரில் மதுரையிலிருந்து வெளிவந்தது.

தம் இதழுக்கென்று கையேடு ஒன்றை வெளியிட்டு அதற்கேற்ப இதழ் நடத்தியவர் சி.பா. ஆதித்தனார் ஆவார். 'Daily Telegraph' என்னும் ஆங்கில இதழைப் போல் தமிழில் தினத்தந்தியை இவர் வெளியிட்டார். மக்களுக்குப் புரியும் எளிய நடையைப் பின்பற்ற வேண்டும் என்பதே இவருடைய கொள்கை. இதற்காகப் பேச்சுத் தமிழிலுள்ள சொற்களைக் கொச்சை நீக்கி எழுத வேண்டும் என்னும் பொன்விதியை இவர் உருவாக்கியுள்ளார்.

மாநிலச் செய்திகளுக்கு முதலிடம் கொடுக்கும் இவ்விதழ் இந்தியச் செய்திகளையும் உலகச் செய்திகளையும் சிறிய செய்திகளாக வழங்குகிறது. சிறுவர் முதல் பெரியவர் வரை அனைவரும் படிக்க வேண்டும் என்ற நோக்கில் படக்கதை, தொடர்கதை, திரைப்படச் செய்திகள் முதலான அனைத்துச் செய்திகளையும் இவ்விதழ் வெளி யிடுகிறது.

தொடக்க காலத் தினத்தந்தியில் தலையங்கம் வெளியிடப் பட்டது. பின்னர், தலையங்கம் வெளியிடுவது நிறுத்தப்பட்டது. ‘தலையங்கம்’ என்பது ஓர் இதழின் கருத்துத்தான். ஓர் ஆசிரியர் தனது கருத்துகளை வாசகர் மீது திணிக்கும் முயற்சியே தலையங்கம் என்று கருதியதால் தலையங்கத்தைத் தினத்தந்தி நிறுத்திவிட்டது. இப்போது மீண்டும் தலையங்கம் தினத்தந்தியில் வெளிவருகிறது.

தினத்தந்தியின் பொன்விழா ஆண்டிற்குப் பிறகு தினத்தந்தி என்ற பெயரின் கீழ் ‘வெல்க தமிழ்’ என்னும் தொடர் அமைக்கப்பட்டுள்ளது. சென்னை, மதுரை, திருச்சி, கோவை, சேலம், நெல்லை, வேலூர், கடலூர், ஈரோடு, நாகர்கோவில், தஞ்சை, திண்டுக்கல், பெங்களூர், புதுச்சேரி ஆகிய நகரங்களில் அச்சாகி வெளிவரும் இவ்விதழ் தமிழ் இதழ்களின் விற்பனையில் முதலிடம் வகிக்கும் இதழாகும்.

## தினமலர்

1951ஆம் ஆண்டு டி.வி.இராமசுப்பையர் என்பவரால் தொடங்கப் பட்டது தினமலர் நாளிதழாகும். இவ்விதழ் முதன்முதலில்

திருவனந்தபுரத்தில் தொடங்கப்பட்டது. இவ்விதழில் 'தின' 'மலர்' என்னும் சொற்களுக்கிடையே தாமரைப் பூ இடம்பெற்றுள்ளது. தென் திருவிதாங்கூர்ப் பகுதியில் வாழ்ந்த தமிழர்கள் தமிழ்நாட்டுடன் இணைவதற்காக நடத்திய போராட்டத்திற்கு இவ்விதழ் முக்கியத் துவம் கொடுத்தது. சிறுவர்மலர், வாரமலர், முதலான இலவச இணைப்புகளை வழங்கி வாசகர்களைக் கவர்கிறது. தினமலரின் நிறுவனரான டி.வி. இராமசுப்பையரின் நினைவாக ஆண்டுதோறும் சிறுகதைப்போட்டி ஒன்றை நடத்தி வருகிறது.

தினகரன், தினத்தூது, முரசொலி, தீக்கதிர், நமது எம்ஜிஆர் முதலான வேறு பல தமிழ் இதழ்களும் வெளிவருகின்றன. மாலை முரசு, மாலை மலர், மக்கள் குரல், தமிழ் முரசு முதலான மாலை இதழ்களும் வெளிவருகின்றன.

# 4. இதழ் ஆசிரியர்கள்

இதழ் ஆசிரியர்களின் அறிவும் திறமையும் அவர்கள் நடத்திய இதழ்கள் வாயிலாக வெளிப்படுகின்றன. அவ்விதழ்கள் எவ்வாறு மக்களுக்கு வழிகாட்டியுள்ளன என்பதை அறிந்துகொள்ள இதழாசிரியர்களின் படைப்புகள் நமக்கு உதவுகின்றன. இதழாசிரியர்கள் தங்கள் இதழை நடத்துவதற்குப்பட்ட துன்பங்களும் எடுத்துக் கொண்ட முயற்சிகளும் எண்ணிலடங்காதவை.

இதழ் ஆசிரியர்கள் தன்னல உணர்வைத் துறந்து நாட்டு நலத்தையும் மக்கள் நலத்தையும் மனத்தில் கொண்டே பணியாற்றி யுள்ளனர். பொருளை அடிப்படையாகக் கொண்டு வாழாமல் தொண்டை அடிப்படையாகக் கொண்டு வாழ்ந்துள்ளனர். அவர்களின் அயராத உழைப்பால் இந்திய இதழ்த் துறையும் தமிழ் இதழ்த் துறையும் தலை நிமிர்ந்து நிற்கின்றன. அந்த இதழ் ஆசிரியர்கள் பற்றிய செய்திகளைக் காண்போம்.

## இந்திய இதழாளர்கள்

இந்திய இதழாளர்களில் குறிப்பிடத்தக்கவர்களை இந்தப் பகுதியில் காண்போம்.

### மகாத்மா காந்தி

இந்தியத் திருநாட்டின் விடுதலைக்காகப் போராடி வெற்றி பெற்றவர் காந்தியடிகள். அவர் இதழியல் துறையிலும் மாபெரும் தொண்டாற்றியுள்ளார். அரசியலுக்கு இதழ் மிகவும் தேவை என்பதை உணர்ந்த மகாத்மா 1903இல் ''இந்தியன் ஒப்பீனியன்'' என்னும் ஆங்கில வார இதழைத் தொடங்கினார்.

தம்முடைய கொள்கைகளையும், கருத்துகளையும் நாட்டு மக்களுக்குத் தெரிவிப்பதற்கு இவ்விதழை நன்கு பயன்படுத்திக் கொண்டார். ஆங்கிலத்தில் நன்கு புலமை பெற்ற மகாத்மா 1919இல் 'யங் இந்தியா' என்னும் மற்றொரு இதழைத் தொடங்கினார். இந்திய விடுதலைக்கு இவ்விதழ் நன்கு பயன்பட்டது. இதைக் கண்ட ஆங்கில அரசு திணறியது. இக்காலக்கட்டத்தில் தீண்டாமை தலை விரித்தாடியது. இது கண்டு குரல் கொடுத்த மகாத்மா தம்முடைய 'யங் இந்தியா' இதழை 1934இல் 'அரிஜன்' என மாற்றினார்.

அறப்போர், அகிம்சை, உண்ணாநோன்பு,வழிபாடு முதலிய வற்றின் மீது மிகுதியாகக் கவனம் செலுத்திய மகாத்மா, பத்திரிகை உலகின் முன்னோடியாகத் திகழ்ந்தார்.

## தாதாபாய் நௌரோஜி

1886இல் காங்கிரஸ் மகாசபையின் தலைவராகத் தேர்ந்தெடுக் கப்பட்ட தாதாபாய் நௌரோஜி இளம் வயதிலிருந்து பத்திரிகைத் துறையில் ஆர்வம் கொண்டிருந்தார். பின்னர்த் தமது''ராஸ்த் குப்தார்'' என்ற மாதம் இருமுறை இதழைத் தொடங்கினார். நௌரோஜியே இவ் விதழின் ஆசிரியர் பொறுப்பை ஏற்றுத் தீவிரமாகப் பணிபுரிந்தார்.

'ராஸ்த் குப்தார்' என்னும் பெயருக்கு '' உண்மை விளம்பி'' என்பது பொருள். 'இந்திய வறுமையும் ஆங்கிலேயரின் பண்பற்ற ஆட்சியும்' என்னும் தலைப்பில் தொடர்ந்து பல கட்டுரைகளை வெளியிட்டுத் தொண்டாற்றியுள்ளார்.

## அன்னிபெசன்ட் அம்மையார்

இங்கிலாந்தில் வாழ்ந்த அம்மையார் இந்திய மக்களுக்காகப் பணிபுரிந்தார். அம்மையார் இலண்டனில் இருந்தபடியே 'லிங்க்' என்னும் இதழைத் தொடங்கினார். இந்தியா, ஐரீஸ் ஆகிய இரு நாடுக ளின் விடுதலைப் போராட்டங்கள் பற்றிக் காரசாரமாகக் கட்டுரைகளை யும் தலையங்கங்களையும் எழுதி வெளியிட்டார்.

1917இல் கொல்கத்தாவில் நடைபெற்ற காங்கிரஸ் மகா சபையின் தலைவராக அம்மையார் தேர்ந்தெடுக்கப்பட்டார். பின்னர் நாடு முழு வதும் சுற்றுப்பயணம் செய்து விடுதலை உ ணர்வை மக்களிடையே ஏற்படுத்தினார். இதழ்களிலும் அனல் பறக்கும் கட்டுரைகளை எழுதி னார். இதனால் எரிச்சலடைந்த ஆங்கில அரசாங்கம் அம்மையாரைக் கைது செய்தது. இவர் 'தன்னாட்சி இயக்கம்' என்னும் ஹோம் ரூல் இயக்கத்தை நடத்தி வந்தார்.

## பாலகங்காதர திலகர்

சுதந்திர உணர்வை மக்களுக்குப் பத்திரிகை மூலமாக ஊட்டுவதற் காகத் தம்முடைய நண்பர்களின் உதவியுடன் 'கேசரி' என்கின்ற மராத்தி மொழி வாரப் பத்திரிகையையும், 'மராட்டா' என்ற ஆங்கில வார இத ழையும் ஒரே நேரத்தில் தொடங்கி நடத்தியவர் திலகர்.

சுதந்திரம் எனது பிறப்புரிமை -அதை
அடைந்தே தீருவேன்

என வீர முழக்கமிட்டவர் திலகர். இவ்விரு இதழ்கள் மூலமாக அவர் எழுதிய கட்டுரைகள் கோழைகளையும் கொதித்தெழச் செய்தன. இது கண்ட ஆங்கிலேய அரசு திலகரைச் சிறையிலடைத்தது. விடுதலைப் போராட்டக் காலத்தில் காங்கிரஸ் கட்சிக்குள் இரு பிரிவுகள் இருந்தன. அப்பிரிவுகளை மிதவாதிகள், தீவிரவாதிகள் என்பர். இதில் கோபால கிருஷ்ண கோகலே முதலானோர் மிதவாதிகள். திலகரும் அவரைச் சார்ந்தவர்களும் தீவிரவாதிகள் ஆவர்.

## கஸ்தூரி சீனிவாச ஐயங்கார்

பி.ஏ. பட்டதாரியான இவர் சட்டப் படிப்பில் சேர்ந்து வழக்கறிஞர் தொழிலுக்குப் படித்தார். ஆனால் சட்டப் படிப்பில் தோல்வியடைந்ததையொட்டி இவரது தந்தை கஸ்தூரி ரங்க ஐயங்கார், ஜி.சுப்பிரமணிய ஐயரிடமிருந்து 'இந்து' நாளிதழை விலைக்கு வாங்கித் தன் மகனைப் பத்திரிகையாளராக்கினார். தந்தையாரின் மறைவிற்குப் பிறகு தம் சொந்த ஆற்றலாலும், முயற்சியாலும் 'இந்து' இதழ் இன்று உலகப் புகழ் பெற்ற நாளிதழாகத் திகழ்கிறது. 1935ஆம் ஆண்டு முதல் 1945 வரை இந்தியச் செய்தித்தாள் ஆசிரியர்கள் மாநாட்டுக்குக் கஸ்தூரி சீனிவாசன் தலைமையேற்றுச் சிறப்பாக நடத்தினார். 1951இல் அகில உலகப் பத்திரிகையாளர் கழகத்தின் துணைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

## போத்தன் ஜோசப்

பம்பாய் கிரானிக்கல், கல்கத்தாவிலுள்ள காபிடல், இந்துஸ்தான் டைம்ஸ், ஜின்னாவின் டான் போன்ற புகழ் பெற்ற இதழ்களின் ஆசிரியராகப் பணிபுரிந்தவர். 1938இல் இராமநாத் கோயங்காவின் அழைப்பினை ஏற்ற போத்தன் ஜோசப் சென்னைக்கு வந்து 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' இதழின் ஆசிரியரானார். 1500 பிரதிகளே வெளிவந்த எக்ஸ்பிரஸ், இவர் ஆசிரியர் பொறுப்பேற்றதும் 13,000பிரதிகள் வெளி வந்தது. இவரது பணியாற்றும் திறமையைப் பார்த்த இராஜாஜி தமது சுயராஜ்யா இதழின் ஆசிரியராக்கினார். அவ்விதழையும் சிறப்பாகவே வழிநடத்தினார் ஜோசப்.

## இராஜா ராம்மோகன் ராய்

''பிரம்ம சமாஜம்'' என்ற இயக்கத்தைத் தோற்றுவித்துச் சமுதாயத் தில் மண்டிக் கிடந்த மூட நம்பிக்கைகளைத் தகர்த்தெறிந்தவர். சமுதாயச் சீர்திருத்தப் பணிக்காகவே 1821இல் 'சம்பத் கௌமதி' என்னும் வங்காள இதழைத் தொடங்கினார். பின்னர் 'மிரத்-அல்-அக்பர்' என்னும் பாரசீக வார இதழையும் தொடங்கினார். இவ்விரு இதழுக்கும் இவரே ஆசிரியர். 1829இல் 'பெங்கால் ஹெரால்டு'

என்னும் ஆங்கிலப் பத்திரிகைக்குப் பங்குதாரராய் இருந்து அரிய பணிகளை மேற்கொண்டார் இராஜாராம் மோகன் ராய்.

## சக்கரவர்த்தி இராஜாஜி

விடுதலை இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரலாக விளங்கிய இராஜாஜி சிறந்த பத்திரிகையாளராகவும் விளங்கினார். விடுதலைப் போராட்டத்தில் 1922இல் கைதுசெய்யப்பட்ட மகாத்மா காந்தி தாம் நடத்தி வந்த 'யங் இந்தியா', 'நவ ஜீவன்' ஆகிய இரு பத்திரிகைகளையும் இராஜாஜியிடம் ஒப்படைத்துவிட்டுச் சிறை சென்றார். 1928இல் திருச்செங்கோட்டில் காந்தி ஆசிரமம் நடத்தி வந்த இராஜாஜி 'விமோசனம்' என்னும் திங்கள் இதழைத் தொடங்கினார். அதன் உதவி ஆசிரியராகக் கல்கி கிருஷ்ணமூர்த்தியை நியமித்தார். மது ஒழிப்பினைக் குறிக்கோளாகக் கொண்டது இந்த இதழ். இராஜாஜி காங்கிரஸிலிருந்து விலகிச் 'சுதந்திரா' கட்சியைத் தொடங்கியபோது தமது கொள்கைகளைப் பரப்பச்''சுவராஜ்யா'' என்னும் ஆங்கில வார இதழைத் தொடங்கித் தாமே ஆசிரியர் பொறுப்பையும் ஏற்றார்.

## தமிழ் இதழாளர்கள்

தமிழ்நாட்டிலும் இதழியல்துறை இந்திய இதழ்த் துறைக்கு இணையாக வளர்ந்து வந்தது. தேசிய உணர்வையும் விடுதலை உணர்வையும் மக்கள் நெஞ்சில் விதைப்பதைக் குறிக்கோளாகக் கொண்டு சில ஆசிரியர்கள் பணியாற்றியுள்ளனர். தீண்டாமை முதலான சமுதாயக் கொடுமைகளை ஒழிப்பதற்காகச் சிலர் பணியாற்றியுள்ளனர். அவர்களைப் பற்றி இப்பகுதியில் காண்போம்.

## ஜி. சுப்பிரமணிய ஐயர்

தமிழ்ப் பத்திரிகை உலகின் தந்தையாகக் கருதப்பட்டவர். 'சுதேச மித்திரன்' இதழை வார இதழாகத் துவங்கி, பின்னர் நாளிதழாக மாற்றியவர். இருபது ஆண்டுகள் 'சுதேசமித்திரன்' இதழாசிரியராகப் பணியாற்றியவர். இந்தியத் தேசியக் காங்கிரஸ் மகாசபையைத் தொடங்கக் காரணமாக இருந்த தலைவர்களில் இவரும் ஒருவர். இவருக்கு இருந்த தேசப் பற்று எல்லையற்றது.

மொழியைப் பற்றியோ, நடை பற்றியோ, எதுகை மோனை பற்றியோ கவலைப்படாதவர். தேசிய உணர்வைப் பரப்புவதையே குறிக்கோளாகக் கொண்டிருந்தார்.

மொழிநடை எப்படியிருந்தாலும் அக்கால மக்கள் சுதேசமித்திரனைப் படிக்கத் தவறவில்லை. ஏனென்றால் இவ்விதழ் ஆங்கில அறிவின் சாரத்தைப் பிழிந்து கொடுத்தது; அறிவுப் பசிக்குத் தீனி போட்டது.

## தமிழ்த்தென்றல் திரு.வி.க.

*தேசபக்தனும், நவசக்தியும் தமிழ்ப் பத்திரிகை வரலாற்றில் இரு சகாப்தங்கள். அதாவது 1917 முதல் 1920 வரை தேசபக்தன், 1920 முதல் 1933 வரை 'நவசக்தி' என்ற இரு இதழ்களையும் திரு.வி.க. நடத்தி வந்தார். இதைப் படித்தவர்கள் இந்திய விடுதலைக்காகப் பாடு பட்டதுடன் உடல், பொருள், ஆவி அனைத்தையும் கொடுத்தனர். தூய தமிழில் இதழ் நடத்திய பெருமை இவருக்குண்டு. தமிழில் இதழ் நடத்துபவர்களுக்கெல்லாம் திரு.வி.க. சிறந்த முன்னோடி எனலாம். ஆங்கிலச் சொல் கலக்காமல் இதழ் நடத்த முடியும் என்று நடத்திக் காட்டியவர் திரு.வி.க.*

## டாக்டர் பா. வரதராஜுலு நாயுடு

*1926இல் 'தமிழ்நாடு', என்னும் இதழைத் தொடங்கி எளிய தமிழில் அரசியல் பிரச்சினைகளைத் தீர்க்கக்கூடிய வகையில் எழுதும் தனிச் சிறப்புக் கொண்டவர். டி.எஸ். சொக்கலிங்கம், சுந்தரவடிவேலு ஆகியோர் 'தமிழ்நாடு' இதழின் துணை ஆசிரியர்களாகப் பணிபுரிந்தார்கள். பெரியாரைப் பத்திரிகை உலகத்திற்கு அறிமுகம் செய்து வைத்த பெருமை இவரையே சாரும்.*

## டி.எஸ். சொக்கலிங்கம்

*'தலையங்கத்திற்குச் சொக்கலிங்கம்' என்ற நிலையை உருவாக்கியவர். 1923-இல் 'தமிழ்நாடு' வார இதழின் உதவி ஆசிரியராகப் பதவி வகித்தார். 1927-இல் அது நாளிதழ் ஆனதும் ஆசிரியராக உயர்வு பெற்றார். 1931இல் 'காந்தி' என்னும் இதழைத் தொடங்கினார். தொடர்ந்து 'வந்தே மாதரம்' இதழையும் நடத்தி வந்தார். அரசின் தடையை மீறிச் செய்தி வெளியிட்டதால் ஆறுமாதம் சிறைத் தண்டனை பெற்று 200 ரூபாய் தண்டமும் கட்டினார்.*

*1932இல் விடுதலை ஆனதும் 'காந்தி' இதழை மீண்டும் தொடங்கி நடத்தினார். 1933இல் அவ்விதழ் நாளிதழாக மாறியது. இவ்விதழைப் பற்றி இராஜாஜி ஒரு முறை ''காந்தி ஒரு விஷயத்தைச் சொல்கிறது என்றால் சென்னையிலுள்ள காந்தி பத்திரிகை சொல்லுகிறதா இல்லை மகாத்மா காந்தி சொல்லுகிறாரா என்று ஐயப்படும்படி ஆகிவிட்டது'' எனப் பாராட்டியுள்ளார். 1934இல் தினமணி நாளிதழின் ஆசிரியர் பொறுப்பினை ஏற்றார். பின்னர் 1944இல் 'தினசரி' என்னும் நாளேட்டினை நடத்தி வந்தார். ஜனயுகம், பாரதம், நவசக்தி ஆகிய இதழ்களையும் நடத்திய பெருமை இவரையே சாரும். இவரைப்*

'பேனா மன்னர்' என்றும் ''பத்திரிகை உலகப் பிரம்மா'' என்றும் அழைத்து மகிழ்ந்தனர்.

### பெரியார் ஈ.வெ.ரா.

பத்திரிகையின் வாயிலாகச் சீர்திருத்தக் கருத்துகளை எடுத்துரைத்த தலைவர்களுள் பெரியாரும் ஒருவர். இவர் தொடங்கிய 'விடுதலை' இதழ் தற்போதும் வெளிவருவது குறிப்பிடத்தக்கது. தீண்டாமை, மூடப்பழக்க வழக்கம், சாதிக் கொடுமை, வலியார் மெலியாரைத் துன்புறுத்துதல் முதலான கொடுமைகளை ஒழிப்பதைக் குறிக்கோளாகக் கொண்டு இதழ் நடத்தியவர். கிளிப்பிள்ளை வேதாந்தம், திண்ணைத் தத்துவம் முதலான தலைப்புகளில் தொடர்ந்து சீர்திருத்தக் கருத்துகளை எழுதி வந்தார்.

லை-லை, ளை-ளை, றா-றா, னா-னா, ணா-ணா, னை-னை, ணை-ணை எனத் தமிழ் மொழியில் இவர் கொண்டு வந்த எழுத்துச் சீர்திருத்தத்தைத் தமிழக மக்கள் அனைவரும் ஏற்றுக் கொண்டனர். இச்சீர்திருத்த எழுத்து முறையைப் பின்பற்ற வேண்டும் என்று தமிழக அரசு ஆணை பிறப்பித்தது.

பெரியார் ஈ.வெ.ரா. 1925இல் 'குடியரசு' என்னும் இதழைத் தொடங்கி நடத்தினார். 1934இல் 'விடுதலை', 'சமதர்மம்', 'புரட்சி' என்னும் இதழ்களைத் தொடங்கினார். 1935இல் 'பகுத்தறிவு' என்னும் இதழைத் தொடங்கினார். 1970 இல் 'உண்மை' என்னும் இதழையும் நடத்தினார்.

தமிழ்நாட்டின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் சென்று பகுத்தறிவுப் பிரச்சாரம் செய்தவர் பெரியார். குடியரசு இதழின் தொடக்க விழாவில்,

> மற்ற பத்திரிகையைப் போல் இல்லாமல் மனத்தில் பட்டதைத் தைரியமாய்ப் பொது ஜனங்களுக்கு உள்ளது உள்ளபடி தெரிவிக்க வேண்டும் என்பது எனது அபிப்பிராயம்

என்று கூறியுள்ளார். மேலும்,

> ஒவ்வொரு வகுப்பும் முன்னேற வேண்டும். அதை அறவே விடுத்து, வெறும் தேசம் தேசம் என்று கூக்குரலிடுவது எமது நோக்கமன்று

என்றும் குறிப்பிட்டுள்ளார்.

ஒருவன் உழைப்பில் ஒருவன் நோகாமல் சாப்பிடுவது என்கிற தன்மை இருக்கிற வரையிலும், ஒருவன் தினம் ஒருவேளைக் கஞ்சிக்கு மார்க்கமில்லாமல் பட்டினி கிடந்து சாவதும், மற்றொருவன் தினம் ஐந்து வேளை சாப்பிட்டுவிட்டு, சாய்வான நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு வயிற்றைத் தடவிக் கொண்டிருப்பதும் இருந்தே தீரும்

என்று தெரிவித்துள்ளார்.

**மகாகவி பாரதியார்**

1904-இல் இதழியல் துறைக்கு வந்தவர். அன்று முதல் அவரது இறுதிக் காலம் வரை சுமார் பதினெட்டு ஆண்டுகள் இதழ்ப்பணி செய்தவர். ஆரம்பக் காலத்திலேயே 'சுதேசமித்திரன்' இதழின் உதவி ஆசிரியரானார். 1905இல் 'சூரியோதயம்' என்ற மாத இதழைத் தம் பொறுப்பில் நடத்தி வந்தார். 1906இல் 'இந்தியா' என்ற வாரஇதழ் வாயிலாக விடுதலை உணர்வை ஊட்டினார். 'பாலபாரதா' என்னும் ஆங்கில வார இதழின் ஆசிரியராகவும் பொறுப்பேற்றார்.

அரவிந்தர் நடத்திவந்த ஆங்கிலப் பதிப்பைக் 'கர்மயோகி' எனத் தமிழ்ப்படுத்தி நடத்தி வந்தார். 'விஜயா' என்னும் நாளிதழின் ஆசிரியர் பொறுப்பையும் ஏற்றார். காளிதாசன், சக்திதாசன், நிருப நேசன், உத்தமதேசாபிமானி,நிருத்திய தீரர் ஆகிய புனை பெயர்களில் கட்டுரைகள் எழுதி வந்தார்.

பாரதியாரின் தமிழ்நடை புதுப்பொலிவுடன் விளங்கிய நடை ஆகும். சிறு சிறு சொற்கள், எளிய தொடர்கள் கொண்டவையாக அந்நடை விளங்கியது. இந்த நடையை அவர் தாம் நடத்திய 'இந்தியா' இதழில் பயன்படுத்தியுள்ளார். இந்தியா இதழில் கட்டுரைகளும் பாடல்களும் தொடர்ந்து எழுதி வந்தார் பாரதியார். இதழ் முழுவதும் அவரால் படைக்கப்பட்டு வந்தாலும் ஆசிரியர் என்ற பொறுப்பிலிருந்து பணியாற்றியவர் ஸ்ரீனிவாசன் என்பவர் ஆவார்.

சுதேசமித்திரனில் உதவி ஆசிரியராகப் பணியாற்றிக் கொண்டே அவர் 'சக்கரவர்த்தினி' என்னும் இதழையும் நடத்தியுள்ளார். 'சக்கரவர்த்தினி'யில் அவர் எழுதிய கட்டுரைகளும் பாடல்களும் அனைவராலும் விரும்பிப் படிக்கப்பட்டன.

**பாவேந்தர் பாரதிதாசன்**

கவிதை மூலம் சமுதாயத் தொண்டு செய்ததைப் போன்றே பாரதிதாசன் இதழ்கள் வாயிலாகவும் பணியாற்றியுள்ளார்.

சாக்கடையாய் இருந்த சமுதாயப் பாழ்குழியைப் பூக்கடையாக்கிய பெருமை பாவேந்தருக்கு உண்டு. சாதி சமயம், மூட நம்பிக்கை, பகுத்தறிவுக்கு ஏற்காத கருத்துகளைத் தகர்த்தெறிந்தார்.

'புதுவை முரசு' 'ஸ்ரீ சுப்பிரமணிய பாரதி கவிதாமண்டலம்' ஆகிய இதழ்களுக்கு ஆசிரியர் பொறுப்பேற்றார். 'முல்லை' என்ற இதழுக்கு ஆதரவு தந்தார். 'குயில்' உள்ளிட்ட பல இதழ்களுக்கு உரிமையாளராகவும் இருந்தார்.

'புதுவை முரசு' (17.11.1930) இதழில்,

> நம் நாட்டில் பெண்கள் நிலைமையானது மிக்க கவலைக்கிடமானது. வேர் தொடங்கி உச்சிக் கிளை வரை முழுவதும் திருத்தம் செய்ய வேண்டும். பெண்களின் கேவல நிலைமைக்கு நம் நாட்டு மூடப் பழக்கவழக்கங்களே காரணம் என்று சொல்ல வேண்டும்

என்று எழுதியுள்ளார்.

> மதத்தின் அப்புறத்தில் தான் விசால எண்ணங்கள், விரிந்த தத்துவங்கள், அறிவு வளர்ச்சிக்குரிய திட்டங்கள் உண்டு என்பதை நீங்கள் அறியவில்லையானால், உங்களை என்னவென்று சொல்லுவது? தமிழை அரிக்க வந்த செல்லுப்பூச்சிகளே! இந்தியனாகிய மகமதியனும் இந்தியனாகிய கிறிஸ்தவனும் தமிழை வெறுக்க வைத்தது எது தெரியுமா? அதனோடு சம்பந்தப்படுத்தி வைத்திருந்த மதம். மதக்காரர்களின் மூலபலம் சண்டையிடுவதுதான். அதற்குள்ளே சிக்கலாகிக் கிடக்கும் தமிழும் அழிந்து போகிறது

என்று 16.2.1931 நாளிட்ட புதுவை முரசு இதழில் எழுதியுள்ளார்.

தமிழன் யார்? என்பதற்கு விடை கீழ்வருமாறு :

> தமிழ்நாடு தாய் நாடு; தமிழே தாய்மொழி; தமிழர் ஒழுக்கம் தன்னொழுக்கம் என்னும் மூவகைப் பேறும் பெற்றவன் தமிழன்; மற்றவன் பிறனே (குயில் : 1.06.1958)

என்று தமிழனை அடையாளப்படுத்தியவர் இதழாளர் பாரதிதாசன்.

**கல்கி கிருஷ்ணமூர்த்தி**

திரு.வி.க. நடத்திய 'நவசக்தி' இதழின் துணை ஆசிரியராய்ப் பணிபுரிந்தவர். இராஜாஜியின் 'விமோசனம்' இதழின் துணை

ஆசிரியர். பின்னர் ஆனந்த விகடன் ஆசிரியர் குழுவில் சேர்ந்து பணிபுரிந்து வந்தார். ஆனந்தவிகடன் ஆசிரியர் தேவன் இறந்ததும் இவர் ஆசிரியரானார்.

1941-வரை பணியாற்றிய இவர் 'கல்கி' என்னும் வார இதழைத் தொடங்கினார். இவருடைய வரலாற்று நாவல்களுள் இலக்கிய நயம் கொண்ட அரிய படைப்பான சிவகாமியின் சபதம், பார்த்திபன் கனவு,பொன்னியின் செல்வன், கள்வனின் காதலி, கணையாழி, வீணை பவானி, அலைஓசை ஆகிய வரலாற்று சமூக நாவல்கள் கல்கியில் எழுதிய தொடர்களாகும்.

## சி.பா. ஆதித்தனார்

நாளிதழ் என்பது காலையிலே பூத்து மாலையில் மலரும் பூவைப் போன்றது என்னும் கருத்தை வெளிப்படுத்தியவர் சி.பா. ஆதித்தனார். சாதாரணக் கூலியாள், வண்டி இழுப்பவன் முதலானவர்களையும் பத்திரிகை படிக்க வைக்க வேண்டும் என்பதே எங்கள் நோக்கம் என வலியுறுத்திச் சொன்னவர் சி.பா. ஆதித்தனார்.

இன்றைய தமிழ் நாளிதழ்களில் அதிகம் விற்பனையாகும் இதழாக விளங்குவது தினத்தந்தி ஆகும்.

1942 ஆம் ஆண்டு 'தந்தி' என்ற பெயரில் சி.பா. ஆதித்தனார் தமது இதழைத் தொடங்கினார். பின்னர் அது 'தினத்தந்தி' எனப் பெயர் பெற்றது. வட்டாரச் செய்திகளுக்கு முதன்மை கொடுக்கும் வகையில் தமிழ்நாடு முழுவதும் பல பதிப்புகளை வெளியிட்டார் சி.பா. ஆதித்தனார். மாலையிதழ் வரலாற்றில் குறிப்பிடத்தக்க இதழாக வெளிவரும் 'மாலைமுரசு' இதழையும் இவரே தொடங்கினார். 'வாராந்தரி ராணி', 'மாலை மலர்' முதலான இதழ்களும் இவரால் தொடங்கப்பட்டவை ஆகும்.

கார்ட்டூன் என்னும் ஆங்கிலச் சொல்லினைக் கருத்துப்படம் என அழகிய தமிழில் சொல்லியவர் இவர். தமிழ் இதழியலின் தந்தை என்று போற்றப்படும் இவர், தமிழ்மொழி இனஉணர்வாளர்.

# 5. இதழ்களின் பணிகள்

அரசின் நான்காம் தூண் (Forth State)என்று மெக்காலே என்பாரால் வருணிக்கப்படுவது இதழியல் துறையாகும். ஆற்றல் மிக்க துறையாக விளங்கும் இதழியல் துறை மக்களாட்சிக்குத் துணைபுரியும் துறையாகும். அரசுக்கும் மக்களுக்கும் பாலமாக இருந்து செய்தியைத் தெரிவிப்பதும் சமூக மேம்பாட்டுக்குப் பணிபுரிவதும் இதழ்களின் கடமையாகும்.

இதழ்கள் ஒரு குறிக்கோளை மையமாகக் கொண்டு செயலாற்ற வேண்டும். அவ்வாறு இல்லாமல் செயல்படும் இதழ்களால் நாட்டுக்கும் மக்களுக்கும் பயன் கிடைப்பது அரிது.

> செய்தித்தாளின் நோக்கங்களில் ஒன்று என்னவென்றால் மக்களின் உணர்வை அறிந்து அதை வெளியிடுவதாக இருக்க வேண்டும். மக்களிடம் இருக்க வேண்டிய உயர்ந்த எண்ணங்களை உருவாக்குவது மற்றொரு நோக்கமாகும்

என்று காந்தியடிகள் குறிப்பிட்டுள்ளார்.

பொதுவாக இதழ்களின் பணிகளை நான்காகப் பகுத்துக்கூறுவர். அவை,

1. அறிவித்தல்
2. அறிவுறுத்தல்
3. மகிழ்வித்தல்
4. வணிகம் செய்தல் ஆகியவை ஆகும்.

## அறிவித்தல்

இதழ்களின் பணிகளில் முதன்மையானது அறிவித்தல் ஆகும். அரசுத்துறைச் செய்திகளையும், குற்றவியல் செய்திகளையும், சமூகநலச் செய்திகளையும் உடனுக்குடன் வழங்குவதை அறிவித்தல் என்பர். இச்செய்திகளை விருப்பு, வெறுப்பு இல்லாமல் மக்களை மையமாகக் கொண்டு முழுமையாக வழங்குதல் வேண்டும். அறிவித்தல் என்னும் இந்தப் பணியில் எல்லா வகையான செய்திகளும் இடம்பெறும் என்றாலும் எந்தெந்தச் செய்திக்கு முதன்மை கொடுக்க வேண்டும் என்பது இதழாளர்களின் எண்ணத்திற்கேற்ப அமையும்.

பொழுதுபோக்குச் செய்திகள், விளையாட்டுச் செய்திகள், கலை, பண்பாட்டுச் செய்திகள் முதலான செய்திகளை அறிவிக்கும் போது இதழ்கள் இருவகையாக அறிவிக்கும். குறிப்பிட்ட நிகழ்ச்சி நடைபெறுவதற்கு முன்பே 'நடைபெற இருக்கிறது' என்று முன் அறி விப்பாக வழங்குவது ஒருவகையான செய்தி அறிவித்தல் பணி ஆகும்.

குறிப்பிட்ட நிகழ்ச்சி நடந்து முடிந்த பிறகு அந்நிகழ்ச்சி தொடர் பானவற்றைத் தொகுத்து வழங்குதல், நடந்ததைத் தெரிவித்தல் என் னும் வகையில் அடங்கும்.

அரசின் நலத்திட்ட உதவிகள், போலியோ சொட்டு மருந்து கொடுத்தல், பல்வேறு மருத்துவ முகாம்கள், மாநாட்டுச் செய்திகள் முதலானவற்றைத் தெரிந்து கொள்வதில் மக்கள் பெரிதும் ஆர்வம் காட்டுவார்கள். எனவே இத்தகைய செய்திகளை முன் அறிவிப்பாக அறிவித்தலை இதழ்கள் செய்யும்.

முன் அறிவிப்பாக வழங்கும் செய்திகள் இதழ்கள்தோறும் மாறுபடக்கூடும். பொதுவாகவே இதழ்கள் அரசுசார் செய்திகளுக்கும், அரசியல்சார் செய்திகளுக்கும் முதன்மை அளிக்கும். ஒரு குறிப்பிட்ட அரசியல் கட்சியின் கொள்கைக்கு இணக்கமாக இருக்கும் இதழ் அந்தக் கட்சி ஆட்சியின் போது நிகழ இருக்கும் செய்திகளை முன் அறிவிப்பாக வழங்கும். பிற கட்சி சார்ந்த செய்திகளை அவ்வாறு வழங்காமல் நிகழ்ந்து முடிந்த பிறகு அறிவிப்பதோடு நிறுத்திக் கொள்ளும்.

## படங்கள்

செய்தியை அறிவிப்பதில் படங்கள் முக்கிய இடம் வகிக்கின்றன. அரசியல் கட்சி மாநாடு, முதலமைச்சரின் பொதுக்கூட்டம் முதலானவை நடந்து முடிந்த பிறகு அவை பற்றிய செய்திகளைப் படங்களுடன் வெளியிடுவது இதழ்களின் இயல்பு. இவ்வாறு வெளி யிடுவதால் அந்நிகழ்ச்சிக்கு நேரில் செல்லாதவர்களாலும் நேரில் சென்றதைப்போன்ற உணர்வைப் பெற முடியும். படங்களை வெளியிடும்போதும் இதழ்கள் தங்கள் விருப்பம்போல் வண்ணப் படமாகவும் கறுப்பு வெள்ளைப் படமாகவும் சிறிய படமாகவும் பெரிய படமாகவும் வெளியிடுவதுண்டு.

## அறிவித்தலின் வரையறை

அறிவித்தல் பணியை இதழ்கள் எவ்வாறு செய்ய வேண்டும் என்பதைச் செய்தித்தாள் ஆசிரியர்கள் கூட்டத்தில் வரையறை செய்துள்ளார்கள். நடப்பு நிகழ்ச்சிகளின் கருத்துகளின் போக்குகளை மக்களுக்கு ஆர்வம் ஏற்படுமாறும் விவாதத்தைத் தூண்டும் வகையிலும் தெரிவிக்க வேண்டும்.

செய்திகளையும் (News) செய்திக் கண்ணோட்டங்களையும் (Views) நடுநிலையுடன் வெளியிடுதல் வேண்டும் என்று கூறியுள்ளனர்.

இதழ்களின் சமூக மேம்பாட்டு நோக்கத்திற்கேற்ப இதைச் சரியாகப் பின்பற்றியும் செய்வார்கள்; பின்பற்றாமலும் இருப்பார்கள். அரசுக்கு எதிரான கருத்தை மக்களிடையே பரப்பும் நோக்கில் இயற்கைச் சீற்றங்கள், வேலையில்லாத் திண்டாட்டம், பட்டினிச் சாவுகள் முதலான செய்திகளைச் சில இதழ்கள் தங்கள் கருத்து எதுவுமின்றி அறிவித்தலாக மட்டும் செய்வார்கள். வேறு சில இதழ்களோ அவற்றை மேலும் மிகைப்படுத்திக் காட்டும்.

## அறிவுறுத்தல்

அறிவித்தலைச் செய்யும் இதழ்கள் தேவைப்படும் இடங்களில் அறிவுறுத்தலையும் செய்தல் வேண்டும். இவ்வகை அறிவுறுத்தல் வெளிப்படையாகவும் இருக்கலாம்; மறைமுகமாகவும் இருக்கலாம். ஒரு குறிப்பிட்ட தொகுதியில் இடைத் தேர்தல் நடைபெறுகிறது என்றால் அந்தத் தொகுதியில் இதற்கு முன்பு நடைபெற்ற தேர்தலில் வெற்றிபெற்ற கட்சிகளைக் குறிப்பிடுவது அறிவுறுத்தலின் ஒரு பகுதியாகும். வெற்றி பெற்ற கட்சிகளில் மிகுதியாக வெற்றிபெற்ற கட்சி என்று ஒரு குறிப்பிட்ட கட்சியைச் சுட்டிக்காட்டினால் அது மிகையான அறிவுறுத்தல் ஆகும்.

இரு நாடுகளுக்கிடையே ஓர் ஒப்பந்தம் கையெழுத்தாகிறது என்றால் அதை மட்டும் வெளியிடுவது அறிவித்தல் ஆகும். அத்துடன் அவ்வொப்பந்தத்தின் பின்புலம் முழுவதையும் குறிப்பிடுவதுடன் அவ்வொப்பந்தத்தால் ஏற்படும் நன்மைகளையும் விளக்குவது அறிவுறுத்தல் ஆகும்.

அரசின் பல்வேறு நலத்திட்டங்களை அறிவிப்பாக வெளியிடுவதுடன் அந்த நலத்திட்டங்கள் தொடர்பான முழுமையான விவரங்களைத் தெரிவிப்பதும் அறிவுறுத்தல் ஆகும். இந்த அறிவுறுத்தல் பணியைப் பின்வரும் பகுதிகள் வாயிலாக இதழ்கள் சிறப்பாகச் செய்ய இயலும்.

1. தலையங்கத்தின் வாயிலாக அறிவுறுத்த இயலும்.
2. செய்திக் கண்ணோட்டத்தின் வாயிலாக அறிவுறுத்த இயலும்.
3. செய்திப் படங்கள் வாயிலாக அறிவுறுத்த இயலும்.
4. நேர்காணல் வாயிலாக அறிவுறுத்த இயலும்.

## அறிவுறுத்தல் வகைகள்

'அறிவுறுத்தல்' என்பது பொதுமக்களுக்கு அறிவுறுத்தல், அரசுக்கு அறிவுறுத்தல் என இருவகையில் அடங்கும். மேலே குறிப்பிட்டவை யெல்லாம் பொதுமக்களுக்கு அறிவுறுத்தல் என்னும் வகையைச் சார்ந்தவையாகும். பின் வருவன அரசுக்கு அறிவுறுத்தல் என்னும் வகையைச் சேரும்.

ஒரு குறிப்பிட்ட இடத்தில் கலவரமோ, வேறு ஏதேனும் பிரச்சினையோ எழுந்தால் அது பற்றிய உண்மை நிலவரத்தை இதழ்கள் வெளிப்படுத்தும். அவ்வாறு வெளிப்படுத்தும்போது அது பொதுமக்களை மட்டும் சென்று சேராமல் அரசுக்கும் அறிவுறுத்தலாக அமைகிறது. பாலங்கள், சாலைகள், அரசின் பொது இடங்கள் முதலானவை பழுதாகவோ சீர்கெட்டோ இருந்தால் அவை பற்றிய செய்திகளையும் அரசுக்கு இதழ்கள் அறிவுறுத்தும். அரசின் நலத் திட்டம் ஒன்றில் ஏதேனும் பாதிப்பு ஏற்படும் என்று கருதினால் அதையும் அரசுக்கு அறிவுறுத்தும் வகையில் செய்திக் கண்ணோட்டமாக இதழ்களால் வெளியிட இயலும்.

அரசுக்கு இதழ்கள் அறிவுறுத்தும் பணியைப் பொதுமக்களே செய்வதற்கும் இதழ்கள் வழிவகுக்கின்றன. அதற்காகவே தங்கள் இதழ்களில் இடம் ஒதுக்கிக் கொடுக்கிறார்கள். 'இது உங்கள் இடம்', 'புகார்', 'வாசகர் குரல்' என்னும் தலைப்புகளில் அரசுக்கும் மக்களுக்கும் அறிவுறுத்தலுக்கான பாலமாகவும் இதழ்கள் விளங்குகின்றன.

## மகிழ்வித்தல்

பொழுதுபோக்குத் தொடர்புடையதுதான் மகிழ்வித்தல் என்றாலும் அதையும் இதழ்கள் சிறந்த முறையில் செய்து வருகின்றன.

செய்தி இதழ்கள் செய்தியை வழங்கும் போது அச்செய்திகள் தொடர்பான படங்களை வெளியிடுவதும் செய்தி விமர்சனக் கட்டுரைகளை வெளியிடுவதும் செய்திதொடர்பான கருத்துப் படங்களை வெளியிடுவதும் மகிழ்வித்தல் வகையைச்சார்ந்தவையாகும்.

மகிழ்வித்தலுக்காக நகைச்சுவைத் துணுக்குகள், சிறுகதைகள், தொடர்கதைகள், படக்கதைகள் முதலியவற்றையும் இதழ்கள் வெளியிடுகின்றன. செய்தி இதழான தினத்தந்தி 'சிரிப்பு' என்னும் பகுதியைத் தொடர்ந்து வெளியிட்டு வந்தது. தற்போது வெளி வரவில்லை. கன்னித்தீவு என்னும் தொடர் படக்கதையைப் பொழுது போக்கு நோக்குடன் 50 ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளியிட்டு வருகிறது. மேலும் ஞாயிறு தோறும் சிறுகதைகளையும் வழங்குகிறது.

தினமணிக்கதிர் என்னும் தனி இதழை நடத்தி வந்த தினமணி நிறுவனம் தற்போது அதைத் தினமணி இதழுக்கு இணைப்பாக மகிழ்வித்தல் நோக்குடன் வழங்குகிறது.

சிறுவர் முதல் பெரியவர் வரை அனைவரையும் மகிழ்வித்தல் நோக்கில் சிறுவர் மலர், வார மலர் ஆகியவற்றைத் தினமலர் நாளிதழ் இணைப்பாக வழங்குகிறது.

பொழுதுபோக்குச் செய்திகளை அறிவிக்கும் நோக்கில் இசை, நாடகம், திரைப்படம் தொடர்பான செய்திகளைப் பெரும்பாலான நாளிதழ்கள் வழங்கி வருகின்றன.

பொங்கல் மலர், தீபாவளி மலர், புத்தாண்டு மலர் என்று பல்வேறு மலர்களை மகிழ்விக்கும் நோக்கிலேயே வெளியிடுகின்றன.

## வணிகம் செய்தல்

இதழ்கள் வெளியிடுவதன் நோக்கம் அறிவித்தல், அறிவுறுத்தல், மகிழ்வித்தல் என இருந்தாலும் வணிகத்தில் வெற்றிபெற இயலவில்லை என்றால் அவ்விதழ் தொடர்ந்து வெளிவர இயலாது. தொடக்ககால இதழ்கள் எதுவும் தற்போது வெளிவரவில்லை. அவ்வாறு வெளிவர இயலாமைக்குரிய காரணங்களில் வணிகத்தில் வெற்றிபெறாமையும் ஒன்றாகும்.

தேச பக்தன், நவசக்தி, இந்தியா என்று அக்காலத்தில் வந்த இதழ்கள் யாவும் கொள்கையை வெளிப்படுத்துவதை மட்டும் குறிக்கோளாகக் கொண்டிருந்ததால் அவற்றால் வணிகத்தில் ஆர்வம் காட்ட இயலவில்லை.

இதழ்களின் வணிகத்தில் பெரும்பங்கு வகிப்பவை விளம்பரங்கள் ஆகும். இலட்சக்கணக்காக அச்சாகும் ஓர் இதழில் வெளியாகும் விளம்பரம் ஒன்று பல இலட்சம் வாசகர்களைச் சென்று சேரும் என்பது எளிதில் விளங்கும். விளம்பரம் கொடுக்கும் ஒரு நிறுவனம் மக்களிடம் கொண்டு செல்ல விரும்பும் செய்தியைத் துண்டறிக்கையாக வெளியிட்டு அவர்களுக்கு விநியோகிப்பதில் ஆகும் செலவை விட விளம்பரத்திற்கு ஆகும் செலவு குறைவு.

ஆனால் இதழ்களுக்கு அவ்விளம்பரத்தால் வருமானம் மிகுதியாகிறது. ஏனெனில் இந்த விளம்பரத்தைக் கொண்டுபோய்ச் சேர்ப்பதற்காகத் தனியான அச்சோ ஆளோ தேவையில்லை. இதழ்களின் அச்சுப் பணியுடன் விளம்பர அச்சுப்பணியும் நடை பெறுகிறது. அத்துடன் இதழ்களை விநியோகம் செய்பவரே அவ் விளம்பரத்தையும் இதழ் வாயிலாக மக்களிடம் சேர்த்து விடுகிறார்.

இதழ்களைப் பொதுமக்களுக்கு விற்பதன் மூலம் வணிக இலாபம் பெறும் ஓர் இதழ் விளம்பரத்தின் மூலம் கூடுதலான வணிக இலாபத்தையும் பெறுகிறது.

சில இதழ்கள் குறிப்பிட்ட திருவிழாக்களின்போது சிறப்பிதழ் வெளியிட்டும் விளம்பரங்களைப் பெற்றும் வணிக இலாபம் பெறுகின்றன. தேர்வு முடிவுகள் வெளிவரும் நாளில் பல்வேறு பள்ளிகள், கல்லூரிகளின் விளம்பரங்களைப் பெற்று வணிக இலாபம் பெறுகின்றன. இவற்றிற்கும் மேலாகத் தொழில் மலர் என்னும் சிறப்பிதழை வெளியிட்டு அதில் தொழிலதிபர்களை நேர் கண்டு வெளியிட்டும் விளம்பரம் பெற்று வெளியிட்டும் வணிக இலாபம் பெறுகின்றன.

## உலகக் குடும்பம்

உலகத்தின் எந்த மூலையில் எது நடந்தாலும் அது செய்தியாக இதழ்களில் வந்து விடுகிறது. குக்கிராமத்தில் இருக்கும் ஒருவனும் உலகளாவிய செய்தியை அறிந்து கொள்வதற்கு இதழ்கள் உதவுகின்றன.

கண்டம் விட்டுக் கண்டம் கடந்த செய்திகளை அறிந்த மக்கள் தற்பொழுது பிற கோள்கள் பற்றிய செய்திகளையும் இதழ்களால் அறிய முடிகிறது. மண்ணுக்கடியில் நிகழும் ஆய்வுகள் குறித்தும் கடலுக்கடியில் நடைபெறும் ஆய்வுகள் குறித்தும் செய்திகளை அறிந்து கொள்வதற்கு இதழ்கள் உதவுகின்றன. இந்நிகழ்ச்சிகளை நேரில் பார்ப்பது போல் படங்களோடு வெளியிடுவதால் உலக மக்கள் அனைவரும் ஒரே குடும்பமாக வாழ்வதற்குரிய பணியை இதழ்கள் செய்கின்றன எனலாம்.

## படிப்பவர்களைத் தூண்டல்

எழுதப் படிக்கத் தெரியாதவர்களும் அன்றாடம் நடைபெறும் செய்திகளை அறிந்து கொள்ளும் ஆவலுடையவர்களாக இருக்கிறார்கள். பிறர் படிப்பதன்மூலம் செய்திகளை அறிந்து கொண்ட ஒருவர் படிப்படியாகத் தாமே இதழ் படிப்பவராக மாறுமளவிற்கு இதழ்கள் படிப்பார்வத்தைத் தூண்டுகின்றன.

பாடநூலைப் படிக்கும்போது சிறிய எழுத்துகளை மட்டுமே பார்க்கின்ற ஒருவருக்குச் செய்தித்தாளில் பெரிய பெரிய எழுத்துகளில் தலைப்புச் செய்திகளை எழுத்துக்கூட்டிப் படிப்பது எளிதாக இருக்கும். முதலில் தலைப்புச் செய்திகளை மட்டுமே படிக்கும் ஒருவர் நாளடைவில் செய்தி முழுவதையும் படிக்கும் நிலைக்கு முன்னேறிவிடுகிறார். இந்த முன்னேற்றம் மறைமுகமான எழுத்தறிவுத் திட்டம் எனலாம்.

## இதழ்களின் நோக்கம்

இதழ்கள் சிறந்த நோக்கம் கொண்டவையாக இருத்தல் வேண்டும். வணிக நோக்கம் மட்டுமன்றி மக்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்னும் எண்ணமும் இருத்தல் வேண்டும். வெறும் வணிக நோக்கத் துடன் செயல்படும் இதழ்களால் சமுதாயம் பெறும் பயன்களை விடப் பாதகங்களே மிகுதி ஆகும்.

காந்தியடிகள் தமது 'சத்திய சோதனை' என்னும் நூலில் ''செய்தித் தாளின் நோக்கங்களில் ஒன்றாக மக்களின் உணர்வினை அறிந்து அதனை வெளியிடுவது இருக்க வேண்டும். இரண்டாவதாக மக்களிடம் இருக்க வேண்டிய உணர்வுப்பூர்வமான எண்ணங்களை உருவாக்க வேண்டும். மூன்றாவதாகப் பொது மக்களிடம் இருக்கும் குறைகளையும் துணிச்சலாக எடுத்துரைக்கவேண்டும்'' என்று குறிப்பிட்டுள்ளார்.

இதழ்களின் பணிகள் எப்படி இருக்க வேண்டும் என்று இங்கிலாந்தின் பத்திரிகை மன்றம் (Press Council) தனது இரண்டாம் ஆண்டின் அறிக்கையில் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளது.

1. அநீதியை வெளிக்காட்டுதல்
2. தவறுகளைத் திருத்துதல்
3. ஆலோசனை வழங்குதல்
4. நட்புக் கொள்ளுதல்
5. ஆதரவற்றோர்க்கு உதவல்

## அநீதியை வெளிக்காட்டுதல்

எது சரி, எது தவறு என்பதைச் சாதாரண மக்களும் அறியச் செய் வது இதழ்களின் கடமை ஆகும். சரி எது, தவறு எது என்பதைச் சுட்டிக் காட்டுவதுடன் தவறான செயல் நிகழும் போது அதை வெளிப்படுத்து வதும் இதழ்களின் பணி ஆகும்.

ஆட்சியாளர்களோ, சமுதாயத் துறைகளில் அங்கம் வகிப்பவர் களோ நீதியை மதிக்காமல் நடந்து கொள்ளும் போது அதை வெளிப் படுத்துதல் என்னும் செயலை இதழ்கள் செய்தல் வேண்டும். இத்தகைய பணியைப் புலனாய்வு இதழ்கள் வெளிப்படையாக உணர்த்துகின்றன. பிற இதழ்கள் இவற்றைக் கதைகள் வாயிலாகவும் கட்டுரைகள் வாயிலாகவும் வெளிப்படுத்துகின்றன.

அரசின் நலத்திட்டங்களைச் செயல்படுத்தும் போது சில அலுவலர்கள் கையூட்டுப் பெறுதல் என்பது மிகவும் இழிவான செயல் ஆகும். அதைப் பொது மக்களுக்கு வெளிப்படுத்த விரும்பும் இதழ்கள்

சிறுகதைகள் வாயிலாக வெளிப்படுத்தியுள்ளன. குமுதத்தில் 1975 இல் வெளியான 'யாருக்குக் கேவலம்?' (27.03.75) என்னும் சிறுகதை இதை உணர்த்தியுள்ளது.

குப்பத்தில் வசிக்கும் ஒருவர் தம்முடன் குப்பத்தில் வாழ்பவர்களுக்கு வீட்டு வசதி வாரியத்தில் வீடு கிடைப்பதற்கு முயற்சி செய்கிறார். ஆனால் அவரது வீட்டையும் இழந்து திண்டாடும் நிலை ஏற்படுகிறது என்பதைக் 'கலைமகள்' இதழில் (சனவரி 1975) வெளியான 'வீடு' என்னும் சிறுகதை உணர்த்தியுள்ளது.

அநீதியை வெளிக்காட்டுவதை மட்டும் குறிக்கோளாகக் கொள்ளாமல் நல்லனவற்றையும் வெளிக்காட்டும் உணர்வு கொண்டவையாக இதழ்கள் விளங்கவேண்டும். 1976 ஆம் ஆண்டு வெளிவந்த 'இருபது அம்சத் திட்டம்' பற்றி ஆனந்த விகடனில் தொடர்ந்து சிறுகதைகள் வெளியிட்டுள்ளார்கள். ஒவ்வொரு கதையும் ஒவ்வொரு திட்டம் பற்றிய சிறப்பம்சங்களை வெளிப்படுத்தியுள்ளன.

இதழியல் துறைஎன்பது மக்களுக்குத் துணை செய்யும் துறைகளில் சிறந்தது ஆகும். இந்த இதழியலின் துணையுடன் நாட்டை முன்னேற்றுவதற்குப் பல உதவிகள் செய்ய இயலும். ஆனால் அதை மலிவுபடுத்துவது போல் அநீதிகள் இதழ்களிலும் நிகழ்கின்றன என்பதையும் இதழ்கள் உணர்த்தியுள்ளன.

ஆனந்த விகடனில் வெளியான 'நியூஸ்' (25.01.76) என்னும் சிறுகதையில் செய்தியின் நிலை எள்ளலுடன் உணர்த்தப்பட்டுள்ளது. ''நெஞ்சை உலுக்கி எழுப்பற மாதிரி பெயிண்ட் பண்ணி எக்ஸிபிரஷன் வெக்கிற போது அது நியூஸில்லே ... ஆனா, மனசு உடைஞ்சு போய், சலிப்பிலே நானே என் ஓவியங்களைக் கத்தியாலே குத்திக் கிழிக்கிறப்போ அது நியூஸாயிட்டது'' என்று இதழ்கள் வணிக நோக்கில் செய்தியைக் கையாளும் அநீதி வெளிக்காட்டப்பட்டுள்ளது.

## தவறுகளைத் திருத்துதல்

மக்களிடமோ ஆட்சியாளரிடமோ தவறான போக்குக் காணப்பட்டால் அதைத் திருத்துவதும் இதழ்களின் பணி ஆகும். அரசு அறிவிக்கும் திட்டம் ஒன்றால் தவறு நிகழ்வதற்கு வாய்ப்பு உண்டு என்றால் அதைத் திருத்திக் கொள்ளும் வகையில் செய்தி வெளியிடுவது இதழ்களின் கடமை ஆகும்.

சமுதாயத்தில் காணப்படும் பழக்க வழக்கங்களில் தவறான பழக்கங்கள் இருந்தால் அந்தத் தவறான பழக்க வழக்கங்களை அகற்றும் பணியிலும் இதழ்கள் ஈடுபட வேண்டும். குமுதத்தில் வெளி யான 'குழாயடிப் பிசாசு' (20.02.75) என்னும் சிறுகதையில் ஒருவர்

மழைக்காகச் சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்ய நினைக்கிறார். கிணற்றுத் தண்ணீரைச் சிவலிங்கத்துக்கு அபிஷேகம் செய்துவிட்டதால் குடியிருப்போர் தண்ணீர் இல்லாமல் திண்டாடுகின்றனர். இதில் சமயப் பழக்க வழக்கத்தால் சமுதாய நலம் பாதிக்கிறது என்பது உணர்த்தப் பட்டுள்ளது.

சு. சமுத்திரம் எழுதிய 'அண்ணாவி' (குமுதம் 24.06.76) என்ற சிறுகதையில்

> பள்ளி என்பது பழனியைவிடப் புனிதமானது. அதில் மாட்டப்பட்டிருக்கும் தெய்வப் படங்கள் அதைவிடப் புனிதமானவை. இங்கே சிகரெட் பிடிக்கிறது நல்லதில்லை

என்று பள்ளிக்கூடத்தில் சிகரெட் பிடிக்கும் தவறு சுட்டிக்காட்டப் பட்டுள்ளது.

'தாய்மை - ஒரு கோணம்' (கல்கி. 16.01.77) என்னும் சிறுகதையில் திரைப்படம் பார்க்கும் ஆர்வத்தில் ஒரு குழந்தையை அதன் தாய் செய்யும் கொடுமை காட்டப்பட்டுள்ளது. இதில் குழந்தை, அழுகையை நிறுத்த வேண்டும் என்பதற்காகச் சுகாதாரம் இல்லாத உணவுப் பண்டங்களை வாங்கிக் கொடுப்பதும், தூங்கும் குழந்தையைத் தரையில் கிடத்துவதால் குழந்தை மிதிபடுவதும், திரைப்படம் பார்த்தபடியே குழந்தையைத் தூக்குவதால் அதன் தலை இடிபடுவதும் உணர்த்தப்பட்டுள்ளன.

## ஆலோசனை வழங்குதல்

எது நல்லது, எது கெட்டது என்பதை இதழ்கள் உணர்த்த வேண்டும். அவ்வாறு உணர்த்தத் தவறும் இதழ்கள் தங்கள் கடமையைச் சரியாகச் செய்யவில்லை என்றே கருதப்படும். பெரும் பாலான இதழ்கள் தலையங்கப் பகுதியை இதற்காகவே பயன்படுத்து கின்றன. இவை தவிர, கதைகள் வாயிலாகவும் ஆலோசனை வழங்கு கின்றன.

வரதட்சணை என்பது சமூகத்தில் புரையோடிப் போயிருக்கும் கொடுமை. இந்தக் கொடுமையை அகற்ற இதழ்கள் பல்வேறு உத்திகளைப் பயன்படுத்த முயல்கின்றன. வரதட்சணையினால் ஏற்படும் சீர்கேட்டைப் பெரும்பாலான இதழ்கள் கதைகளாக வெளி யிடுகின்றன.

> இன்னும் கூட ஒரு பெண், பட்டதாரியானாலும் வேலைக் குப் போய்ச் சம்பாதிப்பவளானாலும் ஒரு மணமகனை விலைக்கு வாங்க வேண்டிய நிலையில் இருக்கிறாள் ...

ஓர் இழிவான வாழ்க்கை முறையை இன்னமும் ஏன் பின்பற்ற விழைகிறார்கள் இக்கால இளைஞர்கள் என்பது எனக்குப் புரிவதே இல்லை

என்று 'ஒரு தலைமுறை உருவாகிறது' என்னும் கல்கி இதழ்ச் சிறுகதையில் (16.01.77) கூறப்பட்டுள்ளது.

இளைஞர்கள் நினைத்தால் வரதட்சணை இல்லாத சமுதாயத்தை உருவாக்கலாம் என்ற கருத்தை இச்சிறுகதை ஆலோசனையாக வழங்குகிறது. இவ்வாறு சமுதாயக் கருத்துகள் தொடர்பான ஆலோசனைகளை வழங்குவதுடன் பிற ஆலோசனைகளையும் கூறுகின்றன.

மருத்துவ ஆலோசனை, வேலை வாய்ப்பு ஆலோசனை, கல்வி தொடர்பான ஆலோசனை முதலானவற்றையும் வெளியிடுகின்றன. தற்போது வேலை வாய்ப்பு முதலான வழிகாட்டுதலுக்குத் தனிப் பகுதியையே வெளியிடுகின்றன. 'தினத்தந்தி' நாளிதழ் தற்போது 'இளைஞர் மலர்' என்னும் இணைப்பை வழங்கி இளைஞர்களுக்கு நம்பிக்கையூட்டும் கட்டுரைகளை வெளியிடுகிறது.

## நட்புக் கொள்ளுதல்

இதழ்களுக்கும் வாசகர்களுக்கும் இடையே உள்ள தொடர்பு நட்பாக மலர்ந்தும் சமுதாய மேம்பாட்டுக்குத் துணைபுரிகிறது. தொலைக்காட்சி பரவலாவதற்கு முன்புவரை தனிமையான நினைப்பை அகற்றவும், பொழுது போக்கவும் இதழ்களே உதவின. சில இதழ்கள் 'நட்புப்பாலம்' என்னும் பகுதியை உருவாக்கி நண்பர்களை உருவாக்குகின்றன. நண்பன் தவறு செய்யும்போது தடுத்துத் திருத்தும் நல்ல பணியை நண்பர்கள் செய்வது போல் இதழ்களும் நட்பின் மூலம் திருத்துகின்றன. ஒரு காலத்தில் புத்தகத்தை நண்பர்களாகக் கொண்டிருந்தவர்கள் இதழ்களுடன் நட்புக் கொண்டு தங்கள் பொழுதை நல்ல முறையில் கழிக்கிறார்கள்.

## ஆதரவற்றோர்க்கு உதவல்

ஆதரவற்றோர்க்கு உதவுவதையும் தேவைப்படுவோர்க்கு உதவுவதையும் இதழ்கள் தங்கள் கடமையாகச் செய்து வருகின்றன. 'விவேக சிந்தாமணி' என்னும் இதழ் தனது சந்தாதாரரின் இல்லத் திருமணத்திற்கு நிதி உதவி செய்ததைத் தமிழ் இதழ்கள் என்னும் பிரிவில் பார்த்தோம்.

மிகப் பெரிய 'அறுவை வைத்தியம்' செய்வதற்கு மிகுதியாகப் பணம் தேவைப்படும். அத்தகைய வைத்தியத்தை எல்லாராலும்

எளிதில் செய்து கொள்ள இயலாது. அதனால் உயிரிழப்பைத் தடுப்பதற்காக இதழ்கள் இலவசமாக விளம்பரம் வெளியிட்டுப் பொருள் திரட்டிக் கொடுக்கின்றன. 'தினமணி' முதலான இதழ்கள் இந்தப் பணியைத் தொடர்ந்து செய்து வருகின்றன.

நன்றாகப் படிக்கின்ற ஒருவன் பணம் இல்லாமல் படிக்க முடியாத சூழ்நிலை ஏற்படக் கூடாது என்பதற்காகக் கல்வி உதவி வழங்குகிறது. 'தினத்தந்தி' இதழ், பத்தாம் வகுப்பிலும் பன்னிரண்டாம் வகுப்பிலும் முதல் மதிப்பெண் எடுத்தவர்களுக்குத் தொடர்ந்து பரிசு வழங்கி வருகிறது.

## பொறுப்பான பணி

இதழ்கள் வெளியிடுவனவற்றை மக்கள் நம்புகிறார்கள். பொதுவாக அச்சில் வருகின்றவற்றை நம்பும் தன்மை மக்களிடம் காணப்படுகிறது. எனவே இதழ்கள் வெளியிடும் செய்திகள் சரியானவையாக இருத்தல் வேண்டும். அறிவியல், தொழில் நுட்ப வளர்ச்சியால் இதழ்களுக்கு ஏராளமான செய்திகள் கிடைக்கின்றன. அவற்றை அப்படியே அவை வெளியிடுவதில்லை. பொது மக்களுக்குத் தேவையான செய்திகளையும் பண்பாட்டுச் சீரழிவினை ஏற்படுத்தாத அடிப்படை ஆகாத செய்திகளையும் மட்டுமே இதழ்கள் வெளியிடுகின்றன.

ஜான்ஹோஹன்பெர்க் என்பார்,

> விரிவடைந்து வரும் செய்தித் தொடர்பு, இதழாளர்களுக்கு முன்பு இருந்ததை விட மிகப் பெரிய அளவில் பொறுப்பை அளித்திருக்கிறது. செய்திகளுக்கு வாசகர் எண்ணிக்கையும் மிகுதியாக இருப்பதால் இதழ்களின் பொறுப்பு மிகவும் அதிகமாகின்றது

என்று இதழ்களின் பொறுப்பைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

சமுதாயத்தில் அமைதியைக் கெடுக்கும் செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து வெளியிடாமல் இருப்பது நல்லது. சில வேளைகளில் எங்கோ ஒரு மூலையில் நடந்த சண்டைக்குச் சாதி, சமய வண்ணம் பூசி வெளியிடுவதால் அமைதி கெடுவதைக் காண்கிறோம்.

இதழ்கள் நாட்டின் நலனையும் குறிக்கோளையும் மையமாய்க் கொண்டு செயற்பட வேண்டும். நாட்டுப் பற்றும், பொது மக்கள் நலம் பேணும் உணர்வும் இதழாளர்களுக்குத் தேவை. இதழ்களின் தரத்தை (Standard) உயர்த்துவதும் இதழாளர்களின் கடமை ஆகும். விற்பனையை மட்டும் கருத்திற்கொண்டு பாலுணர்வுச் செய்திகள்,

வன்முறைச் செய்திகள் முதலானவற்றை வெளியிடுவது பொறுப்பற்ற செயல் ஆகும். எனவே இதழ்கள், பின் விளைவுகளை உணர்ந்து செயல்பட வேண்டும்.

இதழ்கள் நம்பிக்கையாகவும் உண்மையாகவும் செய்திகளை வெளியிட வேண்டும். செய்திகளை வேண்டும் என்றே திரித்து வெளியிடக் கூடாது. செய்தியின் உள்ளடக்கத்தை ஒட்டியே செய்திக் குத் தலைப்புக் கொடுக்க வேண்டும். கவர்ச்சிக்காகத் தொடர்பில்லாத தலைப்புகளைக் கொடுக்கக்கூடாது.

இதழ்கள், நடுவுநிலைமை தவறாமல் செய்திகளை வெளியிட வேண்டும். அறிக்கைகளையும், அறிக்கை பற்றிய கருத்துகளையும் பிரித்து அறியும் வகையில் வெளியிட வேண்டும். வாசகர்களைத் திசை திருப்பும் வகையில் செய்தியை வெளியிடக் கூடாது.

இதழ்களைத் தொடங்கும் போது அவற்றின் நோக்கங்களை இதழ் களின் ஆசிரியர்கள் வெளியிட்டுள்ளனர். அந்நோக்கங்களைக் கவனித்தால் இதழ்கள் மனிதசமுதாயத்தை மேம்படுத்தவே தோன்றி யுள்ளன என அறிந்து கொள்ள இயலும்.

பொழுது போக்கு என்ற நிலையில் இதழ்கள் இருந்தாலும் பிற பொழுது போக்குச் சாதனங்களை விட இதழ்கள் வாசகனுடன் நெருக்கமாக இருக்கின்றன.

பள்ளிகளிலோ கல்லூரிகளிலோ எளிதில் தெரிந்து கொள்ள முடியாத பல உண்மைகளைத் தெரிந்து கொள்ள இதழ்கள் உதவுகின்றன. எனவேதான் சமயவாதிகள், அரசியல்வாதிகள், அறிவியல் அறிஞர்கள், வணிகர்கள், கலைஞர்கள் முதலானோர் இதழ்களைக் கருவியாகப் பயன்படுத்துகின்றனர்.

# 6. மக்களாட்சியில் இதழ்களின் பங்கு

செய்தித் தொடர்பியலில் முதன்மையான இடம்பெறுவது இதழ்கள் ஆகும். அறிவித்தல், அறிவுறுத்தல், மகிழ்வித்தல் முதலான பணிகளை ஆற்றும் இதழ்கள் மக்களாட்சிக்கும் துணை புரிகின்றன. எனவேதான் ஜவஹர்லால் நேரு

> மக்களாட்சியில் ஆற்றல் மிக்கவற்றில் ஒன்றாகப் பத்திரிகை இருக்கின்றது. பத்திரிகையிடம் எல்லையற்ற சக்தியும் பொறுப்புகளும் உள்ளன. எனவே பத்திரிகையை மதிக்க வேண்டும்

என்று குறிப்பிட்டுள்ளார்.

> இன்றைய சமுதாய அமைப்பில் மக்கள் தொடர்பின் பங்கு ஆக்கபூர்வமானதாக இருக்க வேண்டும். ஓர் அரசு மக்களாட்சி முறையில் அமைந்திருந்தாலும் சர்வாதிகார முறையில் அமைந்திருந்தாலும் செய்தித் தொடர்பு அடிப் படையானதாக அமைகின்றது. மக்களாட்சி நாடுகளில் செய்தித் தொடர்பு சுதந்திரமாக இருக்கும். சர்வாதிகார நாட்டில் செய்தித் தொடர்பு கட்டுக்குள் இருக்கும். இதுதான் வேறுபாடு

என்று ஆர்.கே. சாட்டர்ஜி குறிப்பிட்டுள்ளார்.

எவ்வகை ஆட்சியாக இருந்தாலும் செய்தித் தொடர்பு என்பது முதன்மை இடத்தைப் பெறுகின்றது என்பதை மேலே குறிப்பிட்டுள்ள எடுத்துக்காட்டுகள் விளக்குகின்றன. குறிப்பாக மக்களாட்சியில் இதழ்கள் சுதந்திரமாக இயங்குவதால் அறிவித்தல் என்னும் நிலையைத் தாண்டி அறிவுறுத்தல் நிலையில் சிறந்த பணியாற்றுகின்றன. ஒரு கொள்கை தொடர்பான பொதுமக்கள் கருத்தை உருவாக்குவதில் இதழ் களின் பங்கு முதன்மையானதாக அமைந்துள்ளது.

ஒரு நாட்டின் அரசியல், சமுதாய, பொருளாதார வளர்ச்சிக்கு இதழ்கள் பெருந்துணை புரிகின்றன. அரசின் கொள்கைகளோடும் செயல்பாடுகளோடும் இதழ்கள் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கின்றன.

நமது நாட்டில் விடுதலை இயக்கம் நடைபெற்ற போது அது தொடர்பான கருத்துருவாக்கத்தை மக்களிடம் ஏற்படுத்துவதில் இதழ்கள் சிறப்பாகப் பணியாற்றியுள்ளன. விடுதலை இயக்கத் தலைவர்களில் பலர் தாங்களே இதழ்கள் நடத்தி, தங்கள் கருத்துகளை மக்களுக்குத் தெரிவித்தனர். அந்தக் காலக்கட்டத்தில் வெளிவந்த இதழ்களில் பெரும்பான்மையானவை விடுதலை வேட்கையும் நாட்டுப்பற்றும் கொண்டவையாகவே வெளிவந்துள்ளன.

## மக்களாட்சியும் இதழ்களும்

இதழ்களுக்கென்று பொதுவாகப் பல பணிகள் இருந்தாலும் மக்களாட்சியில் சில குறிப்பிட்ட பணிகளை இதழ்கள் செய்ய வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகின்றது. அவை,

1. செய்தி பரப்பும் பணி
2. விளக்கப் பணி
3. விமர்சனப் பணி
4. கருத்தை உருவாக்கும் பணி
5. காவல் பணி

என்பவையாகும்.

## செய்தி பரப்பும் பணி

நாட்டு மக்களுக்குத் தேவையான செய்திகளையும் கருத்துகளையும் உடனுக்குடன் சரியான முறையில் பரப்புதல் வேண்டும். இதழ்களுக்கென்று சில தனிப்பட்ட கருத்துகள் இருக்கலாம். அக்கருத்துகளைச் செய்திகளில் திணிக்கக் கூடாது. தமது கருத்துக்கு ஒத்து வராத செய்திகளை இருட்டடிப்புச் செய்வதும் கூடாது. மக்களுக்குப் புரியும் வகையில் அரசின் செய்திகளையும் பிற செய்திகளையும் வழங்குவது இதழின் கடமையாகும்.

செய்தியைப் பரப்பும்போது அரசுக்கு ஊறு விளைவிக்காத வகையில் பரப்புதல் வேண்டும். சாதி, சமய மோதல்கள் ஏற்படும் போது அவற்றை மிகைப்படுத்தும் வகையில் செய்திகள் வெளியிடக் கூடாது. மக்களாட்சியில் ஒரு தூணாக விளங்கும் இதழியல் துறை மக்களைக் கலவரப்படுத்தும் வகையிலும் செயல்படக் கூடாது.

## விளக்கப் பணி

இதழ்கள் செய்தியை வெளியிடுவதுடன் அச்செய்தி தொடர்பான முழு விவரங்களையும் விளக்கமாக வெளியிட வேண்டும். ஒரு

செய்தியை விளக்கும் போது அச் செய்தி தொடர்பான கருத்துகள் நாட்டு மக்களுக்கு எளிதில் விளங்காது என்றால், அதைத் தெளிவுபடுத்தி வெளியிட வேண்டும். இதழின் வாசகர்களின் தரத்திற் கேற்ப அவ்விளக்கம் அமைதல் வேண்டும். இதற்காக விளக்கப் படங்கள், கருத்துப் படங்கள், கேள்வி-பதில்கள், சிறப்புக் கட்டுரைகள் முதலியவற்றைப் பயன்படுத்தல் வேண்டும்.

சில இதழ்கள் ஒரு குறிப்பிட்ட செய்தியை விளக்குவதற்காகப் புலனாய்வு நடத்துகின்றன. அப்புலனாய்வின் விளைவாகக் கிடைக்கும் செய்திகளைத் தங்கள் வாசகர்களுக்கு வழங்குகின்றன. தற்காலத்தில் இப்புலனாய்வை அடிப்படையாகக் கொண்ட பல இதழ்கள் வெளிவருகின்றன. இவ்விதழ்கள் சமூகத்தில் நடைபெறும் அவலங்களைப் புலனாய்வு செய்து வெளியிடுவதால் மக்களுக்குச் சில செய்திகள் பற்றிய உண்மை விளக்கம் கிடைக்கிறது. இப்புலனாய்வு இதழ்கள் தனிமனிதன், நிறுவனங்கள், இயக்கங்கள், அரசியல் கட்சிகள், ஆட்சி அமைப்புகள் என்ற வேறுபாடு இல்லாமல் எல்லாச் செய்திகளையும் வெளிப்படுத்துவதால் மக்களுக்குத் தெளிவு கிடைக்கிறது. அரசுக்கும் மக்களுக்கும் இடையில் எந்தத் திரையும் இல்லாமல் இதழ்கள் விளக்கப் பணி ஆற்றுவதால் மக்களாட்சிக்கும் உதவிபுரிகின்றன.

### விமர்சனப் பணி

ஒரு கருத்தின் சாதகத்தையும், பாதகத்தையும் நுணுகி ஆராய்ந்து வெளிப்படுத்துவதை விமர்சனம் எனலாம். இதழ்கள் இந்த விமர்சனப் பணியைச் சிறப்பாகச் செய்தால் அது மக்களாட்சிக்கு வலிமை சேர்க்கும்.

விமர்சனம் செய்கின்ற நோக்கில் விருப்பு, வெறுப்பு இல்லாமல் செயல்படுதல் அவசியம். இதழ்களின் விருப்பத்திற்கேற்ப விமர்சனம் செய்தால் உண்மை நிலையை மக்கள் உணர இயலாது. எனவே இதழ்கள் தங்களைப் பற்றற்றவர்களாக நிறுத்திக் கொண்டு செய்தி விவாதத்தை நடத்துதல் வேண்டும். அவ்விவாதத்தின் வழியாகப் பெறப்படும் கருத்துகளை மக்களுக்குத் தெரிவித்தல் வேண்டும். அவ்வாறு தெரிவித்தால் மக்கள் ஒரு கருத்துத் தொடர்பான உண்மை நிலையை உணர்ந்து கொள்வார்கள். இந்த விவாதப் போக்கில் பலருடைய அறிவு இடம் பெறுவதால் சரியான முறையில் ஒரு கருத்து மக்களைச் சென்று சேரும் என நம்பலாம்.

### கருத்தை உருவாக்கும் பணி

இதழ்கள் பொதுமக்களுடைய கருத்தை உருவாக்கும் பணியில் ஈடுபடல் வேண்டும். அவ்வாறு கருத்தை உருவாக்கும் பணியில்

ஈடுபடும் போது அக்கருத்து இதழ்களின் கருத்தாக அமையாமல் குறிப்பிட்ட செய்தி தொடர்பான கருத்தாக அமைதல் வேண்டும். ஒரு காலத்தில் இதழ்கள் உருவாக்கும் கருத்துகளை மக்கள் அப்படியே ஏற்றுக்கொண்டார்கள். அதைக் 'குண்டுக் கோட்பாடு' (Bullet Theory) என்று குறிப்பிட்டுள்ளனர். குண்டுக் கோட்பாடு என்பது துப்பாக்கியின் மூலம் குறிபார்த்துச் சுட்டு வீழ்த்துவதைப் போன்றது. அதாவது இதழ்கள் தாங்கள் வெளியிடும் செய்திகளின் மூலம் வாசகர்களை வீழ்த்த முடியும் என்று அக்கால இதழ்கள் நம்பின. ஆனால் இப்போது இதழ்களைப் படிக்கின்ற பொதுமக்கள் எது உண்மையான கருத்து என்பதைச் சீர்தூக்கிப் பார்க்கிறார்கள். எனவே இதழ்கள் கருத்தை உருவாக்கும் போது பொதுவான கருத்தாக உருவாக்கினால் மட்டுமே மக்கள் ஏற்றுக் கொள்வார்கள். அவ்வாறு இல்லாமல் கட்சிச் சார்புடனோ இயக்கச் சார்புடனோ உருவாக்கும் கருத்தை மக்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.

இதழ்கள் உருவாக்கும் கருத்தைப் பொதுமக்களும் அரசும் அறியச் செய்வதும் மக்களாட்சியில் இதழ்கள் ஆற்றும் பணியாகும். தலையங்கம், ஆசிரியருக்குக் கடிதங்கள், மக்கள் மேடை முதலான பகுதிகள் வாயிலாக உருவாக்கப்பட்ட கருத்தை வெளிப்படுத்துதல் வேண்டும்.

## காவல் பணி

மக்களாட்சியில் இதழ்களைக் 'காவல்காக்கும்நாய்' (Watch Dog of Democracy) என்று வருணிப்பர் பலர். மக்களாட்சியில் மக்களின் உரிமைகளைக் காக்கும் பணியை இதழ்கள் செய்ய வேண்டுமென்று எதிர்பார்ப்பதால் இவ்வாறு கூறுகிறார்கள். அரசோ, தனியாரோ மக்கள் விரோதப் போக்கில் செயல்பட்டால் அதனைத் தடுக்கும் பணியை இதழ்கள் செய்ய வேண்டும். நெருக்கடி நிலையின் போது அரசு கொண்டு வந்த அடக்கு முறையைப் பெரும்பாலான இதழ்கள் எதிர்த்தன. பல இதழ்கள் தங்கள் அட்டையைக் கறுப்பாக வெளியிட்டு எதிர்ப்பைக் காட்டின. அவ்வாறு எதிர்ப்பைக் காட்டியதால் மக்களும் திரண்டு ஆட்சி மாற்றத்திற்கு வழி வகுத்தார்கள் என்பதை அனைவரும் அறிவர்.

## கல்விப் பணி

இந்தியா விடுதலை பெற்ற காலத்தில் எழுத்தறிவு பெற்றவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைவாக இருந்தது. எழுத்தறிவு பெருக வில்லையென்றால் நாட்டின் நடப்பை மக்கள் புரிந்துகொள்ள இயலாது. எனவே மக்களுக்குக் கல்வி புகட்ட வேண்டியது உடனடித் தேவையாக இருந்தது. இதழ்கள் செய்திகளை மட்டும் வழங்காமல்

கல்வித் தேவை பற்றியும் கருத்துகளை எடுத்துக் கூறின. எரிகின்ற விளக்கின் உதவியால்தான் புதிய விளக்கை ஏற்ற வேண்டும். அதைப் போலக் கற்றவர்கள் மற்றவர்களுக்குக் கல்வி கற்பிக்க வேண்டும் என்ற எண்ணத்தைப் பரப்பின. இந்த ஆதாரக் கல்வித் திட்டத்தால் மக்களிடையே கல்வி பற்றிய விழிப்புணர்வு ஏற்பட்டது.

## தட்டிக் கேட்கும் பணி

ஆளும் கட்சி ஒன்று தவறான ஆட்சி நடத்தினால் அதைத் திருத்தும் பணி எதிர்க் கட்சிக்கு உண்டு. இந்தப் பணியை இதழ்களும் ஆற்ற வேண்டும். இதைத் தட்டிக் கேட்கும் பணியாக இதழ்கள் மேற் கொண்டால் அதை உணர்ந்து அரசு தன்னைத் திருத்திக் கொள்ளும். இவ்வாறு அரசின் குறைகளை இதழ்கள் தட்டிக் கேட்கும் போது இதழ்களை அரசு ஒடுக்க முனையலாம். அவ்வாறு ஒடுக்குவது தவறு என்பதை அரசுக்கு உணர்த்துவதற்கு இதழ்கள், பொது மக்கள் கருத்தை உருவாக்க வேண்டும்.

> மக்களின் கருத்தைக் காட்டும் செய்தித்தாள் இல்லையென்றால் மக்கள் கருத்தை அரசு அறிந்து கொள்ள இயலாது. பொது மக்களின் கருத்தை வெளிப்படுத்தும் செய்தித்தாள்களை அரசு எந்த வகையிலும் தடை செய்யக் கூடாது

என்று காந்தியடிகள் கூறியுள்ளார்.

மக்களின் அடிப்படைச் சுதந்திரம் பறிக்கப்படும் போது அதை மீட்பதற்காக இதழ்கள் குரல் கொடுத்தல் வேண்டும். இதழ்களின் கருத்துகளால் மக்கள் திரண்டெழுந்து அடிப்படைச் சுதந்திரத்தை அமைப்பதற்காகப் போராடும்படி செய்தல் வேண்டும். ஜான் பிரைஸ் (John Bryce) என்பவர், ''செய்தித்தாள்களின் செயல்பாட்டால்தான் மக்களாட்சி நிலவ முடியும்'' என்று குறிப்பிட்டுள்ளார். பத்திரிகைச் சுதந்திரம் நிலவும் நாட்டில் மக்களாட்சி நிலவும் என்பது வெளிப்படை. பத்திரிகைச் சுதந்திரம் முடக்கப்படும் நாட்டில் மக்களாட்சி நடைபெற இயலாது. எனவேதான் 'பத்திரிகையும் வாக்குச் சீட்டும் மக்களாட்சியில் ரெட்டைக் குழல் துப்பாக்கி' என்று அறிஞர்கள் கூறினர்.

## மக்கள் பணியில் இதழ்கள்

விடுதலைக்குப் பாடுபட்ட இதழ்கள் நாடு விடுதலையடைந்த பிறகு அரசியல் மாற்றத்திற்கு ஏற்பச் செயல்படத் தொடங்கின. அரசின் செயல்முறைகளைக் கண்காணித்துப் பொதுமக்களுக்கு

அறிவிக்கும் சமுதாய நோக்குடன் இதழ்கள் செயல்படுகின்றன. 300 ஆண்டுகளாக அடிமையாக வாழ்ந்த சமுதாயம் பல நிலைகளில் பின் தங்கி இருந்தது. கல்வி, வேலைவாய்ப்பு முதலியவற்றில் மேல் நிலை அடைவதற்கு அரசு பல திட்டங்களை வகுத்தாலும் அதற்கு இணையாக இதழ்களும் செயல்படவேண்டிய கட்டாயம் இருந்தது.

## வளர்ச்சியில் பங்கு

நாடு வளர்ச்சியடைவதற்கு எல்லாரும் பாடுபட வேண்டும் என்பது அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட கருத்து. மொழி, இனம், சாதி, சமயம் முதலான வேறுபாடுகள் இல்லாமல் நாட்டு மக்கள் அனைவரும் ஒன்று என்னும் உள்ளத்தோடு நாட்டுக்காக உழைக்க வேண்டும். அதைப் போன்றே கட்சி, கொள்கை வேறுபாடுகள் பார்க்காமல் இதழ்களும் நாட்டு வளர்ச்சியில் பங்கேற்க வேண்டும். அரசு தீட்டும் திட்டங்கள் மக்களின் நல்வாழ்வை அடிப்படையாகக் கொண்டவை. இந்தத் திட்டங்களைச் சரியான முறையில் செயல்படுத்துவது அலுவலர்களின் பணியாகும். அவர்கள் இந்த நலத்திட்டங்களைச் சரியாகச் செயல்படுத்துகிறார்களா என்று கண்காணிப்பதுடன் இதழ்கள் அத்திட்டம் தொடர்பான கருத்துகளைத் தெளிவாக வெளியிட வேண்டும்.

இந்தியா விடுதலை அடைவதற்கு முன்பு பல்வேறு இதழ்கள், இந்திய விடுதலையை நோக்கமாகக் கொண்டு செயல்பட்டன. ஆங்கிலேயர்களுக்குச் சொந்தமான இதழ்களைத் தவிர, பிற இதழ்கள் இக்கடமையைச் சரியாகச் செய்தன எனலாம். இந்தியா விடுதலை பெற்று மக்களாட்சி ஏற்பட்ட பிறகு அவை தொண்டு நிறுவனங்களைப் போல் செயலாற்றின. அந்த நிலையையும் கடந்து 'தொழில்' என்னும் நிலையை இதழ்கள் அடைந்துள்ளன.

ஆங்கிலேயருக்குச் சொந்தமாக இருந்த பெரிய இதழ்களான 'டைம்ஸ் ஆஃப் இந்தியா', 'பயோனிர்', 'தி மெயில்' ஆகியவை இந்தியருக்குச் சொந்தமாயின. இவ்வாறு இந்தியருக்குச் சொந்தமான இதழ்களுக்கு விடுதலைப் போராட்டக் காலத்தில் இருந்தது போன்ற நோக்கம் எதுவும் இல்லாததால் அவை தொழில் மையங்களைப் போல் செயல்படத் தொடங்கின.

## மக்களாட்சியில் உரிமைகள்

மக்களை மக்களே ஆளும் மக்களாட்சி முறையில் எல்லாரும் மன்னர்களே என்பது ஏட்டளவில் இருந்தாலும் ஆட்சியாளர்களின் எண்ணங்களே நடைமுறைப்படுத்தப்படும். மக்களுக்கு என்று

பல்வேறு அடிப்படை உரிமைகள் உள்ளன. அந்த உரிமைகளைக் கடமைகளாகக் கருதி மக்கள் செயல்பட்டால் மக்களாட்சி பயனுடையதாக அமையும். மக்களுக்கு இருக்கும் உரிமைகளையும் அந்த உரிமைகளை நிலைநாட்ட இதழ்கள் ஆற்றும் பணிகளையும் இங்கே காண்போம்.

1. வாக்குரிமை
2. பேச்சுரிமை
3. எழுத்துரிமை

**வாக்குரிமை**

மக்களாட்சியில் முதன்மையான உரிமையாகக் கருதப்படுவது வாக்குரிமை ஆகும். கட்சிகளின் ஆட்சி அமைவதற்கு மக்கள் வழங்கும் வாக்குகளே அடிப்படையாக அமைகின்றன. எத்தகையோர் ஆட்சியில் அமர வேண்டும் என்று மக்கள் நினைக்கிறார்களோ அத்தகையோரே ஆட்சியில் அமர முடியும். எத்தகையவர் ஆட்சியில் அமரலாம் எனத் தீர்மானிக்கும் உரிமை மக்களிடம் இருப்பதால் அதை, அவர்களைச் சரியாகப் பயன்படுத்தச் செய்வது இதழ்களின் கடமை ஆகும். தேர்தல் காலங்களிலும் பிற காலங்களிலும் அரசியல், ஆட்சி பற்றிய தெளிவை மக்கள் பெற்றிருக்க வேண்டும் என்று இதழ்கள், அவை பற்றிய செய்திகளைத் திரட்டித் தருகின்றன. இதழ்களின் கருத்தைத் திணிக்காமல் மக்கள் நலக் கருத்துகளை உணர்த்துவதை நோக்கமாகக் கொண்டு இதழ்கள் செயலாற்றினால் மக்கள் தங்கள் வாக்குரிமையைச் சரியாகப் பயன்படுத்துவார்கள். மக்களிடம் இருக்கும் முதன்மையான உரிமையைச் செயல்படுத்தச் செய்யும் ஊக்கியாக இதழ்கள் பணியாற்றுகின்றன.

**பேச்சுரிமை**

மக்கள், தங்கள் கருத்தை வெளிப்படுத்தும் உரிமையை மக்களாட்சி தந்துள்ளது. தங்கள் குறைகளைப் போக்கவும் வசதிகளைப் பெருக்கவும் அவர்கள், அரசிடம் கோரிக்கை வைக்க முடியும். அந்தக் கோரிக்கைகள் உரிய நேரத்தில் உரிய விதத்தில் கவனிக்கப்படவில்லை என்றால் அவர்கள் அதற்காக முறையான வழியில் போராடவும் முடியும். ஆட்சியும் ஆட்சியாளர்களும் மக்களால் மக்களுக்காக வாக்குரிமையின் மூலம் நியமிக்கப் பட்டவர்கள் என்ற உண்மையை இதழ்கள் உணர்த்துதல் வேண்டும். அவ்வாறு உணர்த்தினால் மக்களும் வாய் திறந்து தங்கள் தேவைகளைக் கேட்டுப் பெற இயலும்.

## எழுத்துரிமை

மக்களாட்சி நடைபெறும் நாட்டில் மக்களின் எழுத்துரிமை காக்கப்படவேண்டும்.

நாட்டுப் பாதுகாப்புக்கும் இறையாண்மைக்கும் ஊறு விளையா வண்ணம் மக்கள் தங்கள் கருத்துகளை எழுத்தில் வடிக்க இயலும். அவ்வாறு அவர்கள் எழுத முடியும் என்ற மக்களாட்சித் தத்துவத்தை இதழ்கள், அவர்களுக்கு எடுத்துரைக்க வேண்டும்.

இவ்வுரிமைகள் காக்கப்படுவதற்குப் பாதுகாவலாக இதழ்கள் விளங்கினால் மட்டுமே 'இதழ்கள் நான்காவது தூண்கள்' என்னும் கூற்று மெய்ப்பிக்கப்படும். இதழ்களுக்கென்று தனித்த உரிமைகள் வழங்கப்படவில்லை என்றாலும் அவை மக்கள் நலனை மனத்தில் கொண்டு சில உரிமைகளைப் பெற்றவை போல் - அறிவுறுத்தும் பணியை ஆற்றுகின்றன. அந்தப் பணிகளாலேயே பொதுமக்களின் அடிப்படை உரிமைகள் பாதுகாக்கப்படுகின்றன.

# 7. சமுதாய மறுமலர்ச்சிக்கு இதழ்கள்

மக்கள் ஒன்றாய்க் கூடி வாழும் ஓர் அமைப்பே சமூகமாகும். சமூகம் என்பது மனித இனத்தின் சமூக, பொருளாதார, அரசியல் தொடர்புகளினால் செயல்பட்டு வரும் தொகுப்பாகும். இந்த அமைப்பும் தொகுப்பும் குறிப்பிட்ட கட்டுப்பாட்டுக்குள் இயங்கி வருவனவாகும். செய்தியை வழங்குவதற்காகத் தொடங்கப்பட்ட இதழ்கள், சமூக முன்னேற்றத்திற்கும் துணை நிற்கின்றன.

வார, மாத இதழ்கள் சமூகத்திற்குப் பொது அறிவைப் புகட்டு கின்றன; ஆள்வோருக்கும் ஆளப்படுவோருக்கும் இணைப்புப் பாலமாக இருக்கின்றன. சமூகத்தின் எண்ணங்களையும், எழுச்சிகளை யும் பிரதிபலிக்கும் கண்ணாடியாய் இதழ்கள் விளங்குகின்றன. அறிவுப் பெருக்கம், தொழில்துறை முன்னேற்றம் ஆகிய விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துகின்றன. அடிமையாய் இருக்கும் நாடுகளின் விடுதலைக்கு வித்திடுகின்றன. அதே சமயத்தில் விடுதலை பெற்ற நாடுகளுக்கு ஜனநாயகக் காவலனாகத் திகழ்கின்றன. மக்களின் எண்ணங்களையும் உணர்வுகளையும், அரசியல் கருத்துகளையும் பிரதிபலிப்பதன் மூலம் இதழ்கள் தனக்கெனத் தனி இடத்தைப் பெறுகின்றன. எனவே சமுதாய மறுமலர்ச்சிக்கும், இதழ்களுக்கும் இடையே பிணைப்பு உள்ளது என்பதை அறியமுடியும்.

அரசிலும், அரசியலிலும் பங்கேற்கும் உரிமை ஒவ்வொரு குடிமகனுக்கும் வேண்டும் என்ற கோரிக்கை இதழ்களின் வாயிலாக முன் வைக்கப்பட்டது. இத்தகைய சமுதாயக் கருத்தை வெளியிடும் அறிவுக் களஞ்சியமாகிய இதழ்கள் சமுதாயத்தில் விழிப்புணர்வை ஏற்படுத்துகின்றன. சமூகத்தில் நிகழும் குற்றங்களையும், ஊழல்களை யும் அச்சமின்றி இதழ்கள் எடுத்துக்காட்டுகின்றன. இதழ்கள், மறுமலர்ச்சிச் சமூகத்தில் பெண்களுக்குரிய உரிமைகள் மறுக்கப் படுவதைச் சுட்டிக்காட்டுகின்றன. பெண்கல்வி மறுக்கப்பட்டும் விதவை மறுமணம் மறுக்கப்பட்டும் இருந்த காலத்தில் பெண் கல்விக்காகவும் விதவை மறுமணத்திற்காகவும் இதழ்கள் போராடின.

இவற்றையெல்லாம் இராஜா ராம்மோகன் ராய் 'சம்பாத் கௌமதி' என்ற இதழில் வன்மையாகக் கண்டித்து எழுதினார். குறிப்பாக உடன் கட்டை ஏறுதலைத் தீவிரமாக எதிர்த்தார். இவரின் முயற்சியால்

*1829*-இல் வில்லியம் பெண்டிங் பிரபு உடன்கட்டை ஏறும் வழக்கத்தைத் தடை செய்தார். இதற்கடுத்து, சுரேந்திரநாத் பானர்ஜி தம்முடைய இதழில் பெண்களுக்கெதிராக இழைக்கப்படும் கொடுமைகளை விளக்கி அவற்றை நீக்க அனைவரும் பாடுபட வேண்டுமென வேண்டுகோள் விடுத்தார். பெண்களுக்காகவே பல இதழ்கள் தோன்றின.

இதன் விளைவாக இன்றைய நிலையில் சட்ட ரீதியாகப் பெண்களுக்குச் சொத்துரிமை கிடைத்துள்ளது. ஆண்களுக்கு நிகராக அனைத்துத் துறைகளிலும் பெண்கள் பணியாற்றுகின்றனர். இந்த நிலையை அடைவதற்காகக் 'குடியரசு', 'விடுதலை' போன்ற இதழ்கள் அரும்பாடுபட்டன.

## சமுதாய மேம்பாடு

சமுதாயம் மேம்பாடு அடைய வேண்டும் என்றால் மூடநம்பிக்கை ஒழிய வேண்டும்; பொருளற்ற சடங்குகள் மறைய வேண்டும். கல்வியிலும் அறிவியலிலும் மறுமலர்ச்சி தோன்ற வேண்டும். இவற்றைக் குறிக்கோளாகக் கொண்டு பல இதழ்கள் வெளி வந்துள்ளன. அவற்றை இங்கே காண்போம்.

## மூட நம்பிக்கை

மூட நம்பிக்கை ஒழிப்பு என்பது மக்களிடையே பரவியுள்ள அறிவுக்கு முரண்பட்ட நம்பிக்கைகளை ஒழிப்பதாகும். எந்தச் செயலையும் எதற்காகச் செய்கிறோம் என்று அறியாமல் செய்யும் போது மூட நம்பிக்கை தோன்றி விடுகிறது. ஒரு செயலைச் செய்யும் போது செயலின் விளைவை மட்டும் கருதாமல் வழிமுறைகளையும் கருத்தில் கொள்ள வேண்டும். அந்தச் செயலால் சமுதாயத்திற்கு ஏதேனும் கேடு விளையும் என்றால் அதைச் செய்யாமல் விடுவதே சிறந்ததாகும். கடவுள், சமயம் ஆகியவை தொடர்பாக மக்களிடையே பல்வேறு சடங்குகள் நிலவுகின்றன. இச் சடங்குகள் இடங்களுக்கு ஏற்ப மாறுபடுகின்றனவே அன்றி, பெரும்பான்மையும் அறிவுக்கு முரண்பட்டவையாகவே விளங்கக் காணலாம். இத்தகைய சடங்கு முறைகள் ஒரு சமூகத்தைப் பின்னுக்குத் தள்ளிவிடும் என்பதை உணர்ந்த பெரியோர்கள் இவற்றை அகற்றுவதற்காகப் பாடுபட்டார்கள்.

எந்தக் காரியத்திலும் ஒரு மூடப்பழக்கத்தை வழக்கமாகவே தமிழர்கள் பின்பற்றி வந்தார்கள். இன்றளவும் புரையோடிப் போய் விட்ட இப்பழக்கத்திலிருந்து மக்களை மீட்க இராமலிங்க வள்ளலார், இராஜா ராம்மோகன் ராய், பெரியார் போன்றோர் இரவு பகலாகப் பாடுபட்டனர். 'கண்மூடிப் பழக்கமெல்லாம் மண்மூடிப்போக' என்றார் வள்ளலார். குடியரசு, விடுதலை, பகுத்தறிவு, ஈரோட்டுப்

பாதை, பெரியார் குரல், சிந்தனையாளன், உண்மை போன்ற இதழ்கள் இப்பணியில் முழுமையாக ஈடுபட்டு வெற்றியும் கண்டன.

## கல்வி மறுமலர்ச்சி

எந்தவொரு நாடாக இருந்தாலும் அது நலம் பெறுவதற்கு அறிவுடைய மக்கள் தேவை. இத்தகைய அறிவைத் தரும் கல்வியை வளர்ப்பதிலும், ஊக்குவிப்பதிலும் இதழ்கள் சிறந்து விளங்குகின்றன. இதற்காகத் தமிழ்க்கல்வி 1897, முதியோர் கல்வி 1951, கல்விக் கதிர் 1955, கல்வி 1966, தமிழகக் கல்வி 1967 போன்ற இதழ்கள் தோன்றின. இவ்விதழ்கள் கல்வி மேம்பாட்டிற்குத் தொடர்ந்து பாடுபட்டன. மருத்துவத்திற்காக ஆயுர்வேத பாஸ்கரன்,ஆரோக்கியம், மூலிகை மணி, மூலிகை ரகசியம் முதலான இதழ்கள் வெளிவந்தன. இவை நோய் உருவாகும் முறை பற்றியெல்லாம் தெளிவாக விளக்கி மக்களை நோயிலிருந்து காக்க உதவின.

## அறிவியல்

இன்றைய உலகம் அறிவியலை மையமாகக் கொண்டே இயங்குகிறது. ஒவ்வொரு நாளும் புதிய புதிய அறிவியல் கண்டு பிடிப்புகள் தோன்றிய வண்ணம் உள்ளன. இந்தப் புதிய கண்டுபிடிப்பு களையும் ஆராய்ச்சிகளையும் அறிவியல் இதழ்கள் உடனுக்குடன் வெளியிடுகின்றன. எதையும் ஏன்? எப்படி? என்னும் கேள்விகளைக் கேட்டு அதற்கு விடை கிடைத்தால் மட்டுமே ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவத்தை அறிவியல் இதழ்கள் வளர்க்கின்றன.

1948 முதற்கொண்டு 'கலைக்கதிர்' என்னும் அறிவியல் இதழ் தொடர்ந்து வெளிவருகிறது. 1962 இல் 'தோல் விஞ்ஞானம்' என்னும் இதழும் 1965 இல் 'இளம் விஞ்ஞானி' என்னும் இதழும் வெளி வந்துள்ளன.

'துளிர்' என்னும் சிறுவர் இதழ் அறிவியல் செய்திகளை வெளியிடுகிறது. அதில் அறிவியல் நுட்பங்கள் எளிமையாக விளக்கப்படுகின்றன. 'அறிக அறிவியல்' என்னும் இதழ் பொதுவான அறிவியல் செய்திகளை உள்ளடக்கியதாய்க் குன்றக்குடியிலிருந்து வெளிவருகிறது.

## வேளாண்மை

மனித உயிர்கள் உட்பட அனைத்து உயிர்களும் வேளாண்மையை நம்பியே உயிர் வாழ்கின்றன. அப்படிப்பட்ட வேளாண்மைத் துறையில் ஏற்படும் மாற்றங்களை மக்கள் தெரிந்துகொள்வது மிகவும் அவசியமான ஒன்றாகும். பெரும்பாலும் வேளாண்மைத் தொழில் செய்வோர் கிராமங்களில் வாழ்கின்றனர். அவர்கள் புரிந்து கொள்ளும்

வண்ணம் வேளாண்மை இதழ்கள் வெளிவருகின்றன. உற்பத்தியைப் பெருக்குவது, பயிர்ப் பாதுகாப்புப் போன்ற கட்டுரைகள் இவ்விதழ்களில் இடம் பெற்றிருக்கும்.

'தினமணி' இதழில் வேளாண்மை பற்றிய கருத்துகள் எளிய தமிழில் பயன்படும்படியான கட்டுரைகளாக வருகின்றன. மேலும் தற்போதைய அறிவியல் முறைகள், உரமிடுதல், பூச்சிக் கொல்லி மருந்திடுதல் போன்ற பல திட்டங்களை விரிவாகவே விளக்குகிறது. இன்னும் பல இதழ்கள் வேளாண்மைப் பகுதி என்றே ஒரு பகுதியை ஒதுக்கியுள்ளன. விவசாயிகள் தங்களின் உற்பத்தித் திறனை வளர்த்து அதிக மகசூலைப் பெற்று இலாபமடைய வேண்டும் என்பதில் இதழ்கள் உறுதியாக இருக்கின்றன. விவசாயத் தீபிகை (1904), மேழிச் செல்வம் (1943), உழவர் நாடு (1949), விவசாய உலகம் (1961), உரமும் பயிரும் (1962), ஏர் முரசு (1967), விவசாய விஞ்ஞானம், ஏர் உழவன், உழவன் உரிமை, உழவன் முரசு, பண்ணைத் தொழில், வளரும் வேளாண்மை போன்ற இதழ்கள் வேளாண்மை ஆய்விற்கும் விவசாயி களுக்கும் இணைப்புப் பாலமாகத் தலைசிறந்து விளங்குகின்றன.

## குழந்தை நலம்

ஒவ்வொரு வீட்டிற்கும் குழந்தைச் செல்வம் என்பது பெறற்கரிய செல்வங்களுள் எல்லாம் சிறந்த செல்வமாகக் கருதப்படுகிறது. அப்படிப்பட்ட குழந்தைகளின் நலனில் கவனம் செலுத்துவது ஒவ்வொருவரின் கடமையாகும். இன்றைய குழந்தைகள்தாம் வருங்காலத்தில் நாட்டின் தலைவர்களாகவும், உயரதிகாரிகளாகவும் வருவார்கள். குழந்தைகளுக்கென்றே பல இதழ்கள் தோன்றியுள்ளன.

பால தீபிகை (1840), பாலர் பத்திரிகை (1937), அணில் (1944), பாப்பா (1944), அம்புலி மாமா (1947), கண்ணன் (1950), தமிழ்ச்சிட்டு (1966), அரும்பு (1966), பூந்தோட்டம் (1967), பாலமித்ரா (1978), கோகுலம் போன்ற இதழ்கள் குழந்தைகளைப் பேணி வளர்ப்பதில் அக்கறை காட்டுகின்றன. கிராமங்களில் குழந்தை வளர்ப்பதில் சுகாதாரம் கிடையாது. எனவே சுகாதாரத்தை மேம் படுத்தி அரசின் சுகாதாரத்துறையும், தனியார் தொண்டு நிறுவனங்களும் ஒவ்வொரு கிராமங்களுக்கும் சென்று அறிவுரைகளும், விளக்கங்களும் வழங்கி வருகின்றன. இதற்கு இதழ்கள் உரிய வழிவகைகளைச் செய்து வருகின்றன.

## மது விலக்கு

மனிதனைக் கீழான நிலைக்குக் கொண்டு செல்வனவற்றுள் மதுப் பழக்கம் ஒன்றாகும். ஒரு மனிதன் தன்னைத்தானே அழித்துக்கொள்ள விரும்பினால் அதற்கு மது அருந்தினால் மட்டுமே போதுமானது.

இராஜாஜி நடத்திய 'விமோசனம்' என்னும் இதழ் குடிப் பழக்கத்தை ஒழிப்பதையே குறிக்கோளாகக் கொண்டு வெளி வந்துள்ளது. அரசு நடத்தும் தமிழரசு இதழ் குடிப்பழக்கத்தின் கொடுமையை எடுத்துக் கூறுகிறது. பிற இதழ்களும் இயன்ற வகைகளில் குடிப்பழக்கத்தின் தீமையைக் கட்டுரைகளாகவும் கதைகளாகவும் வெளியிடுகின்றன.

## சமுதாய நலமும் திராவிட இயக்கமும்

தேசியத்தை ஆதரித்த இயக்கம் சார்ந்தவர்களில் பார்ப்பனர்கள் மிகுதியாக இருந்து ஆதிக்கம் செலுத்தியதால் பார்ப்பனர் அல்லாத மேல்தட்டு மக்கள் 'நீதிக்கட்சி' என்னும் புதுக்கட்சியைத் தொடங்கினர்.

நீதிக்கட்சி, காங்கிரசை எதிர்த்தது. இந்தியாவுக்கு விடுதலை கிடைத்தால் பார்ப்பனர் மேலாதிக்கம் ஓங்கும் என்று கருதியதால் ஆங்கிலேயர் ஆட்சி நீடிப்பதையே அது விரும்பியது. நீதிக்கட்சியின் கொள்கைகளைப் பரப்புவதற்குத் தமிழ், தெலுங்கு, ஆங்கில மொழிகளில் இதழ்கள் தொடங்க முடிவு செய்தனர். திராவிடன் என்னும் தமிழ் இதழும் ஆந்திரப் பிரகாசிகா என்னும் தெலுங்கு இதழும் ஜஸ்டிஸ் என்னும் ஆங்கில இதழும் தொடங்கப்பட்டன.

## திராவிடன்

1917 ஆம் ஆண்டு சூன் முதல் நாள் திராவிடன் என்னும் நாளிதழ் தொடங்கப்பட்டது. திராவிடனின் முதல் இதழிலேயே அதன் நோக்கங்கள் வெளியிடப்பட்டன.

> இந்துக்களில் பெரும்பாலோர் பிராமணர் அல்லாதவர்களாய் இருக்கின்றனர். தென்னிந்தியாவின் ஜனத்தொகை சுமார் நான்கு கோடியில் பிராமணர் அல்லாத இந்துக்களின் தொகை மூன்றரை கோடிக்கு அதிகமாகிறது. இவ்வளவு பெருந்தொகையினரான நம்மவர்களின் குறைபாடுகளையும் முறையீடுகளையும் ராஜாங்கத்தாருக்குத் தக்கபடி தெரிவித்து இவர்களுடைய செல்வாக்கை அபிவிருத்தி செய்து கொள்வதற்கு இதுவரைக்கும் இயலாமற் போயிற்று. பொதுவாக இந்துக்கள் என்ற மொத்தப் பெயரை வைத்துக் கொண்டே இந்துக்களுள் மிக மிகச் சிறிய பிரிவினராகிய சிலரே எல்லா நலன்களையும் எல்லாப் பலன்களையும் இதுவரைக்கும் அனுபவித்து வந்திருக்கிறார்கள்; இப்பொழுதும் அனுபவித்து வருகிறார்கள். முக்கியமாய் இதற்குக் காரணம் பத்திரிகை என்ற பலமுள்ள ஆயுதம் அவர்களிடம் இருப்பதுதான்.

இவ்வாறாகப் பிராமணர் அல்லாத இதர இந்துக்கள் வர வரத் தமது செல்வாக்கை இழந்து ஈனஸ்திதிக்கு இறங்கிக் கொண்டிருப்பது நாளுக்கு நாள் பொறுக்க முடியாத தாயிற்று. இந்தக் கொடிய நிலையினின்றும் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளவும் இனிமேலாயினும் தாங்கள் அபிவிருத்தி அடைய வழிகளைத் தேடிக் கொள்ளவும் வேண்டிய பிரயத்தனங்கள் செய்ய வேண்டும் என்கிற எண்ணமானது மெல்ல மெல்ல அவர்களது உள்ளங்களில் உதயமாகிக் கொண்டு வந்தது. தம்மைத் தாம் காத்துக் கொண்டு தம்முடைய விடா முயற்சியினாலும் தளராத உழைப்பினாலும் தம்மைத் தாம் முன்னுக்குக் கொண்டு வர வேண்டுமென்னும் ஞாயமான கோரிக்கை, பிராமணர் அல்லாத இந்துக்களின் மனத்தில் திடமாக வேரூன்றிப் பலமான நோக்கமாய் விளங்க ஆரம்பித்து விட்டது. இவ்விதமான எண்ணம், கண் மூடித்தனமான ஆத்திரத்தினாலாவது யோசனையிலாவது ஆவேசத் தினாலாவது உண்டானதன்று. நீர்க்குமிழி போலும் மின்னல் போலும் கணத்தில் மறைந்து போகும் ஏற்றமில்லாத தோற்றமென்று இதனைக் கொள்ள எள்ளளவும் முடியாது. மிக நிதானமாகவும் வெகு சாவ தானமாகவும் ஆர தீர யோசித்து தென்னிந்தியர்கள் பெரும் பாலோர் கொண்ட ஆலோசனையின் முதிர்ச்சி யினாலேயே இவ்வகையான எண்ணம் ஒவ்வொருவர் மனத்திலும் உண்டாயிருக்கிறதென்று உறுதியாகக் கொள்ளலாம்.

மேற்கூறியவை காரணமாகத் தென்னிந்தியத் தேசிய மகாஜன சபை ஒன்று சென்னையில் ஸ்தாபிக்கப்பட்டுள்ளது என்பதையும் அச் சங்கத்தாராலேயே 'ஜஸ்டிஸ்' என்கிற ஆங்கிலப் பத்திரிகையொன்று நடத்தப்பட்டு வருகிறதென்பதையும் நம்மவர்கள் அனேகர் அறிந்திருக்கலாம். மேற்படி சபையாராலேயே மேலே விவரித்துள்ள நோக்கங்களைச் சாதிப்பதற்கு இன்று 'திராவிடன்' என்கிற இத்தமிழ்த் தினசரிப் பத்திரிகையும் 'ஆந்திரப் பிரகாசிகா' என்ற தெலுங்குத் தினசரிப் பத்திரிகையும் ஆரம்பிக்கப்படுகின்றன'' என்று திராவிடன் இதழின் நோக்கம் குறிப்பிடப்பட்டுள்ளது. தென்னிந்தியாவில் வாழ்ந்த பெரும்பான்மை மக்களின் நலத்தைக் கருதித் தொடங்கப் பட்ட இவ்விதழ் சிறந்த தொண்டாற்றியது.

நீதிக்கட்சியின் பரிணாமமே தன்மான இயக்கமாக 1925 ஆம் ஆண்டு உருவெடுத்தது. இவ்வியக்கத்தைத் தொடங்கியவர் ஈ.வெ.ரா. பெரியார்

ஆவார். நீதிக்கட்சியை விடச் சமுதாய, அரசியல் எண்ணங்களில் புரட்சிகரமாக விளங்கியது இவ்வியக்கம். இவ்வியக்கத்தின் கோரிக்கைகளில் அரசியல் தன்மையை விட, சமுதாயத் தன்மையே மிகுதியாக இருந்தது. எல்லாச் சாதியினருக்கும் சம உரிமை, பெண்கள் உரிமை, அனைவருக்கும் கல்வி, ஏழைகளுக்கு உதவி போன்ற வற்றிற்காக இவ்வியக்கம் போராடியது.

இந்து மதம் மூட நம்பிக்கைக்கு வழிவகுப்பதாக இவ்வியக்கம் கருதியதால் அதன் வேதங்கள், புராணங்கள், வழிபாட்டு முறைகள், சடங்குகள் முதலியவற்றைக் கண்டித்தது. நீதிக்கட்சியின் பரிணாமமாகத் தன்மான இயக்கம் இருந்தாலும் அரசியல் ரீதியாக நீதிக் கட்சியும் இயங்கிக் கொண்டுதான் இருந்தது. 1937 ஆம் ஆண்டில் நீதிக் கட்சியும் தன்மான இயக்கமும் இணைந்தன. இணைந்த அமைப்பில் மிதவாதப் போக்குடையவர்களும் புரட்சிகரச் சிந்தனையாளர்களும் இருந்தனர். மெல்ல மெல்ல மிதவாதப் போக்குடையவர்கள் அமைப்பை விட்டு நீங்கியதால் 1944 ஆம் ஆண்டு திராவிடர் கழகம் தோன்றியது. பெரியார் அதன் தலைவரானார்.

**குடியரசு**

தன்மான இயக்க இதழாக 1925 ஆம் ஆண்டு குடியரசு இதழ் வெளியானது.

> அநேகப் பத்திரிகைகள் நமது நாட்டில் இருந்தாலும் அவை தங்கள் மனசாட்சிக்கு உண்மை என்று பட்டதைத் தெரிவிக்க அஞ்சுகின்றன. அதனால்தான் நான் இப்பத்திரிகையை ஆரம்பிக்கிறேன். மற்றப் பத்திரிகை போல அல்லாமல் மனத்தில் பட்டதைத் தைரியமாய்ப் பொது ஜனங்களுக்கு உள்ளது உள்ளபடி தெரிவிக்க வேண் டும் என்பது நமது நோக்கம்

என்று குடியரசு இதழின் தொடக்க விழாவில் பெரியார் குறிப்பிட்டுள்ளார்.

> மக்களுக்குள் சுயமரியாதையும் சமத்துவமும் ஓங்கி வளர வேண்டும். உயர்வு, தாழ்வு என்ற உணர்ச்சியே நமது நாட்டில் வளர்ந்து வரும் சாதிச் சண்டை என்னும் நெருப்புக்கு நெய்யாக இருப்பதால் இவ்வுணர்ச்சி ஒழிந்து அனைத்துயிர் ஒன்று என்று எண்ணும் உண்மை அறிவு மக்களிடம் வளர வேண்டும்.
>
> இவர் எனக்கு இனியர், இவர் எனக்கு இன்னாதார் என்ற விருப்பு வெறுப்பு இன்றி 'நகுதற் பொருட்டன்று நட்டல்

> மிகுதிக்கண் மேற்சென்று இடித்தல் பொருட்டு' என்ற வாக்கைக் கடைப்பிடித்து நண்பராயினும் ஆகுக, அவர் தம் சொல்லும் செயலும் கேடு சூழ்வதாயின் அஞ்சாது கண்டித்து ஒடுக்கப்படும்

என்று குறிப்பிட்டுள்ளார்.

குடியரசு இதழின் இரண்டாண்டுப் பணியினைப் பற்றிப் பெரியார் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார்.

> அரசியல் இயக்கம் என்பவைகளைக் கண்டித்தேன். அரசியல் தலைவர்கள் என்பவர்களைக் கண்டித்தேன். மதச்சடங்கு என்பவைகளைக் கண்டித்திருக்கிறேன். குருக்கள் என்பவர்களைக் கண்டித்திருக்கிறேன். காங்கிரஸ் என்பதைக் கண்டித்திருக்கிறேன். புராணம் என்பதையும் கண்டித்திருக்கிறேன். பார்ப்பனீயம் என்பதைக் கண்டித்திருக்கிறேன். சாதி என்பதைக் கண்டித்திருக்கிறேன். அரசாங்கம் என்பதைக் கண்டித்திருக்கிறேன். உத்தியோகம் என்பதைக் கண்டித்திருக்கிறேன். நீதிஸ்தலம் என்பதைக் கண்டித்திருக்கிறேன். நியாயாதிபதி என்பவர்களைக் கண்டித்திருக்கிறேன். நிர்வாகஸ்தலங்கள் என்பவைகளைக் கண்டித்திருக்கிறேன். ஜனப்பிரதிநிதித்துவம் என்பதனைக் கண்டித்திருக்கிறேன். பிரதிநிதிகள் என்பவர்களைக் கண்டித்திருக்கிறேன். தேர்தல் என்பதைக் கண்டித்திருக்கிறேன். சுயராஜ்ஜியம் என்பதைக் கண்டித்திருக்கிறேன். ஸ்ரீமான்கள் கல்யாண சுந்தர முதலியார், வரதராஜுலு நாயுடு, சி. இராஜ கோபாலாச்சாரியார் முதலிய ஒரே துறையில் வேலை செய்து வந்த நண்பர்களைக்கூடக் கண்டித்திருக்கிறேன்; கோபம் வரும்படி வைதும் இருக்கிறேன். எதைக் கண்டித்திருக்கிறேன். எதைக் கண்டிக்கவில்லை. யாரை வையவில்லை என்று எனக்கு ஞாபகத்துக்கு வரவில்லை

என்று தெரிவித்துள்ள கருத்தின் வாயிலாகச் சமுதாய ஏற்றத்திற்குத் தடையாக இருப்பதைத் தகர்க்கும் நோக்கம் கொண்டது குடியரசு இதழ் என அறிய முடியும்.

## விடுதலை

1935 ஆம் ஆண்டில் பெரியாரால் தொடங்கப்பட்ட இதழ் விடுதலை. இவ்விதழ் இன்றும் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது. பெரியாரின் சொற்பொழிவுகளையும் திராவிடர் கழகக் கொள்கைகளையும்

'விடுதலை' வெளியிடுகிறது. திராவிடர் உணர்வு, அரசியல் - சமுதாய மாற்றத்திற்கான தேவை, திராவிட நாடு கோரிக்கை முதலியவற்றை அனைவரும் அறியச் செய்தது. திராவிடர் கழகத்தின் கோரிக்கைகளையும் கோரிக்கைகளின் வெற்றியையும் வெளியிட்டு, திராவிடர் கழகப் பிரச்சார ஏடாக வெளிவருகிறது.

பகுத்தறிவு என்னும் இதழும் நாளிதழாகத் தொடங்கப்பட்டுப் பின்னர் வார இதழாக மாற்றப்பட்டது. இதனைத் தொடங்கிய பெரியார் முதன் முதலாக எழுத்துச் சீர்திருத்தத்தை இவ்விதழில் தான் தொடங்கினார். 1970 ஆம் ஆண்டு 'உண்மை' என்னும் திங்கள் இதழும் பெரியாரால் தொடங்கப்பட்டது. இவை தவிர ரிவோல்ட் (1928), ஜஸ்டிசைட் (1945), மாடர்ன் ரேஷனலிஸ்ட் (1971) ஆகிய ஆங்கில இதழ்களும் சமுதாய மறுமலர்ச்சிக் கருத்துகளைத் தாங்கி வெளிவந்தன.

## திராவிட நாடு

பேரறிஞர் அண்ணாவை ஆசிரியராகக் கொண்டு 1942 ஆம் ஆண்டில் வெளிவந்த இதழ், 'திராவிட நாடு' ஆகும். இவ்விதழில் அண்ணா அடுக்கு நடையையும் புதிய தொடரமைப்புகளையும் பயன்படுத்தினார். இவ்விதழில் 'ஆரியமாயை' என்று அண்ணா எழுதி வந்த தொடர் கட்டுரை நூலாக வெளியாகியுள்ளது. 'தம்பிக்கு' என்னும் தலைப்பில் அண்ணா எழுதிய கடிதங்களும் பல தொகுதிகளாக வெளிவந்துள்ளன. அண்ணா, 'நம்நாடு', 'காஞ்சி', 'மாலை மணி' முதலிய இதழ்களையும் வெளியிட்டுள்ளார். இவ்விதழ்கள் வாயிலாகச் சமூகச் சீர்திருத்தக் கருத்துகளை அண்ணா பரப்பியுள்ளார்.

## மொழி வளர்ச்சியில் இதழ்கள்

சமுதாய மறுமலர்ச்சிக்கு இதழ்களின் பங்களிப்பு என்றால் மக்கள் வாழ்க்கைத் தரம், உணவு, கல்வி, தொழில் இவற்றுடன் மொழி, பண்பாடு முதலியவையும் அடங்கும்.

தமிழ் மொழி வளர்ச்சிக்குத் தமிழ் இதழ்கள் தொண்டாற்றி யுள்ளன. எழுத்துருவாக்கம், நிலைபேறாக்கம், புதுமையாக்கம், கலைச்சொல் படைத்தல் போன்றவற்றிற்கு இதழ்கள் பெருந் துணையாக இருக்கின்றன.

தொடக்ககால இதழ்களில் ஆங்கிலம் கலந்தோ, வடமொழி கலந்தோ எழுதி வந்தனர். வடமொழி இருந்த காலத்தில் நல்ல தமிழ் இருந்ததையும் அறிவோம். பின்னர் வந்த இலக்கிய இதழ்களும் தனித் தமிழ் இயக்க இதழ்களும் நல்ல தமிழைப் பயன்படுத்தி எழுதின.

தமிழ் இதழியலில் மிகப் பெரிய மாற்றங்களை உருவாக்கிய பெருமை திரு.வி.கலியாண சுந்தரனாரையே சாரும். ஆங்கிலக் கலப்பான நடையை மாற்றிய பெருமை முழுவதும் இவருக்கே உண்டு. இவரின் இதழில் தமிழின் இனிமையை வளரவிட்டுப் பெரு வெற்றி கண்டவர். புதுப்புதுச் சொற்களை உருவாக்கிப் பத்திரிகை உலகில் நடமாட விட்டவர். தமிழ் உரைநடை வரலாற்றில் திரு.வி.க.வின் நடை குறிப்பிடத்தக்க ஒன்றாகும். எளிமை, இனிமை, தெளிவு, ஆற்றொழுக்கான பண்பு விரும்பும் நடையாகும். திரு.வி.க. வின் சொல்லாக்கம், சொற்றொடரமைப்பு, நடை நலம் ஆகியவை வற்றாத தமிழுக்கு அவர் அளித்த வளமான நற்கொடைகளாகும்.

தனித்தமிழ் இயக்க இதழ்கள் தமிழ் வளர்ச்சிக்கு உதவியுள்ளன. மறைமலை அடிகளின் 'அறிவுக் கடல்', சி.பா. ஆதித்தனாரின் 'தமிழன்', 'தமிழ்க் கொடி' மு. தமிழ்க்குடிமகனின் 'அறிவு', த.ச. தமிழனின் 'இயற்றமிழ்', சி. அறிவுறுவோனின் 'எழுச்சி', இரா. மதிவாணனின் 'கலைச்சொல்', பாரதிதாசனின் 'குயில்', சி. இலக்குவனாரின் 'குறள் நெறி', வேலா. இராசமாணிக்கத்தின் 'குறளியம்', சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் 'செந்தமிழ்ச் செல்வி', செம்பரிதியின் 'அறவாழி', பெருஞ்சித்திரனாரின் 'தமிழ்ச் சிட்டு', அண்ணல் தங்கோவின் 'தமிழ் நிலம்', முதலானவை தமிழ் வளர்ச்சிக்குத் தொண்டாற்றியுள்ளன.

# 8. விடுதலை இயக்க இதழ்கள்

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியை இந்திய விடுதலை இயக்கக் காலமாகக் கொள்ளலாம். பெருவெள்ளம் போன்று நாட்டுப் பற்றும், விடுதலை உணர்வும் பெருக்கெடுத்து ஓடியதால், இதழ்களி லும் விடுதலை இயக்கத்தின் தாக்கம் இருந்தது. அக்காலத் தமிழ் இதழ் களின் வளர்ச்சிப் போக்கில் இதனை வெளிப்படையாகக் காணலாம். இதழ்களை நடத்தியவர்களும், இதழ்களில் பணியாற்றியவர்களும், எழுதியவர்களும் பெரும்பாலும் தேசிய இயக்கங்களில் நேரடியாகப் பங்கு பெற்றவர்கள். ஆதலால் இதழ்களும் அவர்களது வழியிலேயே நடை பயின்றன.

## இந்திய விடுதலை இயக்கமும் இந்திய இதழ்களும்

இந்திய விடுதலை இயக்கத்திற்கும் இந்திய இதழ்களின் வளர்ச்சிக்கும் நெருங்கிய தொடர்பு இருந்தது. மக்களிடம் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தவும் மக்களை ஒன்று திரட்டி ஆங்கிலேய அரசுக்கு எதிராகப் போராடச் செய்யவும் தலைவர்கள் இந்திய இதழ்களைப் பயன்படுத்தினர். அவ்வாறு வெளிவந்த இதழ்களின் ஆசிரியர்கள் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டவர்கள் ஆவர்.

பால கங்காதர திலகர், மகாதேவ கோவிந்த ரானடே, கோபால கிருஷ்ண கோகலே, அரவிந்தர், காந்தியடிகள் முதலானோர் இதழ்களின் வாயிலாகவே இந்திய விடுதலைக் கருத்துகளைப் பரப்பினர். அவ்வாறு இந்திய விடுதலையில் ஈடுபட்ட இந்திய இதழ்களை இப்பகுதியில் காண்போம்.

விஷ்ணு கிருஷ்ண சிப்லாங்கர் மராட்டிய மொழியில் 'கேசரி' (Kesari)என்ற இதழையும், ஆங்கிலத்தில் 'மராட்டா' என்ற இதழையும் தொடங்கினார். மூத்த தேசியத் தலைவரான பாலகங்காதர திலகர் பின்னர் இவற்றை ஏற்று நடத்தினார்.

மகாதேவ கோவிந்தரானடேயின் விருப்பப்படி 1887இல் கோபால கிருஷ்ணகோகலே சர்வ ஜனக் சபையின் காலாண்டு இதழை ஏற்று நடத்தினார். அவர் 'சுதாரக்' என்ற மராத்திய இதழையும் நடத்தினார். 1907 இல் இந்தியத் தேசியக் காங்கிரசில் பிளவு ஏற்பட்ட பொழுது 'தக் காண சபையை' (Deccan Sabha) அமைத்தார். பின்பு 'இந்திய ஊழியர் சங்கத்தை' (Servants of India Society) நிறுவினார். இந்தச் சங்கம் 'தியான் பிரகாஷ்' (Dhyan prakash) என்ற இதழை நடத்தியது.

இதழ்களின் சுதந்திரத்திற்காகத் தொடர்ந்து போராடிய தலைவர்களில் திலகர் குறிப்பிடத்தக்கவர்.

## அடக்குமுறைகள்

1908 ஜூனில் வந்த செய்தித்தாள் (குற்றங்களுக்குத் தூண்டுதல்) சட்டம் VII (The Newspaper Incitement of offences Act VII), கலகங்களைத் தூண்டும் வகையில் திட்டமிட்டு எழுதுகின்ற இதழாசிரியர் மீது நடவடிக்கை எடுக்க உள்ளூர் ஆட்சியாளருக்கு அதிகாரமளித்தது. இதன்படி ஒன்பது பத்திரிகைகள் மீது ஆங்கிலேய அரசு நடவடிக்கை எடுத்தது. ஏழு பத்திரிகைகளை அரசே கைப்பற்றியது.

1909 இல் மிண்டோ-மார்லி சீர்திருத்தங்களை மேற்கொண்டபொழுதும், பத்திரிகைகளைக் கட்டுப்படுத்த ஆட்சியாளருக்கு மேலும் அதிகாரங்கள் வழங்கப் பெற்றன. இந்தப் போக்கினை மதன்மோகன்மாளவியா, பூபேந்திரநாத் பாசு, பிரோஷா மேத்தா ஆகியோர் எதிர்த்தனர்.

1910 ஆம் ஆண்டில் 'இந்திய இதழ்கள் சட்டம்' , என்ற புதிய சட்டத்தின் மூலம், இந்திய இதழ்கள் மிகுதியாகப் பிணைத் தொகை கட்ட வேண்டுமென்று கூறி, இதழ்களை ஒடுக்க ஆட்சியாளர்கள் முயன்றனர். இதனால் எட்டு இந்திய இதழ்கள் நின்றன.

இந்திய இதழ்களை ஒடுக்க அரசு பல நடவடிக்கைகளை மேற்கொண்டது. திலகர் மீது அரசுக்கு எதிராகச் செயல்பட்டதாக வழக்குத் தொடர்ந்தனர். வேறு பல இதழ்களின் மீதும் வழக்குகள் தொடர்ந்தனர்.

## எதிர் நீச்சல்

இந்தியத் தலைவர்களைச் சிறையிலிட்டும் நாடு கடத்தியும் வாட்டி வதைத்த போதிலும், அவர்கள் அஞ்சி நடுங்கி ஒடுங்கவில்லை. மாறாக, எதிர்ப்பினை உரமாகக் கொண்டு வளர்ந்தனர். திலகரின் ''கேசரி'' அரவிந்தரின் 'வந்தே மாதரம்'' சுவாமி விவேகானந்தரின் சகோதரர் பூபேந்திர நாத்தின் 'ஜுகேந்தர்' (Jugantar) பிரேமா பந்தாப் உபாத்யாயாவின் ''சந்தியா'' (Sandhya) பிரோஷா மேத்தாவின் ''பாம்பே கிரானிக்கிள்'' மௌலான முகமது அலியின் 'காம்ரேட்', அபுல்கலாம் ஆசாத்தின் உருது இதழான 'அல்-ஹிலால்', 'சொர்வன்ட் ஆப் இந்தியா ' ஆகிய இதழ்கள் துணிச்சலோடு உரிமை வேண்டித் தொடர்ந்து குரல் கொடுத்துக் கொண்டிருந்தன.

## காந்தியடிகளின் இதழ்கள்

இந்திய விடுதலை இயக்கத்தில் காந்தியடிகள் பங்கேற்ற பின்பு, அதன் போக்கில் புரட்சிகரமான மாற்றங்கள் ஏற்பட்டன. அது

போன்றே, அண்ணலின் அரசியல் நுழைவு இந்திய இதழ்களின் வரலாற்றிலும் குறிப்பிடத்தக்க விளைவுகளைக் கொண்டு வந்தது. இந்திய மக்களை வாழ்விக்க வந்த காந்தியடிகள் தனிவகையான இதழாளர். தென் ஆப்பிரிக்காவிலேயே இதழ்களை நடத்தி அனுபவம் பெற்றிருந்த அண்ணல், இந்திய இதழியல் வரலாற்றில் புதிய சாதனைகளை நிகழ்த்திக் காட்டினார்.

> காந்தியடிகளை இதுவரை தோன்றிய எல்லா இதழாசிரியர்களிலும் மிகப்பெரியவராகக் கொள்ளலாம். அவர் நடத்திய வார இதழ்களை, உலகம் தெரிந்திருக்கின்ற இதழ்களிலேயே மிகவும் பெரியனவாகக் கொள்ளலாம். அவர் தமது இதழ்களில் எந்த விளம்பரமும் வெளியிட்டதில்லை. அதே நேரத்தில் தமது இதழ்களை இழப்பில் நடத்த விரும்பவும் இல்லை

என்று எம்.சலபதிராவ் குறிப்பிடுகின்றார்.

தென்னாப்பிரிக்காவில் 'இந்தியன் ஒப்பீனியன் ' (Indian opinion), இதழையும் நமது நாட்டில் ''யங் இந்தியா'' (young India), 'ஹரிஜன்' (Harijan), 'நவஜீவன்' (Navajivan) ஆகிய இதழ்களையும் உயர்ந்த குறிக்கோளோடும், தரத்தோடும் அறத்தோடும் நடத்தியவர் காந்தியடிகள்.

> நான் பத்திரிகைப் பணியை அதற்காக மட்டும் மேற்கொள்ளவில்லை; என்னுடைய வாழ்க்கை நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளத் துணைசெய்யும் கருவியாகவும் கருதுகின்றேன். என்னுடைய இலட்சியம், இன்றுள்ள கடுமையான சூழலில், அகிம்சையோடு நேரடித் தொடர்பான தன்னிகரற்ற கருவியான சத்தியாக்கிரகத்தை எடுத்துக்காட்டின் மூலம் கற்றுத் தருவதாகும் என்றும் அடக்கப்பட்ட உணர்வோடு செய்தித்தாள்களை வெளியிடுவதை விட, அவற்றை வெளியிடாமல் இருப்பதே சிறந்தது

என்றும் கூறியிருப்பவை இதழாளர்கள் உணரவேண்டிய கருத்துகளாகும்.

காந்தியடிகளின் காலத்தில் பழைய இந்திய இதழ்கள் புத்தாக்கம் பெற்று வெளிவந்தன. நாடெங்கும் பல புதிய இதழ்கள் வளர்ந்தன. எடுத்துக்காட்டாக, புகழ்பெற்றுத் திகழ்ந்த இதழ்களைச் சுட்டிக் காட்டலாம்.

மும்பையில் 'பம்பாய் கிரானிக்கிள்' (Bombay Chronicle), சிந்துவில் டி.எல். வாஸ்வானியின் 'நியூ டைம்ஸ்' (The New Times),

மஹாராஜ் லோக்ராமின் 'ஹிந்து' பீகாரில் சச்சிதானந்த சின்ஹாவின் 'செர்ச் லைட்' (Search Light), தார்பங்கா மஹாராஜாவின் 'இந்தியன் நேஷன்' (Indian Nation), வங்காளத்தில் மோதிலால் கோஷ் நடத்திய அம்ரிதா பஜார் பத்திரிகா', சுரேந்திர நாத் பானர்ஜியின், 'பெங்காளி' சியாம் சுந்தர் சக்கரவர்த்தியின் 'செர்வன்ட்' (Servant), உத்திரப்பிரதேசத்தில் மதன் மோகன் மாளவியாவின் 'லீடர்' (Leader) ஜவஹர்லால் நேரு தலைவராக இருந்த குழு நடத்திய 'நேஷனல் ஹெரால்டு' (National Herald), பஞ்சாபில் தயாள் சிங்மஜிதியாவின் 'டிரிபியூன்' (Tribune), சென்னையில் அன்னி பெசன்ட் அம்மையாரின் 'நியூ இந்தியா' (New India), நீதிக் கட்சியின் 'ஜஸ்டிஸ்' (Justice), டி.பிரகாசத்தின் 'ஸ்வராஜ்யா' (swarajya) ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

காந்தியடிகள் 1942இல் 'வெள்ளையனே வெளியேறு'(Quit India) இயக்கத்தை நடத்திய பிறகு பெரும்பாலான இதழ்கள் தேசிய இயக்கத்தோடு ஒன்றி நடை போட்டன. நாட்டின் விடுதலை வேள்வித் தீயை வளர்த்து நாடு விடுதலை பெற இதழ்கள் ஆற்றிய பங்கு தனி வரலாறாக விளங்குகின்றது.

## இந்திய விடுதலையும் தமிழ் இதழ்களும்

இந்தியா விடுதலை பெற வேண்டும் என்று குமரி முதல் இமயம் வரை வாழ்ந்த மக்கள் விரும்பினர். இந்தியா முழுவதும் இதழ்கள் இந்திய விடுதலையை வலியுறுத்தியது போன்றே மாநில மொழி இதழ்களும் விடுதலைக்காகப் போராடின. அவ்வகையில் தமிழ் நாட்டில் தோன்றிய தமிழ் இதழ்களும் இந்திய விடுதலைக்காகப் பாடு பட்டன. அவற்றில் சிலவற்றைக் காண்போம்.

### சுதேசமித்திரன்

தமிழில் முதல் அரசியல் இதழென்ற புகழுக்குரிய'சுதேசமித்திரனை' 1882இல் வார இதழாகத் தொடங்கி, 1887இல் வாரம் மும்முறையாக்கி 1889 இல் நாளிதழாக மாற்றி நடத்தி வந்த ஜி.சுப்பிரமணிய ஐயர் இந்தியத் தேசியக் காங்கிரசில் தொடக்கத்திலிருந்தே பெரும் பங்கு கொண்டவர். ஆதலால் தேசிய உணர்வின் உந்துதலோடு சுதேச மித்திரனையும் நடத்தினார். 1918 இல் ஏ. ரெங்கசாமி ஐயங்கார் இதன் ஆசிரியரானார். பத்தாண்டுகளுக்குப் பின்னர், சி.ஆர்.சீனிவாசன் இதன் ஆசிரியராகி ஐம்பதாண்டுகள் இதனை நடத்தி வந்தார்.

### இந்தியா

1905இல் வங்காளத்தைப் பிரித்தபொழுது நாடே கொதித்தெழுந்தது. மகாகவிபாரதியார் இந்திய அரசியலில் தீவிரவாதிகளின் தலைவராக விளங்கிய பாலகங்காதர திலகரைப் பின்பற்றிப் புரட்சியாளராக

ஒளிர்ந்தார். தன்னைப்போன்ற தீவிரக் கருத்துக் கொண்டவர்களோடு சேர்ந்து 1907 இல் 'இந்தியா' என்ற தமிழ் மாத இதழையும், 'பால பாரதி' என்ற ஆங்கில வார இதழையும் தொடங்கினார்.

மகாகவி பாரதியார் 'இந்தியா' இதழை ஒரு புரட்சிகரமான இதழாக நடத்தியதை அவர் அறிவித்திருந்த சந்தா விவரத்திலிருந்து அறிந்து கொள்ளலாம். 'இந்தியா' இதழுக்கு அவர் அறிவித்திருந்த ஆண்டுச் சந்தா விவரம்:

எல்லாக் கவர்ன்மெண்டாருக்கும் ரூ. 50

ஜமீன்தார்கள், ராஜாக்களுக்கு ரூ. 30

மாதம் ரூ. 200க்கு மேற்பட்ட வருமானம் உள்ளவர்களுக்கு ரூ 15

மற்றவர்களுக்கு ரூ.3

இந்தச் சந்தா விவரத்தில் பொதுமக்களுக்கு மிகக் குறைந்த கட்டணம் குறிப்பிடப்பட்டிருப்பதிலிருந்து மக்களிடையே விடுதலைக் கருத்தைப் பரப்பும் உந்துதல் தெளிவாகிறது.

அரசின் கொடுமையான போக்கின் விளைவாக மகாகவி பாரதியார் பாண்டிச்சேரியில் குடியேறினார். அவர் நடத்திய இதழ்கள் சென்னையிலும் புதுச்சேரியிலுமாக வெளிவந்தன. நிதிநெருக்கடியால் அவரால் தொடர்ந்து இதழ் நடத்த இயலவில்லை. 1910 இல் அவை நின்று விட்டன. பாரதியார் சென்னைக்குத் திரும்பிய பின் மறுபடியும் 'சுதேசமித்திரனில்' பணியாற்றினார். அவர் தனது 39 ஆம் வயதிலேயே காலமாகிவிட்டதால் அவரது இதழியல் சாதனைகளும் நடுவிலேயே நின்று போயின.

## தேசபக்தன்

மணிப்பிரவாளமாக மனம்போல் பிற சொற்களைக் கலந்து பத்திரிகைகளில்பலரும் எழுதி வந்த பொழுது, நல்ல பழகு தமிழில் பத்திரிகையை நடத்தி, இதழியல் தமிழுக்கு வளம் சேர்த்தவர் தமிழ்த் தென்றல் திரு.வி.கலியாணசுந்தரனார். நல்ல தமிழ்ப் புலமைமிக்க இவர் சென்னையில் உள்ள வெஸ்லி பள்ளியில் தமிழ் ஆசிரியராகப் பணியாற்றி வந்தார். நாட்டில் விடுதலை இயக்கம் வளர்ந்த பொழுது, நாட்டுக்குத் தொண்டு செய்யக் கருதி ஆசிரியப் பணியிலிருந்து விலகி இதழியல் பணியை மேற்கொண்டார்.

திரு.வி.க 1917 இல் 'தேசபக்தன்' என்னும் நாளிதழைத் தொடங்கினார். சுதேசமித்திரனுக்குப் பிறகு தமிழகத்தில் முரசு கொட்டிய நாளிதழ் 'தேசபக்தன்'. திரு.வி.க தொழிலாளர் இயக்கத்தில் ஈடுபாடு கொண்டவர். சிறந்த சீர்திருத்த உள்ளம் கொண்டவர்.

இவற்றோடு அவரது தமிழ்ப் புலமையும் சேர, 'தேசபக்தன்' தெருவெங்கும் தமிழ் முழக்கமும் தேசிய முழக்கமும் செய்கின்ற இதழாக வெளிவந்தது. திரு.வி.க. வுக்குப் பிறகு வ.வே.சு.ஐயர் இவ்விதழின் பொறுப்பேற்றார். ஆனால் 1920இல் இவ்விதழ் நின்றது.

திரு.வி.க அவர்களின் இதழியல் பணி தொடர்ந்தது. அவர் 'நவசக்தி' என்னும் வார இதழினைத் தொடங்கினார். இருபது ஆண்டுகள் இவ்விதழைத் திறம்பட நடத்தினார். இவ்விதழின் மூலம் எழுத்துலகிற்கு வந்து புகழ் பெற்றவர்கள் 'கல்கி' இதழின் ஆசிரியர் கல்கியும் கலை மகள் இதழாசிரியர் கி.வா.ஜகந்நாதனும் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

1953இல் காரைக்குடி சொ.முருகப்பா 'குமரன்'என்ற இதழைத் தொடங்கினார். நல்ல இலக்கிய இதழாக இது இருபதாண்டுக் காலம் நடைபெற்றது. இவர் 'சண்டமாருதம்' என்ற நாளிதழைச் சில காலம் நடத்தி வந்தார்.

டாக்டர் பி. வராதராஜுலு 'தமிழ் நாடு' என்ற இதழைத் தொடங்கினார். தரமாக வெளி வந்த இவ்விதழ் சுதந்திரப் போராட்ட இதழாக விளங்கியது. காந்தியடிகள் தொடங்கிய ஒத்துழையாமை இயக்கத்தை ஆதரிக்காததால் காங்கிரசின் ஆதரவை இழந்தது.

1933இல் செட்டி நாட்டில் சமயத்தைப் பரப்பவும் நாத்திகத்தைச் சாடவும் 'சுதர்மம்' என்ற நாளிதழ் வெளி வந்தது. ஆனால் குறுகிய காலத்தில் இவ்விதழ் நின்று விட்டது. இதனைப் போன்றே குறுகிய காலமே வெளிவந்த மற்றொரு நாளிதழ் 'ஜெயபாரதி'. இது ஒரு தேசிய இயக்க இதழாகும்.

சுதந்திர வேட்கையை வளர்த்த மற்றோர் இதழ் 'சுதந்திரச் சங்கு'. இதனைச் சங்கு கணேசன் தொடங்கி நடத்தினார். இதில் பணி புரிந்து, இதன் வளர்ச்சிக்கு உதவியவர் சங்கு சுப்பிரமணியம்.

1934 இல் சதானந்தம் 'தினமணி' நாளிதழைத் தொடங்கினார். நாட்டுப்பற்றை வளர்த்த இவ்விதழில் முதல் எட்டு ஆண்டுகள் டி.எஸ்.சொக்கலிங்கம் ஆசிரியராக இருந்தார். அதன் பின்பு நீண்ட காலம் ஏ.என். சிவராமன் ஆசிரியராகப் பணியாற்றினார். ஒரு தமிழிதழில் நீண்ட காலம் பணியாற்றியவர் என்ற புகழுக்குரியவர் ஏ.என்.சிவராமன் ஆவார். தமிழில் நீண்ட காலம் வெளிவரும் இதழும் இதுவாகும்.

தமிழ் இதழியல் வளர்ச்சிக்குப் பெருந்தொண்டு புரிந்தவர்களில் பெரியார் ஈ.வெ.ராமசாமி குறிப்பிடத்தக்கவர். இவர் 'குடியரசு'என்ற இதழினைத் தொடங்கி, நாட்டின் விடுதலை இயக்கத்துக்கு ஆக்கமும்

ஊக்கமும் தேடினார். இவர் காங்கிரசுக் கட்சியை விட்டு வெளியேறிய பிறகு இவ்விதழும் காங்கிரசுக்கு எதிராகச் செயல்பட்டது. திராவிட இயக்கத்தின் தாய் இதழ் இதுவாகும்.

1937இல் ப.ஜீவானந்தம் 'ஜனசக்தி' என்ற இதழைத் தொடங்கி நடத்தினார்.

'தமிழ்நாடு' இதழில் முதலில் பணியாற்றிய டி.எஸ். சொக்கலிங்கம் பின்னர் அவரே 'காந்தி'என்ற வாரம் இருமுறை இதழையும் 'வந்தே மாதரம்'என்ற நாளிதழையும் தொடங்கி நடத்தினார். 1934 முதல் 1943 வரை 'தினமணியில்' பணியாற்றிய இவர் 1944இல் தினசரியைத் தொடங்கினார். இவர் பின்னர் 'ஜனயுகம்' 'பாரதம்' 'நவசக்தி' ஆகிய இதழ்களையும் நடத்தினார். விடுதலைப் போராட்ட இதழாசிரியர்களில் குறிப்பிடத்தக்கவர் இவர்.

## விடுதலைப் போராட்ட இதழாளர்கள்

இந்திய விடுதலைக்குப் பாடுபட்ட காங்கிரஸ் இயக்கம் 'தேசாபிமானம், பாஷாபிமானம், மதாபிமானம்' என்னும் முழக்கத்தை முன்வைத்தது. இதே காலக்கட்டத்தில் தமிழ் இதழ்களிலும் சுதந்திர தாகம் வெளிப்பட்டது.

''இந்திய விடுதலைக் கிளர்ச்சியும் தமிழ்ப் பத்திரிகைத் துறையும் இணைந்தே வளர்ந்தன. ஆம்! ஏனெனில் அவை இரட்டைக் குழந்தைகள்'' என்று ம.பொ. சிவஞானம் கூறியுள்ளார்.

பொதுவாகவே போர் நடந்த காலத்தில் இதழ்களின் விற்பனை மிகுதியாக இருந்திருக்கிறது. இந்திய விடுதலைப் போராட்டக் காலத்திலும் இதழ்கள் நன்கு வளர்ந்துள்ளன.

> உரிமைப் போரோ மக்களின் போர். இந்திய மக்கள் ஒவ்வொருவருமே இந்தப் போரில் கலந்து கொண்டார்கள். இந்தப் போருக்கென்றே இதழ்கள் தோன்றின. ஒரு போர்க் கருவியாக இதழ்கள் பயன்பட்டன. போரில் ஈடுபட்டவர்களும் இதழ்களை நடத்தினார்கள். இந்த இதழ்களின் ஆசிரியர்களாக இருந்தவர்களில் பலர் உரிமைப் போரில் சிறை புகுந்தவர்கள். இதழிலே எழுதி அதன் காரணமாகச் சிறை சென்றவர்களும் உண்டு. இந்திய உரிமைப்போரில் வாளாகவும் கேடயமாகவும் இதழ்கள் பயன்பட்டன

என்று அ.மா. சாமி குறிப்பிட்டுள்ளார்.

இந்தியர்கள் ஆயுதங்கள் வைத்துக்கொள்ளக் கட்டுப்பாடு விதித்து 1878 இல் ஒரு சட்டம் கொண்டுவரப்பட்டது. அதை எதிர்த்து 'விவேக

வர்த்தினி' என்னும் இதழ் 1881 இல் குரல் கொடுத்துள்ளது. ஆங்கிலேயர்களுக்கு இணையாகத் தமிழர்களுக்கும் அரசுப் பதவிகள் அளிக்க வேண்டும் என்று 'இந்து ஜன பூசனி' என்ற இதழ் 1886 இல் எழுதியுள்ளது. கோடை காலத்தில் சென்னை மாநிலத்தின் தலைநகரை ஊட்டிக்கு மாற்றுவதை எதிர்த்து நாகர்கோவிலிலிருந்து வெளிவந்த 'தத்துவ விவேகினி' என்னும் இதழ் எழுதியுள்ளது.

## கிருஷ்ணசாமி பாவலர்

'தேசபந்து' என்ற வார இதழை 1926 இல் தெ.பொ. கிருஷ்ணசாமி பாவலர் நடத்தினார். இதன் முகப்புப் படத்தில் காந்தி நூல் நூற்றுக் கொண்டு இருப்பதுபோல் வெளியிட்டார். இந்த இதழின் விலை காலணா. இவர் ஒரு நாடகக் குழு நடத்தி வந்தார். இலண்டனுக்குப் போய் நாடகம் நடத்தியவர் இவர். மேலும் 'இன்றைய சமாசாரம்', 'பாரதி' ஆகிய இதழ்களையும் நடத்தினார்.

பாரதி எழுதிய 'செந்தமிழ் நாடு', 'பாருக்குள்ளே நல்ல நாடு', 'பாரததேசம்', 'தமிழ் மொழி வாழ்த்து', 'புதுமைப் பெண்' ஆகிய பாடல்கள் இந்தப் பாரதி இதழில்தான் வெளியாயின.

## திருலோக சீதாராம்

முப்பது ஆண்டுக்காலம் சொந்த இதழ் நடத்தியவர் திருலோக சீதாராம். இலாப நட்டம் பாராமல் காங்கிரஸ் பிரச்சாரத்துக்காகவும் நாட்டு நன்மைக்காகவும் 'துறையூர் இந்திய வாலிபன்', 'விழுப்புரம் பால பாரதம்' 'ஆர்க்காடு தூதன்' முதலான இதழ்களை நடத்தினார். ஒவ்வோர் இதழும் ஓரிரு ஆண்டுகளிலேயே நின்று விட்டன. ''எழுத்தெல்லாம் புதிய நடை, எண்ணமெல்லாம் தன்னுடைமை, எனவே நாட்டின் பழுத்த பொதுத்தொண்டு செய்வான் திருலோக சீத்தாராம்'' என்று பாரதிதாசன் இவரைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

## ம.பொ. சிவஞானம்

இந்திய விடுதலைக் களத்தில் இதழ் நடத்தியவர்களில் ம.பொ. சிவஞானமும் குறிப்பிடத்தக்கவர் ஆவார். காங்கிரஸ் இயக்கத்திலிருந்து கருத்து வேறுபாட்டால் விலகித் 'தமிழரசு கழகம்' என்ற இயக்கத்தைத் தொடங்கினார். டி.என். நடராசனின் 'விநோதினி' இதழிலும் வரதராஜுலுவின் 'தமிழ்நாடு' இதழிலும் அச்சுக் கோப்பவராகப் பணியாற்றினார். 1946 இல் 'தமிழ் முரசு' என்னும் இதழைத் தொடங்கினார். காந்தியத்தையும் கதரையும் தம் வாழ்வில் ஏற்றுக் கொண்ட இவர் 'தமிழன் குரல்', 'செங்கோல்' ஆகிய இதழ்களையும் நடத்தியுள்ளார்.

# 9. இதழ்களின் வகைகள்

இதழ்களைப் பல்வேறு வகைகளாக வகைப்படுத்தலாம். அவ்வாறு வகைப்படுத்தும்போது இதழ் வெளியாகும் காலத்தை அடிப்படையாகக் கொண்டு வகைப்படுத்தலாம். இதழ்களின் உள்ளடக்கத்தை அடிப்படையாகக் கொண்டும் வகைப்படுத்தலாம். இதழ்கள் யாரைச் சென்றடைவதை நோக்கமாகக் கொண்டு வெளிவருகின்றனவோ அந்த அடிப்படையிலும் வகைப்படுத்தலாம். இதழ்களின் விற்பனை அளவைக் கொண்டும் வகைப்படுத்தலாம். தமிழ் இலக்கிய வடிவங்களில் எந்தவடிவம் தாங்கி இதழ் வெளி வருகிறது என்பதைக் கொண்டும் இதழ்களை வகைப்படுத்தலாம்.

இதழ்களை வகைப்படுத்திக் காண்பதன் நோக்கமே இதழ்கள் பற்றிய தெளிவான அறிவைப் பெறுவதற்காக எனலாம். மொத்தமாக அனைத்து இதழ்களின் திறத்தையும் அறிவதைவிட வகைப்படுத்திப் பார்த்தால் திறம் எளிதில் விளங்கும். எனவே தமிழ் இதழ்களின் வகைகளை இங்கே காண்போம்.

## கால அடிப்படைப் பகுப்பு

இதழ்கள் வெளிவரும் காலத்தை அடிப்படையாகக் கொண்டு பகுக்கப்பட்டால் அது, கால அடிப்படைப் பகுப்பு எனப்படும்.

1. நாளிதழ்கள்
2. வார இதழ்கள்
3. திங்கள் இதழ்கள்
4. காலாண்டு இதழ்கள்
5. அரையாண்டு இதழ்கள்
6. ஆண்டு இதழ்கள்

### நாளிதழ்கள்

நாள்தோறும் வெளிவரும் இதழ்களை நாளிதழ்கள் என்கிறோம். ஒரு நாளில் இதழ் வெளிவரும் பொழுதை அடிப்படையாகக் கொண்டு இதழைக் காலை இதழ், மாலை இதழ் என்று பிரிக்கலாம்.

1882 இல் வார இதழாகத் தொடங்கப்பட்ட சுதேசமித்திரன் 1893 இல் வாரம் இருமுறை இதழாக வெளிவந்தது. 1897 இல் அதுவே வாரம் மும்முறை இதழாகி 1904 பிப்ரவரி ஐந்தாம் நாள்முதல் நாளிதழாக வெளிவந்தது. இவ்விதழ் அரசியல் சார்பு இதழாக வெளிவந்தது.

1917 ஆம் ஆண்டில் நீதிக் கட்சியினர் திராவிடன் என்னும் நாளிதழைத் தொடங்கினர். 1917ஆம் ஆண்டு திசம்பர் ஐந்தாம் நாள் முதல் 'தேசபக்தன்' என்னும் நாளிதழ் வெளிவந்தது. இதன் ஆசிரியர் திரு.வி.கலியாண சுந்தரனார் ஆவார். 1934ஆம் ஆண்டு சதானந்தத்தால் தினமணி நாளிதழ் தொடங்கப்பட்டுள்ளது. 1942இல் தந்தி என்ற பெயரில் தினத்தந்தி, நாளிதழாக வெளிவந்துள்ளது. 1949இல் பேரறிஞர் அண்ணாவை ஆசிரியராகக் கொண்டு மாலைமணி என்னும் நாளிதழ் வெளிவந்துள்ளது. 1951இல் திருவனந்தபுரத்திலிருந்து தினமலர் வெளிவந்துள்ளது. இவை தவிரவும் நவசக்தி, தினசரி, நாத்திகம், முரசொலி, நவ இந்தியா, மதுரைமணி, அறமுரசு, தீக்கதிர், விடுதலை, தென்னகம், அலைஓசை, நவமணி, சமநீதி, அன்னைநாடு, செய்தி, இனமணி, தினத்தூது முதலியவை நாளிதழ்களாக வெளி வந்துள்ளன.

மாலைமுரசு, மாலைமலர், மக்கள் குரல், தமிழ்முரசு, மாலைக் கதிர் முதலானவை மாலை இதழாக வெளிவருகின்றன.

வீரகேசரி, தினகரன் முதலானவை இலங்கையிலிருந்து நாளிதழாக வெளிவருகின்றன.

## வாரஇதழ்கள்

வாரந்தோறும் வெளிவரும் இதழ்கள் வார இதழ்கள் எனப்படும். ஒரு வாரம் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை ஒட்டுமொத்தமாகவும், இன்னும் பிற சுவையான நிகழ்ச்சிகளுடனும் வார இதழ்கள் வெளியிடுகின்றன. குமுதம், வாராந்தரி ராணி, கல்கண்டு, ஆனந்தவிகடன், கல்கி, குங்குமம், ஜூனியர் விகடன், தராசு, முத்தாரம், விசிட்டர், விசிட்டர் லென்ஸ், தேவி, மருதாணி, சாம்பியன், பாக்யா, ஐஸ்வர்யா, தமிழ் அரசி, ரிப்போர்ட்டர், சிநேகிதி போன்றவை வார இதழ்களாக வந்து கொண்டிருக்கின்றன.

### ✦ குமுதம்

கல்வித் தந்தை அழகப்பச்செட்டியாரின் முயற்சியால் 1947 இல் குமுதம் இதழ் தொடங்கப்பட்டது. அகமும் புறமும் அன்று முதல் இன்றுவரை ஒன்றுபோல் அமைந்து வருவது இதழின் தனிச் சிறப்பாகும். தமிழ் வார இதழ்களின் விற்பனையில் முதலிடம்

பெறுவது குமுதமே. பல்வேறுபட்ட செய்திகள் குவியலாகவே குவிக்கப்பட்டிருக்கும் குமுதத்தின் அழகே தனிதான்.

**✦ வாராந்தரி ராணி**

குமுதத்திற்கு அடுத்த இடத்தில் 'ராணி' இடம் பெற்றுள்ளது. 1960 இல் தோற்றுவிக்கப்பட்ட இவ்விதழ் குடும்பப் பத்திரிகையாக வெளி வருகிறது. இவ்விதழ் தமிழ் மொழிக்குத் தனி இடம் கொடுத்துத் தமிழர்களையும் கௌரவப்படுத்துகிறது.

**✦ கல்கண்டு**

1948 இல் தமிழ்வாணனால் உருவாக்கப்பட்ட இவ்விதழ் சமுதாயம், அரசியல், வெளிநாட்டுச் செய்திகள், சீர்திருத்தக் கருத்துகள் முதலியவற்றை வெளியிடுகிறது. தமிழ்வாணனுக்குப் பிறகு தற்பொழுது லேனா தமிழ்வாணன் இவ்விதழைத் தொடர்ந்து நடத்தி வருகிறார்.

**✦ ஆனந்த விகடன்**

1928 இல் வாசன் ஆனந்த விகடனை விலைக்கு வாங்கினார். மாத இதழாக வெளிவந்து கொண்டிருந்த இவ்விதழ், பின்னர் மாதம் இரு முறை இதழாக மாறித் தற்பொழுது வார இதழாகவே சிறந்த நகைச்சுவையுடன் வந்துகொண்டிருக்கிறது. குறிப்பிடத்தக்க பொழுது போக்கு இதழாக ஆனந்த விகடன் விளங்கி வருகிறது. தற்பொழுது இதன் வடிவத்தில் மாற்றம் ஏற்பட்டுள்ளது.

**✦ கல்கி**

1941 இல் மாதத்திற்கு இருமுறையாக வந்த கல்கி, இன்று வார இதழாக வந்து கொண்டிருக்கின்றது. தமிழ்ப்பற்றையும், தேசிய உணர்வையும் வளர்க்கும் வகையில் இவ்விதழ் வெளிவந்து கொண்டிருக்கின்றது. 'கல்கி' கிருஷ்ணமூர்த்தியை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த இவ்விதழ் அவரது மறைவுக்குப் பிறகு அவரது மகன் இராஜேந்திரனை ஆசிரியராகக் கொண்டு வெளிவருகிறது. தற்பொழுது இதன் ஆசிரியர் பொறுப்பினை இலட்சுமி நடராஜன் ஏற்று நடத்துகிறார்.

**மாத இதழ்கள்**

ஒவ்வொரு மாதமும் வெளிவரும் இதழ்களை மாத இதழ்கள் என்கிறோம். கலைமகள், அமுதசுரபி, வாழும் தமிழ் உலகம், ஓம் சக்தி, மஞ்சரி, அணுவிரதம், மணி விளக்கு, மருத மலர், மின்மினி, முதற்சங்கு, முகம், முல்லைச்சரம், முழக்கம், மெட்டி, வசந்தம்,

தமிழ்ப்பணி, தமிழ்ப் பாவை, துளிர், நவரத்தினம், நாணயம், பாரதமணி, இந்து பூமி, பொய்யா விளக்கு, பூக்கூடை, புதுமை, கணையாழி, கவிமலர், கவிஅமுது, கற்பகம், குலமகள், ஞானவிரதம், அரும்பு, அருட்பெருஞ்ஜோதி, ஆசிரியர் குரல், தேன்மழை, ஜனநாயகம், மக்கள் செங்கோல், அரசுஊழியர் இவ்வாறு பல நூறு இதழ்கள் மாத இதழ்களாக வருகின்றன. இவற்றில் பல இதழ்கள் நின்றுவிட்டன. ஒரு சில மட்டுமே தொடர்ந்து வந்து கொண்டிருக்கின்றன.

## காலாண்டு இதழ்கள்

மூன்று மாதங்களுக்கு ஒருமுறை வெளிவரும் இதழ்கள் காலாண்டு இதழ்கள் எனப்படும். தஞ்சை, தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் சார்பில் 'த மிழ்க்கலை' இதழ் வெளிவருகிறது. சென்னையிலிருந்து 'மையம்' என்னும் காலாண்டு இதழ் வெளிவருகிறது. உரத்த சிந்தனை, மாண வர் தியானக் குறிப்பு போன்ற இதழ்கள் காலாண்டு இதழ்களாகும். மேலும் களஞ்சியம், கனவு, காலச்சுவடு, செந்தமிழ், தமிழியம், களம், திசைநான்கு, நாட்டுப்புறவியல், முன்றில், விருட்சம், வைகறை, அரிமா, நோக்கு, தீராநதி முதலியவையும் காலாண்டு இதழ்களாக வெளிவருகின்றன. காலச்சுவடு தற்பொழுது திங்கள் இதழாக வெளிவருகிறது.

## அரையாண்டு இதழ்கள்

ஆறு மாதங்களுக்கு ஒரு முறை வெளிவரும் இதழ்களை அரையாண்டு இதழ்கள் என்போம். டாக்டர் பொற்கோ அவர்களால் வெளியிடப்படும் 'புலமை' 'நுண்கலை', என்னும் இதழ்கள் ஆராய்ச்சி தொடர்பான இதழ்களாக வெளிவருகின்றன. இவை ஆய்வாளர்கள் மத்தியில் நல்ல வரவேற்பைப் பெற்ற இதழ்களாகக் கருதப்படுகின்றன.

## ஆண்டு இதழ்கள்

ஆண்டுக்கு ஒரு முறை வெளிவரும் இதழ்கள் ஆண்டு இதழ்கள் எனப்படும்.

அமுத சுரபி, கலைமகள்,கல்கி, விஜய பாரதம், ஓம்சக்தி முதலான இதழ்கள் தீபாவளி மலர் எனத் தனி இதழ் வெளியிடுகின்றன. தினத்தந்தி, தினகரன் முதலானவை தொழில் மலரை ஆண்டுதோறும் வெளியிடுகின்றன. மாணவர் மலர், மருத்துவ மலர் முதலியவற்றைத் தினமணி ஆண்டு தோறும் வெளியிடுகிறது. பாம்பு பஞ்சாங்கம் முதலியன ஆண்டு இதழ்களாக வெளிவருகின்றன. கல்லூரிகள், பள்ளிகள் வெளியிடும் ஆண்டு மலர்களையும் ஆண்டு இதழ்களாகக் கருதலாம்.

## பொருள்வகைப் பகுப்பு

இதழ்கள் அவை தாங்கிவரும் பொருளின் அடிப்படையிலும் பகுக்கப்படுகின்றன. அவ்வாறு பகுக்கப்படும் வகைகளை இப்பகுதியில் காண்போம்.

1. சமய இதழ்கள்
2. சமூக இதழ்கள்
3. அறிவியல் இதழ்கள்
4. இலக்கிய இதழ்கள்
5. சோதிட இதழ்கள்
6. மருத்துவ இதழ்கள்
7. அரசியல் இதழ்கள்

### சமய இதழ்கள்

தமிழகத்தில் பலராலும் பின்பற்றப்படும் சமயங்களாக இந்து சமயம், கிறித்தவ சமயம், இசுலாமிய சமயம் என்னும் மூன்று சமயங்களையும் குறிப்பிடலாம். இந்தச் சமயங்கள் தங்கள் சமயக் கருத்துகளை மக்களுக்குப் பரப்புவதற்காக இதழ்களைத் தொடங்கியுள்ளன.

### + இந்து சமய இதழ்கள்

சைவம், வைணவம் என்னும் இந்து சமயப் பிரிவைச் சேர்ந்த இதழ்களும் இந்து சமய இதழ்களாகவே கருதப்படும். 1883ஆம் ஆண்டு 'இந்துமத சீர்திருத்தவாதி' என்னும் இதழ் வெளிவந்துள்ளது. 1887ஆம் ஆண்டில் 'எம்பதம் ஆண்டவன்' என்ற வார இதழ் திருச்சியிலிருந்து வந்துள்ளது. 1905இல் வெளிவந்த 'ஆசார சீர்திருத்தம்' என்னும் இதழ் அனைவருக்கும் இலவசமாகக் கொடுக்கப்பட்டுள்ளது. இந்து அறநிலையத்துறை, 'திருக்கோயில்' என்னும் இதழை வெளியிடுகிறது. 'வைதீக சித்தாந்த தீபிகை' என்னும் மாத இதழ் 1890இல் வந்துள்ளது. 1891இல் 'சிவரத்னமகுடம்', 1894இல் 'சண்முக விலாசம்', 1895இல் 'சோமரவி' என்னும் காலாண்டு இதழ்கள் வெளி வந்துள்ளன. 1891இல் 'ஞானமித்திரன்' என்னும் இதழும், 1898இல் 'வேதாந்த தீபிகை' என்ற இதழும், 1911இல் 'தர்மவர்த்தினி' என்னும் இதழும் வெளியாகியுள்ளன. 'திராவிடப் பாகவதனும் சைவனும்' (1914), 'இராமானுசன்' (1918), 'மாதவமித்திரன்' (1929) 'சைவம்' (1915), 'பக்தன்' (1951), 'நந்தி' (1964) ஆகிய இதழ்களும் இந்துமத இதழ்களாக வெளிவந்துள்ளன. இவை தவிரவும் 'ஞானசித்தி' 'அரிசமய திவாகரம்', 'அரிதாசன்', 'அருணகிரி', 'அருள்', 'ஆத்திகமித்திரன்', 'இந்து

அபிமானி', 'இந்து சாதனம்', 'இந்து தருமம்', 'இந்து பாலபோதினி', 'இந்து மதாபிமானி', 'உதயபானு', 'சைவபரிபாலனம்' 'சைவபோதினி', 'தர்மசோதி', 'தர்மபோதினி', 'தார்மீக இந்து', 'துவைதபிரபாவம்', 'வீரசைவம்', 'வைதீக தர்மவர்த்தினி','வைதீக மாத தீபிகை', 'நரசிம்மப்பிரியா' 'இராமானுச சித்தாந்த வைஜயந்தி', 'சைவ வாரிய சம்போதினி', 'பிறைசூடி', 'பிரணவமாயர்', 'சாதனா', 'சனாதன சாரதி', 'சிவசக்தி', 'திருக்கயிலை', 'வாலைகுரு', 'வீரமணிகண்டன்', 'தர்ம சக்கரம்', 'காமகோடி', 'காமகோடி பிரதீபம்', 'ஜெகத்குரு', 'ரெங்கநாத பாதுகா', 'சங்கரகிருபா', 'இந்துமித்திரன்', 'தேவஸ்தானம்', 'ஆத்மிக ஆசாரம்', 'இந்து சமய செய்தி', 'ஓங்காரம்', 'கலாச்சாரம்', 'வைணவன்', 'இந்து பூமி', 'விஜயபாரதம்', 'பாரதத்தாய் ', ' 'தேவி பாகவதம்', 'இந்து 'சக்தி', 'சக்திமாலை', 'சக்தி ஒளி', 'சித்தாந்தம்' முதலிய இதழ்கள் வெளிவந்துள்ளன.

## ✦ கிறித்தவ சமய இதழ்கள்

கிறித்தவ சமயத்தைப் பரப்புவதற்காகவும், கிறித்தவ வேதக் கருத்துகளைத் தெரிவிப்பதற்காகவும் வெளியான இதழ்கள் கிறித்தவ சமய இதழ்கள் எனப்படும். 1831இல் கிறித்தவ சமய இதழாகத் 'தமிழ் மேகசின்' என்னும் இதழ் வெளியாகியுள்ளது. இதனைச் சென்னைக் கிறித்தவ சமய சங்கத்தார் நடத்தியுள்ளனர். 1840இல் 'மிஷனரி கிளீனர்' என்னும் இதழ் வந்துள்ளது. 1842இல் மாதம் இருமுறை இதழாக 'அரோரா' என்ற இதழ் வந்துள்ளது. 'டமில் குவார்ட்டர்லி ரிப்போர்ட்டர்' என்ற இதழ் 1854இல் அமெரிக்கன் அறப்பணியாளர் வெளியீடாக மதுரையிலிருந்து வெளிவந்துள்ளது. 'சுவிசேச பிரபாவ விளக்கம்' என்னும் இதழ் 1841இல் வெளிவந்துள்ளது. 'தினவர்த்தமானி' என்னும் இதழ் 1855ஆம் ஆண்டிலும், 'பால்யநேசன்' என்னும் இதழ் 1859ஆம் ஆண்டிலும் 'தேசோபகாரி' 1860ஆம் ஆண்டிலும், 1862ஆம் ஆண்டில் 'சத்திய வேதக் கொடி' என்னும் இதழும் வெளியாகியுள்ளன. 1863ஆம் ஆண்டில் 'திருச்சபைப் பத்திரிகை' என்னும் இதழும் 1865இல் 'விவேக விலாசம்' என்னும் இதழும் வெளியாகியுள்ளன. மேலும் 'தேசாபிமானி' (1867), 'நற்போதம்' (1870), 'சத்தியவர்த்தமானி' (1870) 'சிநேகபோதன்' (1875), 'தீர்க்கதரிசன வர்த்தமானி' (1884) 'கிறித்தவன்' (1890), 'வேதவிளக்கன்' (1890), 'தமிழ்ச்சபை தீபிகை' (1915), 'குருசடியின் குரல்' (1928), 'ஞானதூதன்' (1928), 'கத்தோலிக்கசபை' (1940), 'உயிர் மீட்சி' (1950), ஜெபகிறிஸ்து (1955), 'சத்தியம்' (1961), 'மீட்பின் தூதன்' (1964) முதலான இதழ்களும் வந்துள்ளன. தற்போதும் பல்வேறு கிறித்தவ இதழ்கள் வந்து கொண்டிருக்கின்றன.

## ✦ இசுலாமிய சமய இதழ்கள்

'இசுலாம் எங்கள் வழி, இன்பத் தமிழ் எங்கள் மொழி' என்று கருதிய தமிழ் இசுலாமியர்கள் இதழ்களைத் தொடங்கினர். 1882இல் 'முசுலிம் நேசன்' என்னும் இதழ் இலங்கையில் வெளிவந்துள்ளது. வாரம் இருமுறை வெளிவந்த இவ்விதழின் ஆசிரியர் சித்திக் லெப்பை மரக்காயர் ஆவார். மலேசியாவில் உள்ள பினாங்கில் 1888ஆம் ஆண்டில் 'ஞானாசிரியன்' என்ற நாளிதழ் வெளிவந்துள்ளது. இதன் ஆசிரியர் கே.கே. சம்சுக்கனி இராவுத்தர் ஆவார். 1905இல் சிங்கப்பூரிலிருந்து 'றபீகுல் இசுலாம்' என்ற இதழ் சின்ன வாப்பா என்பாரை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்துள்ளது. 1906இல் 'லிவாவுல் இசுலாம்' என்ற இதழும் 'முசுலிம் தூதன்' என்ற இதழும் வெளிவந்துள்ளன. 1909இல் 'இசுலாம் நேசன்' என்னும் இதழும் 1910இல் 'அஜாயிபுல் அஃலம்' என்ற இதழும் வெளியாகியுள்ளன. 1919 இல் 'தத்துவ இசுலாம்', 1920இல் 'தாருல் இசுலாம்' ஆகிய இதழ்கள் வெளியாகியுள்ளன. 1926இல் 'முசல்மான்' என்ற இதழும் 1927இல் 'இசுலாம்' என்ற இதழும் 1930இல் 'ஹிபாஜத்துல் இசுலாம்' என்னும் இதழும் 1935இல் 'சத்திய இசுலாம்' என்னும் இதழும் வெளி வந்துள்ளன. மேலும் 'உஜ்ஜத்', 'மணிவிளக்கு' 'ஜன்னாத்', 'முசுலிம் முரசு', 'பிறை', 'குர்ஆனின் குரல்', 'ரக்மத்', 'சிராஜ்', 'முபாரக்', 'பாத்திமா', 'பரீதா', 'உரிமைக்குரல்', 'நம்குரல்', 'முசுலிம் குரல்' முதலான இதழ்கள் தற்போதும் வந்துகொண்டிருக்கின்றன.

மேற்கூறிய மதச் சார்புடைய இதழ்கள் தவிர, புத்த மதம் சார்ந்த இதழ்களும் சமண சமயம் சார்ந்த தமிழ் இதழ்களும் வந்துள்ளன. 'முக்குடை', 'நல்லறம்', 'மார்க்கபந்து', 'அணுவிரதம்', 'தருமசீலன்', 'ஆத்ம தர்மம்', முதலியவை சமண சமய இதழ்கள்.

'புத்தர் அருளறம்' என்னும் இதழ் கோலாரிலிருந்து வெளி வந்துள்ளது.

### சமூக இதழ்கள்

தமிழ்நாட்டில் பல்வேறு சாதிகள் உள்ளன. ஒவ்வொரு சாதியினரும் தங்கள் உயர்வைக் காட்டுவதற்காகவும் தங்கள் சாதியினருக்குத் தகவல்களைத் தெரிவிப்பதற்காகவும் பல்வேறு இதழ்களை நடத்தி வருகின்றனர். அவற்றை இப்பகுதியில் காண்போம்.

'சான்றோர்குல போதினி' என்னும் இதழ் 1909இல் தஞ்சையிலிருந்து வெளிவந்துள்ளது. 1910இல் 'தட்சிணதீபம்' என்ற இதழும் 1930இல் 'தட்சிண வீரன்' என்னும் இதழும், 1919இல் 'நாடார்குல மித்திரன்' என்ற இதழும் 1926இல் 'கிராமணி குலம்' என்ற இதழும் வெளி வந்துள்ளன. 1949இல் 'மகாசனம்' என்னும் இதழ் வெளிவந்துள்ளது.

மேலும் 'நாடார் நண்பன்', 'பாண்டியகுல தீபம்', 'நாடார்குல தீபம்', 'சமூக ஒற்றுமை', 'உறவுமலர்' முதலான இதழ்களும் நாடார் சமூக இதழ்களாக வெளிவந்துள்ளன.

1914இல் 'நகரத்தார்' என்னும் இதழும் 1923இல் 'வைசியன்' என்னும் இதழும், 1955இல் 'ஆரிய வைசியன்' என்னும் இதழும் 1924இல் 'வணிகமித்திரன்' என்னும் இதழும் 1935இல் 'செட்டியார் குல மித்திரன்' என்னும் இதழும் வெளிவந்துள்ளன.

1918இல் 'மீனவர் ஓசை' என்னும் இதழும் 1921இல் 'செங்குந்தன்' என்னும் இதழும் 1928 இல் 'செங்குந்தமித்திரன்' என்னும் இதழும் 1924இல் 'குலாலமித்திரன்' என்னும் இதழும் வெளிவந்துள்ளன. 1923இல் 'மறவர் குல தூதன்', 1928இல் 'தேவர் குரல்' 1930இல் 'அகம்படியார் குலநேசன்' ஆகிய இதழ்கள் வந்துள்ளன. 'முத்துராஜ மகாஜன சங்கப் பத்திரிகை' என்னும் இதழ் 1922இல் வெளிவந்துள்ளது. 'சௌராஷ்டிரமணி' (1952), 'வன்னியமன்றம்' (1966), 'யாதவச் சுடர்' (1980), 'கருணீக மித்திரன்' (1926), 'அந்தணர்' (1948), 'ரெட்டிகுலம்' (1929), 'யாதவமித்திரன்' (1929), 'சாலியர் நேசன் (1937), 'ஆதி திராவிட மித்ரன்' (1933), 'நாயுடு சமுதாயம்' (1973) முதலான இதழ்களும் வந்துள்ளன.

## அறிவியல் இதழ்கள்

தமிழ் மக்களுக்கு அன்றாடம் நிகழும் அறிவியல் நிகழ்வுகளை அறிவிப்பதற்காகவும் அறிவியல் விழிப்புணர்வை ஏற்படுத்துவதற்காகவும் அறிவியல் இதழ்கள் தோன்றின. அவ்வகையில் 1917இல் வெளிவந்த 'தமிழர்நேசன்' என்னும் இதழ் அறிவியல் செய்திகளை வழங்கிய இதழ் ஆகும். 1948இல் கோவையில் தொடங்கப்பட்ட 'கலைக்கதிர்' என்னும் அறிவியல் இதழ் தற்போதும் வெளிவருகிறது. 1962இல் 'தோல் விஞ்ஞானம்' என்னும் இதழும் 1965இல் 'இளம் விஞ்ஞானி' என்னும் இதழும் 1979இல் 'களஞ்சியம்' என்னும் இதழும் வெளிவந்தன. இவை தவிரவும் 'விஞ்ஞானச்சுடர்', 'துளிர்', 'அறிக அறிவியல்' முதலான அறிவியல் இதழ்கள் தற்போதும் வெளிவருகின்றன. 'தமிழ்க் கம்ப்யூட்டர்' முதலான கணினி அறிவியல் இதழ்களும் வெளிவருகின்றன. 1892இல் வெளிவந்த விவேக சிந்தாமணி என்னும் இதழில் அறிவியல் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

## இலக்கிய இதழ்கள்

கவிதை, கதை, புதினம்; திறனாய்வு முதலான இலக்கியப் படைப்புகளை வெளியிடுவதையும் பழந்தமிழ் இலக்கியங்களை வெளிப்படுத்தவும் பல இலக்கிய இதழ்கள் வெளிவந்துள்ளன.

1902ஆம் ஆண்டில் மதுரையிலிருந்து வெளிவந்த 'செந்தமிழ்' என்னும் இதழ், மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் வெளியீடாக வந்துள்ளது. இவ்விதழ் தற்போதும் வெளிவருகிறது. கரந்தைத் தமிழ்ச் சங்க இதழான 'தமிழ்ப் பொழில்' (1925) என்னும் இதழும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் 'செந்தமிழ்ச் செல்வி' (1923) என்னும் இதழும் தற்போதும் வெளிவரும் இலக்கிய இதழ்கள் ஆகும். சி.பா. ஆதித்தனார் 1942இல் 'தமிழன்' என்னும் இலக்கிய இதழை நடத்தியுள்ளார். அவர் தொடங்கிய இயக்கமான நாம் தமிழர் இயக்கத்தின் இதழாகத் 'தமிழ்க்கொடி' என்னும் இதழையும் நடத்தியுள்ளார். 'மணிக்கொடி' (1933), 'காதம்பரி' (1948) 'சரஸ்வதி', (1955) 'தீபம்' (1965), 'எழுத்து' (1959) ஆகியவையும் இலக்கிய இதழ்களாக வெளிவந்துள்ளன.

தற்போதும் கணையாழி, செம்மலர், தாமரை, காலச்சுவடு முதலான இலக்கிய இதழ்கள் வந்துகொண்டிருக்கின்றன.

## சோதிட இதழ்கள்

சோதிடம் தொடர்பான இதழ்களும் வந்திருக்கின்றன. 1923இல் 'சோதிட கலாநிதி' என்னும் இதழ் வெளிவந்திருக்கிறது. 1930இல் 'சோதிட சந்திரிகா' என்னும் இதழும் 1949இல் 'மாதசோதிடம்' 'சோதிட போதினி' என்னும் இதழ்களும் 1953இல் 'சோதிட மணி' என்னும் இதழும் வெளிவந்துள்ளன. 1962இல் 'மீனம்', 'ஸ்ரீசிந்தாமணி சோதிட மலர்' ஆகிய இதழ்கள் வந்துள்ளன. இவைதவிரவும் 'விதி', 'தலையெழுத்து', 'உங்கள் எதிர்காலம்', 'எதிர்காலம்', 'ராசி', 'பால சோதிடம்', 'ஸ்ரீசக்கரவாணி', 'சோதிடக் கடல்' முதலான இதழ்களும் வெளிவந்துள்ளன.

## மருத்துவ இதழ்கள்

அறிவியல் துறை சார்ந்த மருத்துவம் தொடர்பான இதழ்கள் பலவும் வெளிவந்திருக்கின்றன. 1870இல் 'அகத்திய வர்த்தமானி' என்னும் இதழ் வெளிவந்துள்ளது. 1908இல் 'ஆரோக்கியவழி', 'ஆயுர் வேத பாஸ்கரன்' ஆகிய இதழ்கள் வெளிவந்துள்ளன. 'வைத்திய கலாநிதி' என்னும் இதழ் 1914 இல் வெளிவந்துள்ளது. 1916இல் 'சுகாபி விருத்தினி' என்னும் இதழ் புதுச்சேரியிலிருந்து வெளி வந்துள்ளது. 1920இல் 'சித்தர்திருவுள்ளம்' என்னும் இதழும் 1922இல் 'தமிழ் வைத்தியக் களஞ்சியம்' என்னும் இதழும் 1923இல் 'தன்வந்திரி' என்னும் இதழும் 'ஆயுர்வேதம்' என்னும் இதழும் வெளிவந்துள்ளன. 1926இல் 'செல்வக்களஞ்சியம்', 1928இல் 'மருத்துவன்', 'வைத்தியக் களஞ்சியம்' (1929), 'ஆரோக்கிய தீபிகை' (1929), 'ஆரோக்கிய சிந்தாமணி' (1930), 'வைத்திய போதினி' (1930) 'சித்தர் களஞ்சியம்'

*(1934), 'சித்தன்' (1935), 'வைத்திய சந்திரிகை' (1938), 'தமிழ் மருத்துவப் பொழில்' (1941), 'அகஸ்தியன்' (1941), 'ஹோமியோபதி மித்ரன்' (1950), 'ஆரோக்கிய மார்க்கம்' (1956) 'ஆரோக்கியம்' (1962) முதலான இதழ்கள் வந்துள்ளன. தற்போதும் 'மூலிகைமணி' (1964), 'சித்தமருத்துவம்,' 'அலோபதி', 'யுனானி', 'ஹெல்த்' முதலான மருத்துவ இதழ்கள் வருகின்றன. தினமணி ஆண்டுதோறும் மருத்துவ மலர் என்னும் சிறப்பிதழை வெளியிடுகிறது.*

## அரசியல் இதழ்கள்

*அரசியல் கட்சிகளாலும், கட்சி சார்ந்தவர்களாலும் கட்சிச் செய்திகளைத் தெரிவிப்பதற்கு இதழ்கள் தொடங்கப்பட்டுள்ளன. இவற்றை இயக்க இதழ்கள் என்றும் குறிப்பிடுவர்.*

### ✦ காங்கிரஸ்

*1958இல் பாரதம் என்னும் இதழ் காங்கிரஸ் கட்சி இதழாக வெளி வந்துள்ளது. 1959இல் 'சர்வாதிகாரி' என்னும் இதழும், 1961இல் 'குறிஞ்சி' என்னும் இதழும் 1962இல் 'தேசிய முரசு' என்னும் இதழும் 1966இல் 'சிகப்பு நாடா' என்னும் இதழும் வெளிவந்துள்ளன. 'காங்கிரஸ் கர்சனை' (1967), 'கடலோசை' (1967) 'காங்கிரஸ் முரசு' (1967) முதலான இதழ்கள் வெளிவந்துள்ளன. இவைதவிரவும் 'செய்தி', 'காங்கிரஸ்', 'விடிவெள்ளி', முதலான இதழ்களும் வெளி வந்துள்ளன.*

### ✦ கம்யூனிஸ்ட்

*கம்யூனிஸ்ட் இயக்க நாளிதழாக 1937இல் 'ஜனசக்தி' வெளி வந்தது. 1963இல் வெளிவந்த தீக்கதிர் தற்போதும் வெளிவருகிறது. செம்மலரும் தாமரையும் பொதுவுடைமைச் சிந்தனை கலந்த இலக்கிய இதழ்களாகத் தற்போதும் வெளிவருகின்றன. கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து பிரிந்து பல்வேறு கட்சியினராக விளங்குவோரும் பல இதழ்களை நடத்துகின்றனர். 'புதிய ஜனநாயகம்', 'தமிழர் கண்ணோட்டம்', முதலானவை இவர்கள் நடத்தும் இதழ்கள்.*

### ✦ திராவிட முன்னேற்றக் கழகம்

*திராவிடர் கழக இதழ்கள் அனைத்தும் 'சமுதாய மறுமலர்ச்சியும் இதழ்களும்' என்னும் பிரிவில் விளக்கப்பட்டுவிட்டதால் இங்கே குறிப்பிடவில்லை. 1949இல் அண்ணாவை ஆசிரியராகக் கொண்டு 'மாலைமணி' என்னும் இதழ் வெளிவந்தது. 1952இல் 'திராவிடநாடு' என்னும் இதழும் 1954இல் 'முரசொலி' என்னும் இதழும் வெளி வந்தன. முரசொலி தொடர்ந்து வெளிவருகிறது. மேலும் 'நம்நாடு',*

'போர்வாள்', 'தென்றல்', 'மன்றம்' முதலான திராவிட முன்னேற்றக் கழக இதழ்களும் வெளிவந்துள்ளன.

### ✦ அனைத்திந்திய அண்ணாதிராவிட முன்னேற்றக் கழகம்

'தென்னகம்', 'சமநீதி', 'அண்ணா', 'நீட்டோலை' முதலான இதழ்கள் அண்ணா திராவிட முன்னேற்றக் கழக இதழ்களாக வெளிவந்துள்ளன. 'நமது எம்ஜிஆர்' என்னும் இதழ் தற்போதும் வெளிவருகிறது.

தமிழரசுக் கழக இதழாகச் செங்கோலும், நாம் - தமிழர் இயக்க இதழாகத் தமிழ்க் கொடியும் வெளிவந்துள்ளன. பாட்டாளி மக்கள் கட்சி இதழாகத் தினப்புரட்சியும், மறுமலர்ச்சி திராவிட முன்னேற்றக் கழக இதழாகச் சங்கொலியும் வெளிவருகின்றன. தலைநகர்த் தமிழ்ச் சங்கத்தின் இதழாக மக்கள் செங்கோல் வெளிவருகிறது.

### மகளிர் இதழ்களும் சிறுவர் இதழ்களும்

மகளிருக்கு மட்டுமான தகவல்களை உள்ளடக்கியதாய் மகளிர் இதழ்கள் வெளிவந்துள்ளன. 1860இல் முதல் மகளிர் இதழ் வெளி வந்துள்ளது. அவ்விதழின் பெயர் 'அமிழ்த வசனி' என்பதாகும். 1883இல் 'சுகுண போதினி' என்னும் இதழ் சென்னையிலிருந்து மாதமிருமுறை இதழாக வெளிவந்துள்ளது. 1899 இல் 'மாதர் மனோ ரஞ்சனி' என்ற மாத இதழ் வந்துள்ளது. 'மாதர்மித்திரி' (1887), 'பெண் மதிபோதினி', (1891), 'மகாராணி' (1887), 'சக்கரவர்த்தினி' (1905), 'தமிழ்மாது' (1906), 'பெண்கல்வி' (1912), 'சிந்தாமணி' (1924), 'தமிழ் மகள்' (1926), 'மறுமணம்' (1936), 'தமிழரசி' (1936) முதலான மகளிர் இதழ்கள் வெளிவந்துள்ளன. தற்போதும் 'மங்கை', 'மங்கையர் மலர்', 'சிநேகிதி' 'கோகுலம் கதிர்' முதலான மகளிர் இதழ்கள் வெளி வருகின்றன.

### சிறுவர் இதழ்கள்

குழந்தைகளுக்கு விருப்பமான கதைகள், பாடல்கள் முதலானவற்றைக் கொண்டு குழந்தைகள் இதழ்கள் வெளிவந்துள்ளன. 1840இல் 'பாலதீபிகை' என்னும் இதழ் நாகர்கோவிலிலிருந்து வெளி வந்துள்ளது. 'சிறுபிள்ளையின் நேசத்தோழன்' என்னும் இதழ் 1841இல் வெளிவந்துள்ளது. 1959இல் 'பாலியர் நேசன்' என்னும் இதழும் 1905இல் 'பாலர் தூதன்' என்னும் இதழும் வெளிவந்துள்ளன. 'பாலியர் மித்ரன் (1911), 'பாலிய சஞ்சாரி' (1912), 'பாலவிநோதினி' (1918), 'பாலவித்யா' (1930), 'பாலசிந்தாமணி' (1935), 'சிறுவர் அறிவுக்கதிர்' (1935), 'பாலபோதகன்' (1938), 'பாப்பா' (1941) 'அணில்'

*(1946), 'அம்புலிமாமா' (1947), 'வானவில்' (1948), 'சௌசௌ' (1948), 'மாணவர் விருந்து' (1949), 'சந்திர ஒளி' (1949), 'பேபி' (1949), 'டிங்பிங்' (1949), 'ஜில்ஜில்' (1949), 'ரயில்' (1949), 'சித்திரக்குள்ளன்' (1949), 'பாபுஜி' (1949), 'கண்ணன்' (1949), 'கிண்கிணி' (1949), 'பூஞ்சோலை' (1951), 'கதாமலர்' (1951), 'சாக்லெட்' (1952), 'பாலபாரதி' (1953), 'சிறுவர் முரசு' (1954), 'பால்கோவா' (1954), 'பொக்கிஷராணி' (1954), 'தமிழ்ச்சிட்டு' (1966), 'பூங்கா' (1967), 'பூந்தோட்டம்' (1967), 'பாலமித்ரா' (1978), 'ரத்னபாலா' (1978) முதலான சிறுவர் இதழ்கள் வெளியாகியுள்ளன. 'கோகுலம்' என்னும் திங்களிதழ் தொடர்ந்து வெளிவருகிறது. 'ராணி காமிக்ஸ்' என்னும் இதழும் படக்கதை இதழாகத் தொடர்ந்து வெளிவருகிறது.*

## விற்பனை அளவில் இதழ்கள்

*இதழ்கள் விற்பனை ஆகும் எண்ணிக்கையைக் கொண்டு இதழ்கள் வகைப்படுத்தப்படுகின்றன. மிகுதியாக விற்பனையாகும் இதழ்களைப் பேரிதழ்கள் என்றும் பிறவற்றைச் சிற்றிதழ்கள் என்றும் குறிப்பிடுவர். பேரிதழ்கள், சிற்றிதழ்கள் என்று குறிப்பிடப்படும் இதழ்கள் எல்லாம் பிற வகைப்பாடுகளிலேயே அடங்கிவிடும்.*

*தமிழ் இதழ்களில் காலையிலும் மாலையிலும் நாள்தோறும் வெளிவரும் இதழ்கள் பேரிதழ்கள் ஆகும். வார, மாத, காலாண்டு இதழ்களில் குமுதம், ராணி, ஆனந்த விகடன், குங்குமம், கல்கி போன்ற இதழ்கள் தொடர்ந்து விற்பனை அளவில் பேரிதழ்களாகத் திகழ்கின்றன. இவ்விதழ்களின் விற்பனை பெரும்பாலும் முகவர் வாயிலாகக் கடைகளில் நடைபெறுகிறது. சிற்றிதழ்கள் முகவர் மூலம் விற்கப்பட்டாலும் அவை பெரிதும் ஆண்டுச் சந்தா முதலான சந்தாக்களையே நம்பியிருக்கின்றன.*

## இலக்கிய வகைப்பாட்டு இதழ்கள்

*தற்காலத் தமிழ் இலக்கியம் பல்வேறு வகைப்பாட்டுள் அடங்குகிறது. அவற்றுள் கவிதை, சிறுகதை, புதினம், நாடகம் முதலியவை குறிப்பிடத்தக்கவை. இந்த இலக்கிய வடிவங்களைத் தாங்கியும் இதழ்கள் வந்துள்ளன. அவற்றை இப்பகுதியில் காண்போம்.*

## கவிதை இதழ்கள்

*கவிதைக்கென்றே இதழ்கள் வெளிவருகின்றன. அவ்வகையில் முதல் இதழாகச் 'சுப்பிரமணிய பாரதி கவிதா மண்டலம்' என்னும் இதழ் 1935இல் வெளிவந்துள்ளது. 1940இல் பாவேந்தர் பாரதிதாசனால் 'குயில்' என்னும் இதழ் நடத்தப்பட்டுள்ளது. 1963இல் 'ஊர்வலம்'*

என்னும் இதழும், 1964இல் 'கவிதை' என்னும் இதழும் 'நோக்கு' என்னும் இதழும் வெளியாகியுள்ளன. 'சுரதா' என்னும் கவிதையிதழ் 1966இல் வெளிவந்துள்ளது. 'கவிஞன்' என்னும் இதழ் 1966ஆம் ஆண்டு வெளிவந்துள்ளது. 'காவியப்பாவை' (1973), 'வண்ணங்கள்' (1972), 'வானம்பாடி' (1972) முதலான கவிதை இதழ்களும் வெளிவந்துள்ளன.

## புதின இதழ்கள்

புதின இதழாக 'ராணிமுத்து' என்னும் இதழ் திங்கள்தோறும் வெளிவருகிறது. 'மாலைமதி' 'குங்குமச்சிமிழ்', 'ஊதாப்பூ' 'உதயம்' முதலியவையும் புதினங்களை முழுமையாகவும் சுருக்கியும் வெளியிடுகின்றன. 'பாக்கெட் நாவல்' முதலான இதழ்களும் புதினங்களை வெளியிடுகின்றன.

## நாடக இதழ்கள்

நாடகங்களை வெளியிடுவதற்கென்றே வெளிவந்த இதழ்கள் நாடக இதழ்கள் என்னும் பிரிவில் அடங்கும். 'சபாநாயகன்', 'நாடகக் கலை', 'வெளிநாடக உலகம்' முதலான இதழ்கள் நாடக இதழ்களாக வெளிவருகின்றன.

இதழ் வகைகளில் இதுவரை நாம் பார்த்தவை தவிர வேறு பல வகைகளும் உள்ளன. அவ்வகை இதழ்களை இனிக் காண்போம். நாட்டுப்புறவியல் கருத்துகளைக் கொண்டவையாய் நாட்டுப் புறவியல் இதழ்கள் விளங்குகின்றன.

'நாட்டுப்புறவியல்', 'நாட்டார் வழக்காற்றியல்', 'தன்னானே' என்னும் இதழ்கள் இவ்வகையைச் சேர்ந்தவை ஆகும்.

'ஒலிம்பிக்', 'தமிழர் விளையாட்டு மடல்', 'விளையாட்டுக் களஞ்சியம்' என்பவை விளையாட்டு இதழ்கள் ஆகும். மேலும் தொழில் இதழ்கள், கூட்டுறவு இதழ்கள், நூலக இதழ்கள், கிராம நல இதழ்கள், பயண இதழ்கள், திரட்டு இதழ்கள், பன்மொழி இதழ் கள், ஆய்வு இதழ்கள், இல்ல இதழ்கள், திரைப்பட இதழ்கள் முதலான வகைகளிலும் தமிழ் இதழ்கள் வெளிவருகின்றன.

# 10. இதழ்களின் நிருவாகம்

இன்றைய உலகில் இதழ்களை நடத்துவது ஒரு சிறப்புமிகு தொழில் ஆகும். யார் வேண்டுமானாலும் இதழ்களை நடத்தலாம். வணிக நோக்கத்தோடு இதழ்களை நடத்துகின்றவர்களும் இலட்சிய நோக்கில் இதழ்களை நடத்துகின்றவர்களும் இருக்கின்றனர். நமது நாட்டில் இதழ்களைத் தொடங்கி, நடத்துவதற்குரிய வழிமுறைகளை வகுத்துள்ளனர். இதழ்களை நடத்த விரும்புகின்றவர்கள் அவற்றைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும். இதழ்களை நிருவாகம் செய்தல் என்பது தொடர் பணி. இதழைப் பதிவு செய்தல் முதலாகத் தொடங்கும் நிருவாகம், இதழ் வெளிவருவதுவரை தொடரும். அவற்றை இப்பகுதியில் காண்போம்.

## இதழ்களைப் பதிவு செய்தல்

புதிய நாளிதழ்களையும் பருவ இதழ்களையும் தொடங்குவதற்கு முதலில் அவற்றைப் பதிவு செய்து கொள்ள வேண்டும். அதற்குரிய சட்டப்படியான வழிமுறைகளைக் காண்போம்.

புதிய இதழைத் தொடங்க விரும்புபவர், எந்தப் பகுதியில் தனது இதழை நடத்தப் போகின்றாரோ அந்த மாவட்ட நீதிபதியிடமோ (District Magistrate), துணை வட்டார நீதிபதியிடமோ (Sup-Divisional Magistrate), பெரு நகர நீதிபதியிடமோ (Metropolitan Magistrate) குறிப்பிட்ட படிவத்தில் (Form) ஓர் உறுதிமொழியைக் (Declaration) கொடுக்க வேண்டும். அந்த விண்ணப்பப் படிவத்தில் தொடங்க விரும்பும் இதழின் பெயர், மொழி, வெளிவரும் கால அளவு (நாளிதழா, வார இதழா, திங்களிதழா என்பது போன்ற விவரம்), வெளியிடுபவர் முகவரி, அச்சிடுபவர் முகவரி, அச்சகம் பற்றிய விவரம் முதலியவைகளைக் குறிப்பிட வேண்டும். விண்ணப்பத்தை மாவட்ட நீதிபதி முன்னிலையில் கையெழுத்திட்டுக் கொடுக்க வேண்டும்.

இதழுக்கு வைக்க விரும்புகின்ற பெயருடன் சில மாற்றுப் பெயர்களையும் தர வேண்டும். குறைந்தது மூன்று பெயர்களையாவது குறிப்பிடுவது நல்லது. அவற்றில் ஏதாவது ஒரு பெயரை வைத்துக் கொள்ள அனுமதிப்பார்கள்.

## அனுமதி வழங்கும் முறை

ஓர் இதழைத் தொடங்க நீதிபதி அனுமதி வழங்குவதற்கு முன்னால், தில்லியிலிருக்கும் இந்தியாவின் செய்தித்தாள்கள் பதிவாளரோடு (Registrar of Newspapers) தொடர்பு கொண்டு, புதிதாக வெளியிட விரும்பும் பெயரிலோ, அதே போன்றோ, அதே மொழியிலோ, வேறு மொழிகளிலோ வேறு இதழ் பதிவு செய்யப் பெற்று வெளிவருகின்றதா என்பதை அறிந்து கொள்வார். செய்தித் தாள்கள் பதிவாளர் அலுவலகத்தில் நாடு முழுவதும் வெளிவரும் இதழ்கள் பற்றிய விவரங்களைக் கொண்ட பதிவேடு வைத்திருப்பார்கள். அதனோடு சரிபார்த்து, அப்படிப்பட்ட பெயரில் வேறு இதழ் இல்லை யென்றால், அந்தப் பெயரை ஏற்கலாமென்பதை நீதிபதிக்குத் தெரிவிப்பார்கள். அந்தப் பெயரில் வேறு இதழ்கள் இருந்தால் மாற்றுப் பெயர்கள் தரும்படி கேட்பார்கள்.

மாவட்ட நீதிபதி பெயர் பற்றிய ஒப்புதலைச் செய்தித்தாள்களின் பதிவாளரிடமிருந்து பெற்ற பின்னர், இதழினைத் தொடங்குவதற்கு அனுமதி கொடுப்பார். இந்த அனுமதியைப் பதிவாளருக்கும் தெரிவிப்பார்.

## வெளியீட்டு விதிமுறை

ஓர் இதழைத் தொடங்க அனுமதித்த பின், குறிப்பிட்ட காலத் திற்குள் இதழைத் தொடங்க வேண்டும். நாளிதழ்கள், வார இதழ்கள், வாரம் இருமுறை, வாரம் மும்முறை இதழ்கள் ஆகியவற்றை அனுமதி பெற்று ஆறு வாரங்களுக்குள் தொடங்க வேண்டும். பிற பருவ இதழ்களை அனுமதி பெற்ற மூன்று திங்களுக்குள் ஆரம்பிக்க வேண்டும். குறிப்பிட்ட காலத்திற்குள் இதழைத் தொடங்காவிட்டால் கொடுத்த அனுமதி செல்லாததாகி விடும்.

அச்சகத்தாரோ, வெளியீட்டாளரோ, வெளியிடும் காலமோ, அச்சிடும் இடமோ, வெளியிடும் இடமோ எதில் மாற்றம் ஏற்பட்டாலும், புதிதாக உறுதிமொழி கொடுக்க வேண்டும். இதழின் பெயரிலோ, மொழியிலோ மாற்றம் ஏற்பட்டாலும் நீதிபதியின் முன்னால் புதிய உறுதிமொழி வழங்குவது தேவையாகும்.

நாளிதழோ வாரமிருமுறை, வாரம் மும்முறை, வார இதழோ, மாதமிருமுறை இதழோ வெளியிட வேண்டிய படிகளின் எண்ணிக்கையில் பாதிக்கும் குறைவாக வெளியிட்டால், முன்பு அளித்த உறுதிமொழி செயலற்றுவிடும். இதழினைத் தொடர்ந்து வெளியிட எண்ணினால் நீதிபதியின் முன்னால் புதிய விண்ணப்பம் அளிக்க வேண்டும்.

ஓரிதழ் தொடர்ந்து பன்னிரண்டு மாதங்கள் வெளிவராவிட்டால், அது நின்று விட்டதாகக் கருதுவர். புதிய உறுதிமொழியளித்து, பதிவு செய்து கொண்டு தான் இதழினைத் தொடர்ந்து வெளியிட வேண்டும்.

## விவரக்குறிப்பு

ஒவ்வோர் இதழிலும் இதழ் பற்றிய விவரக்குறிப்பு (Imprint line) அச்சிட வேண்டும். இதழின் வெளியீட்டாளர், அச்சிட்டவர், உரிமையாளர், ஆசிரியர், அச்சிட்ட இடம், வெளியிடும் இடம் ஆகிய விவரங்களைக் குறிப்பிட வேண்டும். ஆசிரியரின் பெயரைத் தனியாக அச்சிடுவதும் தேவையாகும்.

ஒவ்வொரு வெளியீட்டிலும் ஒரு படியை வெளியிட்ட 48 மணி நேரத்திற்குள் செய்தித்தாள்கள் பதிவாளருக்கோ, அல்லது அங்கீகாரம் பெற்ற குறிப்பிட்ட அலுவலகங்களுக்கோ அனுப்ப வேண்டும்.

இந்தி, உருது, ஆங்கிலம், சமஸ்கிருதம், இரண்டு அல்லது பல மொழிகளில் அச்சிடும் இதழ்களின் படிகளைத் தில்லியிலுள்ள பதிவாளர் அலுவலகத்திற்கு அனுப்ப வேண்டும். மற்றைய மொழி இதழ்களைக் குறிப்பிடப் பெற்ற பத்திரிகைச் செய்தி நிறுவனத்திற்கு (Press Information Bureau) அனுப்ப வேண்டும். எடுத்துக்காட்டாக, தமிழ் மொழி இதழ்களைச் சென்னையிலுள்ள அலுவலகத்திற்கும், தெலுங்கு இதழ்களை ஹைதராபாத்திலுள்ள அலுவலகத்திற்கும், மலையாள இதழ்களைத் திருவனந்தபுரத்திலுள்ள அலுவலகத்திற்கும் அனுப்ப வேண்டும்.

முதல் இதழ் வெளியானவுடன் அதன் படியைத் தில்லியிலிருக்கும் செய்தித்தாள்கள் பதிவாளர் அலுவலகத்திற்கு அனுப்ப வேண்டும். முதல் இதழையும், மாவட்ட நீதிபதி அங்கீகரித்த உறுதிமொழியின் நகலையும் பெற்ற பின்னர், பதிவாளர் அலுவலகத்தில், அந்த இதழைப் பற்றிக் குறித்துக் கொண்டு, அதற்கு ஒரு பதிவு செய்த எண்ணை (Registration) வழங்குவார்கள்; வெளியீட்டாளருக்குப் பதிவுச் சான்றிதழும் தருவார்கள்.

## அச்சுத்தாள் பெற விண்ணப்பித்தல்

இதழ்களை அச்சிட வெளிச் சந்தையில் தாள் வாங்கினால் விலை அதிகமாகக் கொடுக்க வேண்டும். அரசின் கட்டுப்பாட்டு விலையில் அச்சுத் தாள் பெறக் குறிப்பிட்ட படிவத்தில் இந்தியாவின் செய்தித் தாள்களின் பதிவாளருக்கு விண்ணப்பிக்க வேண்டும். ஒவ்வோர் ஆண்டும் அச்சுத்தாள் ஒதுக்கீட்டுக் கொள்கைளை (Newsprint Allocation Policy) அரசு அறிவிக்கின்றது.

பத்திரிகை அச்சுத் தாளுக்கு ஒதுக்கீடு (Quota) பெற அதற்குரிய விண்ணப்பத்தில் எல்லா விவரங்களையும் நிரப்பி, செய்தித்தாள்கள் பதிவாளர்களுக்கு இரண்டுபடிகளாக (Duplicate)அனுப்ப வேண்டும். இதற்குரிய விண்ணப்பங்களை இந்தியச் செய்தித்தாள்கள் பதிவாளர் அலுவலகத்திலிருந்தோ, புது தில்லியிலிருக்கும் ஏற்றுமதி-இறக்குமதிக்கான தலைமைக் கண்காணிப்பாளர்(The Chief Controller of Imports and Exports) அலுவலகத்திலிருந்தோ, நிறுவப்பெற்ற இறக்குமதியாளர்களிடமிருந்தோ (Established Importers) பெறலாம்.

ஒவ்வோர் இதழுக்கும் எவ்வளவு அச்சுத் தாள் வழங்குவ தென்பதைப் பதிவாளர் அலுவலகம் தீர்மானிக்கின்றது. ஓரிதழின் பக்கத்தின் நீளம்-அகலம், பக்கங்களின் எண்ணிக்கை, ஒழுங்காக வெளிவருதல், வெளியிடும் இதழ்களின் எண்ணிக்கை ஆகியவற்றின் அடிப்படையில் ஒவ்வோர் இதழுக்கும் அச்சுக் காகிதத்தை ஒதுக்குகின்றனர்.

இரண்டாயிரம் படிகளுக்கு மேல் வெளியிடும் இதழ்கள், தணிக்கைச் சான்றிதழோடு (Audit Certificates) விண்ணப்பித்து, அச்சுத் தாள் ஒதுக்கீடு பெறவேண்டும். இதழ்களின் விற்பனை அளவிற்குத் தான் தாள் ஒதுக்கீடு செய்வார்கள்.

ஒவ்வோர் இதழும் எவ்வளவு படிகள் வெளியிடுகின்றன என்பதைப் பதிவாளர் மதிப்பிடுவார். அவரது மதிப்பீடு குறைவானதாக இருந்தால், அந்த அளவிற்குத்தான் தாள் ஒதுக்கீடு செய் வார்கள்.

## அச்சு எந்திரங்கள் பெற விண்ணப்பித்தல்

வெளிநாடுகளிலிருந்து அச்சு எந்திரங்களையும், அச்சுக் கோக்கும் பொறிகளையும், வாங்க, விரும்புகின்றவர்கள் அதற்குரிய விண்ணப்பத்தில், ஏற்றுமதிகள் இறக்குமதிகளுக்கான தலைமைக் கண்காணிப்பாளருக்கு விண்ணப்பிக்க வேண்டும். இதழ் உரிமையாளரோ, வெளியீட்டாளரோ அச்சு எந்திரங்களுக்காக விண்ணப்பிக்கலாம்.

ரூ.50,000 வரை மதிப்பு உள்ள எந்திரத்தை இறக்குமதி செய்ய விரும்புகின்றவர்கள், ரூ.50க்குக் கருவூலச் சீட்டு (Treasury Receipt)வாங்கி இணைத்து அனுப்ப வேண்டும். ரூ.50,000க்கு மேல் மதிப்புள்ள எந்திரம் வாங்க விரும்பினால், அதற்கு மேல் ஒவ்வோர் ஆயிரம் ரூபாய் மதிப்பிற்கும் ஒரு ரூபாய் வீதம் சேர்த்துக் கருவூலச் சீட்டுப் பெற வேண்டும்.

எந்திரங்களுக்கு விண்ணப்பிக்கும் பொழுது, தங்களிடம் தற்போது இருக்கும் எந்திரங்களைப்பற்றிய முழு விவரங்களையும் தர வேண்டும். செய்தித்தாள்களின் தேவையை மதிப்பிட்டுத்தான் எந்திரங்களை இறக்குமதி செய்ய அனுமதிப்பார்கள்.

இப்பொழுது எந்திரங்கள் வாங்கக் கிடைக்கின்ற வெளிநாட்டுச் செலாவணியில் 50 சதவீதத்தைச் சிறிய இதழ்களுக்காகவும்,35 சதவீதத்தை நடுத்தர இதழ்களுக்காகவும், 15 சதவீதத்தைப் பெரிய இதழ்களுக்காகவும் பயன்படுத்துகின்றனர்.

எந்திரங்களை இறக்குமதி செய்ய விரும்புகின்றவர்கள் எந்த நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப் போகின்றார்கள் என்பதையும் குறிப்பிட வேண்டும். இப் பொழுது பொதுவாக அச்சு எந்திரங்களைச் சோவியத் ருஷ்யா, செகோஸ்லோவேகியா,ஜெர்மனி, ஹங்கேரி, இத்தாலி, இங்கிலாந்து, அமெரிக்கா ஆகிய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்கின்றனர்.

## ஆண்டறிக்கையும் சோதனையும்

இதழ்களைப் பற்றிய விவரங்களைச் சேகரிக்கவும், நெறிப் படுத்தவும், அரசு சில நடைமுறைகளை ஏற்படுத்தியிருக்கின்றது.

ஒவ்வொரு பதிப்பாளரும் அவர் வெளியிடும் ஒவ்வொரு செய்தித் தாள் பற்றிய ஆண்டு அறிக்கையைப் (Annual Statement) பத்திரிகைப் பதிவாளருக்கு அளிக்க வேண்டும். சட்ட விதிகளின்படி இந்த விவரங்களைப் படிவம் இரண்டில் பிப்ரவரித் திங்களுக்குள் அனுப்ப வேண்டும். அதில் முந்தைய ஆண்டிற்குரிய எல்லா விவரங்களும் இருக்க வேண்டும். இதழின் உடைமை, ஆசிரியர் பற்றிய விவரங்களைப் படிவம் நான்கின்படி மார்ச் திங்களில் வெளிவரும் முதல் இதழிலும் பதிப்பிக்க வேண்டும்.

ஒரு செய்தித்தாள் 2,000படிகளுக்கு மேல் அச்சிட்டு விற்பனை யானால், அதன் உண்மையான விற்பனைப் (Circulation) படிகள் பற்றிய பதிவுசெய்த தணிக்கையாளரின் (Charted Accountant) சான்றிதழ் பெற்றுப் பதிவாளருக்கு அனுப்ப வேண்டும்.

ஆண்டு விவரங்களை ஓர் இதழ் வெளியீட்டாளர் குறிப்பிட்ட காலத்தில் பத்திரிகைப் பதிவாளருக்கு அனுப்பாவிட்டால், அவர் மீது 1970 மார்ச் ஒன்று வரை செய்த திருத்தங்களின் படி 1867 ஆம் ஆண்டின் பத்திரிகை, புத்தகங்களின் பதிவுச்சட்டத்தின் 19K பிரிவின் படி நடவடிக்கை எடுக்கலாம். இந்தக் குற்றத்திற்குத் தண்டனை கிடைக்கும்.

## பதிவாளர் ஆண்டறிக்கை

எல்லா இதழ்களிடமிருந்தும் பெற்ற ஆண்டு அறிக்கைகளின் அடிப்படையிலும், வேறுவகையில் பெற்ற விவரங்களைச் சேர்த்தும் அரசுக்கு ஆண்டறிக்கையைப் (Annual Report) பதிவாளர் அளிப்பார். இதழ்கள் சரியான முறையில் எல்லா விவரங்களையும் வழங்கினால் செய்தித்தாள்களின் பதிவாளர் தயாரித்துத் தரும் ஆண்டறிக்கை மிகவும் பயனுடையதாக இருக்கும்.

## சோதனைமுறை

பத்திரிகை, புத்தகங்களின் பதிவுச் சட்டத்தின் 19F பிரிவின்படி பத்திரிகைப் பதிவாளரோ அவர் அதிகாரமளிக்கும் பதிவு பெற்ற அலுவலரோ எந்த இதழின் அலுவலகத்திற்கும் சென்று இதழ் வெளியீடு பற்றிய விவரங்களைச் சரி பார்க்கலாம். சுற்றுக்கு வரும் இதழ்களின் சோதனையின் அடிப்படையில் தான் இதழ்களுக்கு அச்சுத் தாள் ஒதுக்கீடு செய்கின்றனர். எவ்வளவு இதழ்கள் அச்சிட்டு விற்பனை செய்கின்றார்கள் என்பதற்குச் சரியான ஆவணங்கள் (Records) வைத்திருக்காவிட்டால், 'உறுதி செய்யப்படாதது' (Unestablished) என்று கூறிவிடுவார்கள். அதன் பிறகு அந்த இதழுக்குக் குறைந்த விலையில் அச்சுத்தாள் கிடைக்காது.

சுற்றிலிருக்கும் இதழ்களின் எண்ணிக்கையைச் சோதனையிடும் பணியைத் திறமையாகச் செய்வதற்காக நமது நாட்டை நான்கு மண்டலங்களாகப் பகுத்து, ஒவ்வொரு மண்டலத்திற்கும் (Zone) ஓர் அலுவலரை (Circulation Officer) நியமித்துள்ளனர். வடக்கு மண்டலத்திற்குப் புது தில்லியிலும், தெற்கு மண்டலத்திற்குச் சென்னையிலும், மேற்கு மண்டலத்திற்கு மும்பையிலும், கிழக்கு மண்டலத்திற்குக் கொல்கத்தாவிலும் அலுவலகங்கள் உள்ளன.

ஓர் இதழைத் தொடங்குவதைப் போன்றே நிறுத்துவதாக இருந்தாலும் மாவட்ட நீதிபதியிடம் வெளியீட்டாளரும் அச்சிடுபவரும் அதற்குரிய விண்ணப்பத்தின் மூலம் தெரிவிக்க வேண்டும். இப்படி தெரிவிக்காவிட்டால், இது தண்டனைக்குரிய குற்றமாகும்.

இதழ்கள் வெளியிடுபவர்கள் அதற்குரிய நெறிமுறைகளைப் பின் பற்றி வெளியிடும் பொழுது, நாட்டில் இதழ் வெளியீடு முறைப் படுத்தப்பெற்ற துறையாக விளங்கும்.

## செய்தித்தாள் நிருவாக அமைப்பு

நாம் நாள்தோறும் பார்க்கின்ற, படிக்கின்ற செய்தித்தாள்கள் அன்றலர்ந்த மலர்களாக, புத்தம் புதுச் செய்திகளோடு கண்ணையும் கருத்தையும் கவரும் வகையில் வெளிவருகின்றன. குறுகிய காலத்தில்

சிறப்பாக ஒரு செய்தித்தாள் வெளிவரவேண்டுமானால் அதன் நிருவாக அமைப்பு திறமையாக அமைய வேண்டும்.

> தற்காலச் செய்தித்தாள் என்பது மிகவும் சிக்கலான பல்வேறு முகப்புகளைக் கொண்ட அமைப்பாகும். அதனுடைய விருப்பங்களும் நடவடிக்கைகளும் முழு உலகையும் வளைத்துக் கொண்டுள்ளது. உலகம் ஒரு நாடக மேடை; வாசகர்கள்தான் பார்வையாளர்கள் என்று கூறுவது மிகைப்படுத்தப்பெற்ற கருத்தாகாது. மிகப் பெரிய பணியைச் செய்கின்றதன் காரணமாக அது மிகப் பெரிய வாணிபமாகத்தான் இருக்கும்

என்று ரெங்கசாமி பார்த்தசாரதி கூறுகின்றார். எந்தச் செய்தித்தாள் நிறுவனமும் இன்றுள்ள பண வீக்கப் போட்டி அங்காடி நிலையில் திறமையாகச் செயல்பட்டு ஆதாயம் தேடாவிட்டால், தொடர்ந்து நடைபெற இயலாது. ஆதலால் நாளிதழை நடத்துகின்றவர்கள் நிருவாகத்தின் பல்வேறு கூறுபாடுகளையும், பிரிவுகளையும் அறிந்து செயல்படுதல் தேவையாகும்.

வார இதழ்களிலும் சிறிய நாளிதழ்களிலும் பொதுவாக இரண்டு பிரிவுகள் இருக்கின்றன. ஒன்று 'அலுவலகம்' (Office); மற்றொன்று 'பணிப்பிரிவு'(WorkShop);அங்குத்தான் இதழை அச்சிடுவார்கள்.

நடுத்தர, பெரிய நாளிதழ்களில் பொதுவாக 'வணிகப்பகுதி' (Business Section), 'எந்திரப் பகுதி' (Mechanical Section), 'ஆசிரியர் பகுதி' (Editorial Section) என்னும் மூன்று துறைகள் செயல்படுகின்றன. இவற்றைப் பொதுவாகப் பத்திரிகையாளர்கள் முறையே 'முன் அலுவலகம்' (The front office), 'பின் பணியறை' (The Back shop), 'செய்தியறை' (The News Room) என்று அழைப்பார்கள். இந்த மூன்று பகுதிகளும் வேறுபட்ட பணிகளைச் செய்கின்றன.

ஆனால் நாளிதழ் நன்கு வெளிவர வேண்டுமானால், இந்த மூன்று துறைகளும் ஒன்றையொன்று சார்ந்தும் இணைந்தும் செயல்படுவது தேவையாகும்.

இப்பொழுது நன்கு வளர்ச்சிபெற்ற பெரிய செய்தித்தாள்களில் ஆறு பிரிவுகள் உள்ளன. இந்த நிருவாக அமைப்பு முறையைக் காண்போம்.

**ஆசிரியர் பிரிவு (Editorial Section)**

''ஆசிரியர் அல்லது செய்தித் துறைதான் ஒரு நாளிதழின் இதயம்'' என்று டி.எஸ்.மேத்தா குறிப்பிடுகின்றார். ஒரு நாளேட்டின் தரமும்

தனித்தன்மையும் அதனுடைய ஆசிரியப் பகுதியைச் சார்ந்து அமைகின்றன. இப்பகுதியின் பொறுப்பைத் தலைமை ஆசிரியர் (Chief Editor)ஏற்றுக் கொள்கின்றார். இவருக்கு உதவியாக ஒவ்வொரு பகுதிக்கும் ஓராசிரியரும், துணையாசிரியர்களும், செய்தியாளர்களும், எழுத்தாளர் களும் பணிபுரிவார்கள். விளம்பரங்கள் தவிர, செய்தித்தாளில் அச்சிடுகின்ற எல்லாப் பகுதிகளையும் இந்தத் துறைதான் தீர்மானிக் கின்றது.

## ✦ செய்தி அறை (News Room)

ஒரு செய்தித்தாளுக்குச் செய்திகள் வந்து குவிகின்றன என்றால் மிகையாகாது. உள்ளூர்ச் செய்தியாளர்களும், சிறப்புச் செய்தி யாளர்களும் செய்தி அறைக்குச் செய்திகளை அனுப்புகின்றனர். இவர்கள் தவிரத் தனியார் நிறுவனங்களும் தாங்களே முன்வந்து செய்திகளை வழங்குகின்றன. உள்ளூர்ச் செய்திகள், வட்டாரச் செய்திகள், மாநிலச் செய்திகள், உலகச் செய்திகள் எனப் பல்வேறு செய்திகள் வந்து குவிகின்றன. வருகின்ற செய்திகளை எல்லாம் பெற்று, வகைப்படுத்திச் செய்திகளைச் செப்பனிட்டு உருவாக்கும் பகுதிக்கு இப்பகுதியினர் அனுப்புவார்கள்.

## ✦ படி எடுக்கும் பகுதி (Copy Desk)

செய்திகளைச் செப்பனிட்டு உருவாக்கும் இப்பகுதியைச் 'செய்திகள் மேஜை' (The News Desk), 'பொது மேஜை' (Universal Desk) என்றும் கூறுவார்கள். இப்பகுதியில் செய்தியாசிரியரும் அவருக்குத் துணை செய்கின்ற செய்தி எழுத்தாளர்களும் பணி செய்கின்றனர்.

ஒரு நாளிதழுக்கு வருகின்ற எல்லாச் செய்திகளையும் வெளியிடுவதென்பது இயலாத செயலாகும். மேலும், அப்படி வெளியிடுவதும் தேவையற்றதாகும். ஆதலால் வருகின்ற செய்திகளைத் தேர்ந்தெடுத்து, வகைப்படுத்தி, செப்பனிட்டு வெளியி டும் வகையில் செய்திகளை உருவாக்கும் பணியை இத்துறை விரைந்து செய்கின்றது.

செய்திப் படியைப் படித்து இறுதி உருவம் கொடுப்பவரைப் 'படி வாசிப்பாளர்' (Copy Reader)என்பார்கள். இவர் ஒரு செய்தியை அச்சுக்கு அனுப்புவதற்கு முன்பு அச் செய்தி மதிப்புடையதா? அது சரியான செய்தியா? சட்ட வழக்கிற்கு உட்படாததா? முழுமையான செய்தியா? என்பனவற்றைக் கவனிக்க வேண்டும். ஒவ்வொரு செய்தியும் தெளிவாக, சுருக்கமாக, எளிமையாக, நல்ல மொழி நடையில் இருக்கின்றதா என்பதையும், செய்தியமைப்பின் செம்மையையும் கவனிக்க வேண்டும்.

### ✦ தலையங்கப் பகுதி (Editorial Section)

தலையங்கப் பகுதியை எழுதத் தனி ஆசிரியரோ குழுவோ இருக்கலாம். தலையங்கம் எழுதுகின்றவர் எது காலத் தேவை என்பதைத் தீர்மானித்து, தங்களது கொள்கையின் அடிப்படையில் தலையங்கம் எழுத வேண்டும். இந்தப் பகுதியினர் சிறப்புக் கட்டுரைகள், கதைகள், நூல் மதிப்புரைகள், ஆசிரியருக்குக் கடிதங்கள் போன்ற பகுதிகளைக் கவனித்துக் கொள்வார்கள்.

### ✦ படப் பகுதி (Picture Division)

இந்தப் பகுதியில் நிழற்படக்காரர்கள் இடம்பெறுவார்கள் . இவர்கள் ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றபடி செய்திகளுக்குச் சிறப்பளிக்கும் நிழற்படங்களை எடுத்து வருவார்கள். ஞாயிறு மலர் , சிறப்பு மலர்கள் போன்றவற்றிற்கு வேண்டிய படங்களை எடுத்துத் தருவார்கள்.

### ✦ நூலகம்

இதனை ஆங்கிலத்தில் 'மோர்கு'(Morgue) என்று குறிப்பிடுவார்கள். இதில் இதழாளர்களுக்கு உதவக் கூடிய கலைக்களஞ்சியங்கள், படங்கள், அகராதிகள், பழைய செய்தித்தாள்கள், தொகுப்புகள் ஆகியவற்றை வைத்திருப்பார்கள். இருக்கின்ற தலைவர்களின் வாழ்க்கைக் குறிப்புகளைத் தனித்தனியான கோப்புகளில் (Files) சேகரித்து வைத்திருப்பார்கள். எதனைப் பற்றிய பின்புலமான விவரங்களாக இருந்தாலும் நாளிதழ் நூலகத்தில் கிடைக்க வேண்டும். அப்பொழுது தான் சரியான விவரங்களை இதழாளர்கள் பயன்படுத்திக் கொள்ள இயலும்.

## 10.5.2. வணிகப் பிரிவு (Business Section)

ஓரிதழ் தொடர்ந்து நடைபெறுவதற்கு வேண்டிய ஊட்டத்தை வணிகப் பிரிவு வழங்குகின்றது. வணிகப் பிரிவு வெற்றிகரமாகச் செயல்பட்டால் தான் ஆதாயத்தோடு நல்ல நிதிவளத்தின் அடிப்படை யில் இதழ் செயல்பட முடியும். பொதுவாக இப்பிரிவினை இதழ் வெளியீட்டாளரே நேரடியாகக் கவனிப்பார். பெரிய நாளிதழ்களில் வணிக நிர்வாகி (Business Manager) இந்தத் துறைக்குப் பொறுப்பேற்றிருப்பார். வணிகப் பகுதியில் விளம்பரப் பகுதி, விற்பனைப் பகுதி என்று இரண்டு பகுதி இருக்கும்.

### ✦ விளம்பரப் பகுதி (Advertisement Section)

இப்பகுதிக்குத் தனியாக ஒரு விளம்பர நிர்வாகி இருப்பார். இந்தப் பகுதியை விளம்பரங்களின் இயல்புகளை ஒட்டி நான்கு பிரிவுகளாகப் பகுக்கலாம்.

### 1. உள்ளூர் விளம்பரப் பிரிவு (Local Division)

*இப்பிரிவு உள்ளூரிலிருந்து கிடைக்கும் சிறு விளம்பரங்களைக் கவனிக்கும். உள்ளூர் விளம்பரங்களை வடிவமைத்தல், விளம்பரங்கள் சேகரித்தல் முதலான பணிகளையும் இப்பிரிவில் உள்ளோர் செய்வர்.*

### 2. பொது விளம்பரப் பிரிவு (General Division)

*வெளியிலிருந்து வருகின்ற விளம்பரங்களை இப்பிரிவினர் கவனிப்பார்கள். தேசிய அளவிலான விளம்பரங்களையும் வெளிநாட்டு விளம்பரங்களையும் இப்பகுதியினர் பெற்று வெளியிடும் வகையில் அவற்றை உருவாக்கித் தருவார்கள்.*

### 3. வகைப்படுத்தப் பெற்ற விளம்பரம் (Classified Advertising)

*இதனை வரி விளம்பரம் என்றும் குறிப்பிடுவார்கள். விளம்பரங்களை, கல்வி, விற்பனை, திருமணம், வேலை வாய்ப்பு என்று வகைப்படுத்தியும் வரி விளம்பரங்களாகவும் வெளியிடும் போக்கு வளர்ந்து வருகின்றது. நாளிதழ்களுக்கு நல்ல வருவாய் தரும் பகுதியாக வரிவிளம்பரப்பகுதி மாறி வருகின்றது. இத்தகைய விளம்பரங்களையும் விளம்பரப் பகுதியினர் கவனிக்கின்றனர்.*

### 4. சட்ட விளம்பரங்கள் (Legal Advertising)

*நீதிமன்ற வழக்குத் தொடர்பான விளம்பரங்கள், அறிவிப்புகள் ஆகியவற்றைச் சட்ட விளம்பரப் பகுதி பார்த்துக் கொள்கிறது.*

### ✦ விற்பனைப் பகுதி (Sales or Circulation Section)

*நாளிதழுக்கு வாழ்வளிக்கும் பகுதியாக விற்பனைப் பகுதி அமைந்துள்ளது. ஓரிதழ் எந்த அளவிற்கு விற்பனையாகிறது, மொத்தம் விற்பனையாகும் படிகளின் எண்ணிக்கை ஆகியவை இந்தப் பகுதியின் திறமையைச் சார்ந்து அமைகின்றன. நாளிதழ் விற்பனைப் பிரிவில் சில உட்பகுதிகள் செயல்படுகின்றன.*

### ✦ நகர விற்பனைப் பகுதி (City Circulation)

*நாளிதழ் வெளியாகும் நகருக்குள் எவ்வளவு படிகள் விற்பனை யாகின்றன என்பதில் கண்ணும் கருத்துமாக இருக்க வேண்டும். இப்பிரிவு நகரின் பல்வேறு இடங்களிலும் உரிய காலத்தில் செய்தித் தாள்கள் கிடைக்க வேண்டிய நடவடிக்கைகளை மேற்கொள்கின்றது.*

### ✦ வட்டார விற்பனைப் பகுதி (Area Circulation)

*நாளிதழ் குறுகிய காலத்தில் நாடு முழுவதும் கிடைக்க வேண்டும். அதற்கு வேண்டிய போக்குவரத்து ஏற்பாடுகளைக் கவனிக்க*

வேண்டும். அஞ்சல் வழியாக இதழ்களை அனுப்புவதும் இந்தப் பிரிவின் கீழ் தான் வரும்.

## ✦ கணக்குப் பகுதி (Accounting Division)

வணிகப் பகுதியின் ஒரு பிரிவாகக் கணக்குப் பகுதி செயல் படுகின்றது. நாளேட்டின் எல்லாக் கணக்குகளையும் இந்தப் பகுதியில் வைத்துக் கொள்வார்கள். கணக்குத் தணிக்கையும் (Auditing) இப்பகுதியின் பணியாகும்.

## எந்திரப் பகுதி (Mechanical Section)

எந்திரங்களின் பகுதி முழுவதும் எந்திரக் கண்காணிப்பாளரின் தலைமையில் செயல்படுகின்றது. பெரிய நாளிதழின் எந்திரப் பகுதியில் பொதுவாக ஐந்து பிரிவுகளைக் காணலாம்.

### 1. அச்சுக் கோக்கும் அறை (Composing Room)

ஆசிரியர் பகுதியிலிருந்து அச்சிடுவதற்கு வருகின்ற எல்லா வற்றையும் இங்கு அச்சுக் கோப்பார்கள். எந்த வகையான எழுத்து (Font) எந்த அளவிலான எழுத்து (Point) என்னும் குறிப்புகள் கொடுக்கப்பட்டிருந்தால் அதற்கேற்ப அச்சுக் கோப்பார்கள். தற்காலத்தில் அச்சுக் கோக்கும் பணியானது கணினி வாயிலாகச் செய்யப்படுகிறது.

### 2. அமைப்புப் பகுதி (Stero Type Department)

அச்சுக் கோத்தவற்றை அச்சடிப்பதற்கு முன்னால், பக்கங்களாக மாற்றி வடிவமைத்து அச்சடிக்கக் கொடுப்பார்கள். இந்த அமைப்புப் பணியும் தற்காலத்தில் கணினியின் துணையுடன் செய்யப்படுகிறது.

### 3. படங்களைச் செதுக்கும் பிரிவு (Engraving Department)

நிழற் படங்களையும் வரைந்த ஓவியங்களையும் அச்சிட வேண்டுமானால் அதற்கான அச்சுக் கட்டைகளை (Blocks) உருவாக்குவார்கள். தற்காலத்தில் நிழற்படங்களும், வரை படங்களும் அப்படியே வருடிக் கருவி (Scanner) வாயிலாகக் கணினிக்குள் செலுத்தப்பட்டு வடிவமைக்கப் படுகின்றன.

### 4. அச்சடிக்கும் அறை (Press Room)

அக்காலத்தில் சுழல் அச்சு எந்திரங்கள் (Rotary Press) வாயிலாக இதழ்கள் அச்சடிக்கப் பட்டன. தற்காலத்தில் ஆஃசெட் அச்சு முறையில் அச்சடிக்கப்பட்டு அவை மடிக்கப்பட்டு வந்து விழுகின்றன.

## 5. மெய்ப்புத் திருத்தும் பகுதி (Proof Desk)

அச்சடிப்பதற்கு முன்பாக, அச்சுக் கோத்தவற்றைப் படி எடுத்து, பிழை திருத்தம் செய்வார்கள். இப்படி திருத்துவது இதழ்கள் தரமாக வெளிவரத் துணை செய்கின்றது.

### வளர்ச்சிப் பகுதி (Promotion Section)

நாளிதழ்களின் வளர்ச்சியைக் கவனிக்கத் தனித்துறை செயல் படுகிறது. நாளிதழ்கள் அவற்றில் வெளியிடுகின்ற விளம்பரங்களின் மூலம் மற்ற துறைகளின் வளர்ச்சிக்குத் துணை செய்கின்றன. அதே விளம்பர முறையைப் பின்பற்றி நாளிதழ் தன்னை வளர்த்துக் கொள்ள முயல வேண்டும்.

விளம்பரங்களின் மூலம் இதழ்கள் வெளிவருவதைப் பொது மக்களுக்கு அறிவிக்கலாம். இதழ்கள் தங்களிடம் உள்ள சிறப்புப் பகுதிகளை எடுத்துரைக்கலாம். வாசகர்களின் கவனத்தைக் கவரும் வகையில் இதழ்களைப் பற்றிக் கூறினால் இதழ்களின் விற்பனை கூடும்.

### புள்ளி விவரப் பகுதி (Data Processing Department)

இதழினைப் பற்றிய எல்லா விவரங்களையும் சேகரித்து வைப்பது இதழின் வளர்ச்சிக்குத் துணை செய்யும். வெளிநாடுகளில் புள்ளி விவரங்களைச் சேகரித்து வகைப்படுத்தித் தொகுத்து வைப்பதற்குத் தனிப்பகுதியை வைத்திருக்கின்றனர்.

தற்காலத்தில் பல பெரிய நாளிதழ்களில் கணினியின் (Computer) துணையோடு புள்ளி விவரங்களைச் சேகரித்து, தொகுத்து வகைப் படுத்தி வைக்கின்றனர்.

### நிருவாகப் பிரிவு (Administrative Department)

ஒரு நாளிதழின் அமைப்பில் சில உட்பிரிவுகள் இருந்தாலும், அவை ஒரு கையிலுள்ள விரல்கள் போல, ஒருங்கிணைந்து செயல்பட வேண்டும். அப்படி அவை செயல்பட நிருவாகத்தைத் தனித்துறை கவனிக்கின்றது.

பொதுவாக இந்தப் பிரிவினை இதழின் உரிமையாளர் தலைமை ஏற்று நடத்துவார். பல நிருவாக அலுவலர்கள் இப்பிரிவில் இருப்பார்கள்.

நாளிதழின் பல்வேறு துறையும் இதழின் கொள்கையின்படி செயல்படுகின்றனவா என்று இந்தத் துறை கண்காணிக்கும்.

# 11. இதழ்களின் சட்டங்கள்

''பத்திரிகைச் சுதந்திரம் என்பது ஒரு தேவையான தீமையாகும். ஒரு பக்கமிருக்கும் பத்திரிகைச் சுதந்திரத்திற்கும் மறுபக்கமிருக்கும் அது தன்னுடைய சுதந்திரத்தைத் தவறாகப் பயன்படுத்துவதைத் தடுக்கும் கட்டுப்பாடுகளுக்கும் இடையில் சரியான சமன்பாட்டைக் காண வேண்டும்'' என்று ஆர்.சி.எஸ். சர்க்கார் கூறுகின்றார்.

நமது நாட்டில் அரசியல் நிர்ணயச் சட்டத்தின் 19 (2) விதியின்படி அரசு, பத்திரிகையின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தச் சட்டங்கள் கொண்டுவர அதிகாரம் பெற்றிருக்கின்றது. இது தவிர, பத்திரிகை களைக் கட்டுப்படுத்த பல்வேறு சட்டங்கள் நடைமுறையில் இருக்கின்றன. அவற்றைப் பற்றி இதழாளர்கள் தெரிந்து கொள்வது தேவையாகும். அவற்றில் குறிப்பிடத்தக்க சட்டங்கள் மட்டும் இங்கு விளக்கப்பட்டுள்ளன.

## அவமதிப்புச் சட்டம் (Law of Defamation)

இதழாளர்களும், செய்தித்தாள்களை வெளியிடுபவர்களும் அவமதிப்புச் சட்டம் குறித்து மிகவும் கவனமாக இருக்க வேண்டும். ஒருவரின் மான இழப்புக்குக் காரணமாகின்றவரின் மீது குற்றவியல் சட்டத்தின்படியும் (Criminal Law) சமுதாயவியல் சட்டத்தின் படியும் (Civil Law) நடவடிக்கை எடுக்கலாம்.

ஒருவரை வாய்மொழியாக இழிவுபடுத்துவதை 'அவதூறு' (Scandal) என்றும், எழுத்தின் மூலம் அவமதிப்பதைச் 'சட்ட வழக்கிற் குட்பட்டது' (Libel) என்றும் கூறலாம். இந்தியக் குற்றவியல் சட்டத்தின் 499 ஆம் பிரிவு அவமதிப்பு எதுவென்று விளக்குகின்றது; 500 ஆம் பிரிவு தண்டனையைக் குறிப்பிடுகின்றது.

ஒருவரைப் பற்றி அவமதிக்கும் வகையில் பேசுவதோ, மற்றவர்கள் படிக்கும் வகையில் எழுதுவதோ, சைகைகள் மூலம் வெளிப்படுத்துவதோ அவமதிப்புக் குற்றத்தின் கீழ் வரவேண்டு மானால் அதில் மூன்று குறிப்பிடத்தக்க உள்ளடக்கங்கள் இருக்க வேண்டும். அவை :

(1) யாராவது ஒரு மனிதரைப் பற்றிய அவமதிப்பாக இருக்க வேண்டும்.

(2) அவ்வாறு அவமதிப்பாகப் பேசிய அல்லது மற்றவர்கள் படிக்க வேண்டுமென்று எழுதிய சொற்களிலோ, சைகைகளிலோ, தெரியக் கூடிய வெளியீட்டு முறைகளிலோ இருக்க வேண்டும்.

(3) அத்தகைய அவமதிப்பு, ஒருவரின் புகழைப் பாதிக்க வேண்டுமென்ற நோக்கத்தோடோ அல்லது புகழ் பாதிக்கப்படுமென்று அறிந்தோ செய்திருக்க வேண்டும்.

**அவமதிப்பு தொடர்பானவை**

(1) மக்களின் வெறுப்பை, கிண்டலை, கேலியைத் தூண்டக்கூடியவை;

(2) மக்கள் வெறுத்தோ, புறக்கணித்தோ, ஒதுக்கக் கூடியவை;

(3) ஒருவரின் பணியையோ, தொழிலையோ பாதிக்கக் கூடியவை;

(4) வணிகத்தைப் பாதிக்கக் கூடியவை

என்று நான்கு வகையானவற்றை அவமதிப்பு தொடர்பானவை எனலாம்.

## விதி விலக்குகள்

ஒருவரை அவமதிப்புச் சட்டத்தின் கீழே பத்துக் குறிப்பிட்ட சூழ்நிலைகளில் தண்டிக்க முடியாதென்று 499 ஆம் பிரிவு விதிவிலக்கு அளித்திருக்கின்றது. இதன்படி, அவமதிப்புக் குற்றம் ஆகாதவற்றை இங்கே காண்போம்.

(1) பொது நலன் கருதி உண்மையை வெளியிடாமலிருத்தல்;

(2) பொது நலன் கருதிச் சிலவற்றை வெளியிடல்;

(3) அரசு ஊழியர்களைப் பற்றி நியாயமாகக் கருத்துக் கூறல்;

(4) பொது நலனுக்குத் தேவையானவற்றிற்காக வாதிடல்;

(5) நல்ல எண்ணத்தோடு நீதிமன்ற நடவடிக்கைகளை வெளியிடல்;

(6) நீதிமன்றத் தீர்ப்புப் பற்றியோ சான்று பற்றியோ நல்ல எண்ணத்தோடு கருத்துக் கூறல்,

(7) பொது நடவடிக்கை பற்றிப் பொதுநல நோக்கில் விமர்சனம் செய்தல்,

(8) சட்டப்படி அதிகாரம் உடையவர்கள் சட்ட வரம்புக்குள் கருத்துக் கூறல்,

(9) நல்ல எண்ணத்தோடு அதிகாரத்தில் உள்ளவர்களின் குறைகளைச் சுட்டிக் காட்டல்,

(10) பொது நலனையோ தனி மனிதர்களையோ காப்பதற்காகச் சிலரைக் குறை கூறுதலும் பொது நலன் கருதி ஒருவரை எச்சரித்தலும் ஆகியவை அவமதிப்புக் குற்றமாகா.

## வழக்கு

1973 ஆம் ஆண்டின் குற்றவியல் வழக்குத் தொடர்விதிப்படி 199 (1), யார் அவமதிப்புக்கு உள்ளானார்களோ அவர்கள் தான் நீதிமன்றத்தில் வழக்குத் தொடர முடியும். ஆனால் இந்தியக் குடியரசுத் தலைவர், துணைத் தலைவர், மாநில ஆளுநர், மத்திய மாநில அமைச்சர்கள் ஆகியவர்கள் அவமதிப்புக்கு ஆளானதாகக் கருதினால், அவர்கள் சார்பில் அரசு வழக்குரைஞர் வழக்கைத் தொடரலாம்.

அவமதிப்பு வழக்கு, அவமதிப்புச் செய்தவர் மேல் மட்டுமல்ல; அதனை வெளியிட்ட நாளிதழின் பதிப்பாளர், அச்சிட்டவர், ஆசிரியர் ஆகியவர் மீதும் தொடரலாம். சட்டப்படி அவமதிப்பு உறுதி செய்யப்பட்டால், பொறுப்பானவர்கள் அனைவரும் தண்டனைக் குள்ளாவார்கள்.

## தண்டனை

அவமதிப்புச் செய்தவர்களுக்கு, இந்தியக் குற்றவியல் சட்டம் 500 ஆம் பிரிவின்படி இரண்டாண்டுகள் வரை சிறைத்தண்டனையோ, அபராதமோ இரண்டுமோ கொடுக்கலாம். சட்டக்குழுவானது (The Law Commission) தீர்ப்பினைச் செய்தித்தாள்களில் வெளியிட வேண்டு மென்றும், குற்றம் உறுதி செய்யப்பட்டவர் வெளியீட்டுச் செலவினை ஏற்க வேண்டுமென்றும் பரிந்துரைத்துள்ளது.

பொதுச் சட்டத்தின்படி மான இழப்பு வழக்குத் தொடர்பவர் இழப்பீடு பெற முடியும். குற்றவியல் சட்டப்படி வழக்குத் தொடர்ந்தால் அவமதித்தவர் தண்டனை பெறுவார்.

## நாடாளுமன்ற நடவடிக்கைகள் சட்டம்

நாடாளுமன்றத்திலும் சட்டமன்றங்களிலும் நடப்பனவற்றைப் பொதுமக்களுக்குத் தெரிவிப்பது மக்களாட்சியில் இதழ்களின் பொறுப் பாகின்றது. ஆனால் இந்தப் பொறுப்பினை இதழ்கள் கவனமாக நிறைவேற்ற வேண்டும். சட்டமன்ற, நாடாளுமன்ற நடவடிக்கை களை உள்ளது உள்ளபடி நாட்டு நலனைக் கருத்தில் கொண்டு வெளியிட வேண்டும். இதில் கவனமாக இல்லையேல், சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினர்களின் உரிமை மீறல் குற்றமோ, சட்டமன்ற நாடாளுமன்றத்தை அவமதித்த குற்றமோ ஏற்பட்டு விடும்.

**வரையறைகள்**

பொதுவாகச் சட்டமன்ற, நாடாளுமன்ற நடவடிக்கைகளை வெளியிடும்பொழுது, உறுப்பினர்களின் மதிப்பைக் குறைக்கும் வகையிலோ, அவர்களுக்குக் களங்கம் ஏற்படும் வகையிலோ, கேலி செய்யும் வகையிலோ, நாடாளுமன்றங்களை அவமதிக்கும் முறையிலோ செய்திகளை வெளியிடக்கூடாது.

இப்படிப்பட்ட செய்திகளை வெளியிட்டால்தான் உரிமை மீறல் என்று திட்டவட்டமாகக் கூறும் சட்டம் எதுவும் இல்லை. ஆனால் இதுவரை, (1) தவறாகச் சபைகளின் நடவடிக்கைகளை வெளியிட்டதற்காகவும்; (2) சிதைத்த, முறையற்ற முறையில் நடவடிக்கைகளைப் பற்றி வேண்டுமென்றே எழுதியதற்காகவும்; (3) அவைத் தலைவர்கள் மன்றக் குறிப்பிலிருந்து விலக்கியவற்றை வெளியிட்டதற்காகவும் நமது நாட்டில் உரிமை மீறல் வழக்குகள் இதழ்களின் மீது தொடரப் பட்டுள்ளன. பல நாளிதழ்களின் மீது இத்தகைய குற்றச்சாட்டுகள் சுமத்தப்பட்டுள்ளன.

உரிமை மீறியவர்களைத் தண்டிக்கும் அதிகாரம் சட்ட மன்றங்களுக்கும் நாடாளுமன்றங்களுக்கும் இருக்கின்றன. 1987 இல் 'ஆனந்த விகடனில்' வெளியான ஒரு கேலிச்சித்திரம் சட்டமன்ற உறுப்பினர்களை அவமதித்ததாகக் குற்றஞ்சாட்டி, அதன் ஆசிரியருக்குச் சட்டமன்றம் சிறைத்தண்டனை விதித்ததை எடுத்துக்காட்டாகச் சுட்டிக் காட்டலாம்.

**சட்டப் பாதுகாப்பு**

1956 ஆம் ஆண்டின் 'நாடாளுமன்ற நடவடிக்கைகள் (வெளியீட்டிற்குப் பாதுகாப்பு) சட்டம் (The Parliamentary Proceedings Protection of Publication Act 1956) நாடாளுமன்ற நடவடிக்கைகளை வெளியிடுவதில் பத்திரிகைகளுக்குப் பாதுகாப் பளிக்கின்றது. பெரோஸ் காந்தி (Feroz Gandhi)யின் முயற்சியால் இச்சட்டம் வந்ததால் இதனைப் 'பெரோஸ் காந்தி சட்டம்' என்றும் குறிப்பிடுவதுண்டு. இதன்படி, நாடாளுமன்ற நடவடிக்கைகளைத் தீய நோக்கத்தோடு தவறாக வெளியிட்டதாக உறுதி செய்யப்பட்டால் மட்டும் தான் தண்டனை வழங்கலாம். நாடாளுமன்ற நடவடிக்கைகள் அவதூறுகளாக இருந்தாலும் உண்மைகளாக இருந்தாலும், அவற்றை வெளியிடுவது உரிமை மீறலாகாதென இச்சட்டம் கூறுகின்றது.

இச்சட்டத்தை நெருக்கடிக் காலத்தில் நீக்கியிருந்தனர். நெருக்கடிக் காலத்திற்குப் பின் இச்சட்டம் மறுபடியும் செயல்முறைக்கு வந்துவிட்டது.

## நீதிமன்ற அவமதிப்புச் சட்டம்

செய்திகளின் மூலங்களில் ஒன்றாக நீதிமன்றம் விளங்குகின்றது. நீதிமன்றங்களில் நடைபெறும் சுவையான, சிக்கலான, பொது நலனோடு தொடர்புடைய வழக்குகளின் நடவடிக்கைகளை அறிந்து கொள்வதில் மக்களும் மிகுந்த ஈடுபாடு காட்டுகின்றனர். அவற்றை வெளியிடுவதன் மூலம் இதழ்கள் நீதியை எடுத்துரைக்கும் பணியைச் செய்கின்றன.

நீதிமன்றங்கள், வழக்கு நடவடிக்கைகள் ஆகியவை பற்றிய செய்திகளை வெளியிடும் பொழுது கவனமாக இருக்க வேண்டும். இல்லையேல் நீதிமன்றத்தை அவமதித்த (Contempt of court) குற்றத்திற்கு ஆளாக நேரிடும்.

### குற்றங்கள்

நீதிமன்றத்தையோ சட்டத்தையோ நீதிபதிகளின் அதிகாரத்தையோ வேண்டுமென்றே இழிவுபடுத்தும் வகையில் செய்திகளை வெளியிடுவது தண்டனைக்குரிய குற்றமாகும். எடுத்துக் காட்டாக, நீதிமன்றத்தில் விசாரணையில் இருக்கும் ஒரு வழக்குப் பற்றிய தவறான செய்தியை வெளியிடுவதோ, வழக்கின் தீர்ப்பு இப்படித்தான் இருக்குமென்று இட்டுக்கட்டிக் கூறுவதோ, நீதிபதியைப் பற்றியோ, சான்றுரைப்பவர்களைப் பற்றியோ தவறான எண்ணம் ஏற்படும்படி எழுதுவதோ நீதிமன்ற நிந்தனைக் குற்றமாகும்.

காவல் நிலையங்களில் பதிவு செய்யும் குற்றங்கள் பற்றி அறியும் வாய்ப்பு, செய்தியாளர்களுக்கு இருக்கின்றது. அவற்றைப் பற்றி அவர்கள் எழுதும் பொழுது கவனமாக இருக்க வேண்டும். எடுத்துக் காட்டாக, திருட்டு வழக்கில் இராமன் என்பவன் கைது செய்யப் பட்டிருக்கலாம். ''திருடன் இராமன் கைது செய்யப்பட்டான்'' என்று செய்தி வெளியிடக்கூடாது. ''இராமனைக் கைது செய்தனர். அவன் மீது திருட்டுக்குற்றம் சாட்டப்படுகின்றது'' என்பது போன்று தான் செய்தியை வெளியிட வேண்டும்.

### சட்டம்

1952 ஆம் ஆண்டின் 'நீதி மன்ற அவமதிப்புச் சட்டம் எண். XXXII (The contempt of court Act XXXII) நீதிமன்றங்களை அவமதித்தால் ஆறு மாதங்கள் வரை சிறைத்தண்டனையோ, ரூ. 2,000 தண்டமோ அல்லது இரண்டுமோ விதிக்கலாமென்று கூறுகின்றது.

1971 ஆம் ஆண்டில் நிறைவேற்றப் பெற்ற நீதிமன்ற அவமதிப்புச் சட்டம் நீதிமன்ற நிபந்தனைகளை இருவகைகளாகப் பிரிக்கின்றது.

முதலாவதாக, நீதிமன்றங்களின் ஆணைகளுக்கோ, தீர்ப்புகளுக்கோ கட்டுப்பட மறுப்பது சமூகக் (Civil) குற்றமாகும். இரண்டாவதாக, பத்திரிகைகள் செய்யும் நிந்தனைகள் குற்றவியல் (Criminal) அடிப்படையில் குற்றங்களாகும்.

## அலுவலக இரகசியங்கள் சட்டம்

மக்களாட்சியில் மக்கள் நாட்டின் நடப்புகளை எல்லாம் தெரிந்து கொள்வது தேவையாகின்றது. அரசு எல்லா விவரங்களையும் சேகரித்து வைக்கின்றது. நிருவாகத்தினர் பலவற்றை முடிவு செய்து செயல்படுத்துகின்றனர். இவற்றைப் பற்றிய விவரங்களைச் சேகரித்து மக்களுக்குத் தெரிவிப்பது இதழ்களின் பணியாகின்றது. ஆனால் நிருவாகத்தின் திறமை கருதி, நாட்டின் பாதுகாப்பு, வெளிநாட்டின் தொடர்புகள், குற்றப் புலனாய்வுகள், அமைச்சரவை முடிவுகள், சில தனிப்பட்ட மனிதர்கள் பற்றிய தகவல்கள் ஆகியவை தொடர்பான சிலவற்றை அரசு இரகசியங்களாகக் கட்டிக் காப்பது தேவையாகின்றது. இப்படிப்பட்ட அலுவலக இரகசியங்களை இதழ்கள் அறிந்து வெளியிடுவது சட்டப்படி குற்றமாகும்.

### சட்டம்

*1923 ஆம் ஆண்டின் 'அலுவலக இரகசியங்கள் சட்டம்'* (Official Secrets Act) (1) ஒற்றறிதல் *(2)* இரகசிய விவரங்களை மற்றவர்களுக்குத் தருதல் ஆகிய குற்றங்களைத் தெளிவாக வரையறுத்துக் கூறுகின்றது.

இந்தச் சட்டத்தின் மூன்றாம் பிரிவு, யாராவது நாட்டின் பாதுகாப்பிற்குப் பாதகமான முறையில் *(1)* தடை செய்யப்பட்ட பகுதிக்குள் செல்லுதல், அங்குள்ள இரகசிய விவரங்களைச் சேகரித்து மற்றவர்களுக்கு வழங்குதல்; *(2)* பகைவர்களுக்கு நேரடியாகவோ மறைமுகமாகவோ பயன்படும் வகையில் வரைபடங்கள் தீட்டியோ, திட்டம் வகுத்தோ, மாதிரிகளை உருவாக்கியோ தருதல்; *(3)* பகைவர்களுக்குப் பயன்படக்கூடிய விவரங்களைப் பெற்றோ, சேகரித்தோ, பதிவு செய்தோ, வெளியிட்டோ வழங்குதல் குற்றங்களாகுமென்று தெளிவுபடுத்துகின்றது.

*1962 ஆம் ஆண்டின் 'அணுசக்திச் சட்டம்'* (Atomic Energy Act) இருக்கின்ற, அல்லது அமைக்கப் போகின்ற அணு உற்பத்தி நிலையங்கள் பற்றி அதிகாரம் பெற்றவர்கள் தவிர மற்றவர்களுக்குச் செய்திகளைத் தருவதைக் குற்றமாக்குகின்றது. இதைப்போல வேறு சில சட்டங்களும் இருக்கின்றன.

## நடைமுறை

ஒன்றை இரகசியமானதா இல்லையா எனத் தீர்மானிப்பது சிக்கலானதாகும். சில வேளைகளில் அலுவலர்களும் அரசியல் தலைவர்களும் தங்களது தவறுகள் வெளியில் தெரியாமலிருப் பதற்காகப் பலவற்றை இரகசியங்கள் என்று மூடி மறைக்கலாம். மக்களின் நலன் கருதி இதழ்கள் அவற்றை வெளிப்படுத்தலாம். எடுத்துக்காட்டாக, இந்திய அரசு வெளிநாட்டில் இராணுவத் தளவாடங்கள் வாங்கியதில் ஏற்பட்ட முறைகேடுகளை 'இண்டியன் எக்ஸ்பிரஸ்' (Indian Express) வெளிப்படுத்திய பொழுது, அரசின் சில ஆவணங்களைப் பதிப்பித்தது. இதனை இச்சட்டத்தின் கீழே குற்றமென அரசு கருதியது. இதனைப் போன்று பல நிகழ்ச்சிகள் நடந்துள்ளன.

## பத்திரிகை, புத்தகங்கள் பதிவுச் சட்டம்

நடைமுறையிலிருக்கின்ற மிகப் பழைய பத்திரிகைச் சட்டங்களில் ஒன்று 1867 இல் கொண்டுவரப் பெற்ற 'பத்திரிகை, புத்தகங்கள் பதிவுச் சட்டம்' (The Press and Registration of books Act). இந்தச் சட்டத்தில் 1940, 1956 ஆம் ஆண்டுகளில் சில திருத்தங்கள் கொண்டு வந்தனர். இந்தச் சட்டம் பத்திரிகைகளை முறைப்படுத்துவதற்காகக் கொண்டு வந்ததுதானே தவிர, பத்திரிகைகளின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்துவது இதன் நோக்கமல்ல. இந்தியாவில் வெளியாகும் இதழ்களையும் புத்தகங்களையும் பாதுகாக்க இந்தச் சட்டம் துணை செய்கின்றது.

இந்தச் சட்டத்தின்படி, தில்லியிலிருக்கும் இந்திய அரசுத் தலைமைப் பதிவாளரிடம் பத்திரிகை தொடர்பான எல்லா விவரங் களையும் தெரிவிக்க வேண்டும்.

பத்திரிகைகளை வெளியிடுகின்றவர், உரிமையாளர், ஆசிரியர் ஆகியோர் மாவட்ட நீதிபதியிடமோ, பெருநகர நீதிபதியிடமோ வாக் குறுதி வழங்கி, பெயரைப் பதிவு செய்தபின் பத்திரிகைகளை வெளி யிட வேண்டும். இந்தச் சட்டம் ஓரிதழை எப்படி பதிவு செய்து நடத்த வேண்டுமென்ற முறையை விளக்குகின்றது.

ஒவ்வோர் இதழிலும் அதனை அச்சிட்டவர், வெளியிட்டவர், ஆசிரியர், உரிமையாளர் ஆகியோரின் பெயர்கள், அச்சிட்ட இடம், வெளியிட்ட தேதி ஆகியவை தெளிவாக அச்சிட்டிருக்க வேண்டும். பத்திரிகையை வெளியிடுபவர்கள் செய்தித்தாள்கள் பதிவாளர் (Registrar of Newspapers) கேட்கின்ற எல்லா விவரங்களையும் கொண்ட ஆண்டு அறிக்கைகளை வழங்க வேண்டும்.

இந்தச் சட்டத்தின்படி, ஆங்கிலம், இந்தி, உருதுமொழிகளில் வெளிவரும் ஒவ்வோர் இதழும் ஒரு படியைப் புது தில்லியிலுள்ள பத்திரிகைகள் பதிவாளருக்கு அனுப்ப வேண்டும். மற்றைய மொழி இதழ்கள் குறிப்பிடப்பட்ட வட்டார வெளியீட்டு, செய்தி நிறுவனங்களுக்கு ஒரு படியை அனுப்ப வேண்டும்.

## ஆபாச வெளியீட்டுத் தடைச்சட்டம்

பத்திரிகைகளுக்கு எதனை வேண்டுமானாலும் வெளியிடச் சுதந்திரம் இருக்கின்றது. ஆனால் அதே நேரத்தில் மக்களின் மனத்தையும், சமுதாயத்தின் ஒழுக்கத்தையும் கெடுக்கக்கூடிய ஆபாசமான, கீழான செய்திகளை, கட்டுரைகளை, படங்களை வெளியிடுவதைத் தடை செய்ய 'ஆபாச வெளியீட்டுத் தடைச் சட்டம்' (obscene Prohibition Act) செயல்படுகின்றது.

### விளக்கம்

இந்தியக் குற்றவியல் சட்டத்தின் (IPC) 292,293, 294 பிரிவுகள், எவற்றை ஆபாசமாகக் கருதலாம் என்பதை விளக்குகின்றன. இவற்றின்படி நாகரிகமற்ற செய்திகள், தாழ்ந்த உணர்வுகளைத் தூண்டும் எழுத்துகள், நிழற்படங்கள், ஓவியங்கள், திரைப்படங்கள், விளம்பரங்கள் ஆகியவை ஆபாசமானவையாகும்.

ஒன்றை ஆபாசமானதாக வெளியிடுபவரின் நோக்கமும் வெளியிடும் முறையும் ஆபாசமாகக் கருதச் செய்கின்றன. எடுத்துக் காட்டாக ஆண் - பெண் உறவு பற்றித் திருமணமானவர்களுக்கு வழி காட்டும் முறையில் அறிவியல் அடிப்படையில் வெளியிடுவதை ஆபாசமென்று கொள்வதில்லை. ஆனால் வணிக நோக்கில் இதழ்களின் விற்பனையைக் கூட்ட, பாலுணர்வு பற்றித் தரக் குறைவான முறையில் வெளியிடுவது ஆபாசமாகும்.

### தண்டனை

இச்சட்டப்படி ஆபாசமான வெளியீடுகளைப் பறிமுதல் செய்ய அரசுக்கு உரிமை இருக்கின்றது. மேலும் ஆபாசமானவற்றை எழுதிய வருக்கும் வெளியிட்டவருக்கும் மூன்று மாதங்கள் வரை சிறைத் தண்டனையும் அபராதமும் விதிக்கலாம். ஆபாசமான வெளியீடுகளை இறக்குமதி செய்வதை அரசு தடுக்கவும் தனிச்சட்டம் இருக்கின்றது.

### பதிப்புரிமைச் சட்டம் (The Copyright Act)

ஒருவரின் அறிவுசான்ற படைப்புரிமையைக் கட்டிக்காக்க உருவாக்கப் பெற்றது பதிப்புரிமைச் சட்டம். ஒருவரின் உழைப்பாலோ,

அறிவாலோ, திறமையாலோ படைத்த எதுவும் ஒருவரின் சொத்தா கின்றது. அதே போல ஒருவரின் சொந்த இலக்கியம், படைப்பு, நாடகம், இசை, கலை எதுவாக இருந்தாலும் அது ஆக்கியவரின் உடைமையாகின்றது. இந்த உரிமையைப் பாதுகாக்கச் சட்டம் துணை செய்கின்றது.

## சட்டவிளக்கம்

*1941* இல் முதன் முதலில் பதிப்புரிமைச் சட்டம் செயல் படுத்தப் பெற்றது. இப்பொழுது நடைமுறையிலிருப்பது, இந்திய நாடாளுமன்றம் 1957இல் திருத்தி நிறைவேற்றிய 'பதிப்புரிமைச் சட்டம்' ஆகும்.

ஒன்றன் பதிப்புரிமை ஒருவருக்கு இருக்க வேண்டுமானால் அது முழுக்க அவரது சொந்தப்படைப்பாக இருக்க வேண்டும். மற்றொன்றைப் பார்த்துப் படைத்த ஒன்றுக்கு ஒருவர் உரிமை கொண்டாட இயலாது. கருத்துகளுக்கோ, பாடப் பொருளுக்கோ, கருப்பொருளுக்கோ, வரலாற்று நிகழ்ச்சிகளுக்கோ ஒருவரும் உரிமை கொண்டாட இயலாது. ஏனென்றால் அவை எல்லாம் பொதுச் சொத்துகளாகும். ஒரு குறிப்பிட்ட முறையில் வடிவத்தில் ஒன்றை வெளியிடும் பொழுதுதான் அதற்குப் பதிப்புரிமை கிடைக்கின்றது.

இந்தச் சட்டத்தின் 45 ஆம் பிரிவு பதிப்புரிமையைப் பதிவு செய்து கொள்ள வாய்ப்பளிக்கின்றது. ஆனால் பதிவு செய்ய வேண்டுமென்ற கட்டாயம் இல்லை.

இலக்கியப் படைப்புகள், இசை, நாடகம் போன்றவற்றிற்குப் பதிப்புரிமை படைத்தவரின் வாழ்நாள் முழுவதும் அவருக்கே சொந்தமாக இருக்கும். அவர் காலத்திற்குப் பின்பு ஐம்பதாண்டுக ளுக்குப் பதிப்புரிமை அவரது சந்ததியினருக்கு உண்டு. நிழற் படங்களுக்குப் பதிப்புரிமை ஐம்பதாண்டுகளுக்கு அவற்றை எடுத்தவருக்கு உண்டு. இந்தக் குறிப்பிட்ட காலத்திற்குப் பின்பு யார் வேண்டுமானாலும் அவற்றை எடுத்துப் பயன்படுத்தலாம்.

## விதி விலக்குகள்

இச்சட்டத்தின்படி ஒருவரின் படைப்பிலிருந்து ஆய்வுக்காகவோ, தனிப்பட்ட படிப்பிற்காகவோ, மதிப்பீட்டிற்காகவோ சில பகுதிகளை எடுத்துப் பயன்படுத்துவது குற்றமாகாது. நியாயமான முறையில் மேற்கோள் காட்டவோ, சரியான முறையில் சுருக்கத்தைக் கூறவோ சட்டம் வாய்ப்பளிக்கின்றது. ஒருவரின் படைப்பிலிருந்து சிலவற்றைப் பயன்படுத்தும் பொழுது மூலத்தைக் குறிப்பிடவேண்டும்.

செய்தித்தாள்களுக்குச் சிறப்பு விதி விலக்குகள் வழங்கப் பெற்றுள்ளன. இதழ்கள் பொது நலன் கருதி, எந்த இலக்கியப் படைப்பையும், நாடகத்தையும் இசையையும் வெளியிடலாம். இது நடப்புச் செய்திகளை வெளியிடும் வகையில் சேரும். ஆனால் ஓரிதழில் வெளியான கட்டுரையை அப்படியே சொல் மாறாமல் வெளியிட வேண்டுமானால் அந்த இதழின் அனுமதி பெற வேண்டும். இதழ்கள் பதிப்புரிமைச் சட்டத்தின் வரம்புக்குள் நின்று செயல்படுவது தேவையாகும்.

## இளைஞர்களைக் கெடுக்கும் வெளியீடுகள் தடைச் சட்டம்

இளைஞர்களின் உள்ளங்களைக் கெடுக்கக் கூடியவற்றை வெளியிடுவதைத் தடை செய்யும் நோக்கத்தில் 1956 இல் 'இளைஞர் களைக் கெடுக்கும் வெளியீடுகள் தடைச் சட்டத்தை' (The Young Persons Harmful Publications Act) அரசு நிறைவேற்றியது.

இந்தச் சட்டத்தின்படி (1) குற்றங்களைச் செய்யத் தூண்டுகின்ற; (2) வன்முறையில், கொடூரமான செயல்களில் ஈடுபடச் செய்கின்ற; (3) அச்சத்தை, பயங்கரத்தைத் தூண்டுகின்ற கதைகளையும், படங்களையும் கொண்ட புத்தகத்தையோ, இதழையோ, கையேட்டையோ, கைப்பிரதியையோ, செய்தித்தாளையோ இவை போன்றவற்றையோ இளம் உள்ளங்களைக் கெடுக்கும் வகையில் வெளியிடுவது தண்டனைக்குரிய குற்றமாகும். இவற்றை வெளியிடுவது மட்டுமன்றி இவற்றை விளம்பரப்படுத்துவதும், விற்பனை செய்வதும், விநியோகிப்பதும், வைத்திருப்பதும் சட்டப்படி குற்றமாகும்.

இளைஞர்களைக் கெடுக்கக் கூடியவை என்று நீதிமன்றம் தீர்மானித்தவற்றை முழுக்க அழித்துவிட நீதிமன்றம் கட்டளை இடலாம். இத்தகைய வெளியீடுகளை மாநில அரசுகள் பறிமுதல் செய்யலாம். இப்படிப்பட்ட வெளியீடுகளைக் கைப்பற்றவும் அழிக்கவும் காவல் துறை அதிகாரிகள் அதிகாரம் பெற்றுள்ளனர்.

## அஞ்சல், தந்திச் சட்டங்கள்

1885 ஆம் ஆண்டின், இந்தியத் தந்திச் சட்டத்தின்படி (Indian Telegraph Act) அரசோ, அல்லது அதிகாரம் பெற்ற அலுவலரோ தந்திச் செய்தியைத் தடுக்கவோ, காலம் தாழ்த்தவோ, நிறுத்தவோ செய்யலாம். ஆனால் பொது நெருக்கடி நிலையை அரசு அறிவித் திருக்கும் பொழுதோ, நாட்டின் பாதுகாப்பு, பொது நலன் ஆகிய வற்றைக் கருதித்தான் அரசு இந்த அதிகாரத்தைப் பயன்படுத்தலாம்.

1898 ஆம் ஆண்டின் 'இந்திய அஞ்சலகச் சட்டம்' (Indian Post Office Act) நெருக்கடிக் காலத்திலும், நாட்டின் பாதுகாப்பு, அமைதி கருதியும் அரசோ அல்லது அதிகாரம் பெற்ற அலுவலரோ அஞ்சல் வழி அனுப்பப் பெற்றதைச் சோதிக்கவோ, வழங்காமல் நிறுத்தி வைக்கவோ, நடவடிக்கை எடுக்கவோ அதிகாரம் வழங்குகின்றது.

இந்தச் சட்டத்தை அரசு தவறாகப் பயன்படுத்தவோ இதன் மூலம் பத்திரிகைச் சுதந்திரத்தைப் பாதிக்கவோ வாய்ப்பு இருக்கின்றது. ஆனால் நாட்டின் பாதுகாப்பு, அமைதி நோக்கில் இத்தகைய கட்டுப்பாடுகள் தேவைப்படுகின்றன.

## பணிசெய் இதழாளர் சட்டம்

1956 ஆம் ஆண்டு நிறைவேற்றப் பெற்ற 'பணி செய் இதழாளர் சட்டம்' (The Working Journalist Act) பத்திரிகைகளில் பணி செய்கின்றவர்கள் தொடர்பான ஊதியம், வைப்பு நிதி, பணிக்காலம், விடுமுறை ஆகியவற்றை வரையறுத்துக் கூறுகின்றது. இதழாளர்கள் யார் என்பதையும் விளக்குகின்றது.

## அம்சங்கள்

பணிசெய் இதழாளர் சட்டத்திலுள்ளவற்றில் சில குறிப்பிடத் தக்க அம்சங்களைக் காண்போம்.

செய்தித் தாள்களில் பணிசெய்கின்ற ஆசிரியர்கள், துணையாசிரியர்கள், செய்தியாளர்கள் ஆகியோர் வாரத்தில் ஆறுநாள் மட்டுமே பணி செய்ய வேண்டும். ஏழாவது நாள் அவர்களுக்கு விடுமுறை வழங்க வேண்டும்.

இச்சட்டம் வேலைக் காலத்தை ஒரு நாளைக்கு ஆறு மணி நேரமென்றும், வாரத்திற்கு 36 மணி நேரமென்றும், ஒரு திங்களுக்கு 144 மணி நேரமென்றும் வரையறுத்துக் கூறுகின்றது.

செய்தியாளர்கள் (Reporters) ஒரு நாளில் ஒரு பணி (Assignment) செய்தால் போதும். அவர்கள் ஒரு நாளில் இரு பணிகளை மேற்கொள்ள நேரிட்டால் மறுநாள் பணி செய்ய வேண்டியதில்லை.

இச்சட்டம் குறிப்பிட்ட கால இடைவெளியில் பத்திரிகை யாளர்களின் ஊதியங்களை நிர்ணயிப்பதற்காக 'ஊதியக் குழு' நியமிக்க வழிவகுக்கின்றது. இதன்படி, மாறுகின்ற சூழ்நிலைக்கேற்ப இதழாளர்கள் உயர்ந்த ஊதியம் பெற வாய்ப்பு உள்ளது.

## இதர சட்டங்கள்

மேலே விளக்கிய பத்திரிகைச் சட்டங்கள் தவிர, இதழாளர் கவனத்தில் கொள்ள வேண்டிய சில முக்கியமான சட்டங்கள் உள்ளன. அவற்றை இந்தப் பகுதி விளக்குகிறது.

(i) புத்தகங்கள், செய்தித்தாள்கள் அனுப்புதல் சட்டம் : 1954 இல் 'புத்தகங்கள், செய்தித்தாள்கள் (பொது நூலகங்களுக்கு) அனுப்புதல் சட்டத்தை (Delivery of Books and Newspapers) (Public Library Act) அரசு நிறைவேற்றியது. இதன்படி, வெளி யிடுகின்ற புத்தகங்கள் செய்தித்தாள்களின் படிகளை இலவசமாக (1) கல்கத்தாவிலுள்ள தேசிய நூலகம், (2) சென்னையிலிருக்கும் கன்னிமாரா பொதுநூலகம், (3) தில்லியிலிருக்கும் தேசிய மைய நூலகம், (4) மும்பையிலுள்ள மைய நூலகம் ஆகிய நான்கு தேசிய நூலகங்களுக்கும் அனுப்ப வேண்டும்.

(ii) மருந்துகள், தந்திர நிவாரணங்கள் சட்டம் : 1954 இல் அரசு மருந்துகள், தந்திர நிவாரணங்கள் சட்டத்தைக் (The Drugs and Magic Remedies) (Objectionable Advertisement Act) கொண்டு வந்தது. மந்திர, தந்திர ஆற்றல்களோடு நிவாரணம் கிடைப்பதாக விளம்பரங்கள் அளித்து, மக்களை ஏமாற்றி மருந்துகள், மந்திர தாயத்துகள், மோதிரம் போன்றவற்றை விற்பனை செய்வதைத் தடுப்பதே இந்தச் சட்டத்தின் நோக்கமாகும்.

(iii) குற்றவியல் சட்டங்கள் : 1860 இல் நிறைவேற்றப் பெற்ற இ.பி. கோ. (Indian Penal Code) சில தடுக்கப்பட வேண்டியவற்றை அச் சிடுவதும், வெளியிடுவதும், புழக்கத்தில் விடுவதும் குற்றமெனக் கூறுகின்றது. 124A பிரிவு நாட்டின் மீது வெறுப்பை வளர்ப்பதைத் தேசத் துரோகக் (Sedition) குற்றமாக்குகின்றது. 153A பிரிவின்படி மதம், இனம், பிறப்பிடம், வாழுமிடம் ஆகியவற்றின் அடிப்படையில் பல்வேறு குழுக்களிடம் வெறுப்பை வளர்ப்பது தண்டிக்கப்பட வேண்டிய குற்றமெனக் கூறுகின்றது. 1973 ஆம் ஆண்டின் குற்றவியல் வழக்குமுறையின் (Criminal Procedure Code) 95 ஆம் பிரிவுப்படி குற்றவியல் சட்டப்படி செய்தித்தாளோ, நூலோ தடுக்கப்பட வேண்டிய உள்ளடக்கத்தைக் கொண்டிருப்ப தாக மாநில அரசு கருதினால், அவற்றைப் பறிமுதல் செய்ய அதிகாரம் அளிக்கின்றது.

iv) பரிசுப் போட்டிச் சட்டம் : 1955 ஆம் ஆண்டின் பரிசுப் போட்டிச் சட்டம் (The Prize Competition Act) சட்டத்திற்குப் புறம்பான முறையில் நடைபெறும் பரிசுப் போட்டி பற்றி விளம்பரப்படுத்து வதைத் தடை செய்கின்றது.

# 12. இதழ்களின் சுதந்திரம்

இதழ்கள் சுதந்திரத்தோடும் பொறுப்போடும் நடந்துகொள்ள வேண்டும். நமது நாட்டில் அமைந்த முதல் பத்திரிகைக்குழு (Press Commission) நாட்டிலுள்ள பத்திரிகைகளின் நிலையையும் தரத்தையும் பற்றி ஆராய்ந்தது. சில செய்தித்தாள்கள் உயர்ந்த தரத்தோடு செயல்பட்டாலும், பெரும்பாலான இதழ்கள் தங்களது விற்பனையைக் கூட்டும் வணிக நோக்கில் 'தரக்குறைவாகவும்' பண்பற்ற முறையிலும் தனிமனிதர்களைத் தாக்கும் வகையிலும் எழுதுவதாகப் பத்திரிகைக்குழு சுட்டிக் காட்டியது.

பத்திரிகைக்குழு ''பத்திரிகைகளின் சுதந்திரத்தைக் கட்டிக் காக்கவும், இதழியல் தொழிலில் ஈடுபட்ட அனைவரிடமும் பொறுப்புணர்ச்சியையும் தொண்டு மனப்பான்மையையும் வளர்க்கவும்'' ஓர் இதழ் மன்றத்தை (Press Council) அமைக்க வேண்டுமென்று பரிந்துரைத்தது.

சுவீடனில் 1916 இல் முதல் முறையாக இதழ் மன்றத்தை அமைத்தனர். இதனைப் பின்பற்றி உலகின் பல்வேறு நாடுகளிலும் இதழ் மன்றங்களை அமைத்திருக்கின்றனர். இப்பொழுது நாற்பது நாடுகளில் இதழ் மன்றங்கள் உள்ளன.

## இதழ் மன்ற அமைப்பு முறை

நமது நாட்டில் முதல் இதழ்க் குழுவின் பரிந்துரையைத் தொடர்ந்து, நாடாளுமன்ற மக்களவையில் (Lok Sabha) 'இதழ் மன்ற மசோதாவை'க் (Press Council Bill) கொண்டு வந்தனர். ஆனால் பொதுத் தேர்தலுக்காக 1957 ஏப்ரலில் நாடாளுமன்றம் கலைக்கப் பெற்றதால் மசோதா சட்டமாகாமல் செயலற்றுப் போனது.

எட்டாண்டுகளுக்குப் பிறகு தேசிய ஒற்றுமை மன்றம் (National Integration Council) இதழ் மன்றம் அமைக்க வேண்டிய தேவையை வலியுறுத்தியது. இதன்படி 1965இல் 'இதழ் மன்றச் சட்டத்தை' (The Press Council Act) நிறைவேற்றியது. இந்திய இதழ் மன்றத்தை 1966 ஆம் ஆண்டு ஜூலை 4 ஆம் நாள் அமைத்தனர். இதன் தலைவராக நீதிபதி ஜே.ஆர். மதோல்கர் (J.R. Madholkar) பொறுப்பேற்றார்.

1975 இல் நாட்டில் நெருக்கடி நிலையை அறிவித்தபொழுது, குடியரசுத் தலைவர் 1975 டிசம்பர் 8 இல் ஓர் ஆணை பிறப்பித்து, 1976 ஜனவரி 10 இல் இதழ் மன்றத்தை நீக்கினார்.

நெருக்கடி நிலை நீங்கிய பிறகு, 1978 இல் இதழ் மன்றச் சட்டத்தை மறுபடியும் கொண்டு வந்தனர். இந்தச் சட்டம் 1979 மார்ச் முதல் தேதி நடைமுறைக்கு வந்தது.

இதழ் மன்றத்தில் ஒரு தலைவரும் 28 உறுப்பினர்களும் இருப்பார்கள். உறுப்பினர்களில் 20 பேர் இதழாளர்களாகவும் 5 பேர் நாடாளுமன்றத்தைச் சேர்ந்தவர்களாகவும், 3 பேர் கல்வி, அறிவியல், சட்டம், இலக்கியம், பண்பாடு ஆகிய துறைகளில் சிறப்பறிவு பெற்றவர்களாகவும் இருப்பார்கள்.

இதழ் மன்றத்தின் தலைவரை நாடாளுமன்ற மேலவைத் தலைவர், மக்களவைத் தலைவர், இதழ் மன்ற உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப் பெற்ற ஓர் உறுப்பினர் ஆகியவர்களைக் கொண்ட குழு தீர்மானிக்கும். இதழ் மன்றம் சில நீதிமன்றப் பணிகளையும் மேற்கொள்ள வேண்டியிருப்பதால் உயர்மட்ட நீதிமன்ற (Supreme Court) நீதிபதிகளையே பொதுவாக இதழ் மன்றத் தலைவராக நியமிக்கின்றனர்.

**மன்றத்தின் பணிகள்**

இதழ்களின் சுதந்திரத்தைக் காப்பதும், செய்தித் தாள்கள், செய்தி நிறுவனங்களின் தரத்தைக் காத்து மேம்படுத்துவதும் இதழ் மன்றத்தின் தலையாய நோக்கமாதலால், அதனை நிறைவேற்றும் வகையில் மன்றம் பணிகளை மேற்கொள்கின்றது.

மன்றம், செய்தித்தாள்களும், செய்தி நிறுவனங்களும் உயர்ந்த தொழில் தரத்தை நிலைநாட்டும் வகையில் பின்பற்ற வேண்டிய நெறிமுறைக் கோட்பாடுகளை உருவாக்கித் தரவேண்டும்.

செய்தித்தாள்களும் செய்தி நிறுவனங்களும் சுதந்திரமாகச் செயல்பட உதவுவதும் மன்றத்தின் பணியாகும். செய்தித் தாள்களும் செய்தி நிறுவனங்களும் இதழியலாளர்களும் பொது நல நாட்டத் தோடும், பொறுப்போடும் உரிமை உணர்வோடும் பணி செய்யத் துணை செய்ய வேண்டும். இதழ்களை வெளியிடுவதில் ஈடுபட்டுள்ள எல்லாப் பிரிவினரிடமும் நல்ல தொழில் தொடர்பு நிலவத்தக்க சூழ்நிலையை உருவாக்க முயல வேண்டும்.

மன்றம் இதழ்களின் அமைப்பு முறை, செய்தித்தாள்கள், செய்தி நிறுவனங்கள் ஆகியவற்றின் உடைமை குவிதல் நிலை ஆகியவற்றை ஆராய்ந்து இதழ்கள் சுதந்திரமாகச் செயல்பட வேண்டிய பரிந்துரைகளைச் செய்ய வேண்டும்.

வெளிநாட்டு உதவிகளைப் பெறும் செய்தித் தாள்களை மதிப்பிட்டுக் கூறும் பணியும் இந்த மன்றத்தினுடையதாகும்.

## செயல்பாடு

இதழ் மன்றம் அதனிடம் வரும் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்ப ளிக்கின்றது. வரையறுத்த அதிகாரத்திற்குள் 1966 முதல் 1981 வரை இம் மன்றம் 800 வழக்குகளை விசாரித்துள்ளது. இவற்றில் 214 வழக்குகள் இதழ்ச் சுதந்திரம் தொடர்பானவையும் மத்திய மாநில அரசுகளின் மீது இதழ்கள் கொண்டு வந்தவையுமாகும். 566 வழக்குகள் இதழ்களின் மீது தனிமனிதர்களும், நிறுவனங்களும், மத்திய, மாநில அரசுகளும் கொண்டு வந்தவை. மன்றத்தின் முடிவுகளைப் பல செய்தித்தாள்களில் வெளியிடுகின்றனர்.

இதழ் மன்றம் இதழாளர்கள் பின்பற்ற வேண்டிய நெறி முறைகளை வரையறுத்துக் கூறவில்லை. காலப்போக்கில் வருகின்ற வழக்குகளை விசாரித்துக் கூறுகின்ற தீர்ப்புகளின் அடிப்படையில் நெறிமுறையினை உருவாக்க இயலுமென்று கருதுகின்றது.

இதழ்களுக்கும் பொது மக்களுக்கும் இடையில் இதழ் மன்றம் ஒரு பாலமாக விளங்குகின்றது.

## மதிப்பீடு

இதழ் மன்றத்திற்கு இதழ்களைக் கட்டுப்படுத்தவும், தண்டிக்கவும் போதுமான அளவு அதிகாரம் வழங்கப் பெறவில்லை. ஆதலால் அவை திறமையாகப் பணிபுரிய இயலவில்லை என்று கருதுகின்றனர்.

இதழ் மன்றத்தை, ''இது ரப்பர் பற்களைக் கொண்ட காகிதப் புலி'', ''தெளிவற்ற அதிகாரமற்ற ஓர் அமைப்பு'' என்றெல்லாம் தொடக்ககாலத்தில் வருணித்தனர். ஆனால் இதழ் மன்றம் இப்பொழுது ஆற்றல் பெற்று வளர்ந்து வருகின்றது. இதன் தேவையை எல்லாத் தரப்பினரும் உணர்ந்துள்ளனர்.

இதழின் சுதந்திரத்தையும், தரத்தையும் காக்கக்கூடிய நிறுவனமாக இதழ் மன்றம் இருப்பதால், இதனை வலுவானதாக்கி, திறமையாகச் செயல்படத்தக்க சூழ்நிலையை உருவாக்கித் தருவது இந்திய இதழ்கள் வளர்ச்சிக்குத் துணை செய்யும்.

இதழ்களின் முழுப் பயனும் மக்களுக்குக் கிடைக்க வேண்டு மானால் அவை சுதந்திரமாகச் செயல்பட வேண்டும். 'பத்திரிகைச் சுதந்திரம் (Freedom of the press) எந்த அளவிற்கு இருக்க வேண்டும்' என்பதைப் பற்றிய விவாதம் தற்கால இதழியல் வளர்ச்சியை ஒட்டிய ஒன்றாகி விட்டது.

இதழ்களின் சுதந்திரத்தை அறிஞர்களும், தலைவர்களும் உலகெங்கும் வலியுறுத்தியுள்ளனர். அவற்றில் சில முக்கியமான கருத்துகளை இங்குக் குறிப்பிடலாம்.

அண்ணல் காந்தியடிகள்,

> பேச்சு, எழுத்து, சுதந்திரம் ஆகியவை சுயராஜ்யத்தின் அடித்தளம். அடித்தளக் கல்லுக்கு ஆபத்து ஏற்பட்டால், அந்த ஒற்றைக் கல்லைக் காப்பதற்காக நீங்கள் உங்கள் முழுச் சக்தியையும் பயன்படுத்த வேண்டும்

என்றும்

> சுதந்திரமாகப் பேசுதல், சுதந்திரமாகக் கூடுதல், சுதந்திரமான பத்திரிகை ஆகியவற்றை மறுபடியும் கொண்டு வருவது சுயராஜ்யத்தின் நோக்கம் என்று கூறலாம்

என்று தெரிவித்துள்ளார்.

சர்ச்சில் (Churchill) ''சுதந்திர மனிதன் புகழ்கின்ற ஒவ்வொரு உரிமையையும் தூங்காமல் கட்டிக் காக்கும் காவலன் சுதந்திரமான பத்திரிகையே'' என்று கருதுகின்றார்.

ஹென்றி காபோட் லாட்ஜ் (Hentry Cabot Lodge) என்பவர்

> பத்திரிகைச் சுதந்திரம் என்பது, அமைதி நிலவ வேண்டுமானால் உலகமெல்லாம் பின்பற்றவேண்டிய ஒரு கொள்கையைச் சார்ந்து அமைகின்றது. அந்தக் கொள்கைதான் சகிப்புத் தன்மை. அதாவது, விமர்சனத்தைத் தாங்கிக் கொள்வதும், யாரிடமும் கறையற்ற உண்மை இல்லை என்பதும் இந்தக் கொள்கையின் அடிப்படையாகும்

என்கிறார்.

ஆர்.சி.எஸ். சர்க்கார் மிகவும் விளக்கமாக,

> பத்திரிகை மக்களுக்கு எல்லாவற்றையும் தெரிவிக்கவும், பொது விவாதத்தையும், அறிவார்ந்த திறனாய்வையும் உருவாக்கும் வாய்ப்பினை வழங்கவும் வேண்டுமானால் பத்திரிகை சுதந்திரமாகவும் (Free) தனித்துவம் (Independent) உடையதாகவும் இருக்க வேண்டும். இந்த இரண்டு பண்புகளும் பிரிக்க முடியாதவை. இவை இரண்டும் மிகவும் இன்றியமையாதவை. சுதந்திரமான பத்திரிகை தனித்து நிற்கும் பத்திரிகையாகவும் இருக்க வேண்டும்

என்கிறார்.

மக்களாட்சிக்கு ஆதாரமாக இதழ்ச் சுதந்திரம் இருந்த போதிலும், எல்லா அரசுகளும் இதழ்களை அடக்கி, தங்கள் கட்டுப்பாட்டிற்குள் வைத்துக் கொள்வதில் கண்ணும் கருத்துமாக இருக்கின்றன. இப்பொழுதுள்ள இதழ்ச்சுதந்திரம் என்பது நீண்ட காலப் போராட்டத்திற்குப் பின் இதழ்கள் பெற்ற தென்பது கவனிக்கத்தக்கது.

## இதழ்ச் சுதந்திரம் - பொருள் விளக்கம்

''பிரஸ்'' (Press) என்ற ஆங்கிலச் சொல்லைத் தமிழில் இதழ் என்று மொழிபெயர்க்கின்றோம். அந்த ஆங்கிலச் சொல்லுக்கு அச்சிடுவதற்குரிய கருவிகளையும், எந்திரங்களையும் கொண்ட 'அச்சகம்' என்ற பொருளும் உண்டு. விரிந்த பொருளில் பொதுச் செய்திகளையும், அவை பற்றிய கருத்துகளையும் கொண்ட இதழ்களைக் குறிக்கும் வகையில் இதனைப் பயன்படுத்துகின்றனர். இங்கு இந்த வகையில் செய்தித்தாள்கள், மலர்கள், செய்திப் பணிகள் (News Services), இதழ்களில் பணிபுரியும் எல்லா வகை இதழாளர்கள் ஆகிய அனைத்தையும் குறிக்கும் வகையில் 'இதழ்' என்ற சொல்லைப் பயன்படுத்துகிறோம்.

## இதழ்ச் சுதந்திரம்

பலரும் வெவ்வேறு பொருளில் 'இதழ்ச் சுதந்திரம்' என்ற சொற்றொடரைப் பயன்படுத்துகின்றனர். சிலர், எந்த வகையான சட்டமோ கட்டுப்பாடோ இல்லாமல் எதனையும் அச்சிட்டு வெளியிடும் சுதந்திரத்தைக் குறிப்பிடுகின்றனர். வேறுசிலர் விருப்பு, வெறுப்பின்றிச் செய்திகளை வெளியிடுதல்; அரசின் நிருவாகக் கட்டுப்பாடின்றிச் சுதந்திரமாகச் செயல்படல்; விளம்பரதாரர்கள், செல்வாக்குப் படைத்தவர்களின் தலையீடின்றி இருத்தல்; நிதி பிறவற்றிற்கு மற்றவர்களைச் சாராமல் இருத்தல் என்ற பொருளிலும் பயன்படுத்துகின்றனர்.

இந்தியாவின் முதல் இதழ்க் குழு (Press Commission),

> பொது அதிகாரத்தின் எந்த வகையான தலையீடும் இல்லாமல்
> கருத்துகளைக் கொண்டிருக்கவும், செய்திகளைப் பெறவும்,
> அச்சிட்டு வெளியிடவும் இருக்கின்ற சுதந்திரம்

என்று இதழ்ச் சுதந்திரத்தை விளக்குகின்றது. அதாவது, தாங்கள் எதனை வெளியிட விரும்புகின்றார்களோ அதனை அரசின் முன் அனுமதியின்றி அச்சிட்டு வெளியிடப் பொது மக்களுக்குரிய உரிமையை இது குறிக்கின்றது. ஆனால் வெளியிட்டதற்குரிய சட்டப் பூர்வமான பொறுப்பினை வெளியிட்டவர் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

## கூறுபாடுகள்

மக்களாட்சியில் மக்களுக்குக் கிடைத்திருக்கின்ற சுதந்திரங்களில் இதழ்ச் சுதந்திரமும் உள்ளடங்கியுள்ளது. பொதுவாக மக்களாட்சியில் அச்சிடும் உரிமை (Right to Print), திறனாய்வு உரிமை (Right to Criticise), அறிவிக்கும் உரிமை (Right to Report) இதழ்களுக்கு இருக்கின்றன. இதனை வேறுவகையில் ஆர்.சி.எஸ். சர்க்கார்,

> பத்திரிகைச் சுதந்திரத்தில் (i) செய்திகளின் எல்லா மூலங்களோடும் தொடர்பு கொள்ளும் சுதந்திரம்; ii) வெளியீட்டுச் சுதந்திரம், (iii) சுற்றுக்கு (புழக்கத்தில்) விடும் சுதந்திரம் (Freedom of Ciruculation) ஆகிய மூன்று முக்கியக் கூறுகளும் இருக்கின்றன

என்று கூறுகின்றார்.

கொலம்பியாவிலுள்ள மிசெளரி பல்கலைக்கழகத்திலிருக்கும் (University of Missouri) சுதந்திரத் தகவல் மையம் (Freedom of Information Centre) 1958இல் இதழ்ச் சுதந்திரத்தின் கூறுகளாகக் கீழ்க்கண்ட வற்றைக் கூறுகின்றது.

1. செய்திகளைப் பெறுவதற்கு உரிமை.
3. முன் கட்டுப்பாடின்றி அச்சிடும் உரிமை.
3. தண்டனை பற்றிய அச்சமோ, அச்சுறுத்தலோ இன்றி அச்சிடும் உரிமை.
4. தகவல் தொடர்புக்கு வேண்டிய வாய்ப்புகளையும், சாதனங்களையும் பெற்றுக் கொள்கின்ற உரிமை.
5. சட்டப்படி செயல்படும் அரசோ, சட்டத்திற்குப் புறம்பாக மக்களோ தலையிடாமல் செய்திகளைப் பரப்புகின்ற உரிமை.

இத்தனை உரிமைகளையும் இதழ்களுக்கு வழங்க வேண்டுவதன் நோக்கம், அவை மக்களாட்சி செவ்வனே செயல்படவும், மக்கள் நலனைக் காக்கவும் பணி செய்ய வேண்டும் என்பது தான். அளவு கடந்த சுதந்திரம் இருக்கின்ற பொழுது இதழ்கள் மிகவும் பொறுப் போடு செயல்பட வேண்டும். இதழ்ச் சுதந்திரம் ஒரு கூட்டுச் சுதந்திரம் (Collective Freedom) என்பதனைப் புரிந்து கொள்ள வேண்டும்.

## இதழ்ச் சுதந்திரத்தின் தேவை

1977 இல் பன்னாட்டு இதழ் நிறுவனமும் ஃபிரண்ட் - ரிச் - நவ்மான் ஸ்டிஃபிங் என்ற அமைப்பும் (International Press Institute and the Friend - rich - Naumann - Stiffing) நடத்திய கருத்தரங்கில் பங்கு பெற்ற இந்தியச்

செய்தியாளர்கள், ''இந்தியாவில் பத்திரிகைச் சுதந்திரமும் மக்களாட்சியும் பற்றிய அறிவிப்பு'', (Declaration on Press Freedom in India and Democracy) என்று ஏழு கருத்துகள் கொண்ட ஓர் அறிக்கையை வெளியிட்டனர். அக்கருத்துகள் இதழ்ச் சுதந்திரத்தின் தேவையைக் கூறுவதால், அவற்றைக் காண்போம்.

1. எல்லாச் சுதந்திரங்களின் இதயமாக இதழ்ச் சுதந்திரம் இருக்கின்றது. செய்திகளையும் சிந்தனைகளையும் சுதந்திரமாகப் பரிமாறிக் கொள்ள இயலாவிட்டால், வேறு எந்த உரிமையும் கிடைக்காமல் போய்விடும். சுதந்திரச் சமுதாயத்தின் தூண்களில் ஒன்றுதான் இதழ்ச் சுதந்திரம்.

2. மக்களாட்சியில் வேறுபட்ட பங்கினைச் செய்ய இதழ்களுக்கு உரிமை இருக்கின்றது. பொது நல ஈடுபாட்டோடு எல்லா நிலைகளில் உள்ள அதிகாரத்தையும் விமர்சிக்கும் உரிமை இதழ்களுக்கு உண்டு. மக்களின் சிக்கல்களை அரசு எப்படி தீர்க்கின்றது என்பதைக் காக்கும் காவல் நாயாக அரசைக் கண்காணிக்க இந்த உரிமை இதழ்களுக்குத் தேவைப்படுகின்றது. சமுதாயத்திற்குப் பொறுப்புள்ளதாக, எல்லாவகைச் செய்தி களையும் அச்சமின்றி, சிதைக்காமல், மறைக்காமல் வழங்குவது இதழ்களின் கடமை. இந்தக் கடமையை நிறைவேற்றுவதற்குச் சுதந்திரம் தேவை.

3. மக்கள் தங்கள் விருப்பப்படி வெளியிடவும் செய்தித்தாள்களைப் படிக்கவும் உரிமை பெற்றிருக்க வேண்டும். ஆசிரியருக்கு நிருவாகத்தின் தலையீடின்றிச் செயல்படும் உரிமை இருக்க வேண்டும்.

4. சுதந்திரமான இதழ் அதன் வாசகர்களின் நம்பிக்கையைப் பெற்றிருக்க வேண்டும். இதற்கு இதழ் தன்னைத் தானே நெறிப் படுத்திக் கொள்வதும் தேவையாகும்.

5. ஒன்றுக்கு மேற்பட்ட செய்தி நிறுவனங்கள் (News Agencies) இருக்க வேண்டும். அவை அரசின் கட்டுப்பாடின்றிப் போட்டி போட்டுக் கொண்டு செயல்பட வேண்டும்.

6. இதழ்ச் சுதந்திரத்தைப் பொருளாதார நெருக்கடிகளை உருவாக்கிக் கழுத்தை நெரிக்கக் கூடாது. தனிப் பத்திரிகைகளின் விளம்பரக் கட்டணங்களை நிர்ணயித்தல், அரசின் விளம்பரங்களை வாங்குவதன் மூலம் மறைமுகமாக அச்சுறுத்தல் போன்றவற்றை அரசு பின்பற்றக் கூடாது.

7. செய்திகளின் கட்டுப்பாடற்ற ஓட்டத்திற்குச் சுதந்திரமான இதழ் மட்டுமன்றிச் சுதந்திரமாகவும் போட்டியிட்டுக் கொண்டும் செயல்படுகின்ற வானொலி, தொலைக்காட்சி நிறுவனங்களும் தேவை.

## சுதந்திரமாகச் செயல்படத் தடைகள்

இதழ்கள் தனித்து நிற்கவும், சுதந்திரமாகச் செயல்படவும் சில நடைமுறைத் தடைகள் உள்ளன. இவற்றை இதழியல் வல்லுநர்கள் *'அகத் தடைகள்'* (Internal), *'புறத் தடைகள்'* (External) என்று பிரிக்கின்றனர்.

### அகத்தடைகள்

இதழ்களின் சுதந்திரத்திற்குப் பத்திரிகை அமைப்புக்குள்ளும், செயல்படும் முறைகளிலும் இருக்கின்ற உள்ளார்ந்த அகத் தடைகளைச் சுட்டிக்காட்டலாம்.

- **பொருள் சார்பு :** பொருளாதார அடிப்படையில் தன்னிறைவின்றி, நிதிக்கு மற்றவர்களைச் சார்ந்திருக்கும் இதழ்களால் சுதந்திரமாகச் செயல்பட முடியாது. போதிய நிதிவள மில்லாதவற்றால் தற்கால எந்திரங்களையும், திறமையான இதழாளர்களையும் பயன்படுத்தித் தரமான முறையில் இதழ்களை நடத்த இயலாது.

- **கொள்கையின்மை :** கொள்கையும், குறிக்கோளும் இன்றி இதழ்கள் நடத்துபவர்களால் அச்சமின்றி, சுதந்திரமாகச் செயல்பட முடியாது. இப்போது அரசியல் கட்சிகளின் செல்வாக்கும், தொழிலதிபர்களின் செல்வாக்கும், ஆதிக்கப் பலமுடையவர்களின் அதிகாரமும் இதழ்களைத் தங்களது நலனுக்குப் பயன்படுத்திக் கொள்ள முயல்கின்றன. இத்தகைய ஆற்றல் மிக்கவர்களின் ஆதரவைப் பெற்று, ஆதாயம் தேடிக் கொள்ள இயலும் இதழ்களால் சுதந்திரமாகச் செயல்பட முடியாது.

- **ஆசிரியருக்குச் சுதந்திரமின்மை :** பெரிய இதழ்களைத் தனிப்பட்ட முதலாளிகளோ, நிறுவனங்களோ நடத்துகின்றன. அவற்றில் பணி செய்யும் ஆசிரியர்களுக்கு முழுச் சுதந்திரமும் இருப்பதில்லை. ஆசிரியர் சுதந்திரமாகச் செயல்பட முடியா விட்டால் இதழ்களின் தரம் குறையும்.

- **இதழ் உடைமைக் குறை :** ஒரு சிலரின் கையில் பத்திரிகைகள் இருந்து, முற்றுரிமை (Monopoly) நிலை நிலவுமானால், முதலாளி களின் விருப்பப்படிதான் இதழ் செயல்பட முடியும். பொது மக்களின் கருத்துகளை இருட்டடிப்புச் செய்கின்ற நிலை ஏற்படலாம்.

- **இதழாளர் சங்கம் :** வலுவான இதழாளர் சங்கம் அமைத்து, அது இதழ்களைக் கட்டுப்படுத்தும் நிலை ஏற்பட்டாலும் இதழ் சுதந்திரமாகச் செயல்பட இயலாது. 'இண்டியன் எக்ஸ்பிரஸ்' (Indian Express) ஆங்கில நாளிதழ் இத்தகைய கடுமையான நெருக்கடிக்கு ஆளானது.

## புறத்தடைகள்

இதழ்களின் அமைப்புக்கு வெளியிலிருந்து வருகின்ற முக்கியமான சுதந்திரத் தடைகளாகக் கீழ்க்கண்டவற்றைக் கூறலாம்.

- **விளம்பரதாரர்களின் செல்வாக்கு :** வணிகமும், தொழிலும் தனியார் கையிலிருக்கும் அமைப்பு முறையில், விளம்பரதாரர்கள் செல்வாக்குடையவர்களாக இருப்பார்கள். அவர்கள் நினைத்தால் இதழ்களைக் கட்டுப்படுத்த இயலும்.

- **கூட்டங்களின் தாக்குதல்கள் :** சில வேளைகளில் கட்டுப்பாடற்ற கூட்டங்கள் (Mobs) தங்களுக்கெதிராகச் செய்திகள் வெளியாகும் பொழுது இதழ்களைத் தாக்கி இழப்புகளை ஏற்படுத்துகின்றன. அரசியல் கட்சியினர் இப்படி வன்முறையில் ஈடுபட்டு இதழ்களைக் கட்டுப்படுத்த முயன்ற நிகழ்ச்சிகள் நமது நாட்டில் நடைபெற்றுள்ளன.

## இதழ்ச் சுதந்திரத்தின் வரையறைகள்

எந்தச் சுதந்திரமும் முழுமையானதாகவோ, வரையறைக்கு அப்பாற்பட்ட புனிதமானதாகவோ இருக்க முடியாது. அதற்கும் ஒரு வ்ரையறை - எல்லை இருக்க வேண்டும்.

ஜவஹர்லால் நேரு, சுதந்திரத்தின் இயல்பை அருமையாக

> கண்ணுக்குப் புலப்படாத, முழுமையான சுதந்திரம் என்பது எதுவும் இல்லை. ஒரு நாட்டின் சுதந்திரமாக இருந்தாலும் தனி மனித சுதந்திரமாக இருந்தாலும், ஒரு குழுவின் சுதந்திரமாக இருந்தாலும், பத்திரிகைச் சுதந்திரமாக இருந்தாலும், அந்தச் சுதந்திரத்தோடு எப்பொழுதும் ஒரு கடமையும் ஒட்டிக்கொண்டிருக்கும். ஆகையால் சேர்ந்து செல்லும் பொறுப்பினையும் எண்ணிப் பார்க்க வேண்டும். பொறுப்பும், கடமையும் அதனோடு இணைந்திருக்கவில்லை என்றால், படிப் படியாகச் சுதந்திரம் என்பது மறைந்து போகும். இந்த உண்மை நாட்டின் சுதந்திரத்திற்குப் பொருந்துவதைப் போன்றே பத்திரிகைச் சுதந்திரத்திற்கும் பிற குழு,

> நிறுவனம் அல்லது தனிப்பட்டவரின் சுதந்திரத்திற்கும் ஏற்றதாக இருக்கும்

என்று கூறுகின்றார்.

இதழ் மிகவும் ஆற்றல் மிக்க கருவி. அது கட்டுப்பாடற்ற சுதந்திரத்தோடு செயல்பட்டால், காந்தியடிகள் கூறியதைப் போல, அழிவினை விளைவிக்கும் காட்டாற்று வெள்ளமாகி விடும். ஒரு வகை உள்ளார்ந்த கட்டுப்பாட்டோடும், சொந்த நெறிப்படுத்துதலோடும் செயல்படும் இதழ்கள் தான் ஆக்க வழியில் செயல்பட இயலும். இந்த உண்மையினை டி.எஸ். மேத்தா,

> திறனாய்வும், கருத்து மாறுபடுதலும் மக்களாட்சிக்குத் தேவையானவையாக இருந்தாலும், பத்திரிகைகள் நடுநிலையில் நின்று, சலுகைகளுக்காகவோ பணத்திற்காகவோ, புட்டி மதுவுக்காகவோ ஓரம் சாராமல் செயல்படுகின்றனவா என்பதை நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் இதழ் பொதுமக்களின் உரிமைகளைக் காப்பதில் 'காவல் காக்கும் நாயாக'ச் செயல் படுவதையும் திறமையாகச் செய்ய முடியும்

என்கிறார்.

இதழ்களுக்குச் செய்திகளை வெளியிடத்தான் உரிமை இருக்கின்றதே தவிர, அவற்றைத் திரித்துக் கூற உரிமை கிடையாது. அதே போல மற்றவர்களின் உரிமைகளில் தலையிடும் உரிமையும் இதழ்களுக்கு இல்லை. வரையறைகளை உணர்ந்து செயல்படும் இதழ்களை மக்களாட்சியின் கண்களெனக் கருதலாம்.

## இந்தியாவில் இதழ்ச் சுதந்திரம்

ஆர்.சி.எஸ். சர்க்கார்,

> இந்தியப் பத்திரிகை வரலாறு என்பதே அதனுடைய சுதந்திரத்திற்கான போராட்ட வரலாறு தான்,

என்கிறார். தற்கால இந்திய இதழ்கள் தொடங்கிய நாளிலிருந்தே, அவற்றை அடக்கவும் ஒடுக்கவும் ஆட்சியாளர்கள் முயல்வதும், இதழாளர்கள் அவற்றை எதிர்த்துப் போராடுவதும் தொடர்ந்து வந்து கொண்டிருக்கின்றன.

இந்தியாவின் முதல் செய்தித்தாளான 'பெங்கால் கெசட், அட்வர்டைசர்' (Bengal Gazette, Advertiser) 1780 இல் வெளியானது. இதன் ஆசிரியர் ஜேம்ஸ் அகஸ்டஸ் ஹிக்கி (James Augustus Hicky).

இவர் மீதே வழக்குகள் தொடர்ந்து, இவரது இதழை அடக்க முயன்றனர். இவரைப் போன்றே நமது நாட்டில் இதழியலில் புரட்சி செய்த ஜேம்ஸ் சில்க் பக்கிங்காம் (James silk Buckingham) என்ற இதழாளரையும் சிறையிலிட்டுக் கட்டுப்படுத்த முயன்றனர். தொடக்க காலத்தில் இதழியலில் முன்னோடிகளாகத் திகழ்ந்தவர்கள் ஆங்கிலேயர்கள். அவர்கள் சுதந்திரமாகச் செயல்பட்டதை விரும்பாத ஆங்கிலேய அரசு அவர்களை நாடு கடத்திப் பத்திரிகைச் சுதந்திரத்தை நசுக்க முயன்றது.

நாட்டுப் பற்றுள்ள இந்தியர்கள் இதழ்களைத் தொடங்கிய பிறகு பத்திரிகைச் சுதந்திரப் போராட்டம் வலுப்பெற்றது. இந்தியப் பத்திரிகையாளர்களில் இராஜா ராம்மோகன் ராய், அரவிந்கோஷ், லாலா லஜபதிராய், சுரேந்திரநாத் பானர்ஜி, லோகமான்ய திலகர், விபின் சந்திரபால், மகாத்மா காந்தி, மகாகவி பாரதியார், திரு. வி.க ஆகியோர் குறிப்பிடத்தக்கோர் ஆவர். இவர்கள் செய்த முயற்சிகளின் விளைவாக நாடு விடுதலை பெற்ற பொழுது இந்திய இதழ்கள் முழுச் சுதந்திரம் பெற்றன.

## அரசியல் நிர்ணயச் சட்டம்

மக்களாட்சியைக் கட்டிக் காக்க உருவாக்கப்பட்ட இந்திய அரசியல் நிர்ணயச் சட்டம் பேச்சுரிமையையும், கருத்துகளைக் கூறும் உரிமையையும் அடிப்படை உரிமைகளாக (Fundamental Rights) எல்லா மக்களுக்கும் அளித்திருக்கின்றது. இதழ்ச் சுதந்திரத்தைத் தனியாகக் குறிப்பிடவில்லை. ஆனால், 'பேச்சு, கருத்து வெளியீட்டுச் சுதந்திரத்தில்' (Freedom of speech and expression) உள்ளடங்கியதாக இதழ்ச் சுதந்திரத்தைக் கருதுகின்றது.

நமது அரசியல் நிர்ணயச் சட்டத்தின் (The Constitution of India) 19 (1) விதி (Article)

> எல்லா மக்களுக்கும் (1) சுதந்திரமாகப் பேச, கருத்துகளை வெளியிட; (2) ஆயுதங்களின்றி அமைதியாகக் கூட (3) மன்றங்களையும், ஒருங்கிணைப்புகளையும் அமைக்க; (4) இந்தியாவின் எல்லாப் பகுதிகளிலும் சுதந்திரமாக நடமாட; (5) இந்தியாவின் எந்தப் பகுதிகளிலும் வாழ, தங்கிட; (6) சொத்துகளைப் பெற வைத்துக்கொள்ள, கொடுத்துவிட; (7) எந்தத் தொழிலையும் செய்ய; அல்லது எந்தப் பணியையோ வருணிப்பதையோ மேற்கொள்ள உரிமை இருக்கின்றது

என்று கூறுகின்றது. ஆனால் இவ்வுரிமைகள் முழுமையானவை அல்ல. 1951 ஆம் ஆண்டில் நிறைவேற்றிய அரசியல் நிர்ணயச் சட்டத்தின் மூலம்

அரசு, இருக்கின்ற சட்டங்களின் மூலமோ, புதிய சட்டங்களின் மூலமோ இந்த அடிப்படை உரிமையின் மீது 'அறிவார்ந்த கட்டுப்பாடுகளை' (Reasonable Restrictions) விதிக்க அதிகாரம் பெறுகின்றது.

அரசியல் நிர்ணயச் சட்டத்தின் 19 (2) விதி (1) இந்தியாவின் அரசுரிமை, ஒற்றுமை; (2) நாட்டுப் பாதுகாப்பு; (3) வெளிநாடுகளோடு இருக்கும் நட்புத் தொடர்புகள்; (4) பொது ஒழுங்கு; (5) பண்பாடு அல்லது ஒழுக்கம்; (6) நீதிமன்றங்களைத் தூற்றுதல்; (7) பெயரையும்; புகழையும் பாதித்தல்; (8) குற்றங்களைத் தூண்டுதல் ஆகியன தொடர்பாகப் பேச்சு, கருத்து வெளியீட்டு உரிமைகளைத் தேவையான நியாயமான அளவிற்குக் கட்டுப்படுத்த அரசுக்கு அதிகாரம் அளிக்கின்றது. இந்தக் கட்டுபாடுகள் இதழ்களின் சுதந்திரத்திற்கும் பொருந்தக் கூடியவை.

## இதழ் வளர்ச்சி

விடுதலை பெற்ற இந்தியாவில் இதழ்கள் சுதந்திரமாகச் செயல்பட முடிந்ததால், அவை வேகமாக வளர்ந்தன. 1947 இல் ஏறத்தாழ நமது நாட்டில் 1000 செய்தித்தாள்கள் இருந்தன. அவை 1957 டிசம்பரில் 6,903 ஆகவும், 1974 டிசம்பரில் 12,185 ஆகவும் உயர்ந்தன. இது போற்றத்தக்க வளர்ச்சியாகும்.

சுதந்திர இந்தியாவில் இதுவரை அரசியல் நிர்ணயச்சட்டத்தின் 352 ஆம் விதியின் படி மூன்று முறை நெருக்கடி நிலை (Emergency) பிரகடனம் செய்யப்பட்டது. 1962 அக்டோபர் 26 இல் சீனாவின் ஆக்கிரமிப்பின் போது முதல் முறையும், 1970 டிசம்பர் 3 இல் பாகிஸ்தானின் படையெடுப்பின் போது இரண்டாம் முறையும், 1975 ஜூன் 25 இல் உள்நாட்டுக் குழப்பங்களைக் காரணம் காட்டி மூன்றாம் முறையும் நெருக்கடி நிலைமையை இந்திய அரசு செயல்படுத்தியது.

இந்திரா காந்தியின் ஆட்சிக்காலத்தில் 1975 ஜூன் 25 முதல் 1977 மார்ச் 21 வரை பிரகடனம் செய்யப்பட்டிருந்த பத்தொன்பது மாத நெருக்கடிக்காலத்தில் தான் இதழ்ச்சுதந்திரம் பெரிதும் பாதிக்கப்பட்டது. இதழ்களை முழுவதும் கண்காணித்தனர். முன் அனுமதி பெற்றே செய்திகளை வெளியிட வேண்டியிருந்தது. அரசு, விளம்பரங்களைக் கட்டுப்படுத்தியது. இதழுக்கு அச்சுத் தாள் வழங்குவதில் 'கெடுபிடி' மிகுந்தது. நான்கு தனியார் நடத்திய செய்தி நிறுவனங்களைக் கட்டாயப்படுத்தி இணைத்தது. இதழ் மன்றத்தைக் கலைத்தது. 1977 மார்ச் மாதம் நடைபெற்ற பொதுத் தேர்தலில் ஆட்சி மாற்றம் ஏற்பட்டது. இதழ்கள் இழந்த சுதந்திரத்தைத் திரும்பப் பெற்றன.

# 13. செய்தியாளரும் செய்தியும்

**நா**ளிதழின் நாடி நரம்புகளாக விளங்குபவர்கள் செய்தியாளர்கள். பொதுமக்களுடன் நேரடித் தொடர்பு கொண்டவர்களும் செய்தியாளர்களே ஆவர். இவர்களுக்குப் பொது இடங்களில் மிகுந்த மரியாதையும் தனி இடமும் உண்டு. ஆனால் சில வேளைகளில் இவர்கள் மக்களின் வெறுப்புக்கும், தாக்குதலுக்கும் ஆளாக வேண்டியுள்ளது. தொடக்க காலத்தில் செய்தியாளர்கள் தாங்கள் சேகரித்த செய்திகளைக் கடிதம் மூலம் செய்தித்தாள்களுக்கு அனுப்பினர். கடிதத்தை வடமொழியில் 'நிருபம்' என்றதால் செய்திகளை எழுதி அனுப்பியவர்களை 'நிருபர்கள்' (Reporters) என்றார்கள். தமிழில் இவர்களைச் 'செய்தியாளர்கள்' என்று குறிப்பிடுகின்றோம்.

ஒரு காலத்தில் செய்தியாளர்களின் பெயர்களை இதழ்கள் வெளியிடுவதில்லை. பொது மக்களும் தெரிந்து கொள்ள விரும்பியதில்லை. இப்பொழுது நிலைமை மாறிவிட்டது. பெரிய நாளிதழ்கள் முக்கியமான செய்திகளோடு அவற்றை எழுதிய செய்தியாளரின் பெயரையும் வெளியிடுகின்றன. இது சிறந்த செய்தியாளருக்குப் பெயரையும் புகழையும் தேடித் தருகின்றது.

## செய்தியாளர் - விளக்கமும் வகைகளும்

நாளிதழுக்கு வேண்டிய செய்திகளை இனங்கண்டு நாடித் தேடிச் சென்று, சேகரித்துத் தொகுத்துத் தருபவர்கள் செய்தியாளர்கள். செய்தியாளர்கள் இல்லையென்றால் செய்தித்தாள்கள் இல்லை.

> ஒரு கொத்தனாருக்குச் செங்கல் எப்படி முக்கியமோ அவ்வளவு முக்கியம் ஒரு செய்தி நிறுவனத்திற்குச் செய்தியாளர். ஒரு செய்தித் தாள் என்பது அதனுடைய செய்தியாளர்கள் எப்படி உருவாகின்றார்களோ அப்படித்தான் அமையும்''

என்கிறார் எம்.வி.காமத்.

> ஒரு செய்தித்தாளின் பெருமையும் நம்பிக்கையும் பெரிதும் அதனுடைய செய்தியாளர்களையே சார்ந்துள்ளன. அவர்களால் ஒரு செய்தித்தாளை ஆக்கவோ அழிக்கவோ

> முடியும். அவர்கள் தான் ஒரு செய்தித்தாளுக்கு வாழ்வளிக்கும் குருதி போன்றவர்கள்

என்று ரெங்கசாமி பார்த்தசாரதி குறிப்பிடுகின்றார்.

> தொழில்முறைச் செய்தியாளர்கள் வாசகரின், பார்வையாளரின் அல்லது கேட்பவரின் அமர்த்தப்பட்ட கண்களாகவும், காதுகளாகவும், கால்களாகவும், மூளையாகவும் திகழ்கின்றனர். ஒரு செய்தியாளர் வாசகரின் சிந்திக்கும் பதிலாளியாவார் (Thinking Agent) என்றும், செய்தியாளர் இதழியலின் இதயமாவார்,''

என்றும், ஜேம்ஸ் எம்.நீல் என்பவரும் சூசானே எஸ்.பிரவுன் என்பவரும் கூறுகின்றனர்.

> பத்திரிகைகள், நாட்டின் கண்களும் காதுகளும் ஆகும் என்றால், செய்தியாளர்கள் பத்திரிகைகளின் கால்களும் கைகளும் ஆவார்கள்

என்று எம்.செல்லையா விளக்குகின்றார்.

ஒரு செய்தித்தாளின் அடிப்படையாகச் செய்தியாளர் திகழ்கின்றார். செய்தித்தாளுக்கு வேண்டிய அடிப்படையான செய்திகளைத் திரட்டித் தருகின்ற அருமையான, கடினமான, சுவையான பணி அவருடையது. அவர் சாதாரண மனிதர்தான் என்றாலும், தொழிலைச் செய்கின்றபொழுது எல்லாம் தெரிந்தவராகப் பணியாற்ற வேண்டியிருக்கின்றது.

சிறந்த செய்தியாளர்கள் வரலாறு படைத்திருக்கின்றார்கள். கடலில் மூழ்கி முத்தெடுப்பது போலப் பல செய்திகளை வெளிக் கொணர்ந்து பெருமையும் புகழும் பெற்ற செய்தியாளர்கள் இருக்கின்றனர். ஆதலால் தான் அமெரிக்காவில் செய்தி நிறுவனத்தை (Associated Press) அமைத்த மேல்வைல் இ.ஸ்டோன் (Melvile E. Stone), செய்தியாளர்களை மதிப்புடையவர் என்று கூறுகின்றார்.

பொதுவாக எல்லோரும் ஏதாவது செய்திகளைப் பெற்று மற்றவர்களிடம் பரப்பிக் கொண்டிருக்கலாம். ஆனால் எல்லோரும் செய்தியாளர் ஆவதில்லை. ஒரு செய்தியாளர், மற்றவரிடமிருந்து வேறுபடுவதற்குப் பின்வரும் காரணிகள் அடிப்படையானவை.

1. அவர் செய்திகளைப் பரப்புகின்ற வாசகர்களின் (Audience) எண்ணிக்கை;
2. தருகின்ற செய்தியின் பயன்பாடு; சுவை;

3. செய்யும் தொழிலில் பெற்றிருக்கும் அறிவு, செய்யும் முறை, நோக்கம்

என்பவை ஆகும்.

## செய்தியாளர் வகைகள்

செய்தியாளர்களை அவர்கள் செய்கின்ற பணியின் இயல்பினை ஒட்டி வகைப்படுத்தலாம்.

- நகரச் செய்தியாளர்கள் (City Reporters): எந்த இடத்திலிருந்து செய்தித்தாள் வெளிவருகின்றதோ, அங்குச் செய்திகளைத் திரட்டும் பணிகளில் ஈடுபட்டிருப்பவர்களை நகர அல்லது உள் ளூர்ச் (Local) செய்தியாளர்கள் என்கின்றனர். இவர்கள் வட்டார மக்கள் விரும்பிப் படிக்கின்ற சுவையான செய்திகளைச் சேகரித்துத் தருகின்றனர்.
- நகர்ப்புறச் செய்தியாளர்கள் (Mofussil Reporters): மாநிலத்தின் மாவட்டத் தலைநகரங்களில் இருந்துகொண்டு செய்திகளைச் சேகரித்து அனுப்புகின்றவர்களை நகர்ப்புறச் செய்தியாளர்கள் என்று கூறலாம்.
- தேசியச் செய்தியாளர்கள் (National Correspondents): நாட்டின், மாநிலங்களின் தலைநகரங்களில் இருந்து கொண்டு செய்திகளைத் தொகுத்துத் தருகின்றவர்கள் தேசியச் செய்தியாளர்களாவார்கள்.
- வெளிநாட்டுச் செய்தியாளர்கள்: (Foreign Correspondents): வெளி நாடுகளில் தங்கி, உலகச் செய்திகளைத் திரட்டித் தருகின்ற பணியை வெளிநாட்டுச் செய்தியாளர்கள் செய்கின்றனர்.

பொதுவாக, ஒரு செய்தித்தாளில் நேரடிப் பணியாளராக இல்லாமல், அனுப்புகின்ற செய்திகளின் அளவிற்கேற்பப் பணம் பெறுகின்றவர்களைப் 'பகுதிநேரச் செய்தியாளர்' (Part Time Reporter) என்கின்றனர். ஓரிதழின் முழுநேர ஊழியராக இருந்து கொண்டு செய்தி திரட்டுபவரைச் 'செய்தியாளர்' (Correspondents) என்று குறிப்பிடு கின்றனர். நாடாளுமன்ற, சட்டமன்றச் செய்திகளை வழங்குபவர்களை 'மன்றச் செய்தியாளர்கள்' (Lobby Correspondents) என்றழைக்கின்றனர். ஒரு குறிப்பிட்ட நிகழ்ச்சியையோ, வெளிநாடு செல்லும் தலைவர் களைத் தொடர்ந்து சென்றோ, எல்லோரும் அறிய விரும்பும் நாட்டு நடப்புகளையோ பற்றிச் செய்திகளைத் திரட்டித் தருபவர்கள் 'சிறப்புச் செய்தியாளர்கள்' (Special Correspondents) எனப் பெயர் பெறுகின்றனர்.

செய்யும் தொழிலின் திறமையின் அடிப்படையிலும் செய்தியாளர்களை வகைப்படுத்துவதும் உண்டு. 1. பார்ப்பதை அப்படியே எழுதுபவர் செய்தியாளர் (Reporter) 2. பார்ப்பதோடு கூட, தான் ஊகித்துணர்வதையும் சேர்த்துத் தருபவர் விளக்கச் செய்தியாளர் (Interpretative Reporter) 3. பார்க்காதவற்றைப் பற்றிக் கூட, அதன் பொருள் இதுதானென்று தீர்மானித்து, நயம்படத் தருபவர் செய்தி வல்லுநர் (Expert Reporter) என்று அழைக்கப்படுவர்.

## செய்தியாளர் பணிகள், பொறுப்புகள்

செய்தியாளர் உண்மையில் தகவல்களைப் பரப்பும் சமுதாயக் கல்வியாளராகப் பணியாற்றுகின்றார். ஒரு வகையில் அவரது பணி சமுதாயத் தொண்டாகும். மக்களாட்சியில், நாட்டின் அன்றாட நடப்புகளை உடனுக்குடன் தெரிவித்து, மக்கள் விழிப்போடு செயல்படத் தூண்டுகின்ற பணியைச் செய்தியாளர் மேற்கொள்கின்றார்.

## விழிப்பான பணி

செய்தியாளரின் பணி மிகவும் கடினமானதாகும். இருபத்து நான்கு மணிநேரமும் அவர் விழிப்போடு செய்திகளைத் தேடி அலைய வேண்டும். எங்கிருந்து செய்தி, எப்படி வெடித்துச் சிதறுமென்று கூற முடியாது.

நாளிதழில் ஒவ்வொரு செய்தியாளரும் செல்ல வேண்டிய இடத்தையும் (Beat) என்ன பணி (Assignment) செய்ய வேண்டு மென்பதையும் தலைமைச் செய்தியாளர் ஒதுக்குவார். ஆனால் பணியைச் செய்து முடிக்கக் கடினமாக உழைக்க வேண்டும். துணிவும் திறமையும் உள்ள செய்தியாளர்கள் 'கருமமே கண்ணாய்' உழைத்தால் சிறப்பாகச் செய்திகளைத் தேடித் திரட்டித் தந்து புகழ் பெற முடியும்.

## ஆபத்தான பணி

செய்தியாளர் நடக்கும் பாதையில் மலர்கள் தூவப்பட்டிருப்பதில்லை. நெருஞ்சி முள் காட்டிற்குள் நடை பயில்பவர்களைப் போன்றே செய்தியாளர்கள் பணிபுரிய வேண்டியுள்ளது. உண்மைகளை வெளிக் கொணரும் பணியைச் செய்வதால், அதனால் பாதிக்கக் கூடியவர்கள் எப்பொழுதும் செய்தியாளர்களுக்குப் பாதகங்கள் செய்யத் தயங்க மாட்டார்கள். செய்தியாளர்கள் அடிதடிக்கும், அவமானத்திற்கும் அச் சுறுத்தலுக்கும் ஆளாகின்றனர். செய்தியாளர்கள் எதற்கும் துணிந்தவர் களாக இருக்க வேண்டும். செய்தியாளர்களைச் சுட்டுக் கொன்ற நிகழ்ச்சிகளும் கூட நடைபெற்றிருக்கின்றன.

## செய்தி திரட்டும் பணி

ஏது செய்தியாகும் என்பதை முதலில் தேர்ந்தெடுத்து, அந்தச் செய்தி உண்மையானதா என்பதை அறிந்து, செய்தியின் மூலத்தை அணுகி, செய்தியைத் திரட்டித் தருவது தான் செய்தியாளர் பணி. காலத்தோடு போட்டியிட்டு விரைந்து செயல்படுகின்ற செய்தியாளர் வெற்றி பெறுகின்றார்.

செய்தியைத் திரட்டுவதில் சில நிலைகள் உள்ளன. முதலாவதாக, செய்தியாளர் செய்திக்குத் தன்னை வெளிப்படுத்திக் (Exposure) கொள்ள வேண்டும். அதாவது செய்தியின் மூலத்தோடு நேரடித் தொடர்பு கொள்ள வேண்டும். முடிந்தால் செய்திக்குரிய நிகழ்ச்சி நடந்த இடத்தை அடைந்து நேரடியாகச் செய்தியைப் பெற வேண்டும். அல்லது செய்தி வழங்குபவரை அணுகிச் செய்தியை அறிந்து கொள்ள முயல வேண்டும்.

இரண்டாவதாக, நடந்தவற்றைப் பார்க்க வேண்டும். விருப்பு, வெறுப்பின்றி நேரடியாகக் காணக்கூடியவற்றைக் கவனித்து நோக்க வேண்டும். உண்மையை அறிந்து எழுத இப்படி பார்வையிடுதல் துணை செய்கின்றது. அறிக்கைகளாகவோ, புள்ளி விவரங்களாகவோ செய்திகள் கிடைத்தால் அவற்றைப் புரிந்து படித்து, அவற்றிலுள்ள செய்திகளை மட்டும் தெளிவான முறையில் வழங்குவது செய்தியாளர் பணி.

மூன்றாவதாக, பார்த்தவற்றையும், கேட்டவற்றையும் நினைவில் பதித்துக் கொள்ள வேண்டும். செய்தியாளருக்கு நினைவாற்றல் என்பது கைவந்த கலையாக மாற வேண்டும். முதலில் குறிப்புக்கள் எடுத்துக் கொண்டு பின்பு விரித்து எழுத நினைவாற்றல் துணை செய்கின்றது. பதிவு செய்யும் கருவிகளைப் (Tape Recorder) பயன்படுத்தலாம்.

நான்காவதாக, கிடைக்கின்ற விவரங்களில் எவை சரியானவை என்பதைத் தீர்மானித்துத் தேர்ந்தெடுக்க (Selective Judgement) வேண்டும். எந்த நிலையிலும் செய்தியில் பொய்மை கலந்துவிடக் கூடாது ''ஐயத்துக்குரியதை விட்டுவிட வேண்டும்'' (When in doubt leave it out) என்பது செய்தியாளர்கள் பின்பற்ற வேண்டிய நடைமுறைகளில் ஒன்று.

ஐந்தாவதாக, எதனைப் பெரிதுபடுத்தித் (Amplify) தரவேண்டும் என்பதை அறிந்து, அதனையே செய்தியாக, சரியான கோணத்தில் எழுதித் தரவேண்டும். நிறைய விவரங்களைச் சேகரித்து இருக்கலாம்.

எல்லாவற்றையும் செய்தியாக்க வேண்டியதில்லை. முக்கியமானவற்றையும், குறிப்பிடத்தக்க மனிதர்களையும் சேர்த்துப் பின்னிப் பிணைத்துச்சுவையான, பயனுள்ள செய்திகளைப் படைத்துத் தருதல் செய்தியாளர் பணியாகின்றது.

## பொறுப்புகள்

செய்தியாளர் மேற்கொள்வது சமுதாயப் பொறுப்பான பணியாகும். செய்தித்தாள்களில் வெளிவருவனவற்றை நம்பிப் பெரும்பாலான மக்கள் செயல்படுகின்றனர். ''அச்சிட்டது உண்மையாகவே'' இருக்கும் என்பது மக்கள் நம்பிக்கை. இந்த நம்பிக்கையைக் கட்டிக் காக்கும் வகையில் செய்தியாளர் நடந்து கொள்ள வேண்டும்.

சில செயல்கள் உண்மையில் நடந்திருக்கலாம், அதற்கான தக்க ஆதாரங்களும் செய்தியாளரிடம் இருக்கலாம். ஆனால் அவற்றை அப்படியே வெளியிட்டால் சில தனிமனிதர்களோ, சமுதாயமோ பாதிக்கப்படுமானால் அவற்றை வெளியிடக்கூடாது. எடுத்துக் காட்டாக, கற்பழிப்புச் செய்தியில் கற்பழிக்கப்பட்டவரின் பெயரை வெளியிடுவது நல்லதல்ல. சாதி, சமயப் பூசலைத் தூண்டிச் சமுதாயத்தின் அமைதியைக் கலைக்கக் கூடிய விவரங்களை வெளியிடக் கூடாது.

தங்களது செய்தி மூலங்களை இரகசியங்களாகக் காப்பாற்ற வேண்டியது செய்தியாளர்களின் கடமையாகும். சான்றுகளை வெளியிடாமல் வைத்துக் கொள்ளச் சட்டப் பாதுகாப்பும் இருக்கின்றது. சில வேளைகளில் செய்திகளைத் தருகின்றவர்கள் தங்களை வெளிக்காட்டிக் கொள்ள விரும்புவதில்லை. எனவே செய்தி மூலத்தை இரகசியமாகப் பாதுகாக்க வேண்டும்.

நேர்காணல் (Interview) மூலம் விவரங்களைச் சேகரிக்கும் பொழுது, பேட்டியாளர் வெளியிட வேண்டாமென்ற குறிப்போடு விளக்கத்திற்காகச் சிலவற்றைக் கூறலாம். அவை சுவையானதாக இருந்தாலும் அவற்றைச் செய்தியில் சேர்க்கக் கூடாது.

செய்தியாளர், தான் ஒரு நிறுவனத்தைச் சார்ந்தவர் என்பதை மறந்துவிடக் கூடாது. தான் சார்ந்திருக்கும் நிறுவனத்தின் நற்பெயரைக் கட்டிக் காப்பது என்றும் அவரது கடமையாகும். தான் சேகரிக்கும் செய்திகளைத் தனது நிறுவனத்திற்கே தர வேண்டும். வேறு எந்த வகையிலும் ஆதாயம் கருதி, திரட்டிய செய்திகளைச் செய்தியாளர் பயன்படுத்தக் கூடாது.

## செய்தியாளரின் பண்புகள்

ஒரு செய்தியாளர் சிறந்த செய்தியாளராகத் திகழ வேண்டுமானால் அவரிடம் சில தகுதிகளும் பண்புகளும் இருக்க வேண்டும். அவற்றை இங்குக் காண்போம்.

## செய்தி மோப்பத் திறன் (Nose for News)

செய்தியாளர் செய்திகள் கிடைக்குமிடத்தை மோப்பம் பிடிக்கும் ஆற்றல் பெற்றிருக்க வேண்டும். செய்தியைக் கண்டவுடன் அவர்களது மூக்கு வியர்க்க வேண்டும். அவர்களது செய்தி உள்ளுணர்வு எப்பொழுதும் விழித்திருக்க வேண்டும். நல்ல செய்தியாளர் எப்பொழுதும் செய்திக்குப் பசித்திருப்பவராகவும், செய்தியைக் கண்டு கொள்ள விழித்திருப்பவராகவும், செல்லும் முறையில் தனித்திருப்பவராகவும் விளங்க வேண்டும்.

## நல்ல கல்வியறிவு

செய்தியாளர் போதுமான அளவு கல்வியறிவு பெற்றிருக்க வேண்டும். எல்லாவற்றைப் பற்றியும் ஓரளவு அடிப்படை அறிவு பெற்றிருக்க வேண்டும். அவர்களுக்கு எல்லாத் துறைகளும் தெளிவாக இருந்தால் தான், அவற்றைப் பற்றிய செய்திகளை நுட்பமாகவும், ஆழ்ந்தும், முழுமையாகவும் வழங்க முடியும்.

## சரியாகத் தருதல்

செய்திகளைச் சரியாகவும் துல்லியமாகவும் (Accuracy) தருகின்ற பண்பு செய்தியாளருக்கு வேண்டும். எதனையும் ஊகமாக, சரி பார்க்காது எழுதுவது பல வேளைகளில் தொல்லையாகிவிடும்.

> எதனையும் முதலில் பெற வேண்டும்; அதனையும்
> சரியாகப் பெற வேண்டும்,

என்பது தான் செய்தியாளரின் குறிக்கோளாயிருக்க வேண்டும்.

## விரைந்து செயல்படல்

செய்தியாளர் வியக்கத்தக்க வகையில் விரைவாய்ச் (Speed) செயல்பட வேண்டும். செய்தித்தாளின் இறுதிப் பக்கம் தயாராகும் முன்பு, திறமையான செய்தியாளர் சேகரித்த செய்திகளை அனுப்புவார்.

> செய்தியைச் சரியாகப் பெற வேண்டும்; உடனேயும் பெற
> வேண்டும்

என்பதனை மறந்துவிடக்கூடாது.

## நடுநிலை நோக்கு (Objectivity)

செய்தியாளர் தனிப்பட்ட விருப்பு வெறுப்புக்கு ஆட்படக் கூடாது. நடுநிலை நின்று செய்திகளைச் சேகரித்து அனுப்ப வேண்டும். சொந்தக் கருத்துகளைச் செய்திகளோடு சேர்த்துக் கூறக் கூடாது. செய்தியின் முக்கியத்தை மாற்றவோ கோணத்தை வேறுபடுத்தவோ, வண்ணம் பூசவோ முயலக்கூடாது.

## செய்தி திரட்டும் திறன்

செய்தியை இனங்கண்டு செய்தி கிடைக்கும் இடத்தை அடைந்த பின் உண்மையான விவரங்களைத் திரட்ட வேண்டும். சேகரித்தவற்றுள் முக்கியமானவற்றைத் தெரிந்து, முறைப்படுத்திச் செய்தியாக வடிவமைத்துத் தரும் ஆற்றல் செய்தியாளர்களுக்கு வேண்டும். இந்தத் திறனைப் பயிற்சியின் மூலமாகவும் பட்டறிவின் வாயிலாகவும் தான் பெற இயலும்.

## பொறுமையும் முயற்சியும்

செய்தியாளருக்கு மிகுந்த பொறுமைக்குணம் வேண்டும். பதற்றப்படவோ, அவசரப்படவோ கூடாது. 'பதறிய காரியம் சிதறும்' என்பது பழமொழி. செய்தியை அறிந்தவர்களைத் தேடிக் கண்டு பிடித்து, அவர்களிடம் உண்மையை வரவழைத்துச் செய்தியாக எழுதி அலுவலகத்திற்கு அனுப்புகின்ற வரை பல்வேறு இடர்ப்பாடுகளை மேற்கொள்ளலாம். மனத்தளர்ச்சியின்றி, 'முயற்சி திருவினையாக்கும்' என்ற தெளிவோடு செயல்படுகின்ற செய்தியாளர்களால் தான் செயற்கரியன செய்ய முடியும்.

செய்தியாளர் செய்திகளைத் திரட்டுவதிலும் தமக்கென்றொரு தனி முறையை (Originality) உருவாக்கிக் கொள்ள வேண்டும். மற்றவர்களை அப்படியே பின்பற்றினால் தனித்தன்மையை உருவாக்க முடியாது. சிறந்த செய்தியாளர்கள் செய்திகளைத் திரட்டித் தருவதில் தனி முத்திரை இருக்கும்.

## நல்ல தொடர்புகள்

செய்தியாளர் பல வகையான மனிதர்களோடும் நெருங்கிய தொடர்பை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். பலதரப்பட்ட, பல நிலையிலுள்ள மக்களோடு அன்பான தொடர்பு இருந்தால், செய்திகளைப் பெறுவதற்கு உதவியாக இருக்கும். மக்கள் தான் செய்திகளின் மூலங்கள் என்பதை மறந்துவிடக் கூடாது.

## நேர்மை

செய்தியாளர் மிகவும் நேர்மையாக (Honesty) நடந்து கொள்ள வேண்டும். செய்திகள் இல்லாத இடத்தில் பொய்மையாகச் செய்தியை உருவாக்குவதோ, கிடைத்த செய்தியை வேண்டுமென்றே வெளியிடாமல் புதைத்து விடுவதோ இதழியல் அறமாகாது.

செய்தியாளர்கள் கையூட்டைக் கருதியோ, வேறு நன்மைகளையும் சலுகைகளையும் எதிர்பார்த்தோ செய்திகளை மாற்றவோ, திருத்தவோ, பொய்யைப் பரப்பவோ கூடாது. சிலர் புகழ் பெறுவதற்காகச் செய்தியாளரைப் பயன்படுத்திக் கொள்ள முயல்வார்கள். அன்பளிப்புகள், விருந்துகள் வழங்கிச் செய்தியாளர்களைச் சிலர் விலை கொடுத்து வாங்க நினைப்பார்கள். செய்தியாளர்கள் சோதனைகளுக்கு ஆட்படாமல், சாதனைகளைச் செய்வதிலேயே குறியாக இருக்க வேண்டும்.

## செயல் திறன்

செய்தியாளர் நுட்பமாகவும் திறமையாகவும் தந்திரமாகவும் (Tact) செயல்பட வேண்டும். சூழ்நிலைக்கேற்பச் செயல்படும் முறையை மாற்றிக் கொண்டு பணிபுரிய வேண்டும்.

புதிய இடங்களுக்குச் செல்லும் பொழுதும், புதிய மனிதர்களைப் பார்த்துப் பழகும் பொழுதும் அதற்கேற்றாற்போலத் தன்னை மாற்றிக் கொண்டும், புதியனவற்றை ஏற்றுக் கொண்டும் (Adaptability) செயல்படுதல் தேவையாகும்.

## தன்னம்பிக்கை

செய்தியாளர் தளராத தன்னம்பிக்கையோடு (Self Confidence) பணி செய்ய வேண்டும். 'என்னால் முடியும்', 'செயற்கரியன செய்வேன்', என்ற தன்னம்பிக்கை இருந்தால், பலவற்றை எளிதாகச் செய்ய முடியும்.

செய்தியாளர் இனிய ஆளுமையை (Personality) வளர்த்துக் கொள்ள வேண்டும். காண்பவர்களைக் கவரும் வகையில் பொலிவான தோற்றமும், இனிமையாகப் பழகும் பண்பும் கொண்ட செய்தியாளர்களால் பலவற்றை எளிதாகச் செய்ய முடியும்.

## தெளிவாகக் கூறும் ஆற்றல்

செய்தியாளர் எதனையும் தெளிவாக எடுத்துரைக்கும் (Clarity of Expression) ஆற்றல் பெற்றிருக்க வேண்டும். பேசுவதிலும் எழுதுவதிலும் தெளிவு இருக்க வேண்டும். நேர்கண்டு செய்திகளைச்

சேகரிக்கின்ற பொழுது தெளிவாக விவரங்களைக் கேட்டறிய வேண்டும். செய்திகளை எழுதுகின்ற பொழுதும் தெளிவு தேவை.

சமுதாய, சமயச் செய்திகளைத் திரட்டித் தரும்பொழுது மரபுகளை அறிந்திருக்க வேண்டும். மரபுகளுக்கு முரண்படும் வகையில் செய்திகளைக் கொடுக்க நேரிட்டால் கவனமாகவும் எச்சரிக்கை யாகவும் இருக்க வேண்டும்.

## சட்டத் தெளிவு

எப்படிப்பட்ட செய்திகளை வெளியிட்டால் சட்டப்படி குற்றமாகிவிடும் என்பதைச் செய்தியாளர் அறிந்திருக்க வேண்டும். சட்டத்தெளிவின்றி எதையும் செய்தியாக்கினால் அவரும் இடர்ப்பாட்டுக்குள்ளாகி, செய்தித்தாளுக்கும் தொல்லைகளை ஏற்படுத்துவார். சட்டமன்ற, நாடாளுமன்றச் செய்திகளை வெளியிடும் பொழுது மிகவும் கவனமாக இருக்க வேண்டும்.

## செய்தியாளரின் அடிப்படைத் தேவைகள்

எந்தத் தொழிலையும் திறமையாகச் செய்ய வேண்டுமானால் அதற்குச் சில அடிப்படைகள் தேவை. அதே போல ஒரு செய்தியாளர் நல்ல ஆற்றலுடன் பணி செய்ய அவர் தேவையான தகுதிகளை வைத்திருக்க வேண்டும். அவற்றை அறிவார்ந்த முறையில் பயன்படுத்த வேண்டும். செய்தியாளரின் அடிப்படைத் தேவைகளை இங்கே காண்போம்.

## மொழியறிவு

செய்தியாளர் தேவையான அளவிற்குக் கல்வியும் மொழியறிவும் பெற்றிருக்க வேண்டும். சொற்கள் தான் அவர்களது கண்ணுக்குத் தெரியாத கருவிகள். எதனை எப்படி கூற வேண்டுமோ அதனை அப்படியே கூறச் சொற்கள் துணை செய்கின்றன. செய்தியாளருக்கு மொழிவளம் வேண்டும். செய்திகளை எழுதும் பொழுது தக்க சொற்களைத் தேடிக் கொண்டிருக்கக் கூடாது. செய்திகளைப் படிப்பவர்கள் கண்ணுக்கு முன்னால் செய்திகள் நிகழ வேண்டும். வண்ணங்களில் ஓவியர்கள் காட்சிகளைத் தீட்டிக் காட்டுவது போல, செய்தியாளர்கள் செய்திகளைச் சொல்லோவியமாக வரைந்து காட்டும் திறன் பெற வேண்டும்.

செய்தியாளர்களுக்கு எவ்வளவு மொழிகள் தெரியுமோ அவ்வளவுக்கு அவர்கள் சிறப்பாய்ப் பணி செய்ய முடியும். இந்தியா போன்ற நாட்டில் ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளை அறிந்திருப்பது செய்தியாளர்களுக்குத் தேவை என்று கூறலாம்.

## தட்டெழுத்துப் பயிற்சி

செய்தியாளர் தட்டச்சுக் (Typing) கற்றுக் கொண்டிருப்பது நல்லது. செய்திகளைக் கையால் எழுதிக் கொடுப்பதைவிட, தட்டச்சுச் செய்து கொடுப்பது தெளிவாக இருக்கும். செய்திக் குறிப்புகளை வைத்துக் கொண்டு நேரடியாகத் தட்டச்சுச் செய்யப் பழகிவிட்டால் செய்திகளை விரைந்து அனுப்ப முடியும். தற்காலத்தில் கணினி அறிவு இருந்தால் கணினி வாயிலாகவே தட்டச்சுச் செய்து அனுப்பிவிட இயலும்.

## சுருக்கெழுத்துப் பயிற்சி

தட்டெழுத்துப் பயிற்சியைப் போன்றே சுருக்கெழுத்துப் (Shorthand) பயிற்சியும் செய்தியாளருக்குத் தேவை. குறிப்பாகச் சொற்பொழிவுகளைக் கவனிக்கும் பொழுதும், பேட்டி நடத்தும் பொழுதும் சுருக்கெழுத்து மிகவும் துணையாக இருக்கும்.

## குறிப்பேடு, பேனா, பென்சில்கள்

செய்தியாளர் எப்பொழுதும் கையில் குறிப்பேடும் பேனாவும் இரண்டு மூன்று சீவிய பென்சில்களும் வைத்திருக்க வேண்டும். எங்கு எப்பொழுது செய்திகள் கிடைக்குமோ, அங்கு அப்பொழுதே உடனுக்குடன் எழுதிவிட வேண்டும். நினைவாற்றலை முழுக்க நம்பக் கூடாது. ஆதாரக் குறிப்புகளைக் குறித்து வைத்துக் கொள்ள வேண்டும். வாய்ப்பு இருந்தால் பதிவு செய்யும் கருவியையும் (Tape Recorder) வைத்துக் கொள்ளலாம்.

## தகவல் கோப்பு

செய்தியாளர் தமக்கு வேண்டிய விவரங்களை எல்லாம் உள்ளடக்கிய ஒரு கோப்பினை (File) உருவாக்கி வைத்துக் கொள்ள வேண்டும். அதில் தொடர்பு கொள்ள வேண்டியவர்களின் முகவரிகள், தொலைபேசி எண்கள் ஆகியவற்றைக் குறித்து வைத்துக் கொள்ள வேண்டும். தேவையான பொழுது தக்கவர்களோடு தொடர்பு கொண்டு செய்திகளைச் சேகரிக்க இத்தகைய தகவல் கோப்பு உற்ற துணையாக இருக்கும்.

## எதிர்கால நாட்குறிப்பு

செய்தியாளர் நடக்கப் போகும் நிகழ்ச்சிகளைக் குறித்துக் கொள்ள 'எதிர்கால நாட்குறிப்பு', (Forward Diary) ஒன்று வைத்துக் கொள்ள வேண்டும். அதில் அமைச்சர்களின் வருகை, கட்சி மாநாடுகள், சட்ட மன்றக் கூட்டத் தேதிகள் போன்றவற்றை அறிவித்தவுடன் குறித்து வைத்துக் கொள்ள வேண்டும். பின்பு அவற்றைப் பார்த்து உரிய காலத்தில் செயல்படலாம்.

## செய்தியாளருக்குரிய அடிப்படை விதிகள்

ஒரு செய்தியாளர் தமது பணியைச் செய்கின்றபொழுது என்னென்ன விதிகளைப் பின்பற்ற வேண்டும் என்று எழுதப்பட்ட சட்டம், வரையறுத்த விதிகள் எவையும் இல்லை. நடைமுறையில் மூத்த செய்தியாளர்கள் அறிவுரையாகப் பின்பற்றச் சொல்கின்ற சில அடிப்படை விதிகள் (Ground Rules) உள்ளன. அவற்றை இந்தப் பகுதியில் காண்போம்.

### வாய்மையை நாடுக

செய்தியாளர் எப்பொழுதும் உண்மையானவற்றையே நாடித் தேடிக் கண்டு செய்தியாக்க வேண்டும். ஆதாரமற்ற செய்திகளை நம்பக் கூடாது. தீர விசாரித்து அறிந்த மெய்களையே செய்தியாக்க வேண்டும். மேம்போக்காகப் பார்க்கின்றவற்றைச் செய்தியாக்கினால் தொல்லைகள் தான் ஏற்படும்.

### கேட்க, கேட்க, கிடைக்கும் செய்தி

செய்தியாளர் எவ்வளவுக்கு எவ்வளவு தொடர்புள்ள கேள்விகளைக் கேட்கின்றாரோ அவ்வளவுக்குச் செய்தி விவரமாகக் கிடைக்கும். கேள்வி கேட்கத் தயங்கவோ, வெட்கப்படவோ கூடாது. செய்தியை இனங்கண்டு, செய்தி தருபவரைத் தேடியடைந்து, கேள்விகளை முறையாகத் தொடுத்து விடைகளைப் பெற வேண்டும். பொறுமையாக முயன்றால் அருமையான செய்திகள் கிடைக்கும்.

### சரி பார்த்து உறுதிப்படுத்துக

செய்திகளை நாளிதழின் அலுவலகத்திற்கு அனுப்புவதற்கு முன்னால் சரி தானா என்பதை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். குறிப்பாக, குழப்பமான சூழ்நிலைகளில் உறுதிப்படுத்தாத செய்திகளை நம்பக் கூடாது. எடுத்துக்காட்டாக, ஓர் அரசியல் கட்சி பிளவுபடுகின்ற பொழுது, சட்டமன்ற உறுப்பினர்கள் இரண்டு அணிகளாகப் பிரியலாம். யார், எந்த அணி என்பதை ஒரு முறைக்கு இருமுறை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். அத்தகைய சூழலில் இரு தலைவர்களும் சொல்லுகின்ற செய்திகள் முழு உண்மையாக இருக்காது. எனவே தீர விசாரிக்க வேண்டும்.

### நடுநிலை

செய்தியை உள்ளது உள்ளபடி கூட்டியோ குறைக்காமலோ சொல்ல வேண்டும். நடுநிலை நின்று செய்திகளைத் தர வேண்டும்.

### அச்சம் அகற்றுக

செய்தியாளரிடம் துணிச்சல் இருக்க வேண்டும். அச்சுறுத்தலுக்குப் பயந்து உண்மையைப் புதைத்துவிடக் கூடாது. புலனாய்வு வகையில் செய்திகளைச் சேகரிக்கின்ற பொழுது, மிகவும் துணிச்சலாகச் செயல்பட வேண்டியதிருக்கும்.

### அறிந்து கொள்ள ஆர்வம் வேண்டும்

செய்தியாளரிடம் புதியனவற்றை அறிந்து கொள்ளும் ஆர்வம் இருக்க வேண்டும். இந்த ஆர்வம் இருந்தால் தான் மோப்பம் பிடித்துச் செய்திகளை அறிந்து கொள்ள இயலும்.

### பயிற்சி (Training)

பள்ளியிலோ, கல்லூரியிலோ பெற்ற பொதுக்கல்வியை மட்டும் வைத்துக் கொண்டு ஒருவர் செய்தியாளராகத் திறம்படச் செயலாற்ற முடியாது. இப்பொழுது கல்லூரிகளிலும், பல்கலைக்கழகங்களிலும் இதழியல் (Journalism) பாடம் கற்றுத் தருகின்றனர். இப்பாடத்தைக் கற்றவர்களுக்கு ஆதார அறிவு இருக்கும்.

செய்தியாளருக்கு உண்மையான பயிற்சி செய்தித்தாளில் பணியாற்றும் பொழுது தான் கிடைக்கின்றது. ''இப்படித்தான் செய்தி கிடைக்கும்; இப்படித்தான் செய்தியை எழுத வேண்டும்'' என்று அறுதியிட்டு உறுதியாகக் கூற முடியாது. ஒவ்வொரு செய்தியும் ஒவ்வொரு முறையில் கிடைக்கும். சூழ்நிலைக்கேற்பச் செய்தியாளர் அறிவுக் கூர்மையோடு செயல்பட வேண்டும்.

பெரிய செய்தித்தாள்களில் முதிய செய்தியாளர்களைப் பார்த்தும், கேட்டும் செய்தி திரட்டும் முறைகளை அறிந்து கொள்ளலாம். ஒரு வகையில் இதைத் தனக்குத்தானே தரும் பயிற்சியாக அமைத்துக் கொள்ள வேண்டும். ஆர்வமும் முயற்சியும் மிகவும் வேண்டும்.

பெரும்பாலும் செய்தியாளர்கள் இளைஞர்களாகவே இருக்கின்றனர். யாரும் தொடர்ந்து செய்தியாளராக இருப்பதில்லை. ஒருவர் இதழாளராகப் (Journalist) பல பணிகளை மேற்கொள்வதற்குச் செய்தியாளராகப் பணியாற்றுவது பயிற்சிக்களமாக அமைகின்றது.

### செய்தி (News)

செய்தித்தாளின் மூலப்பொருளான 'செய்தி' இல்லையேல் செய்தித்தாள் இல்லை. செய்தி என்ற சொல்லுக்குத் தரும் விளக்கம் செய்தியைப் புரிந்து கொள்ளத் துணை செய்கின்றது.

செய்தி என்ற தமிழ்ச்சொல்லை ஆங்கிலத்தில் 'நியூஸ்' (News) என்கின்றோம். 'நியூஸ்' என்ற சொல்லில் இரண்டு பொருள்கள் உள்ளன.

'நியூ' (New) என்றால் 'புதியது' என்று பொருள், இதனைப் பன்மையில் கூறும் பொழுது 'நியூஸ்' அதாவது 'புதியன' என்று பொருள்படுகின்றது.

'நியூஸ்' (NEWS) என்ற ஆங்கிலச் சொல் நான்கு ஆங்கில எழுத்துகளால் உருவானது. நான்கு ஆங்கில எழுத்துகளும் நான்கு திசையைக் குறிக்கின்றன. 'என்' (N) என்ற எழுத்து 'வடக்கையும்' (North), 'இ' (E) என்ற எழுத்து கிழக்கையும் (East), 'டபிள்யூ' (W) என்ற எழுத்து 'மேற்கையும்' (West), 'எஸ்' (S) என்ற எழுத்து 'தெற்கை'யும் (South) குறிக்கின்றன. அதாவது, நான்கு திக்குகளிலிருந்தும் கிடைப்பது செய்தி என்ற பொருளில் அதற்குரிய சொற்களின் முதல் எழுத்துகளைக் கொண்டு 'நியூஸ்' என்ற ஆங்கிலச் சொல் உருவானதாகக் கூறுவார்கள்.

'நியூஸ்' என்ற ஆங்கிலச் சொல்லின் மொழிபெயர்ப்புப் போலச் 'செய்தி' என்ற தமிழ்ச் சொல்லைப் பயன்படுத்தினாலும் அதற்கும் தமிழில் தனிப்பொருள் கூறலாம். செய்தி என்ற சொல்லை, செய் + தி என்று பிரித்தால் 'செய்' என்ற பகுதி, 'செய்வது' என்று தொழிலைக் குறிக்கின்றது. ஆதலால், 'தி' என்ற விகுதி சேர்ந்து, 'செய்தி' என்ற பெயராகின்றது என்றும் கூறலாம்.

'செய்ததோ, செய்கின்றதோ, செய்வதோ' தான் செய்தியாகின்றது. எங்கு எது நடந்தாலும் அது உடனே செய்தியாகக் கருதப் படுகின்றது. செய்யப்படாதது எதுவும் செய்தியாவதில்லை. எனவே செய்தி என்பது இறந்த காலத்துடனும் நிகழ்காலத்துடனும் தொடர்புடையது எனலாம். எதிர்காலம் பற்றியது செய்தியாக இடம் பெறாது. எதிர்காலத்தில் நடைபெறவிருக்கும் அறிவிப்புகள் சில செய்தியாக இடம்பெறும்.

### ✦ அகராதி விளக்கம்

சேம்பர்ஸ் அகராதி (Chambers Dictionary) 'நியூஸ்' என்ற ஆங்கிலச் சொல்லுக்குப்

> புதிதாகக் கேட்கப்படுகின்ற ஒன்று, இப்பொழுதுதான்
> நடைபெற்ற ஏதாவது ஒன்றைப் பற்றிய முதல் தகவல்

என்று விளக்கம் தருகின்றது.

## + இலக்கணம்

'இதுதான் செய்தி' என்று பலர் இலக்கணம் வகுக்க முயல்கின்றனர். ஆனால் எந்த இலக்கணமும் முழுமையானதாக அமையவில்லை. மேலும் செய்திக்குத் தருகின்ற விளக்கம் நாட்டிற்கு நாடு வேறுபடுகின்றது.

நீண்ட நெடுங்காலமாக, ''நாய் மனிதனைக் கடித்தால், அது செய்தி அல்ல; ஆனால் மனிதன் நாயைக் கடித்தால், அது செய்தி'', என்று ஓர் ஆங்கில இதழாசிரியர் கூறியதைச் செய்திக்கு விளக்கமாகப் பலரும் எடுத்துக் குறிப்பிடுவதுண்டு. இந்த எடுத்துக்காட்டு நடைமுறைக்கும், இயற்கைக்கும் மாறுபட்ட புதுமையானது செய்தியாகின்றதென்பதைச் சுட்டிக் காட்டுகின்றது.

செய்திக்குத் தருகின்ற பல விளக்கங்களில் குறிப்பிடத் தக்கவற்றைத் தொகுத்துக் கூறலாம்.

எதனையாவது வெளிக்காட்டுவது செய்தி.

நேற்று நீங்கள் எதனைத் தெரிந்திருக்கவில்லையோ அது இன்றைய செய்தியாகின்றது.

நடைமுறையிலிருந்து, சாதாரணமானவற்றிலிருந்து மாறுபட்ட எதுவும் செய்தியாகும்.

சிலர் மறைக்க நினைப்பது செய்தியாகின்றது.

ஒரு சமுதாயத்தில் பெரும்பாலான மக்களைப் பாதிக்கின்ற, அவர்களால் புரிந்து கொள்ளக்கூடிய எந்த ஒரு நிகழ்ச்சியும், கருத்தும், எண்ணமும் செய்தியாகும்.

பெரும்பாலான மக்களின் ஆர்வத்தைத் தூண்டும் வகையில் ஒரு செய்தித்தாள் அச்சிடுவதும், வானொலி ஒலிபரப்பும் எதுவும் செய்தியாகின்றது.

செய்தி என்பது செய்தித்தாள் உருவாக்குவது.

பெருந்தலைவர்கள் சொன்னவை செய்திகளாகும்.

நல்ல செய்திகள் செய்திகளாவதில்லை.

வாசகர்களுக்கு முக்கியமான, சுவையூட்டும் நடப்பு நிகழ்ச்சிகளின், உண்மைகளின் தொகுப்புகளே செய்திகள்.

வாழ்க்கைக்குச் சுவை தரும் எதுவும், அது வெளிப்படும் முறைகளில் செய்தியாக மலர்ந்து மணம் பரப்புகின்றது.

செய்திகள் என்பவை பால் உணர்வு, பணம், குற்றம் ஆகியவற்றோடு தொடர்புடையவை.

மிகப்பெரிய, புகழ்பெற்ற பெயர்கள் செய்திகளாகின்றன.

இன்றைய செய்தி நாளைய வரலாறு.

மக்களைப் பற்றி, மக்களுக்காக மக்களால் எழுதப்படு பவை செய்திகள்.

செய்தி பற்றிய எல்லா விளக்கங்களையும் இணைத்துத் தரும் முறையில்

> ஒரு கருத்து, நிகழ்ச்சி, சிக்கல் பற்றிய உண்மையான, சரியான, நடுநிலையான குறிப்பு; உண்மையானதாக நிகழ் காலத்தோடு தொடர்புடையதாக, மக்களின் ஆர்வத்தைத் தூண்டும் வகையில் நடைமுறைக்கு மாறுபட்டதாக இருக்கும் சிலவற்றைப் பற்றிய விளக்கம்

என்று ஆர். இராமச்சந்திர ஐயர் என்பவர் கூறுகின்றார்.

''எது செய்தி?'' என்று இலக்கணம் வகுப்பதில் நடைமுறைச் சிக்கல்கள் உள்ளன. ஆனால், எவை செய்தியாகின்றன என்பதைப் பட்டியல்போட்டுக் காட்டுவதன் மூலம், செய்திக்கு விளக்கம் தர முயலலாம். தாம்சன் பவுண்டேஷனின் ஆசிரியர் குழுவின் ஆய்வு மையம் (Editorial Study Centre of Thomson Foundation) செய்தியாகக் கூடிய இருபது வகைகளைத் தொகுத்தளித்திருக்கின்றது. அவை எல்லா நாடுகளுக்கும் பொருந்தக் கூடியவை. ஆதலால் அவற்றை விளக்கிக் கூறலாம்.

### புதுமையானது (Novelty)

எது இதுவரை இல்லாமல் இப்பொழுது புதுமையாக நடக்கின்றதோ அது செய்தியாகின்றது. ஏனெனில் புதுமைக்கு மக்களைக் கவரும் ஆற்றல் மிகுதி. கால் ஊனமான பெண் நாட்டியம் ஆடினால் அது செய்தி. பாம்புகளோடு ஒருவர் தங்கி இருந்தால் அது புதுமை. ஆதலால் அது செய்தி.

### மனிதத் தாக்கம் (Personal Impact)

சாதாரண வாசகருக்குச் சுவையூட்டுவதும், அன்றாட வாழ்க்கையைப் பாதிக்கக் கூடியதும் செய்தியாக உருவெடுக்கின்றன. பங்கீட்டில் வழங்கும் சீனியின் அளவைக் கூட்டுதல், வேலை நிறுத்தத்தின் விளைவாகப் பேருந்துகள் ஓடாமை, தாங்கள் விரும்பும் நடிகரின் திருமணம் போன்றவற்றை எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

### உள்ளூர் நடவடிக்கைகள் (Local Affairs)

தூரத்தில் நடைபெறுகின்ற ஒரு நிகழ்ச்சியைவிட உள்ளூரில் நடைபெறும் ஒன்றினை அறிந்து கொள்வதில்தான் வாசகர்களுக்கு

ஆர்வம் அதிகம் இருக்கும். உள்ளூரில் தீ விபத்தில் நான்குபேர் இறந்திருப்பார்கள். அதே நேரத்தில் வெளிநாட்டில் 400 பேர் ஒரு பல மாடிக் கட்டடம் இடிந்து இறந்திருப்பார்கள். இரண்டு நிகழ்ச்சிகளில் உள்ளூர் விபத்துப் பற்றி அறிந்து கொள்வதில் தான் வாசகர்களுக்கு ஆர்வம் மிகுதியாக இருக்கும்.

### பணம் (Money)

பணத்தோடு தொடர்புடையன செய்திகளாகின்றன. அரசின் வரவு - செலவுத் திட்டம், புதிய வரிகள், விலைகள் ஆகியவை செய்திக்குரிய கருப்பொருள் ஆகும்.

### குற்றம் (Crime)

நாட்டில் நடைபெறும் குற்றங்களைப் பற்றிய செய்திகள் 'சூடான செய்திகளாகும்' (Hot News). கொள்ளை, கொலை, கற்பழிப்பு, திருட்டு போன்றவற்றை அறிந்து கொள்ளப் பலரும் விரும்புகின்றனர். ஆதலால் அவை பற்றிய விவரங்கள் செய்திகளாகின்றன. குற்றச் செய்திகள் கதைகள் போல இருப்பதால், அவற்றைப் பலரும் படிக்கின்றனர்.

### பால் (Sex) தொடர்பானவை

ஆண் - பெண் பால் உணர்வு தொடர்பானவற்றில் மனித குலத்திற்கு எப்பொழுதும் ஓர் ஈடுபாடு இருக்கின்றது. மிகவும் மரியாதைக்குரிய இதழ்கள் கூட, பால் உணர்வுக்குச் சிறப்பிடம் கொடுக்கின்றன. செய்தித்தாள்களில் இப்படிப்பட்ட செய்திகளுக்கு மிகுதியாக இடம் ஒதுக்குவதிலிருந்தே, இவற்றின் முக்கியத்துவத்தை அறிந்து கொள்ளலாம்.

### மோதல் (Conflict)

இருவரோ, இரண்டு அணிகளோ மோதிக்கொள்ளும் பொழுது செய்தி பிறக்கின்றது. மோதலையும், முடிவையும் அறிந்து கொள்வதில் மக்கள் ஆர்வம் காட்டுகின்றனர். கணவன் - மனைவி சண்டை, தொழிலாளர் போராட்டம், இருநாடுகளுக்கு இடையில் சண்டை போன்றவற்றை எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம்.

### சமயம் (Religion)

சமயம் சார்ந்தவற்றைப் பற்றியவை மக்களைக் கவர்கின்றன. நாத்திகர்கள் கூடச் சமயத் தலைவர்களைப் பற்றியும், மடங்களைப் பற்றியும் அறிந்து கொள்ள விரும்புகின்றனர். போப்பின் தேர்தலை உலகமே அறிந்து கொள்ள விரும்புகின்றது. சமய விழாக்களும் கோயில் விழாக்களும் செய்தியாக அமைகின்றன.

## அழிவும் (Disaster) துயரமும் (Tragedy)

எங்காவது அழிவு ஏற்பட்டால் அது செய்தியில் இடம் பிடிக்கின்றது. கப்பல் மூழ்குதல், இரயில் கவிழ்தல், தீ விபத்து போன்றவை மக்களின் இதயத்தைத் தொடுகின்றன. துயரமானவை நடக்கின்ற பொழுதும் அவை மக்களிடம் இரக்கத்தைத் தோற்று விக்கின்றன. காந்தியடிகள், கென்னடி, இந்திராகாந்தி, இராஜீவ் காந்தி ஆகியோர் கொல்லப்பட்ட செயல்கள் உலகையே உலுக்கிய செய்திகள். பெருந்தலைவர் காமராசர் போன்றோரின் மறைவுச் செய்திகள் நாட்டையே துயரத்தில் ஆழ்த்தியவை.

## நகைச்சுவை (Humour)

மக்களின் நகைச்சுவைக்குத் தீனியாகக் கூடியவற்றைச் செய்தியாகக் கருதலாம். நாடாளுமன்றத்திலோ, சட்டமன்றத்திலோ கேலிக்கும் கிண்டலுக்கும் ஆளாகும் வகையில் ஒருவர் நடந்து கொண்டால், அதனைச் செய்தித்தாளில் வெளியிடுவார்கள். அதை மக்கள் விரும்பிப் படிப்பார்கள்.

## மனித ஆர்வமானவை (Human Interest)

பொதுவாக மனிதர்களுடன் தொடர்புடைய இன்ப, துன்ப நிகழ்ச்சிகள் செய்திகள் ஆகும் தகுதி உடையவை. ஒருவர் பணத்தைத் தொலைப்பதும், வேறொருவருக்குப் பரிசு கிடைப்பதும் செய்திகள் ஆகும்.

## ஏழைகளைப் பற்றியவை (The Under Dog)

ஏழை எளியவர்களின் வாழ்க்கையில் நடைபெறும் குறிப்பிடத் தக்க நிகழ்ச்சிகள் செய்திகளாகின்றன. எடுத்துக்காட்டாக, ஓர் ஏழைக் குடும்பம் வறுமை தாளாமல் நஞ்சுண்டு மாண்டு விட்டால் உடனே செய்தியாக வெளியிடப்படுகின்றது.

## மர்மம் (Mystery)

உடனடியாகப் புரியாத மர்மமானவை எங்கு நடந்தாலும் அவை செய்தி மதிப்பைப் பெறுகின்றன. ஓரிடத்தில் காயங்களோடு ஓர் உடல் கிடந்தால், அதனைப்பற்றி அறிய எல்லாரும் விரும்புவார்கள். ''அது யாருடைய உடல், எப்படி கொல்லப்பட்டார்'' என்பன போன்றவற்றைச் சுவையான செய்திகளாக வெளியிடலாம்.

## உடல் நலம் (Health)

உடல் நலத்தோடு தொடர்பானவை மக்களின் ஆர்வத்தைத் தூண்டுகின்றன. குணமாக முடியாத நோய் குணமானால் அதனை

அறிந்து கொள்ள மக்கள் விரும்புகின்றனர். மந்திர, தந்திரங்களால் நோய் குணப்படுத்தப்பட்டால் உடனே அது செய்தியாக வெளி வருகின்றது. உடல்நலக் குறிப்புகளுக்குத் தனி இடம் இருக்கின்றது.

## அறிவியல் (Science)

அறிவியல் விந்தைகளும் சாதனைகளும் செய்திகளாக வடிவெடுக்கின்றன. விண்வெளி வீரர்களைப் பற்றி அறிந்து கொள்ள மக்கள் விரும்புகின்றனர். புதிய கண்டுபிடிப்புகளும் கண்டு பிடிப்பாளர்களும் செய்தித்தாளில் இடம் பெறுகின்றனர். நோபல் பரிசு பெற்ற அறிவியல் அறிஞர்களை உலகம் முழுவதும் உள்ளோர் அறிந்து கொள்ள விரும்புவர்.

## பொழுதுபோக்கு (Entertainment)

திரைப்படங்கள், நாடகங்கள், விளையாட்டுகள் போன்ற பொழுதுபோக்குக்குத் துணைசெய்கின்றவை பற்றிய விவரங்களை அறியும் ஆர்வம் இயல்பாக மக்களிடம் இருக்கின்றது. ஆதலால் தான் திரைப்படங்களைப் பற்றிய பல்வேறு வகையான செய்திகள் எப்பொழுதும் சுவை தருவனவாக உள்ளன. கிரிக்கெட் விளையாட்டுப் போட்டிகள், ஆட்டக்காரர்கள் மீது மக்கள் காட்டும் இடையறா ஆர்வத்தைப் பார்க்கின்றோம்.

## புகழ்பெற்ற மக்கள் (Famous People)

சமுதாயம், சமயம், அரசியல், விளையாட்டு, திரைப்படம் போன்ற துறைகளில் புகழ்பெற்ற மனிதர்கள் பற்றிய எந்த விவரமும் செய்தியாகின்றது. கவிஞர்கள், எழுத்தாளர்கள், மருத்துவர்கள் போன்றவர்களும் புகழ்பெற்று விட்டால் செய்தியில் இடம் பிடிக்கின்றனர்.

## தட்ப வெப்ப நிலை (Weather)

மழை பெய்தல், புயலடித்தல் போன்றவை மக்களைப் பாதிக்கின்றன. நமது நாட்டில் பருவமழை தவறினால் வேளாண்மை பாதிக்கின்றது. இங்கிலாந்து மக்கள் எப்பொழுதும் தட்பவெப்ப நிலையை அறிந்து கொள்ளத் துடிப்பார்களாம். தட்ப வெப்ப நிலை மாற்றத்திற்கு ஏற்ப அவர்களது நிகழ்ச்சிகளை அவர்கள் ஏற்பாடு செய்து கொள்வார்கள்.

## உணவு (Food)

மனிதன் உயிர் வாழ இன்றியமையாதது உணவு. உணவுப் பொருள்கள் கிடைப்பதில் தட்டுப்பாடு ஏற்பட்டால், அதன்

காரணங்களை அறிய மக்கள் முயல்கின்றனர். உணவுப் பொருள்களின் விலை ஏற்றம் மக்களைப் பாதிக்கின்றது. ஆதலால் இவை பற்றிய செய்திகளை நாளிதழ்கள் வெளியிடுவது தேவையாகும்.

### சிறுபான்மையினர் (Minorities)

ஒவ்வொரு நாட்டிலும் சிறுபான்மைச் சமுதாயத்தினர் இருக்கின்றனர். நமது நாட்டில் மலைவாசிகளைச் சிறுபான்மையினராகக் கருதலாம். சிறுபான்மையினரை மற்றவர்கள் நடத்தும் முறைகளும், சிக்கல்களும் செய்தி மதிப்பைப் பெறுகின்றன.

## செய்தியின் தன்மைகள்

ஒன்று செய்தியா இல்லையா என்பதை முதலில் செய்தியாளர் தீர்மானித்துச் செய்திகளைச் சேகரிக்கின்றார். அவர் திரட்டுகின்ற எல்லாம் செய்திகளாக வெளிவருவதில்லை. ஆசிரியர் குழு செய்தி எனக் கருதுவதே செய்தித்தாளில் அச்சாகின்றது. செய்தித்தாளில் அச்சாகும் எல்லாவற்றையும் வாசகர்கள் செய்திகளாக எண்ணுவதில்லை. சிலவற்றைத் தேவையற்றவை என்று படிக்காமல் ஒதுக்குகின்றனர். ஆனால் பொதுவாக ஒன்றைச் செய்தி மதிப்புடையதாகக் கருத அதில் என்னென்ன தன்மைகள் இருக்க வேண்டும் என்பதைக் குறிப்பிட்டுக் கூறலாம்.

### கால அண்மை (Timeliness)

செய்திகள் 'சுடச்சுட' இருக்க வேண்டும். புதுமலர்களைப் பெண்கள் விரும்புவது போலப் புதிய செய்திகளையே மக்கள் படிக்க விரும்புகின்றனர். 'காலம்' என்பது செய்திக்கு உயிர் மூச்சு. காலம் கடந்த செய்தி உயிரற்ற உடல் போன்றது. அதற்கு மதிப்பு இல்லை.

### இட அண்மை (Proximity)

தங்களுக்கு அருகில், தங்களைச் சுற்றி நடப்பதில் இயல்பாக மக்களுக்கு ஆர்வம் உள்ளது. தமிழ்நாட்டில் உள்ள ஒருவர் தில்லியில் நடைபெற்ற ஒன்றைவிடச் சென்னையில் நடைபெற்ற ஒன்றைப் பற்றி அறிவதில் ஆர்வம் காட்டுகின்றார். பக்கத்து மாநிலத்தில் ஆட்சி மாறுவதைப் பற்றிச் சாதாரண மக்கள் கவலைப்படுவதில்லை. தங்களது மாநிலத்தில் அமைச்சரவை மாற்றம் ஏற்பட்டால் அதுவே பொதுப் பேச்சாகின்றது.

### உடனடியானவை (Immediacy)

செய்திகளை உடனுக்குடன் தர வேண்டும். முதலில் வரும் செய்திக்கு மதிப்பு அதிகம். ஆதலால்தான் செய்தித்தாள்கள்

செய்திகளை முதலில் பெற்று (Scoop) வெளியிடப் போட்டி யிடுகின்றன. செய்திகளை முந்தித் தரும் இதழ்கள் மக்களிடம் செல்வாக்குப் பெறுகின்றன.

## முதன்மையானவை (Prominence)

எவை நாட்டில் முதன்மையான இடத்தையும், புகழையும் பெறுகின்றனவோ அவை செய்திகளாகப் போற்றப்படுகின்றன. முதன்மை பெறும் மனிதர்கள், இடங்கள், நிகழ்ச்சிகள் ஆகியவை செய்தித்தாளில் இடம்பெறுகின்றன.

## அளவு (Size)

செய்தியின் கருப்பொருள் மட்டுமல்ல, அது தொடர்புடைய மக்களின் பரப்பளவை ஒட்டியும் செய்தியாகின்றது. புகழ்பெற்ற எழுத்தாளரின் இறுதி ஊர்வலத்தில் பத்துப்பேர் மட்டுமே கலந்து கொண்டால் செய்தி. ஓர் அமைச்சரை வரவேற்க இருவர் மட்டுமே வந்திருந்தால் செய்தியாகின்றது. ஒரு மாநாட்டிலோ, பொதுக் கூட்டத்திலோ, மக்கள் கூட்டம் அதிகமாக இருந்தாலும் செய்தி யாகிறது; குறைவாக இருந்தாலும் செய்தியாகிறது.

## நிகழ்விடத்திலேயே கிடைப்பவை (Spot News)

ஒரு நிகழ்ச்சி நடைபெறும் இடத்திலிருந்து நேரடியாகப் பங்கு பெற்றவர்கள் அல்லது பாதிக்கப்பட்டவர்கள் தரும் செய்தி சிறப்பிடம் பெறுகின்றது. விபத்து நடந்த இரயிலில் பயணம் செய்து உயிர் தப்பியவர், விபத்தைக் கண்ணால் கண்டபடி விவரிப்பது சிறப்புச் செய்தியாகும்.

## விளைவுகளை உடையவை (Consequences)

பின் விளைவுகளை ஏற்படுத்தும் எந்த நிகழ்ச்சியும் நடவடிக்கை யும் மக்களின் ஆர்வத்தைத் தூண்டும் செய்திகளாகின்றன. வங்கிகளை நாட்டுடைமையாக்கினால் பல பொருளாதார விளைவுகளை எதிர்பார்க்கலாம். ஒரு கட்சியில் புகழ்பெற்ற ஒருவரை அந்தக் கட்சியிலிருந்து விலக்கினால் அரசியல் விளைவுகள் ஏற்படும்.

## வியப்புக்குரியவை (Oddity)

செய்தியில் புதுமையானதாக, வியப்பிற்குரியதாக ஏதாவது இருக்க வேண்டும். அப்படியிருந்தால் அதனை அறிந்து கொள்வதில் மக்கள் ஆர்வம் காட்டுவார்கள். ஒருவன் தனது குடும்பத்தைச் சேர்ந்த அத்தனை பேரையும் அழித்துவிட்டால் அது நடைமுறை இயல்புக்கு மாறுபட்ட செய்தியாகின்றது.

## மோதுபவை (Conflict)

முரண்படுபவையும், மோதுபவையும் செய்தியின் தன்மையைப் பெறுகின்றன. மனமொத்து வாழ்கின்ற கணவனும் மனைவியும் செய்தியாவதில்லை. ஆனால் மணவிலக்குப் பெறுவது செய்தியாகின்றது.

## ஐயப்பாட்டிற்குரியவை (Suspense)

ஏன், எதனால் நடைபெற்றதென்று வெளிப்படையாகத் தெரியாதவற்றில் செய்திகள் உள்ளன. குற்றங்களைப் பற்றிய செய்திகள் இப்படிப்பட்டவைகளாகும்.

## உணர்ச்சிப்பூர்வமானவை (Emotional Appeal)

மக்களின் உணர்வுகளைத் தூண்டக் கூடிய நிகழ்ச்சிகளை உடனடியாகச் செய்தித்தாள்கள் வெளியிட வேண்டும். இந்தியாவின் முன்னாள் தலைமையமைச்சர் திருமதி. இந்திரா காந்தி சுடப்பட்டதை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

## செய்திகளின் மதிப்பு

செய்திகள் அவற்றின் தன்மைக்கு ஏற்ப மதிப்பைப் பெறுகின்றன. அவ்வாறு செய்தி மதிப்பைப் பெறுகின்ற வாயில்களாகச் சிலவற்றை இங்கே காண்போம்.

## எதிர்பார்க்கும் செய்தி

ஒன்று இப்பொழுது நடைபெறும் என்பதை அறிந்திருப்போம். அது நடைபெறும் பொழுது எதிர்பார்த்த செய்தியாகின்றது. ஆதலால் அதனை எதிர்பார்க்கும் செய்தி (Predictable News) என்கிறோம். தேர்தல் நடைபெறுவது, தலைமை அமைச்சர் வருகை, பலத்த மழைக்குப் பிறகு வெள்ளம் வருதல் ஆகியவை எதிர்பார்க்கும் செய்திகள்.

## எதிர்பாராத செய்தி

யாரும் சிறிதும் எதிர்பாராத நிலையில் நடைபெறுவது எதிர்பாராத செய்தி (Unpredictable News) ஆகும். இரயில் விபத்து, புயலடித்தல், அரசியல் தலைவரின் கொலை போன்றவை எதிர்பாராத செய்திகள் ஆகும்.

## நேரடிச் செய்தியும் விளக்கச் செய்தியும்

ஒன்று எப்படி நடைபெற்றதோ அதனை அப்படியே படம் பிடித்துக் காட்டுவது போல வெளியிடுவது நேரடிச் செய்தி (Straight

News). சட்டமன்ற அவைத்தலைவர் சில உறுப்பினர்களைப் பதவி விலகச் செய்ததை அப்படியே நடந்தது நடந்தபடி கூறினால் நேரடிச் செய்தி. ஆனால், நடந்ததை விளக்கும் பொழுது என்ன காரணங் களினால் சட்டமன்ற அவைத்தலைவர் அந்த நடவடிக்கை எடுத்தாரென்றும், அதற்கு அவருக்கு அதிகாரம் உண்டா என்பதையும் சேர்த்துச் செய்தியாக வெளியிடுவது விளக்கச் செய்தி (Explanatory News) எனப்படும்.

## கடினமான செய்திகளும் மெதுவான செய்திகளும்

அமெரிக்காவில் செய்திகளைக் கடினமான செய்திகள் (Hard News), மெதுவான செய்திகள் (Soft News) என்றும் பிரிக்கின்றனர். மக்களின் உணர்ச்சிகளைத் தூண்டாத, அலசி ஆராயும் விவரமான செய்திகள் கடினமான செய்திகளாகும். நிதியமைச்சரின் வரவு - செலவுத் திட்டம், இலக்கிய, அறிவியலறிஞர்களின் மாநாட்டுச் செய்திகள் போன்றவை இந்த வகையைச் சார்ந்தவை.

உடனடியாக வாசகர்களின் ஆர்வத்தைத் தூண்டுபவை மெதுவான செய்திகளாகும் (Soft News). திரைப்பட வெளியீடு, தேர்தல் முடிவுகள் போன்றவற்றை மெதுவான செய்திகளாகக் கருதலாம். ஆனால் இவற்றைச் சூடான செய்திகள் (Hot News) என்றும் கூறுவதுண்டு.

## செய்தி மூலங்கள் (Sources of News)

செய்தியாளர் எது செய்தி என்பதை அறிந்து கொள்ளும் ஆற்றல் பெற்றிருப்பதைப் போல, அவை எங்குக் கிடைக்கும் என்பதையும் அறிந்திருக்க வேண்டும். பொதுவாக எங்கும் எப்பொழுதும் செய்திகள் கிடைக்கலாம் என்றாலும் சில குறிப்பிட்ட இடங்களுக்குச் சென்றால் செய்திகளைப் பெற இயலும். அப்படிப்பட்ட இடங்களைச் செய்தி 'மூலங்கள்' எனலாம்.

குடியரசுத் தலைவர், தலைமையமைச்சர் அலுவலகங்கள் - அமைச்சகங்கள், அரசுத் துறைகள்; முதலமைச்சர் அலுவலகம்; மாநில அரசுத் துறைகள் முதலிய இடங்களில் அரசுத் துறைச் செய்திகள் கிடைக்கும்.

கட்சித் தலைமையகங்கள் - அரசியல் கூட்டங்கள் முதலான இடங்களில் அரசியல் செய்திகள் கிடைக்கும்.

காவல் நிலையங்கள், மருத்துவ நிலையங்கள், குற்றவியல் நீதிமன்றங்கள், சிறைச்சாலைகள் முதலான இடங்களில் குற்றச் செய்திகள் கிடைக்கும்.

ஊராட்சி அலுவலகங்கள், போக்குவரத்து நிலையங்கள், பொதுக் கூட்டங்கள், பொருள்கள் பகிர்வு இடங்கள் முதலான இடங்களில் சமுதாயச் செய்திகள் கிடைக்கும்.

உயர் நீதிமன்றங்கள், மாவட்ட நீதிமன்றங்கள் முதலான இடங்களில் வழக்கு தொடர்பான செய்திகள் கிடைக்கும்.

விளையாட்டுப் போட்டிகள் நடைபெறும் இடங்கள் முதலான இடங்களிலும் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் விளையாட்டுச் செய்திகள் கிடைக்கும்.

இவை தவிர, அரசு விருந்தினர் விடுதிகள், பெரிய உணவகங்கள், சுற்றுலா மையங்கள், தட்ப வெப்பநிலை, மழை அறிவிப்பு நிலையங்கள், துறைமுகங்கள், சமய நிறுவனங்கள், கோவில்கள், திரைப்படம் எடுக்கும் நிலையங்கள், வெளியிடங்கள், புகைவண்டி நிலையங்கள், விமான நிலையங்கள், பல்கலைக்கழகங்கள், கல்வி நிறுவனங்கள், தொழிலாளர் சங்கங்கள், பொது நிகழ்ச்சி நடைபெறும் இடங்கள், சமுதாய நலப்பணி நடைபெறும் இடங்கள், முகாம்கள், அறிவியல் ஆராய்ச்சி நிலையங்கள், பிற இதழ்கள், நண்பர்கள், விழாக்கள், பெருந்தலைவர்களின் அறிக்கைகள் ஆகியவையும் செய்தி வழங்கும் மூலங்கள் எனலாம்.

# 14. செய்தி வகைகள்

ஒரு செய்தியாளரின் செய்தி திரட்டும் பணி பரந்து விரிந்துள்ளது. பல்வேறு வகையான செய்திகளை அவர் திரட்ட வேண்டியுள்ளது. செய்தியைத் திரட்டும் முறையும், எழுதும் வகையும் செய்தியின் இயல்புக்கும் முக்கியத்துவத்திற்கும் ஏற்ப மாறுபடுகின்றன. இங்கு, சில குறிப்பிடத்தக்க செய்தி வகைகளை எப்படி செய்தியாளர் திரட்டி எழுதுகின்றார் என்பதைக் காண்போம்.

### அரசுச் செய்திகள் (Government News)

செய்திகளின் மூலமாக நாட்டிலுள்ள ஆட்சி அமைப்புகளும் அரசின் துறைகளும் இருக்கின்றன. நமது நாட்டில் ஊராட்சிகள், பேரூராட்சிகள், நகர மன்றங்கள், மாவட்ட ஆட்சி, மாநில அரசுகள், மத்திய அரசு என்று ஆட்சி அமைப்பு முறை உள்ளது. இவற்றின் கொள்கைகளும் நடைமுறைகளும் செயல்திட்டங்களும் மக்களின் வாழ்க்கையில் விளைவுகளை ஏற்படுத்துகின்றன. ஆதலால் அவற்றோடு தொடர்புடைய செய்திகளைத் திரட்டி வெளியிடுவது தேவையாகின்றது.

### மாநில அரசு (State Government)

பெரும்பாலும் அனுபவமிக்க செய்தியாளர்கள் அரசின் செய்திகளைத் திரட்ட அரசின் மைய அலுவலகத்திற்குச் செல்கின்றனர். அங்கு, செய்தியாளர்களுக்கெனத் தனி அறை இருக்கின்றது. முதலில் செய்தியாளர் அறைக்குச் சென்று கிடைக்கும் செய்திகளைப் பெற்றுக் கொண்ட பின்னர், அமைச்சர்கள், உயர் அலுவலர்களைக் கண்டு பேசிச் செய்திகளைத் திரட்டுவார்கள்.

தகவல், மக்கள் தொடர்புத்துறை, அமைச்சகங்களின் செய்திக் கூட்டங்கள், செயலாளர்கள், துறைத்தலைவர்கள் வழங்கும் பேட்டிகள், அரசு நடத்தும் இதழ்கள், அரசுக்குச் செல்லும் தூதுக் குழுக்கள், செய்திக் கசிவுகள் (Leakage)ஆகியவற்றின் மூலம் செய்திகள் கிடைக்கின்றன.

### மத்திய அரசு (Central Government )

மத்திய அரசில் செய்திகளைப் பெறும் முறை சிறிது வேறுபடுகின்றது. ஒவ்வோர் அமைச்சகத்துக்கும் தனித்தனிச் செய்தியாளர் சென்று

செய்திகளைச் சேகரிக்கின்றனர். மக்கள் தொடர்புத்துறையானது அரசின் சார்பில் செய்திகளை வழங்குகின்றது.

ஒவ்வோர் அமைச்சகமும் தேவைக்கு ஏற்ப, செய்தியாளர் கூட்டங்களை நடத்தித் தங்களது கொள்கைகளை அறிவிக்கின்றது. தலைமை அமைச்சரும், அமைச்சர்களும் அவ்வப்போது செய்தி யாளர்களை அழைத்துச் செய்திகள் தருகின்றனர்.

## வழி முறைகள்

செய்திகளை வழங்க அரசு மூன்று முறைகளைப் பின்பற்று கின்றது. முதலாவதாக, 'பத்திரிகைக் கடிதம்' (Press Communication) அளிக்கின்றது. இது மிகவும் முக்கியமானதாகும். அரசின் முக்கியமான கொள்கைத் தீர்மானங்களை மட்டுமே இந்த முறையில் செய்தித் தாள்களுக்குத் தெரிவிப்பார்கள்.

இரண்டாவதாக, அரசு 'பத்திரிகைக் குறிப்பின்' (Press Note) மூலம் அரசுத் துறைகளின் தீர்மானங்கள், சில குறிப்பிட்ட விவகாரங்கள் பற்றிய அரசின் நிலை ஆகியவற்றை விளக்குகின்றது.

மூன்றாவதாக, 'பத்திரிகை வெளியீடு' (Press Release) மூலம் அன்றாட நிர்வாகச் செய்திகளையும், அமைச்சகங்களின் நடவடிக்கை களையும் அறிவிக்கின்றனர். நாள்தோறும் பத்திரிகை வெளியீடுகளை அரசு, செய்தித்தாள்களுக்குத் தருகின்றது.

## நீதிமன்றச் செய்திகள் (Court News)

நீதிமன்றங்களில் வருகின்ற வழக்குகளில் சில மனித ஆர்வத்தைத் (Human Interest) தூண்டுபவை. அப்படிப்பட்ட வழக்கு விவரங் களையும் தீர்ப்புகளையும் அறிவதில் மக்கள் மிகவும் ஈடுபாடு கொண்டுள்ளனர். ஆதலால் அவற்றைச் செய்தித்தாள்கள் வெளியிடுகின்றன. மேலும், சுவையான வழக்குகள் நல்ல வருணனையான கட்டுரைகள் எழுத வாய்ப்புத் தருகின்றன.

நீதிமன்றச் செய்திகளைத் திரட்டுகின்ற செய்தியாளர் நாட்டின் நீதிமன்ற அமைப்பு முறை, சட்டத்தின் அடிப்படைகள், நீதிமன்றத்தில் பயன்படுத்தும் சொற்களுக்கான பொருள் ஆகியவற்றை அறிந்திருப்பது நல்லது. சட்டத்தில் பட்டம் பெற்றிருக்க வேண்டுமென்பதில்லை; ஆனால் சட்டம் பற்றிய அறிவு தேவையாகும்.

நீதிமன்ற வழக்குகளைப் பற்றிச் செய்தித்தாளில் எழுதுகின்ற பொழுது மிகவும் கவனம் தேவை. நீதிமன்றங்களை அவமதித்தலுக்கு (Contempt of the Court) ஆளாகாமலும், வழக்கின் போக்கையோ

வழக்கோடு தொடர்பு கொண்டவர்களையோ எந்த வகையிலும் பாதிக்காமலும் செய்திகளை எழுத வேண்டும்.

சட்டக் கலைச் சொற்களை அப்படியே பயன்படுத்தக் கூடாது. வேண்டிய விளக்கங்களுடன், சாதாரண மக்களும் புரிந்து கொள்ளக் கூடிய சொற்களைப் பயன்படுத்தி வழக்குச் செய்தியினை எழுத வேண்டும்.

வழக்கின் நடைமுறை பற்றி, செய்தியாளர் தனது கருத்துகளைக் கூறக்கூடாது. வழக்கு நடந்த முறையை நடுநிலையில் நின்று விளக்க வேண்டும். மனித ஆர்வத்தைத் தூண்டும் நீதிமன்றச் சாட்சிகளைச் சுவைபட வருணிக்கலாம். ஆனால் நீதிபதி வெளியிடக் கூடாதெனக் குறிப்பிட்டவற்றைச் செய்தியில் சேர்க்கக் கூடாது.

செய்தியை எழுதுகின்ற பொழுது, 'தலைகீழ் கோபுர' முறையைப் (Inverted Pyramid) பின்பற்றலாம். முதலில் வழக்கின் தீர்ப்பினைக் குறிப்பிட்டுவிட்டு, பின்னர் வழக்கு விவரத்தைப் படிப்படியாக விளக்கலாம்.

வழக்கு விவரங்களைச் சரியாகத் துல்லியமாக வெளியிட வேண்டும். தவறாகச் செய்தியை வெளியிட்டால் சட்டப்படி தண்டனைக்கு ஆளாக நேரிடும். நீதிமன்ற விசாரணையில் உள்ள வழக்கு 'இப்படித்தான்' முடியுமென்று கூறக்கூடாது. நீதிபதியைப் பற்றிக் கருத்து எதுவும் எழுதக் கூடாது.

சில நீதிமன்ற வழக்குகள் மிகவும் சுவையாக இருக்கலாம். எடுத்துக்காட்டாக, கணவன் - மனைவி மண விலக்கு வழக்கு, கற்பழிப்பு வழக்கு, வழுக்கி விழுந்த பெண்களின் வழக்கு போன்ற வற்றைக் கூறலாம். ஆனால் அவற்றை அப்படியே வெளியிட்டால் சமுதாயப் பண்பாடு கெடும். இதழ்களின் அறவிதி, அப்படிப்பட்ட வழக்குகளை வெளியிடுவதைத் தடுக்கின்றது.

## சட்டப்பேரவை, நாடாளுமன்றச் செய்திகள்

மக்களாட்சி சிறப்பாக நடைபெறச் சட்டப்பேரவையிலும் நாடாளுமன்றத்திலும் என்ன நடைபெறுகின்றது என்பதை மக்கள் தெரிந்து கொள்ள வேண்டும். ஆதலால், இவற்றின் செய்திகளை வெளியிடுவது இதழ்களின் கடமையாகின்றது.

சட்டப்பேரவை, நாடாளுமன்றச் செய்திகளைத் திரட்டுகின்ற செய்தியாளர்கள் அவற்றின் அமைப்பு முறைகளையும், நடைமுறை களையும், நன்கு தெரிந்திருக்க வேண்டும். நமது அரசியல் நிர்ணயச் சட்டத்தின் 168ஆம் விதியின்படி சில மாநிலங்களில் சட்டப்பேரவை (Legislative Assembly); சட்டமன்றம் (Legislative Council) ஆகிய

இரு அவைகள் இருக்கின்றன; சில மாநிலங்களில் சட்டப்பேரவை மட்டும் இருக்கின்றது. மத்திய அரசில் மக்கள் அவை (Lok Sabha), மாநிலங்களின் அவை (Rajya Sabha) என இரு நாடாளுமன்றங்கள் இருக்கின்றன. இப்பொழுது தமிழகத்தில் சட்டப்பேரவை மட்டும் இருக்கின்றது. பீகார், மத்திய பிரதேசம், மகாராஷ்டிரம், கர்நாடகம், உத்திரப்பிரதேசம் ஆகிய மாநிலங்களில் இரு பேரவைகள் உள்ளன.

நமது அரசியல் சட்டம் மாநிலச் சட்டப்பேரவை, நாடாளுமன்றம் ஆகியவற்றின் உறுப்பினர்களை எப்படி தேர்ந்தெடுக்க வேண்டும்; அமைச்சரவை எப்படி அமைய வேண்டும்; பேரவைக் கூட்டங்களை எப்படி நடத்த வேண்டும்; அவைத் தலைவர்கள் எப்படி செயல்பட வேண்டும் என்பன போன்றவற்றை எல்லாம் தெளிவாகக் கூறுகின்றது. இவற்றை எல்லாம் சட்டப்பேரவை, நாடாளுமன்றச் செய்திகளைத் திரட்டுகின்ற செய்தியாளர் தெரிந்திருக்க வேண்டும்.

## சட்டப்பேரவை நடவடிக்கைகள்

செய்தியாளருக்குச் சட்டப்பேரவை நடவடிக்கைகளிலிருந்து மிகுதியான செய்திகள் கிடைக்கின்றன. சட்டப்பேரவை நடவடிக்கைகளை,

1) கேள்வி நேரம்
2) ஜீரோ நேரம் (Zero Hour) (நேரமில்லா நேரம்)
3) பல்வேறுவகைத் தீர்மானங்கள் (Miscellaneous Motions)
4) விவாதம்
5) பதில்

என்று ஐந்து நிலைகளாகப் பிரிப்பார்கள்.

கேள்வி நேரத்தில் செய்தியாளர்கள் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். ஏனென்றால் அளிக்கின்ற பதில்களில் பல தகவல்கள் கிடைக்கலாம்.

அரசியல் நிர்ணயச் சட்டத்தில் 'ஜீரோ நேரம்' என்று எதுவும் ஒதுக்கப்படவில்லை. ஆனால் வழக்கத்தில் சட்டப்பேரவையிலும் நாடாளுமன்றத்திலும், கேள்வி நேரம் முடிந்தவுடன், உறுப்பினர்கள் எதனைப் பற்றியாவது விவாதிக்கவோ அமைச்சர்களிடம் விளக்கம் கேட்கவோ செய்யலாம். இது ஒரு பொதுவான நேரமாக அதாவது நேரமில்லா நேரமாகக் கருதப்பெறுகின்றது.

அடுத்து அவையில் உறுப்பினர்கள் கொண்டு வருகின்ற தீர்மானங்களை முன் மொழிவார்கள். கவன ஈர்ப்புத் தீர்மானம் (Calling Attention), ஒத்திவைப்புத் தீர்மானம் (Adjournment Motion), நம்பிக்கை இல்லாத் தீர்மானம் (No confidence Motion), கட்டுப்படுத்தும் தீர்மானம்

(Censure Motion) போன்றவற்றை உறுப்பினர்கள் கொண்டு வருவார்கள்.

உறுப்பினரோ, அமைச்சரோ கொண்டுவரும் மசோதாவையும் (Bill) முதலில் முன்மொழிந்து விளக்குவார்கள்.

தீர்மானங்களின் மீதும் மசோதாக்களின் மீதும் விவாதம் நடைபெறும். அதனைத் தொடர்ந்து அமைச்சர்கள் பதில் அளிப்பார்கள். தேவையானால் தீர்மானங்களையோ மசோதாக்களையோ வாக்களித்து நிறைவேற்றுவார்கள்.

நிதிஅமைச்சர் வரவு - செலவுத் திட்டங்களை அவையில் தாக்கல் செய்வதும் அவற்றைத் தொடர்ந்து நடைபெறும் விவாதங்களும் செய்தியாளர் நோக்கில் முக்கியமானவை.

## பேரவைச் செய்திகளை எழுதுதல்

சட்டப்பேரவை, நாடாளுமன்றச் செய்திகளை எழுதுகின்ற பொழுது, அவற்றின் நடைமுறைகளையும் சட்டங்களையும் அறிந்து எழுத வேண்டும். அவைத் தலைவர் பதிவேட்டிலிருந்து நீக்கியவற்றை எழுதிவிடக்கூடாது.

பேரவையின் உரிமை மீறலுக்கு ஆட்படாமல் செய்திகளைத் தர வேண்டும். பேரவையினை அவமதிக்கும் வகையில் செய்திகளைத் தரக்கூடாது. செய்தியாளர்கள் தவறு செய்தால் சட்டமன்றம் நீதிமன்றமாக மாறித் தண்டனை வழங்கவும் செய்யும்.

## பொதுக் கூட்டங்கள், சொற்பொழிவுகள்

இப்பொழுது நாடெங்கும் எண்ணற்ற பொதுக் கூட்டங்களும் சொற்பொழிவுகளும் நடைபெறுகின்றன. பெரு நகரங்களில் ஒரே நாளில் பல கூட்டங்கள் நடைபெறுகின்றன. கூட்டங்கள் நடைபெறும் காரணங்களை ஒட்டியும், பேச்சாளர்களின் முக்கியத்துவத்தைச் சார்ந்தும் செய்தித்தாள்களில் இடம்பெறுகின்றன.

ஒரு காலத்தில் எல்லாக் கூட்டங்களையும், சொற்பொழிவுகளையும், செய்தித்தாள்களில் வெளியிட்டனர். இப்பொழுது தேர்ந்தெடுத்த கூட்டச் செய்திகளை மட்டும் வெளியிடுகின்றனர். பெரிய தலைவர்கள் வரும் கூட்டங்களைப் பற்றி முன்கூட்டியே செய்திகள் வெளிவருகின்றன.

## இருவகைச் சொற்பொழிவுகள்

சொற்பொழிவுகள் இருவகையில் அமைகின்றன. ஒன்று முன்பே எழுதித் தயாரித்து வந்து படிப்பது. மற்றொன்று, சூழ்நிலைக்குத்

தக்கவாறு சொற்பொழிவை அமைத்துக் கொண்டு அந்த நேரத்தில் பேசுவது (Extempore Utterances).

எழுதித் தயாரித்த சொற்பொழிவின் படிகளை முன்கூட்டியே செய்தியாளர்களுக்குத் தருவார்கள். அதிலிருந்து சொற்பொழிவுச் செய்தியைத் தயாரிப்பது எளிதாக இருக்கும். இருந்தாலும், செய்தியாளர் கூட்டத்தில் விழிப்போடு இருந்து சிலவற்றைக் கவனித்துத் தமது செய்தியில் சேர்க்க வேண்டும். முதலாவதாக, சொற்பொழிவாளர் தயாரித்தளித்திருக்கும் சொற்பொழிவில் சிலவற்றை விட்டுவிடவோ, சேர்த்துக் கொள்ளவோ, மாற்றிப் படிக்கவோ வாய்ப்பு உண்டு. அவற்றை உடனுக்குடன் குறித்துக் கொள்ள வேண்டும். இரண்டாவதாக, கூட்டத்தினர் எப்படி சொற்பொழிவைக் கேட்டனர் என்பதைக் கவனிக்க வேண்டும். மூன்றாவதாக, கூட்டத்தின் அளவைப் பற்றியும் குறிப்பிட வேண்டும்.

சொந்தமாக அந்த நேரத்தில் செய்கின்ற சொற்பொழிவைக் குறிப்புகள் எடுத்துக்கொண்டு, பின் செய்தியாக மாற்றுவார்கள். மிகவும் முக்கியமானவர்களின் சொற்பொழிவுகளை மட்டும்தான் அப்படியே சொல் மாறாமல் வெளியிடுவார்கள். பொதுவாகச் சொற்பொழிவின் சாரத்தை வெளியிட்டால் போதும்.

## சொற்பொழிவுகளை எழுதுதல்

சொற்பொழிவுகளைக் குறிப்பெடுக்கின்ற செய்தியாளர் குறிப்பெழுதும் ஏடும் நன்கு சீவிய பென்சில்களும் மைநிறைந்த பேனாக்களும் வைத்துக்கொள்ள வேண்டும். கூட்டத்திற்கு முன்னதாகவே சென்று உரிய இடத்தில் அமர்ந்து, தொடக்கம் முதல் கூட்டத்தைக் கவனிக்க வேண்டும்.

சொற்பொழிவைச் சரியான முறையில் விரைந்து குறிப்பெடுக்க வேண்டும். செய்திகளை மாற்றியோ, சிலவற்றின் கோணத்தை வேண்டுமென்றே வேறுவகையில் காட்டியோ கொடுக்கப்பட்ட அழுத்தத்தைக் கூட்டியோ குறைத்தோ எழுதக் கூடாது.

சொற்பொழிவில் வருகின்ற உணர்ச்சிமிக்க, கருத்தாழமுள்ள சொற்றொடர்களை அப்படியே பயன்படுத்துவது செய்திக்கு வளத்தைச் சேர்க்கும். மேற்கோள்களாகச் சிலவற்றைச் செய்தியில் சேர்க்கலாம்.

## பொருளாதாரச் செய்திகள்

செய்தித்தாளில் வெளிவருகின்ற செய்திகளில் மக்களுக்கு மிகவும் பயன்படக் கூடியவை பொருளாதாரச் செய்திகளாகும். நாட்டின்

முன்னேற்றச் செய்திகளோடு சேர்ந்தவைகளாகப் பொருளாதாரம் தொடர்பான புள்ளி விவரங்களும், அவற்றின் விளக்கங்களும் அமைகின்றன.

பொருளாதாரச் செய்திகள் விரிந்து, பரந்து கிடைக்கின்றன. வேளாண்மை, தொழில், போக்குவரத்து, வணிகம், வேலை வாய்ப்புகள், மின்சாரம், உணவு நிலை, நிதி தொடர்பானவை, வரி விதிப்பு, விலைவாசிகள், பணப்புழக்கம், கிராம வளர்ச்சி ஆகியவை பற்றிய எல்லாம் பொருளாதாரச் செய்தியில் இடம்பெறும். அரசு தீட்டுகின்ற பொருளாதார வளர்ச்சித் திட்டங்கள், குறியீட்டளவுகள், செயல்பாடுகள், சாதனைகள் போன்றவற்றைப் பொது மக்கள் அறிந்து கொள்வது நாட்டின் வளர்ச்சிக்குத் துணை செய்யும்.

பொருளாதாரச் செய்திகளையும் புள்ளி விவரங்களையும் சாதாரண மக்களும் புரிந்து கொள்கின்ற வகையில் எளிமைப்படுத்தி, விளக்கங்களுடன் வெளியிட வேண்டும். நிறையப் புள்ளி விவரங்களைக் கூறிப் பொதுமக்களைக் குழப்பக் கூடாது.

## அடிப்படை அறிவு

பொருளாதாரச் செய்திகளை எழுதுகின்றவர்களுக்குப் பொருளியல் பற்றிய அடிப்படை அறிவு தேவை. பொதுவாக நாட்டு வருவாய், வேளாண்மை, தொழில், ஏற்றுமதி, இறக்குமதி, வங்கி வைப்புகள் ஆகியவற்றின் வளர்ச்சி வீதங்கள், விலைக் குறியீட்டு எண்கள், அந்நியச் செலாவணி செலுத்தும் நிலை, பல்வேறு வகையான வரிகள் ஆகியவை பற்றி அறிந்திருக்க வேண்டும். அப்படி தெரிந்திருந்தால் தான் கோட்பாடுகளின் பின்புலத்தில் செய்திகளை எளிமைப்படுத்தி விளக்கி எழுத முடியும்.

## அறிவியல் செய்திகள்

தற்காலத்தில் அறிவியலும் தொழில் நுட்பமும் விரைந்து வளர்கின்றன. அவை பற்றிப் புதுப்புதுச் செய்திகள் வியக்கத்தக்க வகையில் வருகின்றன. பொதுமக்கள் அவற்றைப் பற்றி அறிவதில் ஆர்வம் காட்டுகின்றனர். ஆதலால் அவை குறித்த செய்திகளை நாளிதழ்களில் வெளியிடுவது தேவையாகின்றது.

மற்றைய செய்திகளிலிருந்து அறிவியல், தொழில் நுட்பச் செய்திகள் வேறுபடுகின்றன. சட்டமன்றம், பொருளியல், விளையாட்டு போன்றவை பற்றிப் பொது மக்கள் ஓரளவு அறிந்திருப்பார்கள். ஆதலால் அத்தகைய செய்திகளை அவர்கள் எளிதாகப் புரிந்து கொள்வார்கள். ஆனால் பெரும்பாலானவர்கள்

அறிவியல் அறிவு பெற்றிருப்பதில்லை. தக்க விளக்கத்தோடு எளிமைப்படுத்தி அறிவியல் செய்திகளைத் தருவது தேவையாகின்றது.

## அறிவியல் செய்தியாளர் தகுதி

அறிவியல் செய்தியாளர் அறிவியலின் அடிப்படை அறிவைப் பெற்றிருக்க வேண்டும். செய்தி, அறிவியலின் எந்தப் பிரிவைச் சார்ந்தது என்பதையும், அதன் பின் புலத்தையும், முக்கியத்துவத்தையும் புரிந்து கொண்டு அறிவியல் செய்திகளை எழுத வேண்டும்.

அறிவியல் கண்டுபிடிப்புகள், ஆராய்ச்சிகள் தொடர்பான கட்டுரைகள் அறிவியல் இதழ்களில் வெளிவருகின்றன. பெரும்பாலும் கண்டுபிடிப்பாளர்கள் யாரும் தங்களது கண்டுபிடிப்புகளைப் பற்றிச் செய்தி கூறமாட்டார்கள். ஆதலால் அவர்கள் எழுதுகின்ற கட்டுரைகள் வெளிவரும் ஆராய்ச்சி இதழ்களைப் படித்து, செய்திகளைத் திரட்டுவது செய்தியாளர் பணியாகும். அறிவியல் ஆராய்ச்சி நிலையங்களுக்குச் சென்றும் நடைபெற்றுக் கொண்டிருக்கும் ஆராய்ச்சிகளை விசாரித்து அறிந்து எழுதலாம். இவற்றிற்கு அறிவியல் அறிவு கட்டாயம் தேவை.

## இனங்காணல்

மற்றைய செய்திகளைப் போல அறிவியல் செய்திகள் வெளிப்படையாகத் தெரிவதில்லை. அவற்றை இனங்கண்டு வெளியிடுதல் அறிவியல் செய்தியாளர் பணியாகும். எடுத்துக்காட்டாக, 'எய்ட்ஸ்' (Aids) என்ற பாலுணர்வு நோய் பற்றிய செய்தி வருகின்றது. அந்த நோயின் இயல்பு, அது தொடர்பான ஆராய்ச்சிகள் ஆகியவற்றை அறிந்து அறிவியல் செய்திகளை உருவாக்கி வெளியிட வேண்டும்.

அறிவியல் செய்திகளில் பயன்படுத்துகின்ற கலைச் சொற்களுக்கு விளக்கம் தரவேண்டும். பொதுமக்கள் புரிந்து கொள்ளும் வகையில் எளிமைப்படுத்திச் செய்திகளைத் தர வேண்டும்.

## விளையாட்டுச் செய்திகள் (Sports News)

வாசகர்கள் மிகவும் ஆர்வமுடன் விரும்பிப் படிக்கின்ற செய்திகளில் குறிப்பிடத்தக்கவை விளையாட்டுச் செய்திகள் ஆகும். பெரிய ஆங்கில நாளிதழ்கள் ஒன்று அல்லது இரண்டு பக்கங்களை விளையாட்டுச் செய்திகளுக்காக ஒதுக்குகின்றன. இப்பொழுது தமிழ் நாளிதழ்களும் விளையாட்டுச் செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து வெளியிடுகின்றன. தினத்தந்தியின் கடைசிப் பக்கத்திற்கு முந்தைய பக்கத்தில் விளையாட்டுச் செய்தி வெளிவருகிறது.

செய்தித்தாள்கள் விளையாட்டில் மக்களுக்குரிய விருப்பத்தை வளர்க்கின்றன. பெரிய நாளிதழ்கள் விளையாட்டுச் செய்திகளை எழுதுவதற்காகச் சிறப்புச் செய்தியாளர்களை நியமித்திருக்கின்றன. அவர்கள் விளையாட்டுச் செய்திகளைச் சுவைபட, விறுவிறுப்பான மொழிநடையில் எழுதும் தனித்தன்மை பெற்று விளங்குகின்றனர்.

நூற்றுக்கு 95 சதவீத வாசகர்கள் விளையாட்டுச் செய்திகளை மிகவும் ஆர்வமாகப் படிக்கின்றனர் என்று வெளிநாடுகளில் நடத்திய ஆய்வுகள், சுட்டிக் காட்டுகின்றன. நமது நாட்டிலும் விளையாட்டுச் செய்திகளைப் படிக்கும் வாசகர்களின் எண்ணிக்கை வளர்ந்து வருகின்றது. வானொலி, தொலைக்காட்சி ஆகியவற்றிலும் விளையாட்டுச் செய்திகளுக்குத் தனியிடம் தருகின்றனர்.

உலக அளவில் கிரிக்கெட், டென்னிஸ் போன்ற போட்டிகள் நடைபெறும் போது மக்கள் அனைவரும் போட்டியின் முடிவுகளை அறியத் துடிக்கின்றனர். வானொலியின் நேர்முக வருணனைகளைக் கேட்பதிலும், தொலைக்காட்சியில் நேரடி ஒளிபரப்பினைப் பார்ப்பதிலும் எவ்வளவு மக்கள் ஈடுபடுகின்றனர் என்பதைப் பார்த்தாலே மக்களுக்கு விளையாட்டுப் போட்டிகளில் இருக்கும் ஆர்வத்தைப் புரிந்து கொள்ளலாம். அந்த அளவிற்கு விளையாட்டுச் செய்திகளை வெளியிட வேண்டிய தேவையும் நாளிதழ்களுக்கு இருக்கின்றது.

## விளையாட்டுச் செய்தியாளரின் தகுதிகள்

விளையாட்டுச் செய்திகளை எழுதுகின்ற செய்தியாளர்கள் பல்வேறு விளையாட்டுகளைப் பற்றியும் அவற்றின் விதிகளைப் பற்றியும், அவற்றில் பயன்படுத்துகின்ற கலைச்சொற்களைப் பற்றியும் நன்கு தெரிந்திருக்க வேண்டும். விளையாட்டுகளைச் சராசரி வாசகர்கள் புரிந்துகொள்ளும் வகையில் விளக்கும் ஆற்றல் வேண்டும்.

செய்தியாளர் விளையாட்டுகளின் பழைய புள்ளி விவரங்களைத் திரட்டி வைத்திருக்க வேண்டும். நிகழ்காலச் சாதனைகளோடு பழையனவற்றை ஒப்பிட்டு எழுதுதல் தேவை. செய்திகளை நடுநிலையோடு விரைந்து தரவேண்டும். ஏதாவது ஒரு பக்க ஆட்டக்காரர்களை ஆதரித்து எழுதக் கூடாது.

## நடைமுறை வரையறைகள்

முன்பு வெளியிடங்களிலுள்ள வாசகர்கள் செய்தித்தாள்களைப் பார்த்துத் தான் நாட்டளவிலும், உலக அளவிலும் நடைபெறும்

விளையாட்டுகளின் முடிவுகளை அறிந்து கொள்வார்கள். ஆனால் வானொலியும் தொலைக்காட்சியும் விளையாட்டுச் செய்திகளை உடனுக்குடன் ஒலி, ஒளி பரப்புவதால் செய்தியாளர்களின் பணி கடினமாகி விட்டது. போட்டியின் முடிவைத் தெரிந்த வாசகர்களுக்கு மேலும் சில விவரங்களைச் சுவைபடக் கூறுவதன் மூலம்தான் அவர்களைச் செய்திகளைப் படிக்கச் செய்ய முடியும்.

செய்தியாளரின் விருப்பு, வெறுப்புகள் வெளிப்படாமல் விளையாட்டுச் செய்திகளைத் தருவதும் அரிய பணியாகும். ஏனெனில் செய்தியாளரும் விளையாட்டு ஆர்வலர் என்ற முறையில் சில அணிகளின் மீது தனி ஈடுபாடு கொள்ளலாம்.

## விளையாட்டுச் செய்திகளை எழுதுதல்

ஹேவுட் பிரவுன் (Heywood Brown) விளையாட்டுச் செய்திகளை எழுதுபவர்களை, 'யதார்த்தப் பள்ளியினர்' என்றும் 'வியப்புப் பள்ளியினர்' என்றும் பிரிக்கின்றார். வியப்புப் பள்ளியின் ஆட்டங்களைப் மிகப் பெரியவரே, தீரச் செயல்களாக, கவர்ச்சியாக, அற்புதமாக வருணிப்பார்கள். யதார்த்தப் பள்ளியினர் செய்தியை, நடந்தது நடந்தபடி விளக்குவார்கள்.

விளையாட்டுச் செய்திகளைப் படிக்கின்ற வாசகர்களில் பெரும்பாலானவர்கள் விளையாட்டுகளைப் பற்றியும் அவற்றின் நுட்பங்களைப் பற்றியும் நன்கு அறிந்திருப்பவர்கள் என்பதைச் செய்தியாளர்கள் மறந்துவிடக் கூடாது. ஆதலால் செய்திகள் ஓரளவு ஆழமாகவும் சுவைபடவும் அமைய வேண்டும் என்பதில் கவனமாக இருக்க வேண்டும்.

விளையாட்டுச் செய்திகள் பொதுவாக மூன்று நிலைகளில் அமையலாம். முதலாவதாக, முன் அறிவிப்புச் செய்தியாக (Advance Story) விளையாட்டுப் போட்டி நடைபெறும் நாள், இடம், பங்கு பெறும் அணிகள் பற்றிய செய்திகளைப் போட்டி நடைபெறுவதற்கு முன்பே வெளியிடலாம். இரண்டாவதாக, 'நடப்புச் செய்தியாக' (Running Story) விளையாட்டு நடைபெறும் முறையில் விளக்கலாம். மூன்றாவதாக, முடிவுச் செய்தியாக (Clean-up Story) ஆட்டம் முடிந்தபின், முக்கியமானவற்றைத் தொகுத்து வெளியிடலாம்.

விளையாட்டுச் செய்திகளை எழுதுவதற்குரிய நடை, தனி வகையானது. செய்தியாளர் தமது விமர்சனத்தையும் இணைத்து, தக்க உரிச்சொற்களைப் பயன்படுத்தி, விளையாட்டை நேரில் பார்ப்பதைப் போன்ற விளைவை வாசகர்கள் உள்ளத்தில் ஏற்படுத்தும் வகையில்

செய்தியைக் கூற வேண்டும். ஒரு வகையில் விளையாட்டுச் செய்தியானது, நாடக விமர்சனம் போலிருக்க வேண்டும்.

பொதுவாக விளையாட்டுச் செய்திகளில் (1) யார், எவ்வளவு வேறுபாட்டில் வெற்றி பெற்றார்கள்; (2) எப்படி ஒவ்வொரு புள்ளியும் (Score) பெறப்பெற்றது; (3) விளையாட்டு முறை; (4) திறமைகளின் வெளிப்பாடு; (5) தகராறுகள் - தீர்ந்த வகை; (6) விளையாட்டில் ஏற்பட்ட குறைகள்; (7) சாதனைகள் (8) காட்டப்பெற்ற ஆட்ட நுட்பங்கள்; (9) திருப்பு முனைகள்; (10) இறுதி நேர ஆட்டம்; (11) சாதனைகள்; (12) விபத்துகள்; (13) கூட்டத்தின் அளவு; (4) ஆடு களத்தின் அமைப்பு, நிலை ; (15) தட்ப வெப்ப நிலையின் சாதக - பாதக விளைவுகள்; (16) ஆட்ட நடுவர்களின் தரம் ஆகியவை இடம் பெற வேண்டும்.

## செய்திகளின் சிறப்பு இயல்புகள்

ஒரு நாளிதழில் வெளிவருகின்ற செய்திகளையும் செய்திக் கட்டுரைகளையும் மேம்போக்காகப் படிக்கின்றவர்கள் அவற்றிற் கிடையில் இருக்கின்ற வேறுபாடுகளையும், தனித்தன்மைகளையும் சிறப்புக் கூறுகளையும் கவனிக்காமல் இருக்கலாம். இதழாளர்களால் ஒவ்வொரு செய்தியிலும் சில சிறப்பு இயல்புகள் உள்ளார்ந்து ஒளிர்வதைக் காண இயலும். அவைதாம் செய்திகளுக்கு உயிரோட்டத்தையும் சுவையையும் அவற்றைத் தருகின்ற செய்தியாளர்களுக்குப் பெயரையும், புகழையும் வழங்குகின்றன. அப்படிப்பட்ட குறிப்பிடத்தக்க செய்திகளின் சிறப்பு இயல்புகளைக் காணலாம்.

## ஆழ்ந்து செய்தியளித்தல் (Depth Reporting)

செய்திகளை நடந்தது நடந்தபடியே வழங்குதல் ஒரு முறையாகும். அப்படிப்பட்ட வெளிப்படையான செய்திகளில் வாசகர்கள் மிகுதியாக ஒன்றும் தெரிந்து கொள்ள இயலாது. ஆனால் ஏன், எப்படி, எதனால், என்பவற்றை அவற்றிற்கான பின்புலத்தோடு விளக்கமாகவும் விவரமாகவும் உண்மை நிலையை வாசகர்கள் புரிந்து கொள்ளும் வகையிலும் எழுதுவது ஆழ்நிலைச் செய்தியாகும்.

ஆழ்ந்த நிலைச் செய்தியைப் பலவாறு விளக்குகின்றனர்.

> வாசகர்களுக்கு முழுச் செய்தியையும், விரிவாக, சமநிலையில் அதனுடைய முழுப் பின்புலத்தோடு நன்கு அமைத்துத் தருவதே ஆழ்நிலைச் செய்தியளிப்பதாகும்

என்று எம்.வி. காமத் கூறுகின்றார்.

வாசகர் செய்தி பற்றித் தெரிந்து கொள்ள வேண்டிய எல்லா விவரங்களையும் தொகுத்து முறைப்படுத்தி இணைத்துத் தருகின்ற பொழுது ஒரு செய்தி ஆழ்நிலைச் செய்தியாகின்றது. இத்தகைய செய்தி விரிவானதாக, துல்லியமான விவரங்களைக் கொண்டதாக இருக்கும்.

ஆழ்நிலைச் செய்தியில் அதன் முக்கியத்துவத்தையும் வளர்ச்சிப் போக்கையும் தெளிவாகக் குறிப்பிடுவார்கள். தேவையானால், நிழற் படங்கள், வரைபடங்களைச் சேர்த்து, செய்திக்கு வலுவையும் பொலிவையும் தருவார்கள்.

ஆழ்நிலைச் செய்திகள் பொதுவாக முன்கூட்டியே திட்டமிட்டுத் திரட்டி, அனுபவமிக்க செய்தியாளர்கள் எழுதுவனவாக இருக்கும். இவை ஒருவரின் முயற்சியால் உருவாகாமல், ஒரு சில செய்தி யாளர்களின் கூட்டு முயற்சியாலும் உழைப்பாலும் உருவானவையாக விளங்கும்.

செய்திகளில் வெளிப்படையாகத் தெரியாத சில விவரங்களைத் தோண்டித் துருவிப் பார்க்கும்போது, பல புதிய உண்மைகள் வெளிப்படும். இவை செய்திகளைப் புரிந்துகொள்ளத் துணை செய்யும்.

ஆழ்நிலைச் செய்திகள் மிகவும் நீண்டதாக, கட்டுரை போல இருக்க வேண்டுமென்ற கட்டாயமில்லை. செய்தியில் இருக்கும் விவரங்களை ஒட்டிய ஒன்று ஆழ்ந்த செய்தியாகின்றது. சில சொற்களிலேயே ஆழ்ந்த செய்தியைத் தர இயலும்.

ஆழ்நிலைச் செய்தியளிப்பதற்கும் (Depth Reporting) சிறப்புச் செய்திக் கட்டுரைக்கும் (News Feature Article) புலனாய்வுச் செய்திக்கும் (Investigative Reporting) மிகவும் நுட்பமான வேறுபாடுதான் இருக்கின்றது. புலனாய்வுச் செய்தியின் நோக்கம் மற்றவர்கள் வேண்டுமென்றே இரகசியமாக மறைத்து வைத்திருக்கும் உண்மையினை வெளிக்கொணர்வதாக இருக்கும். செய்தி விளக்கக் கட்டுரை செய்தியை மையமாகக் கொண்டு, வாசகருக்கு அதன் பல்வேறு கோணங்களையும், கூறுகளையும், உள்விவரங்களையும் உரைப்பதாக அமையும். ஆழ்நிலைச் செய்தியில் செய்தி முழுமையாக, விவரமாகத் தெளிவாக இருக்கும். ஆனால் ஒவ்வொரு வகையிலும் மற்றவற்றின் சாயல்கள், இயல்புகள் கூடுதலாகவோ குறைவாகவோ இருக்கலாம். இதனை ஓர் எடுத்துக்காட்டின் மூலம் விளக்கலாம்.

1979ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் இறுதியிலும் மேத் திங்கள் தொடக்கத்திலும் 'இண்டியன் எக்ஸ்பிரஸின்' (The Indian Express) செய்தியாளரான அஸ்வினி சாரின் (Ashwini Sarin) நமது நாட்டில்

சிறை வாழ்க்கை எப்படி இருக்கின்றதென்பதை உணர்வதற்காகத் தாமே வேண்டுமென்று ஒரு சிறிய குற்றத்தில் அகப்பட்டு, தண்டனை பெற்று, தில்லியிலுள்ள திஹார் மத்தியச் சிறைச்சாலைக்குச் (Tihar Central Jail) சென்றார். சிறைச்சாலையில் தாம் பெற்ற அனுபவங்களை யும், திரட்டிய விவரங்களையும் வைத்துக் கொண்டு 'இண்டியன் எக்ஸ்பிரஸ்' இதழில் நான்கு தொடர் கட்டுரைகள் எழுதினார்.

அவை அவருக்குப் பெரும்புகழைத் தேடித்தந்தன. அவை ஒரு கோணத்தில் ஆழ்நிலைச் செய்தியாகவும், இன்னொரு கோணத்தில் புலனாய்வுச் செய்தி போலவும், பிறிதொரு கோணத்தில் சிறப்புச் செய்திக் கட்டுரை போன்றும் தோன்றியதென்பது குறிப்பிடத்தக்கது.

## புலனாய்வுச் செய்தி (Investigative Reporting)

செய்தித்தாள்கள் தொடக்ககாலத்திலிருந்தே மறைக்கப்பட்ட பொதுமக்களோடு தொடர்புடைய உண்மைகளை வெளிக்கொணர்ந்து தக்க ஆதாரங்களுடன் உறுதிப்படுத்துகின்ற பணியினைச் செய்து வருகின்றன. இது புலனாய்வுச் செய்திப் பணியாக முதன் முதலில் அமெரிக்காவில் சிறப்பும் பெருமையும் முக்கியத்துவமும் பெற்றது. அங்கு 'வாஷிங்டன் போஸ்ட்' (Washington Post) என்ற இதழில் பணியாற்றும் உட்வார்டு (Wood Ward), பெர்ன்ஸ்டெய்ன் (Bernstien) என்பவர்கள் அமெரிக்கத் தலைவராயிருந்த நிக்சனின் (Nixon) நிர்வாகத்தின் ஊழல்களை 'வாட்டர்கேட் செய்தி'யாக (Watergate Story) வெளியிட்டனர். அமெரிக்கக் குடியரசுத் தலைவர் பதவி விலக வேண்டிய நிலை, அந்தச் செய்தி வெளிவந்ததன் மூலமே ஏற்பட்டது. அதன் பின்பு புலனாய்வுச் செய்தியளித்தல் தனிவகைச் செய்திப் பணியாக உலகெங்கும் வளர்ந்து வருகின்றது.

சில மேல்மட்ட இரகசியங்கள் கசிவாக (Leakage) வெளிவருவதை ஒட்டிப் புலனாய்வுச் செய்தி உருவாகின்றது. சிறப்பான முறையில், புலனாய்வுச் செய்தியளிப்பு என்பது மிகப்பெரிய துப்பறியும் பணியாகும். ஆழ்ந்த செய்தி வழங்குபவரின் கருவியாக இந்த வகைச் செய்தியளிப்பு அமைகின்றது.

> நிகழ்ச்சிகள் இதில் உள்ளடங்கி இருந்த போதிலும் இது நிகழ்ச்சிச் செய்தியளிப்பதாக மட்டும் அல்லாமல் (Event Reporting) சூழ்நிலையை விளக்குவதாகவும் (Situation Reporting) விளங்குகின்றது

என்று எம்.வி. காமத் கூறுகின்றார்.

புலனாய்வுச் செய்தி திரட்டுதலின் தொடக்கம் வதந்தியாகவோ ஊகமாகவோ இருக்கலாம். கண்ணுக்குத் தெரியாதவற்றை

வெளிக்கொணர இடர்ப்பாடுகளையும், தொல்லைகளையும் ஏற்றுக் கொண்டு உழைக்கும் பொழுது புலனாய்வுச் செய்தி உருவாகின்றது.

புலனாய்வுச் செய்திகளைத் திரட்டுகின்ற செய்தியாளர் சிலவற்றைக் கவனத்தில் கொள்ள வேண்டும். அவர் எந்த இதழில் பணியாற்றுகின்றாரோ அதன் ஆசிரியரின் ஒப்புதலையும் உதவியையும் பெற்றுப் புலனாய்வுப் பணியில் ஈடுபடுவது நல்லது. ஏனெனில் இப்பணியில் மிகுதியான பணமும் நேரமும் செலவாகும். தனிமனிதரால் புலனாய்வை மேற்கொள்ளுதல் தொல்லை நிறைந்ததாக இருக்கலாம்.

புலனாய்வுக்கு வேண்டிய செய்திகள் எங்கிருந்தும் எப்பொழுதும் கிடைக்கலாம். ஆதலால் எதனையும் கவனிக்காமல் ஒதுக்கக் கூடாது. சிறிய நுனியாக இருக்கலாம். அதனைத் தொடர்ந்தால் பெரிய உண்மைகள் வெளிப்படலாம்.

சட்டத்திற்குட்பட்டுப் புலனாய்வினை மேற்கொள்வதே நல்லது. சான்றுகளைத் தேடித் தவறான வழியில் முயன்றால் செய்தியாளர் மீது குற்றம் வந்துவிடும்.

முதலிலிருந்து திட்டமிட்டுப் பணி செய்ய வேண்டும். படிப் படியாகச் செய்திகளைத் திரட்ட வேண்டும். அவசரப்பட்டு முடிவுக்கு வரக்கூடாது. கிடைக்கும் விவரங்கள் சரியானவை தானா என்பதை ஒவ்வொரு நிலையிலும் உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். துப்பறியும் பணி தொடர்ந்து நடக்க வேண்டும். செல்லும் வழி கரடு முரடாக இருக்கும். அஞ்சாமல் முயன்றால் வெற்றி கிட்டும்.

**செய்திக் கட்டுரை (News Feature)**

ஏதாவதொரு செய்தியை மையமாகக் கொண்டு, அதனை விளக்கவோ, பகுத்தாய்ந்து சில உண்மைகளை வெளிக்கொண்டு வரவோ சிறப்புச் செய்திக் கட்டுரை எழுதலாம்.

தக்க செய்தியை மையமாகக் கொண்டு, அதனைப் பற்றிய முழு விவரங்களையும் விளக்கும் வகையில் அமைவது சிறப்புச் செய்திக் கட்டுரையாகும். இது தொடர் செய்திகளின் தொகுப்பாகவோ, செய்திக்குப் பின்னால் மறைந்து கிடக்கும் செய்திகளைக் கூறுவதாகவோ, ஆழ்நிலைச் செய்தி அறிக்கை போன்றோ அமையும்.

எடுத்துக்காட்டாக, கூட்டுச் சேரா நாடுகளின் உச்சிநிலை மாநாடு நமது நாட்டில் நடைபெறுவதாகக் கொள்வோம். அதனை ஒட்டி, கூட்டுச் சேரா நாடுகளின் உறுப்பினர் நாடுகள் கொண்டுவரும் தீர்மானங்கள் முதலானவை பற்றி விளக்கமாக எழுதி வெளியிடுவது சிறப்புச் செய்திக் கட்டுரையாகும்.

### செய்திகளில் மனித ஆர்வம் (Human Interest in the News)

பெரும்பாலான செய்திகளின் உயிரோட்டமாக மனித ஆர்வம் இருக்கின்றது. ஆதலால் தான் ஜான் ஹோஹன்பர்க்,

> இன்றைய இதழியலில் மனித ஆர்வம் என்ற வானவில் எல்லாத் துறைகளையும் வளைத்துக் கொண்டிருக்கின்றது

என்று கூறுகின்றார்.

செய்திகளில் மனிதாபிமானமுள்ளவை வாசகர்களின் உள்ளத்தைத் தொட்டு, நெக்குருகச் செய்து, உணர்வினை மீட்டுகின்றன. எந்தச் செய்தி வாசகரை மனம் ஒன்றிப் படிக்க வைக்கிறதோ, எது அவரிடம் உள்ளார்ந்த நெகிழ்வினை ஏற்படுத்தி, கண்கள் கலங்கவோ பெருமூச்சுவிடவோ வியக்கவோ இரக்கப்படவோ செய்கின்றதோ அதனை மனிதாபிமானம் உள்ள செய்தி என்று கூறலாம்.

மனிதாபிமான செய்திகள் ஓர் இதழுக்கு வண்ணம் கூட்டுகின்றன. வாசகர்களின் எண்ணிக்கையைப் பெருக்கும் ஆற்றல் அவற்றிற்கு உண்டு.

தொடக்ககாலத்தில் மனித ஆர்வச் செய்திகளுக்கு ஆசிரியர்கள் மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கவில்லை. மிகவும் ஆழமான, பயனுள்ள செய்திகளிலிருந்து மக்களின் கவனத்தை இவை திசை திருப்புவனவாக உள்ளன என்று கருதி ஒதுக்கவே முயன்றனர். ஆதலால், 'எவை மனித ஆர்வச் செய்திகள்?' என்ற கேள்விக்கு

> இரத்தம், பணம், பாலுணர்ச்சி இவைதான் மனித ஆர்வத்திற் குரியவை

என்று கேலி செய்தனர். சிலர்,

> மக்களின் ஆர்வமானது அழகான பெண்கள், இனிய குழ்ந்தைகள், விலங்குகள் ஆகியவற்றின் மீதுதான் இருக்கின்றது

என்றனர். இந்தக் கூற்றில் ஓரளவு உண்மை இருக்கின்றது.

இன்று மக்களின் ஆர்வம் விரிந்து, பரந்து, எல்லாவற்றையும் உள்ளடக்கியதாக விரைந்து வளர்கின்றது. பெண்கள், குழந்தைகள், விலங்குகள் மீது மட்டுமன்றி, வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் எவை எல்லாம் வண்ணமாகவும் கவர்ச்சியாகவும் உணர்வூட்டுவன வாகவும் ஆர்வத்தைத் தூண்டுவனவாகவும் இருக்கின்றனவோ அவற்றில் எல்லாம் ஈடுபாடு காட்டுகின்றனர். மனிதனோடு தொடர் புடையன எல்லாம் மனித நேயத்திற்கு உரியனவாகின்றன.

> வெளியிடத்தக்க ஒவ்வொரு செய்தியிலும் மனித ஆர்வம் ஊடுருவி நிற்கின்றது. செய்தியின் கருப்பொருளாக இருப்பது போராட்டம் ஆகும். அதிலிருந்துதானே மனிதர்கள் ஆர்வம் கொள்கின்ற மனிதச் சிக்கல்களும், தொடர்புகளும் கிளர்ந்து எழுகின்றன

என்று ஜேம்ஸ் எம்.நீல், சூசான்னெ எஸ். பிரவுன் ஆகியோர் கூறுகின்றனர்.

வாசகர்களோடு நேரடியாகவோ, மறைமுகமாகவோ தொடர்பு உடையவை, அவர்கள் அறிந்தவை, அவர்களைப் போன்றவர்கள் பற்றியவை, உணர்வுகளுக்கு நெருக்கமானவை செய்திகளில் இடம்பெறுகின்ற பொழுது அவை மனித ஆர்வமுடையவை ஆகின்றன.

மனித ஆர்வச் செய்திகளில் மூன்று கூறுகள் இருக்க வேண்டும். முதலாவதாக, செய்தியின் பொருள் (Subject) மனித ஆர்வத்தைத் தூண்டுவதாக இருக்க வேண்டும். பொதுவாக வாசகர்கள் தங்கள் வாழ்க்கையோடு தொடர்புபடுத்திப் பார்க்கக் கூடியவற்றிலும் மனித குலத்திற்குப் பொதுமையான அனுபவங்கள் என்று கருதக் கூடியனவற்றிலும் ஆர்வம் காட்டுகின்றனர். காதல், இறப்பு, வெற்றி, தோல்வி, தியாகம், போராட்டம், குற்றம், பாலுணர்ச்சி, பலாத்காரம், துன்பம், மந்திரம், தந்திரம், பேய் போன்றவை இவ்வகையில் அடங்கும்.

இரண்டாவதாக, செய்தியின் அமைப்புமுறை (Organization) வாசகர்களைக் கவர்ந்து, செய்தியை முழுமையாகப் படிக்கத் தூண்டுவதாக இருக்க வேண்டும். செய்தியின் தொடக்கமே குட்டிக் கதை போல, வியப்பிற்குரிய செயலின் விளக்கம் போல, கவர்ச்சியான மேற்கோளைக் கொண்டதாக இருக்கலாம்.

மூன்றாவதாக, செய்தியைக் கூறும் சொல்நடை (Diction) வாசகர்களைச் சுவையுடன் படிக்கச் செய்யக் கூடியதாக அமைய வேண்டும். துள்ளல் நடையில் நீரோட்டமாகச் செய்தியைக் கூறினால், வாசகர்கள் சுவைத்துப் படிப்பார்கள்.

மனிதர்களின் ஆர்வத்தை முரண்பட்ட இருவகைச் செய்திகள் கவர்கின்றன. ஒன்று அசாதாரணமான சூழ்நிலையில் சாதாரண மனிதர்கள் பற்றிய செய்திகள், மற்றொன்று அசாதாரண மனிதர்கள் சாதாரண சூழ்நிலையில் நடந்து கொள்பவை பற்றிய செய்திகள்.

சாதாரண மனிதர்கள் அசாதாரண சூழ்நிலையில் நடந்து கொள்வதற்கு, காட்டு வழியில் ஐயப்ப சுவாமி கோவிலுக்குச்

செல்பவர்கள் யானைக் கூட்டத்தைப் பார்ப்பது, ஊருக்குள் காட்டு விலங்கு நுழைவது போன்றவற்றைக் கூறலாம். இவற்றை அறிவதில் மக்கள் ஆர்வம் காட்டுகின்றனர்.

நமது நாட்டின் தலைமையமைச்சர் மற்றவர்களைப் போலச் சட்டையைக் கழற்றிவிட்டு, குருவாயூரப்பன் கோவிலுக்குச் சென்று வழிபடுவது செய்தியாகின்றது. இது அசாதாரண மனிதர்கள் சாதாரண சூழ்நிலையில் நடந்து கொள்வதற்குச் சான்றாகும்.

நேரடியாக ஒரு செய்தியைக் கூறாமல் மனித ஆர்வம் விஞ்சும் வகையில் ஒரு செய்தியை எழுதும் பொழுது செய்தியாளர் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

மக்களின் ஆர்வத்தைத் தூண்டுவதற்காக மிகைப்படுத்தியோ நடைபெறாததையோ செய்தியாகச் சிலர் படைத்துக் கொடுத்து விடலாம்.

நகைச்சுவையாக எழுதுவதாக எண்ணிக் கொண்டு செய்தியாளர் எழுதுவது, அவரைச் சட்டப்படி குற்றமுடையவராக்கி விடலாம். எனவே வரையறையைத் தெரிந்து எழுத வேண்டும்.

செய்தியில் வருகின்ற மனிதர்களின் மீது இரக்கப்பட்டு, நடுநிலை தவறி ஒரு பக்கம் சார்ந்து செய்தியை எழுதிவிடக் கூடாது.

### படங்களும் இதழ்களும்

இதழ்களின் வனப்பையும், செய்தி மதிப்பையும் கூட்டுவனவாகப் படங்கள் உள்ளன. வண்ணப்படங்கள் இல்லாத இதழ்கள் வாசகர்களைக் கவர்வதில்லை. அச்சுக்கலை வளர்ச்சியும், நிழற்படத் தொழில் நுட்ப மேம்பாடும், ஓவியர்களின் பெருக்கமும் இன்றைய இதழ்களில் படங்களுக்குச் சிறப்பான இடத்தைத் தேடித் தந்துள்ளன.

பல்வேறு வகையான நிழற்படக் கருவிகள் வந்த வண்ணம் உள்ளன. இவற்றின் உதவியால் கருப்பு வெள்ளை, வண்ணப் படங்கள் எடுக்கப்படுகின்றன. எல்லா வகையான முன் தயாரிப்புகளையும் தானாகவே செய்து கொள்ளும் 'ஆட்டோமேட்டிக் கேமராக்கள்' மிகுதியாக வெளிவருவதால் யாரும் எளிதில் படம் எடுக்க முடிகிறது. தொலைவில் உள்ள பொருளையும் உருப் பெருக்கியின் மூலம் நுட்பமாகக் காட்டிப் படம் எடுக்க உதவும் Zoom கேமராக்களும் உள்ளன. தற்போது தொழில் நுட்ப மேம்பாட்டால் 'டிஜிட்டல் கேமராக்கள்' வந்துள்ளன.

சாதாரண கேமராக்களில் எடுத்த படங்களைச் சுத்தம் செய்து அச்சிட்டால்தான் அவற்றின் வடிவத்தைக் காண இயலும். அதனால்

எடுத்த படங்கள் அனைத்தையும் அச்சிட வேண்டிய கட்டாயம் இருப்பதால் செலவு மிகுதியாக ஆனது. ஆனால் டிஜிட்டல் கேமராவின் மூலம் எடுத்த படங்களைக் கணினியில் செலுத்தி அந்தப் படங்களைக் கணினித் திரையில் பார்க்க இயலும். அப்படங்களில் எவற்றை இதழில் வெளியிட வேண்டுமோ அவற்றை மட்டும் அச்சிட்டுக் கொள்ளலாம். பிற படங்களை எல்லாம் கணினியிலேயே சேமித்து வைத்துக் கொள்ள முடியும். நிழற்படத்தைத் தேவையான அளவில் வெட்டும் வேலையையும் கணினியின் துணைக் கொண்டே தற்காலத்தில் செய்ய முடிகிறது.

செய்தித்தாள்களையும், பருவ இதழ்களையும் புரட்டினால், கண்ணையும் கருத்தையும் கவர்கின்ற நிழற்படங்கள், ஓவியங்கள், நகைச்சுவைப் படங்கள், சிந்தனைக்குரிய கருத்துப்படங்கள், வரை படங்கள் ஆகியவை பல வண்ணங்களில் இடம் பெற்றிருப்பதைக் காண்கின்றோம். இன்றைய இதழ்களின் வெற்றிக்குப் படங்கள் பெருந் துணை புரிகின்றன. ''படங்கள் இல்லாப் பத்திரிகை பாழ்'', என்று கூறுமளவிற்குப் படங்களின் முக்கியத்துவம் கூடியுள்ளது. ஆதலால் இதழ்களில் வெளியாகும் பல்வேறு வகையான படங்களையும் பற்றி அறிந்து கொள்ளலாம்.

## நிழற் படங்கள் (Photographs)

இந்தியச் செய்தித்தாள்களில் நிழற்படங்களின் பங்கு இப்பொழுது கூடி வருகின்றது. நாளிதழ்களில் இப்பொழுது படங்களை மிகுதியாக வெளியிடுகின்றனர். நாளிதழ்கள் வெளியிடும் வார மலர்களிலும், வார, மாத இதழ்களிலும் வண்ண நிழற்படங்கள் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றன.

ஆயிரம் சொற்கள் சொல்ல முடியாதவற்றை ஓர் அருமையான நிழற்படம் கூறிவிடுகின்றது. கற்றோரையும் கல்லாதவரையும், சின்னஞ்சிறுவர்களையும் வயது முதிர்ந்தவர்களையும் பார்க்கவும், சுவைக்கவும், புரிந்துகொள்ளவும் தூண்டுகின்ற ஆற்றல் நிழற்படங்களுக்கு இருக்கின்றது. ஆதலால் தான் செய்திகளின் வெளியீட்டில் நிழற்படங்கள் பெரும்பங்கு பெறுகின்றன.

பெரிய செய்தித்தாள்கள் தங்களது பணியாளர் குழுவில் நிழற்படக் காரர்களை வைத்திருக்கின்றனர். அவர்களை 'நிழற்படச் செய்தியாளர்கள்' (Visual Reporters) என்று கூறலாம். அவர்கள் தனியாகவோ செய்தியாளர்களோடு சேர்ந்தோ செய்திகளுக்கேற்ற நிழற்படங்களை எடுக்கின்றனர். படமெடுக்க வேண்டுமென்று செய்தியாசிரியர் குறிப் பிட்டுள்ளவற்றை அவர்கள் படம் எடுப்பார்கள். அவற்றோடு கூட அவர்களாகவே வேறு சில காட்சிகளையும் படமெடுத்துத் தருவார்கள்.

செய்தியாளர்கள் செய்திகளைத் திரட்டும்பொழுது அவற்றோடு தொடர்புடைய நிழற்படங்களையும் எடுக்கின்றனர். நிழற்படக் கலையை அறிந்திருக்கும் செய்தியாளருக்கு நிழற்படக் கருவி ஓர் ஆற்றல்மிக்க ஆயுதமாகத் துணை செய்கின்றது.

வளர்ந்து வருகின்ற நாடுகளில் செய்தி நிறுவனங்கள் செய்திகளை வழங்குவதோடு நிழற்படங்களையும் வழங்குகின்றன. இப்பொழுது நிழற்படங்களைத் திறமையாக எடுத்துத் தருகின்ற நிழற்படச் சேவை நிறுவனங்கள் வளரத் தொடங்கியுள்ளன.

இப்பொழுது சில தனிப்பட்ட நிழற்படக்காரர்களும் தாங்களே நிழற்படங்களை எடுத்து (வெளியிட) இதழ்களுக்கு அனுப்புகின்றனர். இவர்கள் இதழ்களில் எழுதுகின்ற தனிப்பட்ட எழுத்தாளர்கள் போன்றவர்கள். இவர்கள் எடுத்த படங்களை வெளியிட்டால், இதழ்கள் இவர்களுக்குப் பணம் தருகின்றன.

எல்லா நிழற்படங்களும் இதழ்களில் வெளியிடும் தகுதி பெறுவதில்லை. செய்தித்தாள்களில் இடம் பெறும் நிழற்படங்களில் சில இயல்புகள் இருக்க வேண்டும்.

ரெங்கசாமி பார்த்தசாரதி,

> ஒரு படம் சொற்களால் சொல்ல முடியாத செய்தியினைச் சொல்ல வேண்டும். எழுத்தறிவற்ற ஓர் ஆணோ, பெண்ணோ, குழந்தையோ ஒரு படத்தை 'வாசிக்க' இயல வேண்டும்... ஒரு நல்ல படம் வாழ்க்கையின் செய்தியைக் கூறுகின்றது. அது நகைச்சுவையை, பாவங்களை, துன்பத்தை, ஆழ்ந்த உணர்வினைச் சொற்களை விட மிகுந்த ஆற்றலுடன் கூறுகின்றது

என்கின்றார்.

செய்தித்தாள் படங்களின் இயல்புகள் பற்றிக் கூறுகையில்,

> நல்ல படங்கள் உடனடியாகக் கவனத்தை ஈர்க்க வேண்டும். வாசகர்களின் மீது அவை ஏற்படுத்துகின்ற உணர்வின் தாக்கத்தை வைத்துத்தான் அவற்றின் தரத்தை நிர்ணயிக்க வேண்டும்... செய்தித்தாளின் நல்ல படங்கள் உண்மையைக் கூறுகின்றன. மேலும், மிகவும் முக்கியமாக, செய்தித்தாளில் உள்ள படங்கள் ஒரு செய்தியைக் கூற வேண்டும்

என்று கென்னத் பிளம் என்பார் குறிப்பிடுகின்றார்.

சொற்களில் ஒன்றைக் கூறுவதைவிட நிழற்படங்களின் மூலம் ஒன்றை விளக்குவதில் சில நன்மைகள் உள்ளன.

சொற்களால் உணர்த்த முடியாதவற்றைப் பார்க்கக் கூடிய படங்கள் வெளிக்கொணர்ந்து விடுகின்றன. செய்திகளின் முழுமையை விளக்க அவை பெரிதும் உதவுகின்றன. விரைந்து படிக்கின்ற வாசகர் செய்தியின் ஏதாவது ஒரு பகுதியை மனங்கொள்ளாமல் போகலாம். ஆனால் படத்தை யாரும் பார்க்காமலோ அதன் உட்பொருளை உணராமலோ இருப்பதில்லை.

வாசகர் பார்க்கும் ஒரு பார்வையிலேயே படம் கூறும் செய்தியினைப் புரிந்து கொள்வார். இரயில் விபத்தின் படத்தைப் பார்த்தவுடன் அதன் கொடுமையினை அறிந்து கொள்ளலாம்.

செய்தியினைச் செப்பனிடுகின்ற பொழுது அதன் உருவத்திலும் உள்ளடக்கத்திலும் மாற்றம் ஏற்படலாம். ஆனால் நிழற்படங்களை அப்படி மாற்றி வெளியிட முடியாது.

செய்திக் கட்டுரைகளுக்கும், சிறப்புக் கட்டுரைகளுக்கும் நிழற் படங்கள் வளம் சேர்க்கின்றன. எடுத்துக்காட்டாக, பயணக் கட்டுரைகளைக் கூறலாம். நிழற்படங்கள் கவர்ச்சியாக இருந்தால் அவற்றைப் பார்ப்பவர்கள் கட்டுரையையும் படிப்பார்கள்.

நிழற்படங்களை வாசகர் விரைவாகவும் எளிதாகவும் புரிந்து கொள்கின்றார். கண்ணால் நேரடியாகப் பார்ப்பதால், அவை வாசகரின் உள்ளத்தில் எளிதாகத் தடம் பதித்து விடுகின்றன. இதனால் அவற்றை மறக்காமல் நினைவில் வைத்திருக்க முடிகின்றது.

கட்டுரைகள் உயிரோட்டமுள்ளவைகளாகவும், சுவையாகவும், யதார்த்தமாகவும் அமையப் படங்கள் உதவுகின்றன. சிறந்த விளக்கப் படங்கள் இருந்தால் கட்டுரைகளின் அளவைக் கூடக் குறைத்துக் கொள்ளலாம்.

செய்தித்தாளில் செய்திகளோடு சேர்த்து நல்ல நிழற்படங்களைச் சிறப்பாகப் பயன்படுத்த வேண்டுமானால் செய்தியாளரும் நிழற்படக் காரரும் நல்ல திட்டத்தோடு செயல்பட வேண்டும். வெளியீட்டாளர் என்னென்ன பொருள்பற்றி, எப்படிப்பட்ட படங்கள், எந்தெந்தச் சூழ்நிலைகளில் வேண்டுமென்பதை முன்கூட்டியே நிழற்படக் காரருக்குக் கூற வேண்டும்.

நிழற்படக்காரருக்கு நிழற்படங்கள் எடுப்பதில் முழுச் சுதந்திரம் வழங்க வேண்டும். அவரை மிகவும் கட்டுப்படுத்திவிட்டால், அவரது தனித்தன்மையும் படைப்பாற்றலும் வெளிப்படாமல் போய்விடும்.

அவரை விருப்பம் போல் செயல்படவிட்டால், நல்ல புதுமையான படங்கள் கிடைக்க வழி ஏற்படும்.

செய்தியாளரும் நிழற்படக்காரரும் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு ஓர் அணியாகச் செயல்பட வேண்டும். அப்பொழுதுதான் செய்திக்கு அரணமைக்கக் கூடிய படங்கள் கிடைக்கும்.

இப்பொழுது அறிவியல் தொழில் நுட்ப வளர்ச்சியால் வியத்தகு முறையில் அருமையாகப் படமெடுக்கும் நிழற்படக் கருவிகள் வந்து விட்டன. மிகுந்த தொல்லையின்றி நிழற்படக்காரர்களால் எதனையும் ஓடிக் கொண்டிருப்பதைக்கூடப் படமாக்க முடியும். ஆனால், ஒரு படத்தின் தரமும் தனித்தன்மையும் நிழற்படக் கருவியைச் (Camera) சார்ந்து அமைவதில்லை. படம் எடுப்பவர்தான் படத்திற்குச் சிறப்பினை உருவாக்கித் தருகின்றார். ஒரு படம் எந்தக் கோணத்தில் எப்படி அமைகின்றதென்பதை ஒட்டித்தான் அது வெளிப்படுத்தும் செய்தி தெளிவாக அமையும். ஆதலால் செய்தித்தாள்களுக்குப் படமெடுப்பவர் படமெடுக்கும் தொழில் நுட்ப அறிவும், கற்பனையாற்றலும் பெற்றிருக்க வேண்டும்.

செய்தித்தாளுக்கு நிழற்படம் எடுப்பவரிடம் பொதுவாக

*(1)* படைப்பாற்றல் (creativity)

*(2)* தனித்தன்மை (Individuality)

*(3)* உள்ளுணர்வு (Intuition)

*(4)* தொழில் நுட்பம் (Craftsmanship)

*(5)* படமெடுக்கும் பொருளில் ஈடுபாடு (Love of the Subject)

*(6)* கற்பனைத்திறன் (Imagination)

*(7)* இதழியல் நோக்கு (Journalistic Outlook),

*(8)* மனித ஆர்வம் (Human Interest)

*(9)* விரைந்து செயல்படும் தன்மை (Quickness)

ஆகிய இயல்புகள் இருக்க வேண்டும்.

> எல்லாவற்றிற்கும் மேலாக, ஒரு படம் முக்கியமான நிகழ்ச்சியை - நடவடிக்கையை அதன் உச்சகட்டத்தைக் காட்ட வேண்டும்

என்று புகழ்பெற்ற நிழற்படக்காரரான ஹென்றி கார்ட்டியர் பிரஸ்ஸோன் (Henry Cartier Bresson) என்பவர் கூறுகின்றார். எடுக்கும் நோக்கையும், எடுத்த செயல்பாட்டையும் ஒட்டியே நிழற்படம் பெருமைப் படுகின்றது. எடுத்துக்காட்டாக, நமது தலைமையமைச்சர் இராஜீவ் காந்தி

இலங்கைக்குச் சென்றிருந்த பொழுது, இராணுவ அணிவகுப்பைப் பார்த்த வேளையில் ஒரு சிப்பாய் துப்பாக்கியின் அடிப்பாகத்தால் அவரைத் தாக்கினான். அந்தக் காட்சி வீடியோ பதிவாகக் காட்டப்பட்டதை நாம் தொலைக்காட்சியில் பார்த்தோம்.

அடிப்படை உணர்வுகளை வெளிக்காட்டும் வகையில்படங்கள் அமைவது நல்லது. வியப்பைக் காட்டும் குழந்தையின் முகம், மனம் விட்டுச் சிரிப்பது, கிராமத்துப் பெண்கள் இயற்கைச் சூழலில் பணி செய்வது போன்றவை சிறந்த படங்களுக்குரிய கருப்பொருள்களாகும். ஆதலால்தான், சொற்களால் வருணிக்கும் பொழுது செய்தியாகத் தோன்றாமலிருப்பது, நிழற்பட வடிவில் வெளிவரும் பொழுது மக்களின் கண்ணையும் கருத்தையும் கவர்கின்றது.

## ✦ படங்களின் வகைகள்

செய்தித்தாள்களில் வெளிவரும் நிழற்படங்களைக் கீழ்க்கண்ட முறையில் வகைப்படுத்தலாம்.

1. **செய்தி நிகழ்ச்சிப் படங்கள் (News Event Photos) :** செய்தியாகும் ஒன்றனை வெளிக்காட்டும் படங்கள் இந்த வகையைச் சேர்ந்தவைகளாகும். எடுத்துக்காட்டு: முதலமைச்சர் பதவி ஏற்றல், பரிசு வழங்கல், இரயில் விபத்து, ஊர்வலம் முதலானவை.

2. **உருவப்படங்கள் (Portrait Picture):** செய்தியில் வருபவர்களை அறிமுகப்படுத்தும் படங்களை வெளியிடலாம். நோபல் பரிசு பெற்றவர்களின் படங்கள், அமைச்சரவையில் இடம் பெறுபவர்களின் படங்கள் போன்றவற்றை எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

3. **கவர்ச்சிப் படங்கள் (Cheese Cake Shots):** பெண்கள், பாலுணர்ச்சிகளைத் தூண்டுபவை, காதலை வெளிக்காட்டுபவை போன்ற கவர்ச்சிப் படங்கள் தனிவகைகளாகும்.

4. **செயல் விளக்கப் படங்கள் (Action Shots):** ஒரு செயலைச் செய்கின்ற பொழுது எடுக்கின்ற படங்களுக்குத் தனிச் சிறப்பு உண்டு. உயரம் தாண்டும் நிலையில், தலைமையமைச்சர் ஜீப் ஓட்டும் நிலையில், கூட்டம் ஒன்றைத் தாக்கும் நிலைமையில் அமைகின்ற படங்கள் செயல் விளக்கப் படங்களாகும்.

5. **வடிவமைப்புப் படங்கள் (Pattern Shots) :** விளம்பர நோக்கில் உற்பத்தி செய்த பொருள்களின் வடிவமைப்பு வெளிப்படும்

வகையில் எடுக்கப்பெற்ற படங்களைச் செய்தித்தாள்கள் வெளியிடலாம். டி.வி., ஸ்கூட்டர் போன்றவற்றின் படங்கள் இப்படி அமைபவையாகும்.

6. **உற்பத்திப் படங்கள் (Product Shots):** பொதுவாக உற்பத்தி செய்கின்றவை பற்றிய பலவகைப் பொருள்களை விளக்கும் படங்களை வெளியிடலாம்.

## ✦ செப்பனிடுதல்

நிழற்படங்களை எடுத்தது எடுத்தபடி செய்தித்தாளில் வெளியிடுவதில்லை. செய்தியாசிரியரோ நிழற்படப் பிரிவு ஆசிரியரோ படத்தில் தேவை இல்லாதவற்றை அகற்றி, எப்படி அதனை வெளியிட வேண்டுமென்று முடிவு செய்கின்றார். இப்படி வேண்டாதவற்றை அகற்றி வெளியிட வேண்டியவற்றைத் தீர்மானித்தலை வெட்டுதல் (Crop or Trim) என்று கூறுகின்றனர். படம் தெளிவாக அமைய இது உதவுகின்றது.

படத்தை வெட்டுகின்ற (Trimming) பணியைக் கலை உணர்வோடு செய்ய வேண்டும். வாசகர் நோக்கில் படத்தைப் பார்த்துத் தேவையற்றவற்றை அகற்ற வேண்டும். படத்தைச் செங்குத்தாகவோ, படுக்கை நிலையிலோ எப்படி வெளியிட வேண்டுமென்பதையும் ஆசிரியர் தீர்மானித்துக் கூற வேண்டும். படத்தின் தாக்கமும் விளைவும் எதிர்பார்க்கும் வகையில் அமைய இவை துணை செய்கின்றன.

## ✦ படத் தலைப்பிடுதல் (Caption)

ஒவ்வொரு நிழற்படத்தையும் ஒரு விளக்கத் தலைப்போடோ, குறிப்போடோ வெளியிட வேண்டும். ஒரு செய்திக்கு எப்படி தலைப்பு (Headline) முக்கியமோ, அப்படியே ஒரு படத்திற்கும் தலைப்பு முக்கியம். வாசகர் முதலில் படத்தைப் பார்த்துவிட்டு, பின்பு தலைப்பினைப் படித்து மேலும் விவரங்களைத் தெரிந்து கொள்ள முயல்கின்றனர்.

நல்ல தலைப்பானது படத்திற்கு மேலும் சிறப்பினைத் தருகின்றது. சுமாரான படம் கூட நல்ல தலைப்பினால் வாசகரின் உள்ளத்தைத் தொடுவதாக அமைந்து விடும். மோசமான தலைப்பு நல்ல படத்தின் மேன்மையைச் சீர்குலைத்து விடும். ஆதலால் தலைப்பைத் தருகின்றவர் மிகவும் கவனமாக இருக்க வேண்டும்.

தலைப்பு, படத்தினைப் பற்றிய எல்லா விவரங்களையும் கூறுவதாகவும், சுவையானதாகவும் இருக்க வேண்டும்.

> சிறந்த நிழற்படத் தலைப்பு நேரடியாக, சுருக்கமாக, வளமானதாக அமைய வேண்டும். சின்னஞ்சிறு வாக்கியத்தில் உயிரோட்டமுள்ள நிகழ்காலத்தில் படத்தைப் பற்றிக் கூற வேண்டும். படத்தலைப்பு குறுகியதாக இருக்க வேண்டும்; அதுவே செய்தியல்ல. படம் குறிப்பதைச் சுற்றி வளைக்காமல், வீணான சொற்களைப் பயன்படுத்தாமல் கூற வேண்டும். செய்தி யோடு சேர்ந்த படத்தின் தலைப்பு, படத்தை மட்டுமே விளக்க வேண்டும். படத்தலைப்பு வெளியிட்ட படத்திலிருந்து எவ்வகையிலும் மாறுபடக் கூடாது

என்று ரெங்கசாமி பார்த்தசாரதி கூறுகின்றார்.

எம்.வி.காமத் என்பார் படத் தலைப்பினைக் கீழ்க்கண்ட நான்கு வகைகளாகப் பகுக்கின்றார்.

1. செய்தியின் ஒரு பகுதியாக வரும் படத்தினை விளக்குகின்ற தலைப்பானது சுருக்கமாக இருக்க வேண்டும்.
2. ஓரிடத்தில் படத்தையும் மற்றுமோர் இடத்தில் செய்தியையும் வெளியிட்டு, வாசகர்களை என்னவென்று அறியத் தூண்டும் தலைப்பினை வெளியிடலாம். எடுத்துக்காட்டாக, சோனியா காந்தியும் மன்மோகன் சிங்கும் சேர்ந்து சிரிக்கும் படத்தை ஓரிடத்தில் வெளியிட்டு, ''இவர்கள் ஏன் சிரிக்கின்றார்கள்?'' (விவரம் ஆறாம் பக்கத்தில் காண்க) என்று வெளியிடலாம்.
3. செய்தி இல்லாமல் படமே செய்தியாக இருந்தால் தலைப்பு முழுமையானதாக இருக்க வேண்டும்.
4. செய்திகளுக்கு ஆதாரமில்லாமல் நிழற்படத்தை மட்டும் வெளியிட்டால், நிழற்படம் எடுக்கப் பெற்ற சூழலையும் தலைப்பில் சேர்த்துக் கூற வேண்டும்.

உலகமெங்கும் படங்களோடு கூடிய இதழ்கள் வாசகர்களிடம் மிகுந்த செல்வாக்குப் பெற்று விளங்குகின்றன. 'நியூயார்க் டைம்ஸ்' (The New York Times), 'நேஷனல் ஜாகிரபி' (The National Geography) ஆகிய வெளிநாட்டு இதழ்களையும் 'இல்லஸ்ட்ரேடட் வீக்லி' (The Illustrated Weekly) போன்ற நமது நாட்டு இதழ்களையும் படங்களால் புகழ்பெற்ற இதழ்களுக்குச் சான்றுகளாகக் கூறலாம். இப்பொழுது ஹிந்து இதழின் வெளியீடான ஃபிரண்ட் லைன் (Frontline) நிழற்படங்களின் மூலம் இதழ்களில் தனியிடம் பெற்றுத் திகழ்கின்றது.

## நகைச்சுவைத் துணுக்குகள்

வார, மாத இதழ்கள் வாசகர்களுக்குப் பொழுது போக்காகவும், மனமகிழ்ச்சி அளிப்பதாகவும் அமையும் வகையில் மிகுதியாக நகைச்சுவைத் துணுக்குகளை (Humours, Tit-Bits) வெளியிடுகின்றன. நாளிதழ்களிலும் நகைச்சுவைத் துணுக்குகள் இடம்பெறுகின்றன. தமிழ் இதழ்களில் 'தினத்தந்தி' முதன் முதலில் நாள்தோறும் நகைச் சுவைத் துணுக்குகளை வெளியிடும் பழக்கத்தை ஏற்படுத்தியது.

மனிதன் எப்பொழுதும் கடுமையான செய்திகளைப் படிக்கவும் சிந்திக்கவும் விரும்புவதில்லை. அவன் சிலவற்றை நகைச்சுவை யோடு பார்க்க விழைகின்றான். காந்தியடிகள், 'எனக்கு நகைச்சுவை உணர்வு இல்லாவிட்டால் நான் எப்பொழுதோ தற்கொலை செய்து கொண்டிருப்பேன்' என்று கூறியிருப்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

சிறந்த நகைச்சுவைத் துணுக்குகள் வெறும் சிரிப்பை மட்டும் தூண்டாமல் நாட்டின் நடப்புகளை மக்களுக்கு உணர்த்துகின்றன.

முன்பு இதழ்களில் பணியாற்றியவர்கள் மட்டும்தான் நகைச்சுவைகளை எழுதினார்கள். இப்பொழுது தமிழில் நகைச்சுவை எழுத்தாளர்கள் என்ற ஒருதனிப்பிரிவினரே தோன்றிப் புகழ்பெற்று வருகின்றனர்.

வெளிநாடுகளில் நகைச்சுவைகளை வெளியிடுவதற்காகவே, 'ஹியூமரிஸ்ட்' (Humarist), 'டிட் பிட்ஸ்' (Tit Bits) என்னும் இதழ்கள் வெளிவந்தன. தமிழில் நகைச்சுவைக்கு முதலிடம் கொடுத்து வெளிவந்த முதல் இதழ் 'ஆனந்த விகடன்'.

நகைச்சுவைக்கு அணி சேர்ப்பது படம். சில படங்களைப் பார்த்தவுடனே நமக்குச் சிரிக்கத் தோன்றும். படங்கள் இல்லாத நகைச்சுவைத் துணுக்குகள் ஒப்பனை செய்து கொள்ளாத பெண்களைப் போன்றவை.

## படத்துணுக்குகளும் தொடர்களும்

வார, மாத இதழ்களில் சிறுகதைகளுக்கும் தொடர்கதைகளுக்கும் அணி சேர்க்கும் வகையில் ஓவியங்களை வெளியிடுகின்றனர். இவற்றில் படங்கள் உரைநடைக்குத் துணை போகின்றன. படங்களே கருத்துகளையும், செய்திகளையும், கதைகளையும் கூறும் வகையில் வெளியிடுகின்றனர்.

தினத்தந்தியில் 'ஆண்டியார்', வாராந்தரி ராணியில் 'குரங்கு குசலா' ஆகியவை துணுக்குப்படங்களாக, கருத்துகளைக் கூறும் வகையில் வெளிவருகின்றன.

சிறுவர் இதழ்களில் படங்கள் பெரும்பங்கு பெறுகின்றன. சிறுவர்கள் பெரிதும் படங்களை விரும்பிப் பார்க்கின்றனர். பெரியவர்களும் படங்களைப் பார்ப்பதை விரும்புகின்றனர்.

## ✦ வகைகள்

இதழ்களில் வெளிவரும் படங்களை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்.

1. **பேச்சு மொழியற்றவை (Gag) :** படங்களோடு எந்த வாசகமும் வெளியிடாமல் கதையை, கருத்தை வெளியிடலாம். இதில் கதாபாத்திரங்கள் பேசும் முறையில் இல்லாமல் படங்களே தன்னிலை விளக்கங்களாக அமையும்.

2. **படக்கதை (Picture story) :** படங்களின் மூலமே ஒரு கதையைக் கூறலாம். இப்பொழுது வார இதழ்களில் இத்தகைய கதைகள் இடம் பெறுகின்றன. இவை ஒரே இதழில் நிறைவு பெறும் தனிப் படக் கதையாகவோ, தொடர்ந்து வெளிவரும் தொடர்படக் கதையாகவோ இருக்கலாம். தினத்தந்தியில் வரும் 'கன்னித்தீவு' என்னும் படக்கதை தொடர்ந்து நாற்பத்து மூன்று ஆண்டுகளாக வெளிவருகிறது.

3. **கருத்துப் படங்கள் (Cartoon):** ஏதாவது ஒரு கருத்தை விளக்கும் வகையில் படம் அமையலாம். அல்லது ஒரு குறிப்பிட்ட, படப் பாத்திரம் ஒவ்வோர் இதழிலும் கருத்துகளைக் கூறுவதாக - தொடர் கருத்துப்படமாக - அமையலாம். ஜெயராஜ் வரைந்து பிரபலமான 'அப்புசாமி - சீதாப்பாட்டி' ஓவியம் இதற்குச் சிறந்த எடுத்துக் காட்டு ஆகும்.

நாளிதழ்களில் கருத்துப் படங்கள் சிறப்பான இடத்தைப் பெறுகின்றன. பல சொற்களில் தலையங்கம் எழுதி உணர்த்த முடியாத கருத்துகளைக் கூடக் கருத்துப் படங்கள் எளிதாக உணர்த்துகின்றன. சமுதாயம், சமயம், அரசியல், பொருளாதாரத் துறைகளில் உள்ள குறைகளை, நகைச்சுவையோடு, ஆனால் குண்டு பாய்வதைப் போலக் குறிப்பாகத் தாக்கி வீழ்த்தும் வகையில் கருத்துப்படங்கள் அமைகின்றன.

தமிழ்நாட்டில் முதன்முதலாகக் கருத்துப் படங்களை வெளியிட்ட பெருமை மகாகவி பாரதியாரைச் சேரும். ஆங்கிலேயர்களின் ஆட்சி யின், கொள்கைகளின் குறைகளை 'இந்தியா' இதழில் புரட்சிகரமான முறையில் படம் பிடித்துக் காட்டினார். இப்பொழுது பெரும்பாலும்

எல்லாச் செய்தித்தாள்களும், வார, மாத இதழ்களும் கருத்துப் படங்களை வெளியிடுகின்றன.

கருத்துப்படங்களைப் 'படத்தலையங்கங்கள்' என்று கருதலாம். கருத்துப் படத்தைக் கேலிச்சித்திரம் என்றும் கூறுவார்கள். கருத்துப் படம் என்னும் சொல்லாட்சியைச் சி.பா. ஆதித்தனார் தமது தினத்தந்தி இதழில் முதலாவதாகப் பயன்படுத்தியுள்ளார்.

கருத்துப் படங்களும் கேலிச்சித்திரங்களும் வேறு வேறானவை என்று கருதுவோரும் உண்டு. Cartoon என்னும் ஆங்கிலச் சொல்லைக் 'கேலிச் சித்திரம்' என்று மொழிபெயர்த்தவர்கள் அதை அப்படியே பயன்படுத்துகிறார்கள். அதைக் 'கருத்துப்படம்' என்று நல்ல தமிழில் மொழிபெயர்த்தவர்கள் அவ்வாறே அதைப் பயன்படுத்துகின்றனர். எனவே கேலிச்சித்திரமும் கருத்துப்படமும் ஒரு பொருள் கொண்டவை எனத் தெளிவாகப் புரிந்து கொள்ளலாம்.

# 15. செய்தி நிறுவனங்கள்

சமுதாயத் தொடர்புகள் உயிரோட்டமானதாக அமையச் செய்திகள்-தகவல்கள் துணை செய்கின்றன. உள்நாட்டுக்குள்ளும், நாடுகளுக்கிடையிலும் செய்தி அமைப்புகள் இருந்தால் தான் செய்திகள் உடனுக்குடன் சரியாகவும் விரைவாகவும் கிடைக்கும்.

ஒவ்வொரு செய்தித்தாளும் எவ்வளவு பெரியதாக இருந்தாலும் உலகெங்கும் தானே நிருபர்களை அனுப்பிச் செய்திகளைத் திரட்ட முடியாது. அப்படி திரட்ட முயன்றால் மிகுதியான செலவு ஆகும். முழுமையாகச் செய்திகளைத் திரட்டுவது என்பது நடைமுறையில் இயலவும் செய்யாது. ஆதலால் தான் செய்திகளைத் திரட்டித் தருவதற்குத் தனிச் செய்தி நிறுவனங்கள் தோன்றியுள்ளன.

செய்தி நிறுவனங்கள் கட்டணம் பெற்றுக் கொண்டு நாளிதழ்களுக்குச் செய்திகளை வழங்குகின்றன. ஒவ்வொரு நாளிதழும் அதனுடைய வளத்திற்கும், தேவைக்கும் ஏற்ப ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட செய்தி நிறுவனங்களின் செய்திகளைப் பெற்று வெளியிடுகின்றன.

செய்தி நிறுவனங்கள் உலகெங்கும் செய்திகளைத் திரட்டும் செய்தியாளர்களை வைத்துக் கொண்டும், பிற செய்தி நிறுவனங்களோடு தொடர்புகளை ஏற்படுத்திக் கொண்டும் திறமையாகச் செய்திகளைத் திரட்டித் தருகின்றன. இவை விரைந்து செய்திகளை அனுப்ப அறிவியல், தொழில் நுட்ப வளர்ச்சி பெருந்துணை செய்கின்றது. கடந்த இருபது ஆண்டுகளில் செய்திகளை அனுப்புவதில் கற்பனை செய்ய முடியாத அளவிற்கு வியத்தகு வளர்ச்சி ஏற்பட்டிருக்கின்றது.

கம்பியில்லாத் தந்தி, தொலைபேசி, கடலடித் தந்தி (Cable), தொலை தூரத்தில் அச்சிடுகின்ற 'டெலிபிரிண்டர்' (Teleprinter) 'டெலக்ஸ்' (Telex) முறைகள், விண்வெளித் தொழில்நுட்ப வளர்ச்சியின் மூலம் செயற்கைக்கோள் செய்தியனுப்பும் முறை (Satellite System) நேர்படி ஒளிப்பட அனுப்பு முறை (Facsimile Transmission) ஆகியன தகவல் அனுப்புவதில் பெரும் புரட்சியை ஏற்படுத்தியுள்ளன. உடனுக்குடன் உலகெங்கும் செய்திகளை அனுப்ப இந்தப் புதிய முறைகள் துணை செய்கின்றன. தற்காலத்தில் மின்னஞ்சல் (E-mail) வாயிலாகச் செய்திகள் உடனுக்குடன் அனுப்பப்படுகின்றன.

## முதல் செய்தி நிறுவனங்கள்

உலகில் முதன் முதலில் சார்லஸ் ஹாவாஸ் என்னும் பிரெஞ்சுக் காரர் 1825இல் பாரிஸ் நகரில் ஒரு செய்தி நிறுவனத்தை அமைத்தார். இதனை ஒரு செய்திக் கழகமாக அமைத்த அவர் செய்திகளைத் திரட்டி அனுப்ப ஐரோப்பாவின் பல இடங்களிலும் செய்தியாளர்களை நியமித்திருந்தார். அஞ்சல் மூலமாகவும் ஆள்களின் வாயிலாகவும் புறாக்களைப் பயன்படுத்தியும் செய்திகளை அனுப்பினார்.

தொடக்க காலத்தில் வணிகர்கள், செல்வர்கள், அரசியல் வல்லுநர்கள் தான் ஹாவாஸின் செய்திக் கழகத்திடமிருந்து செய்திகளைப் பெற்றுக் கொண்டனர். 1835ஆம் ஆண்டுக்குப் பிறகுதான் இதழ்கள் இந்த நிறுவனத்திடமிருந்து செய்திகளைப் பெற்றுப் பயன்படுத்தின. ஆதலால் செய்தி நிறுவனத்தின் வருவாய் கூடியது; நிறுவனமும் வளர்ந்தது.

சார்லஸ் ஹாவாஸ் தேவைக்கேற்பத் தனது நிறுவனத்தை வளர்த்துக் கொண்டார். இலண்டன், ரோம், வியன்னா, போன்ற தலை நகரங்களில் கிளைகளை அமைத்தார். இலண்டனிலிருந்த ராய்ட்டர் செய்தி நிறுவனத்துடன் ஒப்பந்தம் செய்து கொண்டு செய்திகளைப் பெற்றார். கடலடித் தந்தி முறை செய்திகளை அனுப்பப் பெரிதும் துணை செய்தது. இந்த நிறுவனம் 1875 இல் நியூயார்க்கிலிருந்த அசோசியேட்டட் பிரஸுடன் (Associated press) கூட்டுறவு அடிப்படையில் செய்திகளைப் பரிமாறிக் கொண்டது.

இப்பொழுது ஏஜென்ஸ் பிரான்ஸ் பிரஸ் (Agence France Press - AFP) என்றழைக்கப்பெறும் இந்த நிறுவனம் பிரெஞ்சு அரசு வழங்கும் மானியத் தொகை உதவியில் நடைபெறுகின்றது. இது அரசின் மேற்பார்வையில் செயல்பட்டாலும் சுதந்திரமாகச் செய்திகளைத் திரட்டித் தருகின்றது.

## பெர்னார்டு உல்ப்

சார்லஸ் ஹாவாஸின் செய்தி நிறுவனத்தில் பணியாற்றிய பெர்னார்டு உல்ப் 1848இல் ஜெர்மனியில் ஒரு செய்தி நிறுவனத்தைத் தொடங்கினார். இவர் முதலில் வணிகப் பொருள்களின் விலை விவரங்களைத் தொகுத்து, வணிக நிறுவனங்களுக்குத் தரும் பணியைத்தான் மேற்கொண்டார். காலப் போக்கில் அப்பொழுது அமைக்கப் பெற்ற அஞ்சல், தந்தி முறையை நன்கு பயன்படுத்திக் கொண்டு இந்நிறுவனம் வளர்ந்தது. ஹாவாஸ், ராய்ட்டர் நிறுவனங் களோடு செய்திப் பரிமாற்றம் வைத்துக் கொண்டது.

இந்த நிறுவனம் பல்கேரியா, ருமேனியா, கிரீசு, ரஷ்யா, துருக்கி போன்ற பல்வேறு நாடுகளிலும் கிளைகளை அமைத்துக் கொண்டு சிறப்பாகச் செயல்பட்டது. இந்த வகையில் உலகச் செய்தி நிறுவன அமைப்பிற்கு இது முன்னோடியாகத் திகழ்ந்தது என்று கருதலாம்.

## ராய்ட்டர் நிறுவனம்

ஹாவாஸ் செய்தி நிறுவனத்தில் மொழிபெயர்ப்பாளராகப் பணியாற்றிய பால் சூலியஸ் ராய்ட்டர் என்ற ஜெர்மானிய யூத இளைஞர் 1851 இல் இலண்டனில் வணிகச் செய்திகளைத் திரட்டித் தர ஒரு செய்தி நிறுவனத்தை அமைத்தார். முதலில் இவருக்குச் செய்தித் தாள்களின் ஆதரவு கிடைக்கவில்லை. முன்பே செய்தி திரட்டுவதில் இவர் பெற்றிருந்த அனுபவம் இவரது வளர்ச்சிக்கு உற்ற துணையாகியது. 1856 க்குப் பிறகு டைம்ஸ் போன்ற இலண்டன் இதழ்கள் இவரிடமிருந்து செய்திகளைப் பெற்றன. அதன் பிறகு இவரது நிறுவனம் விரைந்து வளர்ந்தது. ஹாவாஸ், உல்ப் ஆகியவர்களோடு ஒப்பந்தம் செய்து கொண்டு, தனது நிறுவனம் வளர சூலியஸ் ராய்ட்டர் பாடு பட்டார்.

ராய்ட்டர் நிறுவனம் 1915 வரை தனிக் குடும்பச் சொத்தாக இருந்தது. அதன் பின்பு கூட்டுப் பங்கு நிறுவனம் ஆயிற்று. 1941 முதல் சில இதழ்களின் சங்கங்கள் இணைந்து நடத்தும் நிறுவனமாகச் செயல்பட்டு வருகின்றது.

## உலகச் செய்தி நிறுவனங்கள்

இப்பொழுது நூற்றுக்கு மேற்பட்ட நாடுகளில் செய்தி நிறுவனங்கள் அமைந்துள்ளன. இவை எல்லாம் தொழில் நுட்ப, அறிவியல் வளர்ச்சியின் விளைவாக, கடந்த சில ஆண்டுகளாகக் குறிப்பிடத்தக்க வகையில் வளர்ந்துள்ளன. அவற்றில் முக்கியமானவற்றைப் பற்றி மட்டும் விளக்கலாம்.

### அமெரிக்காவின் அசோசியேட்டட் பிரஸ் (Associated Press of America)

இந்த நிறுவனத்தை 1848இல் நியூயார்க் நகரிலிருந்த ஆறு செய்தித் தாள்கள் இணைந்து, ஆதாய நோக்கமின்றிக் கூட்டுறவுச் செய்தி நிறுவனமாக அமைத்தன. தொடக்ககாலத்தில், இது உறுப்பினர் களுக்கு மட்டுமே செய்திகளை வழங்கியது. ஆனால் 1943 இல் நீதிமன்றத்தின் தீர்ப்பின்படி எல்லாச் செய்தித்தாள்களுக்கும் செய்திகளை வழங்குகின்றது.

இருபதாம் நூற்றாண்டில் இந்த நிறுவனம் மிகப் பெரிய அளவில் வளர்ந்துள்ளது. உலகத்தில் மிகப் பெரிய செய்தி நிறுவனங்களில்

ஒன்றாக இருக்கும் இந்த நிறுவனம் 1977 இல், 108 உலக நாடுகளுக்குச் செய்தி வழங்கியது. அமெரிக்காவில் மட்டும் 1,320 செய்தித்தாள்களும், 3,400 ஒலிபரப்பு நிலையங்களும் இதன் உறுப்பினராக இருந்தன.

இந்த நிறுவனம் அமெரிக்காவில் 107 நகரங்களில் செய்தியாளர்களை வைத்திருக்கின்றது. 60 வெளிநாடுகளில் இது செய்திகளைச் சேகரிக்கின்றது.

## ஏஜென்ஸ் ஃபிரான்ஸ் பிரஸ் (Agence France Press)

1835 இல் சார்லஸ் ஹாவாஸ் நிறுவிய ஹாவாஸ் செய்தி நிறுவனத்தின் தொடர்ச்சியாக 1944 முதல் இந்த நிறுவனம் செயல் படுகின்றது. முதல் உலகச் செய்தி நிறுவனம் என்ற பெருமைக்குரிய ஹாவாஸ் நிறுவனத்தை 1940இல் பிரெஞ்சு அரசு விலைக்கு வாங்கி நடத்தியது. பின்னர் ஜெர்மானியர்கள் இதனைக் கைப்பற்றினர். பிரெஞ்சுக்காரர்களின் போராட்டத்தின் விளைவாகத் தலைமறைவுச் செய்தி நிறுவனங்கள் தோன்றின. சுதந்திர பிரெஞ்சுக்காரர்கள் (Free French) ஏஜென்ஸ் பிரான்காய்ஸ் இண்டிபென்டன்ட்ஸ் (Agence Francaise Independents) என்ற அமைப்பினை இலண்டனில் நிறுவினர். இவற்றிலிருந்து 1944இல் ஏஜென்ஸ் பிரான்சு பிரஸ் (AFP) உருவானது. இதற்கு ஆண்டுதோறும் அரசு மானியம் வழங்கியது.

1957 முதல் சட்டத்தின் மூலம் இதனைத் தனித்தியங்கும் நிறுவனமாக மாற்றினார். இதனுடைய நிர்வாகத்தில் பிரெஞ்சு செய்தித்தாள்களும் வானொலி, தொலைக்காட்சியினரும் பொது மக்களின் சார்பாளர்களும் செய்தி நிறுவனத்தின் ஊழியர்களும் பங்கு பெறுகின்றனர்.

இந்த நிறுவனம் 167 நாடுகளில் தனது அமைப்பினை வைத்திருக்கின்றது. 152 நாடுகளுக்குச் செய்திகளைப் பிரெஞ்சு, ஆங்கிலம், ஸ்பானிய, ஜெர்மானிய, போர்ச்சுகீசிய, அராபிய மொழிகளில் வழங்குகின்றது.

## யுனைடெட் பிரஸ் இன்டர்நேஷனல்(United Press International)

1907 இல் தொடங்கப் பெற்ற ஸ்கிரிப்ஸ் யுனைடெட் பிரஸ் அசோசியேசன் (Scripp's United Press Association) 1909 இல் நடை பெற்ற ஹார்ட்ஸ் இன்டர்நேஷனல் நியூஸ் சர்வீஸ் (Heart's International News Service) ஆகிய நிறுவனங்களை இணைத்து 1958இல் யுனைடெட் பிரஸ் இன்டர்நேஷனல் (UPI) என்ற இந்தச்செய்தி நிறுவனத்தை அமைத்தனர்.

தனியாரின் கட்டுப்பாட்டிலிருக்கும் ஒரே உலகச் செய்தி நிறுவனம் இதுதான். இதற்கு 92 நாடுகளில் 7079 கட்டணம் செலுத்தும் உறுப்பினர்கள் உள்ளனர்.

**டாஸ் (TASS - Telegraph Agentsvo Sovetskovo Soiuza)**

இந்த நிறுவனம் மாஸ்கோவில் செயல்படுகின்றது. இது அரசையும் , பொதுவுடைமைக் கட்சியையும் சார்ந்த நிறுவனமாகும்.

டாஸ் நிறுவனம் 110 நாடுகளில் செய்திகளைத் திரட்ட 40 அலுவலகங்களையும் 61 தனிச் செய்தியாளர்களையும் வைத்திருக்கின்றது. உலகச் செய்தி நிறுவனங்களோடு செய்திப் பரிமாற்ற ஏற்பாடு செய்திருக்கின்றது.

## இந்தியச் செய்தி நிறுவனங்கள்

நமது நாட்டில் 'பாம்பே டைம்ஸ்' இதழ் இலண்டன் ராய்ட்டர் நிறுவனத்திடமிருந்து 1860 முதல் வெளிநாட்டுச் செய்திகளைப் பெற்று வெளியிட்டது. 1878இல் ராய்ட்டரின் நிறுவனம் மும்பையில் ஒரு கிளையை நிறுவி, இந்திய இதழ்களுக்குச் செய்திகளை வழங்கியது. ஆங்கில அரசின் கெடுபிடிகளால் இது மெதுவாக வளர்ந்தது.

இந்தியச் செய்தி நிறுவனத்தை முதன் முதலில் அமைத்த பெருமை கே.சி.ராய் (K.C.Roy) என்பவருடையதாகும். ராய், அரசின் செல்வாக்குப் பெற்றிருந்த பயோனியர் (Pioneer) இதழின் ஹென்ஸ் மேன் (Hensman) என்பவரோடு போட்டியிடும் நோக்கில், 'ஸ்டேட்ஸ் மேன்' (Statesman), 'இண்டியன் டெய்லி நியூஸ்' (Indian Daily News), 'இங்கிலீஸ்மேன்' (Englishman) ஆகிய இதழாசிரியர்களோடு சேர்ந்து 'இந்தியன் அசோசியேட்டட் பிரஸ்' (Associated Press of India) என்னும் நிறுவனத்தை அமைத்தார். அவர் அந்த நிறுவனத்தின் இயக்குநராகச் செயல்பட விரும்பினார். ஆனால் அவரோடு சேர்ந்த இதழாசிரியர்கள் அதனை ஏற்கவில்லை. ஆதலால் அதனை விட்டு விலகி, 'பிரஸ் பீரோ' (Press Bureau) நிறுவனத்தை அமைத்தார்.

ராய் 'பிரஸ் பீரோ' நிறுவனத்தின் கிளைகளைக் கொல்கத்தா, சென்னை, மும்பை ஆகிய இடங்களில் அமைத்தார். ஒவ்வோர் இதழும் மாதம் ரூ.350 கட்டணம் செலுத்தியது. பின்னர் நிதி நெருக்கடி ஏற்பட்ட பொழுது ராய் அந்த நிறுவனத்தை ராய்ட்டர் நிறுவனத்தோடு இணைத்தார். பின்னர் 'இந்தியன் நியூஸ் ஏஜென்சி' (Indian News Agency) என்ற நிறுவனத்தைத் தொடங்கி 1947 வரை நடத்தினார்.

காந்தியடிகளின் இயக்கம் வலுப்பெற்ற பொழுது சதானந்த் (Sadanand) என்பவர் 'ஃபிரீ பிரஸ் இந்திய நியூஸ் ஏஜென்சி (The Free

Press of India News Agency) என்ற அமைப்பினை மற்றைய புகழ் பெற்ற இயக்குநர்களோடு சேர்ந்து தொடங்கினார். அரசின் கட்டுப் பாடுகளினால் ' ஃபிரீ பிரஸ் இந்தியா' நிதி நெருக்கடிக்கு ஆளானது. இந்த நிறுவனத்திடமிருந்து செய்திகளைப் பெற்று வெளியிடும் இதழ்களை அரசு அபராதம் விதித்து நெருக்கியது. ஆதலால் சதானந்த் 1930 இல் 'ஃபிரீ பிரஸ் ஜெர்னல்' (Free Press journal) என்னும் இதழைத் தொடங்கினார். ஆனால் 1935இல் இதழை நிறுத்த வேண்டியதாயிற்று.

பி.சென்குப்தா (B. Sen Gupta) 'ஃபிரீ பிரஸி'லிருந்து விலகி, 'இந்தியன் யுனைடெட் பிரஸ்' (The United press of India) என்னும் செய்தி நிறுவனத்தை அமைத்து, அதன் நிர்வாக இயக்குநராகச் செயல் பட்டார். அதன் தலைவராக டாக்டர் பி.சி.ராய் இருந்தார். இது தொடக்ககாலத்திலிருந்தே நிதித் தொல்லைக்கு ஆளானது. 1948க்குப் பிறகு வளர்ச்சி பெற்றது.

நமது நாட்டில் இப்பொழுது நான்கு பெரிய செய்தி நிறுவனங்கள் தொலை அச்சு (Teleprinter) வசதியுடன் செயல்படுகின்றன. இவற்றைப் பற்றி இங்கே காண்போம்.

## பிரஸ் டிரஸ்ட் ஆஃப் இந்தியா (Press Trust of India)

'பி.டி.ஐ.' (P.T.I) என்றழைக்கப் பெறும் இந்தச் செய்தி நிறுவனத்தை 1947 ஆகஸ்டில் இந்தியாவின் ஏழு செய்தித்தாள்கள் சேர்ந்து கூட்டாக அமைத்தன. இந்த நிறுவனம் 1-2-1949 முதல் செயல் படத் தொடங்கியது.

இது இலாப நோக்கமின்றிச் செயல்படும் நிறுவனமாகும். இதனுடைய விதிகளின்படி இந்தியாவில் தொடர்ந்து வெளியாகும் செய்தித்தாள்கள் மட்டுமே இதில் பங்கு பெற முடியும். இது கிடைக்கும் ஆதாயத்தைப் பங்குதாரர்களுக்குப் பகிர்ந்து அளிக்காமல் தொழில் வளர்ச்சிக்குப் பயன்படுத்துகின்றது.

இந்த நிறுவனத்தின் நிர்வாகத் தலைமையகம் மும்பையில் இருக்கின்றது. ஆனால் இது தில்லியில் தனது பணியகத்தை அமைத்துச் செய்திப் பணிகளைக் கவனிக்கின்றது. இந்திய அசோசியேட்டட் பிரசிடமிருந்து இது பணிகளை ஏற்றபொழுது 30,000 கிலோ மீட்டருக்குத் தொலை அச்சுமுறையைப் பெற்றிருந்தது. இது இப்பொழுது 60,000 கிலோ மீட்டர் தொலைவாக வளர்ந்துள்ளது. இந்தச் செய்தி நிறுவனம் சராசரி ஒரு நாளைக்கு 1,00,000 சொற்களைச் செய்திகளாக அனுப்புகின்றது. இவற்றில் ஏறத்தாழ 40 சதவீதம் பன்னாட்டுச் செய்திகள் ஆகும்.

இந்த நிறுவனத்தில் 1,100 முழு நேர ஊழியர்கள் உள்ளனர். 297 பகுதிநேரச்செய்தியாளர்கள் செய்திகளைத் திரட்டி அனுப்புகின்றனர். நியூயார்க், இலண்டன், மாஸ்கோ, கோலாலம்பூர் போன்ற உலகின் முக்கிய நகரங்களில் இதனுடைய முழு நேரச் செய்தியாளர்கள் பணியாற்றுகின்றனர். இவர்கள் தவிர 19 வெளி நாட்டுச் செய்தி மையங்களில் பகுதிநேரச் செய்தியாளர்கள் பணியாற்றுகின்றனர். மூன்று உலகச் செய்தி நிறுவனங்களோடும் செய்திகளைப் பெற இந்த நிறுவனம் ஏற்பாடு செய்து கொண்டுள்ளது.

'பி.டி.ஐ.' நிறுவனம் மூன்று வகைகளாகத் தனது செய்திப் பணிகளைப் பிரித்துள்ளது. 'ஏ' சர்வீஸ்' (A Service)தகுதியைப் பெறும் வாடிக்கையாளர்களுக்கு நாள்தோறும் சுமார் இலட்சம் சொற்களை வழங்குகின்றது. இவற்றில் 60 சதவீதம் 'பி' சர்வீஸ்' (B Service) வாடிக்கையாளர்களுக்கும் 40 சதவீதம் 'சி' சர்வீஸ் (C Service) வாடிக்கையாளர்களுக்கும் வழங்குகின்றது. சிறிய செய்திதாள்களுக்குப் 'பொதுப்பணி' (General Service)ஏற்பாடு செய்கின்றது. செய்திப் பணி தவிர, சிறப்புப் பணிகள் (Special Service), பொருளாதாரப் பணி (Economic Service), பணப்பணி (Money Service)ஆகியவற்றையும் செய்கின்றது. 10,000 இதழ்களுக்கு மேல் வெளியிடும் ஆங்கிலச் செய்தித்தாள்கள் 'ஏ சர்வீஸ்' தகுதிக்கு மாதம் ரூ. 8,400 கட்டணம் செலுத்துகின்றது. இப்பொழுது ஏறத்தாழ 1,000 பேர் கட்டணம் செலுத்திச் செய்திகளைப் பெறுகின்றனர்.

### யுனைட்டெட் நியூஸ் ஆஃப் இந்தியா (United News of India)

1961இல் இந்த இரண்டாவது செய்தி ஏஜென்சி உருவானது. 1958இல் மூடப்பட்ட யு.பி.ஐ. (UPI)செய்தி ஏஜென்சியின் மிகவும் பழைய துருப்பிடித்த டெலிபிரிண்டரை உபயோகிப்பது என்று முதலில் முடிவு செய்யப்பட்டது. ஆனால், சந்தாதாரர்களின் மத்தியில் ஏற்றுக் கொள்ளப்பட வேண்டுமெனில் புதிய மெஷின்கள் வாங்கப்பட வேண்டும் என்பது கட்டாயமாகிவிட்டது. இரண்டாவது செய்தி ஏஜென்சி இருக்க வேண்டியதன் அவசியத்தை முதல் பிரஸ் கமிஷன் வலியுறுத்தியது.

> குறைந்தபட்சம் இரண்டு செய்தி ஏஜென்சிகள் விரும்பத் தக்கது மட்டுமன்றி அவசியமும் கூட; அப்போதுதான் ஒன்றுடன் ஒன்று போட்டியிடுவதுடன் ஒன்றின் தவறை மற்றொன்று சரி செய்யவும் உதவமுடியும்

என்று அது தனது அறிக்கையில் கூறியது. செய்தி ஏஜென்சிகள் அரசின் கட்டுப்பாடு மற்றும் தலையீடு இன்றிச் சுதந்திரமாக இயங்க வேண்டுமெனில் (செய்திகளைச் சேகரித்து வெளியிடுவதில்) போட்டி

இருக்கவேண்டுமென்பது முக்கியமானது. இதன் மூலம் மிக வேகமாகச் செயல்படும் ஒரு ஏஜென்சி மற்றொரு ஏஜென்சியை முந்த முடியும். செய்தியை முதலில் தருவதுடன் எந்தவித நிர்ப்பந்தத்திற்கும் ஆளாகாமல் இருக்க முடியும்.

மேலும், போட்டியிருந்தால்தான் செய்திகளைச் சந்தா தாரர்களுக்கு அனுப்பும் முன், ஒவ்வொரு ஏஜென்சியும் உண்மை விவரங்களை நன்கு சரிபார்த்து அளிக்க முடியும். அதாவது செய்திகளைக் கிரீட் (Creeding)செய்வதுஎன்றும் ஏஜென்சி மற்றும் நாளிதழ் தொழிலில் வழங்கப்படும் சொல்லுக்கு அனுப்புதல் என்றும் அர்த்தம். அதற்கு முன் சரிபார்த்தல் அவசியம். போட்டி என்பது உண்மையாகவும் துல்லியமாகவும் செய்திகளை அனுப்புதலையும் உள்ளடக்கியது. ஒரு செய்தி ஏஜென்சியைப் பொருளாதார ரீதியாக இலாபகரமாக இயக்குவது என்பது கடினமான காரியமாதலால், இன்னும் நீண்ட காலத்திற்கு நம்நாடு இரண்டு ஏஜென்சிகளின் சேவையை மட்டுமே பெறமுடியும். பிரஸ் கமிஷன் அறிக்கை என்னவோ இரண்டு ஏஜென்சிகளுக்கு மேல் இருக்க வேண்டும் என்று கூறியிருந்தாலும் இதுதான் இன்றைய நிலை. எது எப்படியாயினும் ஒரே ஏஜென்சி என்பது ஏகபோகத்தில்தான் இயங்கும். அத்துடன் வெளியிலிருந்து வரும் நிர்ப்பந்தங்களுக்கும் எளிதில் இலக்காகும்.

தி ஹிந்து, டைம்ஸ் ஆப் இந்தியா, ஹிந்துஸ்தான் டைம்ஸ், ஸ்டேட்ஸ் மேன், ஹிந்துஸ்தான் ஸ்டாண்டர்டு (ஆனந்த பஸார் பத்திரிகா குழுவினுடையது), அம்ரித் பஸார் பத்திரிகா, டெக்கான் ஹெரால்டு மற்றும் ஆர்யவர்தா (இந்தி) ஆகிய எட்டு நாளிதழ்கள் ஒன்று சேர்ந்து யு.என்.ஐ. நிறுவனத்தை நிறுவ முன்வந்தன. 1961இல் அதன் முதலாண்டு இயக்கத்தில் 13 சந்தாதாரர்கள் இருந்தனர். 1964 ஆம் ஆண்டில் இந்த எண்ணிக்கை 50 ஆக உயர்ந்தது. 1967இல் இது 109 ஆக அதிகரித்தது. 1971 இல் இந்த ஏஜென்சி பத்து ஆண்டுகளைப் பூர்த்தி செய்தபோது அதன் சந்தாதாரர்களின் எண்ணிக்கை 223 ஆக உயர்ந்து விட்டது. அப்போது அது 43 மையங்களிலிருந்து இயங்கி வந்தது. அதற்கென்று சொந்தமாக 249 டெலிபிரிண்டர்கள் இருந்தன. அதனுடைய வருவாயும் வேகமாக அதிகரித்தது. ஆயினும் அதன் தேவைகளை ஈடு செய்யும் அளவுக்கு வளரவில்லை. 1971இல் இதன் வருவாய் 54.31 இலட்சம் ரூபாயாக இருந்தது.

1975இல் 87.14 இலட்சமாக இருந்தது. அப்போது அதன் பணியாளர்களின் எண்ணிக்கை 697; அதில் 139 பத்திரிகையாளர்களும் அடங்குவர்.

செய்திகளை மிகவும் விரைவாக அளிக்கும் ஏஜென்சி என்று பத்திரிகை உலகில் யு.என்.ஐ நற்பெயர் எடுத்துள்ளது. இருப்பினும்

செய்திகளை உடனுக்குடன் அளிக்கும் போது சில சமயம் தவறுகள் ஏற்பட்டன. அவ்வாறு தவறு ஏற்பட்டபோது ஏஜென்சியின் மூத்த பணியாளர்கள் தலையிட்டு அவற்றைச் சரிசெய்து விட்டனர். முதல் பத்தாண்டுகளிலேயே யு.என்.ஐ. நிறுவனம் நிகழ்வுக்கான பின்னணிச் செய்திக் கட்டுரைகளைச் சந்தாதாரர்களுக்கு அளிக்கத் துவங்கியது. இதன் மூலம், இதர பத்திரிகையாளர்கள், ஆராய்ச்சியாளர்கள், மற்றும் சமகால நாட்டுநடப்புகளைப் பற்றி எழுதுவோர் நன்கு பயன் பெறுகின்றனர். அதேபோல, அறிவியல் செய்திகளுக்கான முழுநேர நிருபரைப் பெற்ற முதல் செய்தி நிறுவனமும் யு.என்.ஐ. ஆகும். சிறப்புக் கட்டுரைகள் சேவை, மற்றும் விவசாயச் செய்திகள் பிரிவு ஆகியவையும் இந்த ஏஜென்சியில் முதலில் துவக்கப்பட்டன.

நிதிவசதி குறைவாக இருந்தபோதிலும் கடின உழைப்பு, ஈடுபாடு, மற்றும் சிறந்த போட்டி உணர்வு, துணிவு ஆகிய தன்மைகள் மூலம் யு.என்.ஐ. ஏஜென்சியின் ஆண், பெண் நிருபர்கள் பணியாற்றினர். அத்தகைய பணியாளர்களுள் அதன் பொது மேலாளர்களான குல்தீப் நய்யார் மற்றும் ஜிஜி. மிர்சந்தானி ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். உலகச் செய்திகளைப் பெறுவதற்கான ஏற்பாடுகளை அமெரிக்க ஏஜென்சியான அசோசியேட்டட் பிரஸ் நிறுவனத்துடனும் வேறு பல ஏஜென்சிகளுடனும் செய்து கொண்டது. ஜெர்மனி நாட்டு ஏஜென்சியான டாயிஷ் பிரஸ் ஏஜெண்டர் (Deutsche Press Agenter-DPA), ஜப்பானின் இரண்டாவது ஏஜென்சியான ஜிஜி (JiJi) மற்றும், இத்தாலி, யூகோஸ்லாவியா ஆகிய நாடுகளின் செய்தி ஏஜென்சிகளும் இந்தப் பரிமாற்ற ஏற்பாட்டில் அடங்கின. யு.என்.ஐ. பொதுமேலாளர் பதவியை ஏற்பதற்கு முன்னர், மிர்சந்தானி ஆல் இண்டியா ரேடியோவின் செய்திப் பிரிவின் இயக்குநராக இருந்து, அந்த அரசுப் பதவியிலிருந்து ஓய்வுபெறும் வயதை அடைவதற்கு முன்பே விருப்ப ஓய்வு பெற்றுவிட்டார். செய்திகளைச் சேகரிப்பதில், யு.என்.ஐ. ஏஜென்சியின் அன்றாடப் பணிகளில் பாகிஸ்தான், ஆப்கானிஸ்தான், மற்றும் தொலைதூர இலண்டனிலிருந்து பிரிட்டிஷ் ரேடியோ போன்ற வெளிநாட்டு ஒலிபரப்பு நிலையங்களின் செய்தி ஒலிபரப்பைக் கண்காணித்து, அவற்றிலிருந்து தகவல்களைச் சேகரிக்கும் வானொலி நிலைய அனுபவத்தை அவர் புகுத்தினார். இதன் மூலம் உடனுக்குடனான வெளிநாட்டுச் செய்தி களைச் சந்தாதாரர்களுக்கு விரைவில் அனுப்ப முடிந்தது.

எமர்ஜென்சி காலத்தில் , சமாச்சார் என்ற ஏஜென்சியுடன் இந்த ஏஜென்சி இணைக்கப்பட்டபோது, ஒரு தனிப்பட்ட செய்தி நிறுவனமாக யு.என்.ஐ. வளர்ச்சி அடைவது பாதிக்கப்பட்டது. ஆனால், எமர்ஜென்சிக்குப் பிறகு மீண்டும் பழையபடி தனித்தனிச்

செய்தி ஏஜென்சிகள் இருக்க வேண்டும் என்ற நிலை ஏற்பட்டதால் ஹிந்துஸ்தான் சமாச்சார், சமாச்சார் பாரதி என்ற ஏஜென்சிகளும் இயல்பு நிலையில் தனித்தனியே இயங்கத் தொடங்கின. அதன் புதிய பயணத்தில், யு.என்.ஐ. மீண்டும் ஒரு முறை, ஒரு மாற்று ஏஜென்சியாகச் செயல்படத் துவங்கியது. நாளிதழ்களும் இதர சந்தாதாரர்களும் ஏற்றுக் கொள்ளும் வகையில் அதன் ஆண்டு வருவாய் 390 கோடி ரூபாயாக அதிகரித்துவிட்டது. இது 1967இல் இருந்த வருவாயைவிடப் பதினைந்து மடங்கு அதிகம். அதன் கிளை அலுவலகங்களின் எண்ணிக்கையும் 90க்கும் அதிகமாகப் பரவியது. இந்தியாவின் 14 மொழிகளில் சுமார் 400க்கும் மேற்பட்ட நாளிதழ்கள் சந்தாதாரர்களாக இருந்தன.

அதன் விரிவாக்கத் திட்டங்களுள் 1982, மே தினம் அன்று துவக்கப்பட்ட இந்தியமொழிச் சேவையான யுனிவார்த்தா ஒன்று. ஹிந்துஸ்தான் சமாச்சார், சமாச்சார் பாரதி ஆகிய இரண்டு செய்தி ஏஜென்சிகளும் மூடப்பட்டதால் வேலை இழந்த பத்திரிகை நிருபர்களில் பலருக்கு இதில் வேலை கிடைத்தது. (எஞ்சிய பலர் பின்னர் 1986-இல் பி.டி.ஐ.யின் பாஷா சேவை துவங்கிய போது அதில் வேலை கிடைக்கப் பெற்றனர்) நவீனமயமாக்கலின் ஒரு பகுதியாகப் பணிகள் கம்ப்யூட்டர் வசதி பெற்றன. 1980 மற்றும் 1984ஆம் ஆண்டுகளில் தேர்தல் முடிவுகளை அறிவிக்கும் பணி கம்ப்யூட்டர் மயமாகியது. பின்னர்ச் செய்திகளை அனுப்புவதும் கம்ப்யூட்டர் மயமாகியது. தற்போது ஏஜென்சியின் பல மையங்கள் கம்ப்யூட்டர் மயமாக்கப்பட்டுள்ளன. கம்ப்யூட்டர் வசதி படைத்த மையங்களில் செய்திகள் ஒரு நிமிடத்திற்கு 255 வார்த்தைகள் என்ற வேகத்தில் அனுப்பப்படுகின்றன.

யு.என்.ஐ. செய்திஏஜென்சியின் ஆங்கிலச் சேவைக்கு 313 நாளிதழ்கள் சந்தா செலுத்துகின்றன. யுனிவார்த்தா சேவைக்கு 219 நாளிதழ்கள் சந்தா செலுத்துகின்றன. பின்னதில், ஆந்திரப் பிரதேசத்தின் தலைநகரான ஹைதராபாத்திலிருந்தும் ஒரு சந்தாதாரர் உள்ளார். ஆங்கிலம், இந்தி இரு மொழிச் சேவைகளையும் சேர்த்து, நாளிதழ்கள் அல்லாத சந்தாதாரர்கள் 208 பேர் உள்ளனர். இவை தவிர யு.என்.ஐ. உருது மொழிச் சேவைக்காக (கம்ப்யூட்டர் வசதியுடையது) 22 சந்தாதாரர்கள் உள்ளனர்.

### ஹிந்துஸ்தான் சமாச்சார் (Hindustan Samachar)

1948ஆம் ஆண்டிலேயே எஸ்.எஸ். ஆப்தே என்பவரால் தனியார் துறையில் தோன்றிய முதல் செய்தி ஏஜென்சியாக ஹிந்துஸ்தான் சமாச்சார் உருவானது. தேசியவளர்ச்சியில் பங்குகொள்ளுமாறு பொது மக்களுக்கு அறிவு புகட்டுவது மற்றும் இந்திய மொழிகளின் வளர்ச்சி

மூலமாக, தேசிய ஒருமைப்பாட்டுக்குப் பாடுபடுவது என்பதே இந்நிறுவனத்தின் நோக்கம் ஆகும். நடைமுறையில் பார்த்தால், சில நாளிதழ்களுக்குத் தேவநாகரி எழுத்து வடிவம் மூலம் செய்திகளை விநியோகம் செய்யும் பணியை அது மேற்கொண்டிருந்தது. ஆரம்பத்தில் தந்திகள் இந்தி மொழியில் விநியோகம் செய்யப்பட்டு வந்தன. பின்னர்த் தேவநாகரி எழுத்துகள் பதித்த டெலிபிரிண்டர் எந்திரங்கள் கிடைத்தவுடன் அவற்றின் மூலம் விநியோகிக்கப்பட்டன. எனினும் செய்திகளை அனுப்பும் செலவு மிகவும் அதிகமாக இருந்ததால் ஆப்தே கூட்டுறவுச் சங்கம் ஒன்றிடம் ஏஜென்சியை ஒப்படைத்தார். அந்தச் சங்கம் ஹிந்துஸ்தான் சமாச்சார் கூட்டுறவுச் சங்கம் என்ற பெயரில் அழைக்கப்பட்டது. ஏஜென்சிக்காக உழைத்தவர்களின் கூட்டுறவே அது என்பதால், அரசாங்கத்தின் தலையீடு இல்லாமல் செயல்பட்டதுடன் பத்திரிகை முதலாளிகளின் கட்டுப்பாடும் இல்லை என்பது சிறப்பு ஆகும்.

1975இல் இந்த ஏஜென்சி, சமாச்சார் என்ற மற்றொரு ஏஜென்சியுடன் இணைக்கப்பட்ட போது, இதற்கென்று 14 டெலிபிரிண்டர் இணைப்பு மையங்கள் இருந்தன. இந்தி, குஜராத்தி, மராத்தி, பஞ்சாபி, உருது, ஒரியா, வங்காளம், அஸ்ஸாமி, தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகளில் 135-க்கும் மேற்பட்டவர்களுக்குச் (சந்தாதாரர்களுக்கு) செய்திகள் வழங்கியது.

### சமாச்சார் பாரதி (Samachar Bharathi)

பன்மொழி இயக்கத்தின் அடிப்படையிலான ஒரு செய்தி ஏஜென்சியை நிறுவுவதற்கான குழு ஒன்றை ஏற்படுத்துவதற்காகப் பல் முக்கிய முன்னணி தேசியவாதிகளும், பத்திரிகையாளர்களும் 1961இல் தில்லியில் ஒன்று கூடினர். ஹிந்துஸ்தான் சமாச்சார் ஏஜென்சி தோன்றிப் பத்து ஆண்டுகள் நிறைவடைந்த நிலையில், அதே போன்று ஏஜென்சி ஒன்றை நிறுவ வேண்டும் என்று விரும்பினர்.

இந்த முயற்சியின் பயனாய்ச் சமாச்சார் பாரதி என்ற பெயருடன் புதிய ஏஜென்சி ஒன்று 1962ஆம் ஆண்டில், கம்பெனிகள் சட்டத்தின் கீழ்ப் பதிவு செய்யப்பட்டது. வார்தா நகரத்தின் ராஷ்டிர பாஷா பிரச்சார் ஸமிதி என்னும் அமைப்பானது இந்த ஏஜென்சி தொடர்ந்து நடைபெறுவதற்குரிய செலவினங்களை ஏற்றுக் கொண்டது.

இந்தி, குஜராத்தி, மராத்தி, தமிழ், கன்னடம், மற்றும் உருது ஆகிய மொழிகளில் இந்த ஏஜென்சி சேவை அளித்ததுடன், தில்லியிலும் இதர பகுதிகளிலும் இருந்த வானொலி நிலையங்களுக்கும் செய்திகளை அளித்து வந்தது. எமர்ஜென்சியின் போது நான்கு ஏஜென்சிகளும் ஒன்றாக இணைக்கப்பட்டவுடன், சமாச்சார் பாரதியின் பொதுமேலாளர் தரம்வீர் காந்தி ராஜினாமா செய்யும்படி கட்டாயப் படுத்தப்பட்டார். மீண்டும் பழைய நிலைக்குத் திரும்பியவுடன், காந்தி

திரும்பவும் பொறுப்பேற்றுக் கொண்டார். ஏஜென்சி புதிய பயணத்தைத் தொடங்கியது. மிகவும் ஈடுபாட்டுடன் இளம் பத்திரிகை யாளர்கள் குழு ஒன்று ஏஜென்சியின் வெற்றிக்காக உழைத்தது. அகில இந்திய வானொலியின் திருத்தியமைக்கப்பட்ட கட்டண விகிதங்கள் இதற்கு உதவின. ஆனால் இந்த முயற்சி சில காலமே நீடித்தது. வரவுக்கும், செலவுக்கும் சமமாக ஈடுகட்டும் வகையில் வருமானத்தைப் பெருக்கும் முயற்சிகள் ஒரு போதும் வெற்றி பெறவில்லை.

நாளிதழ்களுக்கு ஒரு முழுமையான சேவை அளிக்கவேண்டும் என்று சமாச்சார் பாரதி பாடுபட்டதால் வெளிநாட்டுச் செய்திகளைப் பெறுவதற்காக அமெரிக்கச் செய்தி நிறுவனம் ஒன்றுடன் ஏற்பாடுகளையும் செய்து கொண்டிருந்தது. அதன் பத்திரிகையாளர்கள் அண்டை நாடுகளின் செய்திகளைப் பெறுவதற்காகச் சில வெளிநாட்டு ஒலிபரப்பு நிலையங்களின் செய்தி அறிக்கைகளைக் கண்காணித்து, எடுத்து உதவி வந்தனர். 1979ஆம்ஆண்டில் அதன் பழைய தலைமை மையங்கள் அனைத்தும் புத்துணர்வு ஊட்டப்பட்டதுடன், பல புதிய மையங்கள் திறக்கப்பட்டன. அப்போது நூற்றுக்கும் மேற்பட்ட சந்தாதாரர்கள் இருந்தனர். அவர்களில் நான்கில் ஒரு பங்கினர் செய்தி களுக்காக முழுமையாக இந்த ஏஜென்சியையே நம்பி இருந்தனர். இந்தக் காலத்தில் அது இந்தி, மராத்தி, குஜராத்தி, கன்னடம், தெலுங்கு, மலையாளம், உருது, வங்கம், ஒரியா, மற்றும் பஞ்சாபி எனப் பத்து மொழிகளில் சேவை அளித்து வந்தது.

## அணிசேரா நாடுகளின் செய்தி நிறுவனக் குழுமம்

இந்தியாவிலும் இதர வளரும் நாடுகளிலேயும் இதைப்பற்றிய நம்பிக்கையின்மையும் காணப்பட்டது. இந்தியாவில் உள்நாட்டு எமர் ஜென்சி இருந்தபோதுதான் இந்தக்குழுமம் தோன்றியது. அந்தக் காலக் கட்டத்தில் பத்திரிகைகளுக்கான கடுமையான தணிக்கை, கட்டுப்பாடுகள் நிலவின. இவையெல்லாம் நம்பிக்கையின்மை மேலும் வளரக் காரணிகளாயின. எனினும், ஜனதா அரசு நியமித்த கமிட்டி ஒன்று இந்தத் திட்டம் ஏற்புடையதாக இருக்கும் என்று கருதியது.

> வியாபார ரீதியில் அமைந்த நல்ல செயல்திட்டத்துடன் அணுகினால், இந்தக் குழுமத்தில் இந்தியாவின் தொடர்ந்த பங்கேற்பு, நாட்டின் பத்திரிகைகளுக்கு நன்மை பயக்கும். அணிசேரா நாடுகள் சமுதாயத்தில் நன்கு ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள இந்தியாவின் நிலையுடன் இது ஒத்துப்போவதாகவே இருக்கும்

என்று அந்தக் கமிட்டி கூறியது.

இந்தக் குழுமம் தோன்றுவதற்கு முன்பே பல நாடுகளின் தேசியச் செய்தி ஏஜென்சிகளுடன் பரிமாற்ற ஏற்பாடுகளை பி.டி.ஐ. செய்து கொண்டிருந்தது. குழுமம் ஏற்பட்ட பின்னரும் இந்த ஏற்பாடுகள் தொடர்ந்து நடைபெற்றன. யு.என்.ஐ. ஏஜென்சியும் இதுபோன்ற இருதரப்பு ஏற்பாடுகளைச் செய்து கொண்டுள்ளது. குழுமத்திலுள்ள ஏஜென்சிகள் ஒன்றின் செய்திகளை மற்றொன்று உபயோகப்படுத்திக் கொள்ளலாம். 1976இல் தில்லியில் நடைபெற்ற இதன் முதல் கூட்டத்தில் 62 உறுப்பினர்கள் கலந்து கொண்டனர். இந்தியாவில் முதலில் தொடங்கப்பட்ட பி.டி.ஐ. இந்தக் குழுமத்துடன் தொடர்பு கொண்டுள்ளதுடன், உறுப்பினராகவும் தொடர்ந்து இருந்து வருகிறது. இது தவிர, ஆசியா பசிபிக் செய்தி ஏஜென்சிகளின் கழகத்திலும் உறுப்பினராக உள்ளது.

இத்தகைய குழும ஏற்பாடு சர்வதேச செய்தி ஏஜென்சிகளைப் புறக் கணிப்பதற்காக அல்ல; மாறாக அவற்றுடன் கூடுதலான வழிகளில் செய்தி பெறுவதற்காகவே எனலாம். இந்தக் குழுமத்திலிருந்த ஏஜென்சிகள் வெளியிட்ட செய்திகளுள் பல நம்பகத்தன்மை, விரைவில் கிடைத்தல் மற்றும் செய்திகளை நேர்த்தியாக எழுதிய விதம் ஆகியவற்றுக்காகப் புகழ்பெற்றவை. குழுமம் தோன்றியதால் பல நாடுகளின் செய்தி ஏஜென்சிகள் வளர்ச்சியடைந்தன. அவ்வாறு வளர்ந்தவை பெரும்பாலும் அரசுக்குச் சொந்தமான மற்றும் அரசின் கட்டுப்பாட்டில் இயங்குபவையாக இருந்தன. எனவே வளரும் நாடுகளில் இருந்த செய்தித் தகவல் தொடர்புச் சாதனங்கள் சர்வதேச செய்தி நிறுவனங்களை நம்பியிருக்கும் நிலையைக் குறைத்துக் கொள்ள முடியவில்லை. தில்லியில் உருவாகி 20 ஆண்டுகள் கழிந்த பின்பு இந்த அணிசேரா நாடுகள் குழுமம், எந்த ஒரு மேலைநாட்டுச் செய்தி ஏஜென்சியின் இடத்தையும் பிடித்துக் கொண்டது என்று யாரும் கூறிவிடமுடியாது. இப்படி கூறுவதால், மேற்கத்திய ஏஜென்சிகள் அனுப்பும் செய்திகளிலோ, அல்லது செய்திகளை எழுதி அனுப்பும் விதத்திலோ பாரபட்சமான போக்கு இல்லை என்று ஆகிவிடாது.

இத்தகைய ஏஜென்சிகளைத் தவிர, பல செய்தி நிறுவனங்கள் செய்திகளையும், கட்டுரைகளையும் நேரில் கொண்டு சென்று அளிக்கின்றன அல்லது தபால் மூலம் அனுப்புகின்றன. மிகவும் பழமை வாய்ந்த நிறுவனமான இந்தியா பிரஸ் ஏஜென்சி, இந்தியன் நியூஸ், ஃபீச்சர் அலையன்ஸ் (INFA), பிரஸ் ஏசியா இண்டர்நேஷனல், தில்லியிலுள்ள பல ஏஜென்சிகள் தில்லிக்கு வெளியே உள்ளவை எனப் பல நிறுவனங்கள் உள்ளன.

# 16. செய்தியைச் செப்பனிடுதலும் பிழை திருத்தமும்

இதழியலில் மிகவும் முக்கியமான பணியாகச் செப்பனிடுதல் (Editing) திகழ்கின்றது. ஒரு செய்தித்தாளின் இறுதி வடிவம் அதனுடைய செப்பனிடுதல் பணியைச் சார்ந்திருக்கின்றது.

ஒரு செய்தித்தாளின் அலுவலகத்திற்குள் 'வண்டி வண்டியாக'ச் செய்திகள் வந்து குவிகின்றன. எல்லாவற்றையும் வெளியிடுவது என்பது இயலாத செயலாகும். அவற்றைத் தக்க முறையில் வடிகட்டி, தேவையானவற்றைத் தேர்ந்தெடுத்து வடிவமைத்து, வாசகர்கள் எளிதாகப் படிக்கும் வகையில் பதிப்பிக்கின்ற பணியை ஆசிரியரோ துணையாசிரியரோ செய்வர்.

'எடிட்' (Edit)என்ற ஆங்கிலச் சொல்லிற்கு,

> பதிப்பு, பதிப்புக்கு வேண்டிய முறையில் ஏட்டை உருவாக்கு; வகுத்துத் தொகுத்தமை; தேர்ந்து திரட்டியமை; திருத்தியமை; பத்திரிகைப் பதிப்பாசிரியராயிருந்து பணியாற்று

என்று பொருள் கூறுகின்றனர்.

'எடிட்டிங்' (Editing) என்ற சொல்,

> செய்திகளைத் தேர்ந்து, மாற்றி, திருத்தி, வகைப் படுத்தி,தொகுத்து, இறுதி வடிவம் தந்து பதிப்பிக்கும் பணியைக்

குறிக்கின்றது.

செய்தியாளர்களிடமிருந்தும், செய்தி நிறுவனங்களிடமிருந்தும் வருகின்ற செய்திகள், வைரச் சுரங்கத்திலிருந்து கிடைக்கும் வைரக் கற்கள் போன்றவை. அவற்றைப் பட்டை தீட்டி ஒளிமிக்க வைரங் களாக மாற்றும் பணியைப் போன்றே 'செப்பனிடுதல்' பணி அமைகின்றது. செய்திகளின் செய்தி மதிப்பைச் செப்பனிடுதல் உயர்த்துகின்றது.

ஜார்ஜ் சி. பாஸ்டியன், லேலாண்ட் டி.கேஸ், பிளாய்டுகே-பாஸ் கெட்டே ஆகியோர் செப்பனிடுதலை,

> இது பொருளை ஒழுங்குபடுத்துதல், மாற்றுதல், வரைதல், வடிவமைத்தல் ஆகியவை இணைந்த பணியாகும்,

என்றும்,

> இது செய்திகளைப் பிரித்தெடுத்தல், நேர்த்தியாக்குதல் ஆகியவற்றைக் குறிக்கின்றது

என்றும் கூறுகின்றனர்.

> செப்பனிடுதல் என்பது செய்தியாளர் வேலையை மற்றவர்கள் நேர்த்தியாக்கும் முறையாகும். தவறான இலக்கணத்தையும், எழுத்துப் பிழைகளையும் திருத்துவார்கள். சட்டப்படி ஏற்படக்கூடிய தவற்றினைப் போக்குவார்கள். குழப்பமாய் இருக்கும் செய்தியின் வடிவத்தைச் சரிப்படுத்துவார்கள்

என்று லியோனார்டு ரேடீல் என்பவரும் ரான் டெய்லர் என்பவரும் விளக்குகின்றனர்.

செய்திகளை வெளியிடும் வகையில் செப்பனிடுதல் என்பது மிகவும் பொறுப்பான பணியாகும். இப்பணியை ஒரு நாளிதழின் துணையாசிரியரோ, செய்தியாசிரியரோ மேற்கொள்கின்றனர். இதழ் தவறு எதுவுமின்றி வெளிவருவது அவரைச் சார்ந்ததாகும்.

> இரண்டு நூற்றாண்டுகள் அனுபவத்தின் அடிப்படையில் வளர்ச்சி பெற்ற தகவல் பரப்புவதன் அற்புதமான முறையாகச் செய்தித்தாளின் செய்தி இருக்கின்றது. அது எழுதுகின்ற முறையாலும், அதன் இறுதி விளைவு களாலும் அது அற்புதமானது

என்று ரெங்கசுவாமி பார்த்தரசாரதி கூறுகின்றார். செய்தியின் அற்புதத் தன்மை செய்தியிலும் அதனைக் கூறுகின்ற முறையிலும் இருக்கின்றது.

செய்தியில் தலைப்பு (Head line), முகப்பு (Lead), உடல் பகுதி (Body) என மூன்று பகுதிகள் உள்ளன. ஒவ்வொரு பகுதியும் செம்மையாக அமைதல் வேண்டும். செய்தி திரட்டுவதில், எழுதுவதில் அனுபவமிக்கவர்கள் செய்திகளைச் செப்பனிடும் பணியைச் செய்கின்றனர்.

## செய்தியைச் செப்பனிடும் முறை

செய்தியைச் செப்பனிட்டு நேர்த்தியாக்குகின்றவர் சிலவற்றில் கவனமாக இருக்க வேண்டும். அவர் கவனிக்க வேண்டியவற்றை இங்கே காண்போம்.

### சுருக்கம் (Condensation)

செய்தியினை எவ்வளவு குறைவான சொற்களில் கூற வேண்டுமோ, அவ்வளவு குறைவாக இரத்தினச் சுருக்கமாகக் - கூற வேண்டும். தேவையற்ற சொற்களையும் வாக்கியங்களையும் அகற்றி விட வேண்டும். ''சுருங்கக் கூறி விளங்க வைத்தல்'' செய்திக்குச் சிறப்புத் தரும்.

### தெளிவு (Clarity)

ஒரு செய்தி விளக்கும் நிகழ்ச்சியோ, கருத்தோ சிக்கல் நிறைந்ததாக இருக்கலாம். ஆனால் அதனை வெளியிடுகின்ற பொழுது சராசரி வாசகரும் புரிந்து கொள்ளும் வகையில் எளிமைப்படுத்தித் தெளிவான நடையில் வெளியிட வேண்டும். குழப்பமான வாக்கிய அமைப்பிருந்தால் வாசகர் செய்தியை விளங்கிக் கொள்ள இயலாமல் திண்டாடுவார். ஆதலால் செய்தியின் தெளிவு செய்தியின் மதிப்பைக் (News value) கூட்டுமென்பதை மறக்கக் கூடாது.

### உள்ளத்தில் பதியும் வகையில் கூறுதல் (Forceful Expression)

செய்தியை வலுவான, ஆற்றல் மிக்க நடையில் கூறுகின்ற பொழுது, அது செய்தியாளரின் உள்ளத்தில் தடம் பதிக்கின்றது. மொழி நடைதான் செய்தியை உயிரோட்டம் உடையதாக்குகின்றது. 'சொற் சிலம்பம்' அறிந்தவர்கள் சொற்களைப் பின்னிப்பிணைத்து, புதுமையாய், கவர்ச்சியாய், சுவையாய், விறுவிறுப்பாய், செய்தியினை வெளியிடுவார்கள்.

### சரியாக (Accuracy) வெளியிடல்

செய்திகளைச் செப்பனிபடுவர் செய்திகள் சரியானவைதானா என்பதையும் உண்மைக்குப் புறம்போகாமல் செய்தி வெளி வருகின்றதா என்பதையும் கூர்மையாகக் கவனிக்க வேண்டும். முதுபெரும் இதழாளராக விளங்கிய சி.பா. ஆதித்தனார்,

> ஒரு செய்தியை வெளியிடலாமா கூடாதா என்ற சந்தேகம் ஏற்பட்டால் , அந்தச் செய்தியை வெளியிடக் கூடாது. சந்தேகத்தை நீக்கிக் கொண்டு தான் வெளியிட வேண்டும். ஒரு

செய்தியைத் தவறாக வெளியிடுவதைவிட வெளியிடாமல் இருப்பது நல்லது

என்று கூறுகின்றார்.

## தவறான மொழி நடை தவிர்த்தல்

இரு பொருள்படும் வகையிலோ,மாறுபட்ட பொருள்தரும் வகையிலோ செய்தியில் உவமை, உருவகம் போன்றவற்றைக் கூறக் கூடாது.மொழியின் மரபையும், சொற்களும் நடைமுறையில், வழக்கத்தில் உள்ள உட்பொருளையும் உணர்ந்து பயன்படுத்த வேண்டும். இல்லையேல் செய்தியை வெளியிட்டதன் நோக்கம் சீர் குலையவோ தவறான விளைவுகள் ஏற்படவோ வழி ஏற்படும்.

## செய்தியின் முக்கியத்துவம்

செய்தியைச் செப்பனிட்டு வெளியிடும் முறையில் அதன் முக்கியத்துவத்தை வெளிக்காட்ட இயலும். துணையாசிரியர் முதலில் ஒரு செய்தி முக்கியமானதா இல்லையா என்பதைத் தீர்மானிக்க வேண்டும். செய்தியின் முக்கியவத்துவத்திற்கேற்ப அதனை வெளியிட வேண்டும்.

ஒரு செய்தி முக்கியமானதா இல்லையா என்பதை மூன்று முறைகளில் வெளிப்படுத்தலாம். முதலாவதாகச் செய்தித்தாளில் அந்தச் செய்திக்குக் கொடுக்கின்ற இடத்தை ஒட்டிச் செய்தியின் முக்கியத்துவத்தை உணர்த்தலாம். முதலாம் பக்கத்தில் வருகின்ற செய்திக்கும் இறுதிப் பக்கத்தில் வருகின்ற செய்திக்கும் வேறுபாடு உண்டு.

இரண்டாவதாக, ஒரு செய்திக்கு எவ்வளவு இடம் ஒதுக்கப் பெறுகின்றது என்பதிலிருந்தும், செய்தியின் முக்கியத்துவத்தை அறிந்து கொள்ளலாம். எட்டுப் பத்திச் செய்திக்கும் மூன்று பத்திச் செய்திக்கும் துணுக்குச் செய்திக்கும் இடையில் முக்கியத்துவ வேறுபாடு உள்ளது.

மூன்றாவதாகச் செய்தியைப் பதிப்பிக்கின்ற முறையினை ஒட்டி அதன் முக்கியத்துவம் வெளிப்படுகின்றது. மிகப்பெரிய எழுத்தில் தலைப்பினை வெளியிடுவதும் செய்திக்கு ஆதாரமாக நிழற்படங்களை வெளியிடுவதும் செய்திக்குரிய முக்கியத்துவத்தைக் காட்டுகின்றன.

## வாசகரின் நினைவாற்றல்

துணையாசிரியர் ஒரு செய்தியைச் செப்பனிடும்பொழுது வாசகரின் நினைவாற்றலின் தன்மையைக் கவனத்தில் கொள்ள வேண்டும். ஒரு

நீண்ட செய்தியைப் படிக்கின்ற வாசகர் அதனுடைய இறுதியைப் படித்து முடிக்கின்றவரை மட்டுமாவது செய்தியை மறக்காமல் இருக்க விரும்புகின்றார். ஆனால் நடைமுறையில் செய்தியை மேலே மேலே படிக்கின்ற பொழுது முதலில் படித்தவற்றை மறந்துவிடுகின்றார். அவரால் செய்தியின் முக்கியப் பகுதிகளையும், துணைப் பிரிவுகளையும் நினைவுக்குக் கொண்டுவர இயலாவிட்டால், செய்தியை முழுமையாகப் புரிந்து கொள்ள இயலாது. ஆதலால் செய்தியின் அமைப்புமுறை வாசகரின் நினைவாற்றலுக்குத் துணை செய்வதாக இருக்க வேண்டும்.

செய்தியைப் படிப்படியாக, ஒன்றோடொன்று இணைத்துக் கூற வேண்டும். செய்தி வரிசையில் இருந்தால் அதனை எளிதாக மனத்தில் கொள்ளலாம். சில குறிப்பிடத்தக்க பெயர்களை மட்டும் பயன்படுத்தி, வேண்டிய அளவு வருணனைகளோடு நிகழ்ச்சிகளை நடைபெற்ற முறைப்படி, தேவையான துணைத் தலைப்புக்களும் தந்து செய்தியை வெளியிட்டால் வாசகர் பெரும் பயனடைவர்.

## செய்தியின் மூலம்

ஒரு செய்தியின் தொடக்கத்தில் அதனைத் திரட்டியவர் பெயரை அல்லது செய்தியை வழங்கிய நிறுவனத்தின் பெயரைக் குறிப்பிடலாம். சில வேளைகளில் பெயரைக் குறிப்பிட முடியாமலிருந்தால் 'நம்பத்தகுந்த வட்டாரத்திலிருந்து' 'அரசின் பொறுப்பான அலுவலர்' என்பது போலக் குறிப்பிடலாம். செய்தியைச் செப்பனிடுகின்றவர் செய்தியின் மூலம் சரியானதுதானா என்பதைக் கவனிக்க வேண்டும்.

## மொழி நடை

செய்தியின் கூட்டமைப்பைப் போன்று அதனுடைய மொழி நடையும் முக்கியமானதாகும். துணையாசிரியர் பழைய உருவகங் களையும் உவமைகளையும் பயன்படுத்துவதற்குப் பதிலாகப் புதியனவற்றைப் பயன்படுத்தத் தெரிந்திருக்க வேண்டும். ஏனெனில் அவை செய்திக்குப் பொலிவையும் வலிவையும் வழங்குகின்றன.

எளிய, இனிய மொழிநடை செய்தியின் தரத்தையும் மதிப்பையும் கூட்டுகின்றது. சாதாரணமானவர்களும் செய்தித்தாளைப் படிக்கின்றார்கள் என்பதை மறந்துவிடக் கூடாது.

செய்தியாளர் புரியாத அறிவியல், தொழில்நுட்பக் கலைச் சொற்களைப் பயன்படுத்தியிருந்தாலும் அவற்றை மாற்றிப் புரியும் சொற்களைப் பயன்படுத்துவது செப்பனிடுபவர் பணியாகும். எழுத்துப் பிழைகளைத் திருத்த வேண்டும். சுருக்கமாகச் சொன்னால், செய்தியானது இதழியல் நடையில் அமைந்திருக்க வேண்டும்.

**அச்சுக்கூறுகள்**

செய்தியைச் செப்பனிடும் துணையாசிரியர் செய்தியினை எப்படி அச்சிட வேண்டும் என்பதையும் தீர்மானிக்க வேண்டும். அச்செய்தியை அச்சிடுவதில் அவர் வழிகாட்டும் வகையில் சில குறிப்புக்களைத் தர வேண்டும்.

எழுத்து அளவில் (Size) பல வகைகளாக (Types) உள்ளன. அவற்றை ஆங்கிலத்தில் 'பாய்ண்ட்' (Point) என்பார்கள். செய்தியின் தலைப்பு, முகப்பு ஆகியவற்றை எவ்வளவு பெரிய எழுத்துகளில் அச்சிட வேண்டும் என்பதைத் தெளிவாகக் குறிப்பிட வேண்டும்.

செய்தியைத் தக்கவகையில் பத்திகளாகப் பிரித்து அச்சிட ஏற்ற வகையில் அமைத்துத் தர வேண்டும். பத்தி பிரித்தல் செய்தியின் அச்சிட்ட வடிவத்திற்கு அழகு சேர்ப்பதோடு வாசகருக்குச் செய்தியைப் படிப்பதற்கும் வசதியை வழங்கும்.

துணைத் தலைப்புகளை உரிய இடத்தில் சரியாகக் குறித்துத் தர வேண்டும்.

கால்புள்ளி, அரைப்புள்ளி, போன்ற நிறுத்தல் குறிகளையும் வியப்புக் குறி, கேள்விக்குறி போன்றவற்றையும் தெளிவாகக் குறிப்பிட வேண்டும். எண்ணற்ற குறிகள் இருக்கக் கூடாது.

செய்தியோடு வரும் படங்களை எந்த இடத்தில் அச்சிட வேண்டும் என்பதையும் துணையாசிரியர் சுட்டிக் காட்ட வேண்டும்.

**செப்பனிடும் எழுத்துப் படிகளின் வகைகள்**

ஒரு துணையாசிரியரிடம் செப்பனிட வருகின்ற எழுத்துப் படிகளை,

(1) செய்தியாளர்கள் திரட்டி அனுப்பும் செய்திகள்

(2) செய்தி நிறுவனங்களிலிருந்து பெறுபவை

(3) சிறப்புக் கூறுகள் (Features)

எனப் பகுக்கலாம்.

இந்த மூன்று வகைகளில் செய்தியாளர்களிடமிருந்து பெறும் செய்திகளைச் செப்பனிடுதல் தான் கடுமையான பணியாகும். செய்தியாளர்கள் அவர்களது நோக்கில் செய்திகளைத் திரட்டியிருப்பார்கள். துணையாசிரியர் செய்தித்தாளின் வெளியீட்டு நோக்கில் செய்திகளை வெட்டியும் குறைத்தும் விளக்கியும் மாற்றியும் வெளியிட வேண்டியிருக்கும். செய்தி நிறுவனங்கள் அனுப்புபவை

ஓரளவு செய்தியின் வடிவத்தில் இருக்கும். பெரும்பாலும் தக்க தலைப்பும் முகப்பும் தந்து விட்டால் அவை செய்தியின் முழு வடிவத்தைப் பெற்றுவிடும்.

ஒரு துணையாசிரியர் செப்பனிட்ட செய்தியை அச்சுக்கோக்கும் பகுதிக்கு அனுப்பும் முன் ஐந்துகேள்விகள் கேட்டுக் கொள்ள வேண்டுமென ரெங்கசுவாமி பார்த்தசாரதி கூறுகின்றார். அவை :

1. செய்தியில் கொடுத்திருக்கும் விவரங்கள் சரியானவையா?
2. ஏதாவது ஆதாரமற்ற, தொடர்பற்ற முடிவுகள் உள்ளவையா? வாசகர் இடையில் தடுமாறி நிற்கும் நிலை உள்ளதா? செய்தி முழுமை பெற வேறு விவரங்கள் தேவைப்படுகின்றனவா?
3. ஒவ்வொன்றும் தெளிவாக இருக்கின்றதா? ஒவ்வொன்றிற்கும் போதுமான விளக்கம் உள்ளதா? சாதாரண வாசகரும் புரிந்து கொள்ளும் வகையில் செய்தி உள்ளதா?
4. தேன் ஒழுக்குப் போன்று செய்தியின் ஓட்டம் தடையில்லாமல் அமைந்திருக்கின்றதா?
5. தேவையில்லாமல் வாசகரைச் சிரமப்படுத்தக் கூடிய வகையில் உள்ளதா?

என்பவை ஆகும்.

ஆசிரியர் செய்தித்தாளை உரிய காலத்தில் வெளியிட்டாக வேண்டும். செய்தித்தாளின் இட அமைப்பிற்கேற்பத்தான் செய்தியை வெளியிட முடியும். இவற்றை மனத்தில் கொண்டு செப்பனிடும் பணியைத் துணையாசிரியர் சிறப்பாக, விரைந்து நிறைவேற்ற வேண்டும்.

## பிழை திருத்தம் (Proof Reading)

ஒரு செய்தித்தாளில் உள்ள பல பணிகளில் அச்சுப்படி திருத்தலும் ஒன்றாகும். இந்தப் பணி செய்பவரைப் பற்றி வெளியுலகம் தெரியாமல் இருக்கலாம். ஆனால், ஒரு பத்திரிகையின் தரம் உயர்ந்ததாக இருக்க, அது பிழையற்றதாக இருக்க வேண்டும். அச்சுப் படியிலுள்ள பிழைகளைத் திருத்தத் தனியாக ஊழியர்கள் இருக்கின்றனர்.

## அச்சுப் பிழை திருத்துவோரின் பொறுப்புகள்

அச்சுப்படியைப் படித்துத் திருத்துகின்றவர் மூலத்தில் இருப்பது போன்று, குறிப்பிட்டிருக்கும் முறையில் ஒவ்வொன்றும் அச்சாகி இருக்கின்றதா என்பதைச் சரிபார்த்துத் (அச்சுப் படியைப் படித்து)

திருத்துவார். அச்சுப்படியைத் தமிழில் 'மெய்ப்பு' (Proof)என்றும் கூறுவர். எழுத்துப் பிழையை மட்டுமன்றி, செய்தியை எழுதியவர் 'தலைப்பு' எந்தப் புள்ளி (Point)எழுத்தில் வெளியிட வேண்டுமென்று குறிப்பிட்டு இருக்கின்றாரோ அப்படி அச்சிடப்பட்டிருக்கின்றதா என்பதைக் கவனிக்க வேண்டும். அச்சுப்படி திருத்துபவர் மொழியறிவு படைத்தவராக மிகுந்த பொறுப்போடு படிகளைப் படித்துப் பார்ப்பவராக இருக்க வேண்டும்.

அச்சுப் பிழைகளைத் திருத்துபவர் செய்தியை வெளியிடுவது பற்றியோ, செய்தியின் மதிப்புப் பற்றியோ தீர்மானிக்கப் போவதில்லை. அவரிடம் கொடுக்கப் பெறுகின்ற மூலப்படியின் படி (Original Copy) அச்சுக் கோக்கப் பெற்றிருக்கின்றதா என்பதைச் சரி பார்ப்பது மட்டும் தான் அவரது வேலை. இருந்தாலும், செய்தியின் உள்ளடக்கத்தில் ஏதாவது விடுபட்டிருந்தாலும் கொடுக்கப் பெற்றிருக்கும் விவரங்களில் முரண்பாடு இருந்தாலும் அதனை அவர் துணையாசிரியரின் கவனத்திற்குக் கொண்டு வரலாம்.

பொதுவாக, மூலப்படியையும் அச்சுப்படியையும் பெற்றுக் கொள்கின்ற பிழைதிருத்துநர் இரண்டினையும் சொல், சொல்லாகப் பார்த்துத் திருத்துவதில்லை.அனுபவமிக்கவர்கள் அச்சுப்படியை மட்டுமே படித்துப் பார்ப்பார்கள். எங்காவது சொற்கள், வரிகள் விடுபட்டிருந்தால் அவர்களது உணர்வு (Sense) சுட்டிக்காட்டி விடும். அப்பொழுது மூலத்தைப் பார்த்துத் திருத்துவார்கள்.

செய்திகளில் புள்ளி விவரங்கள் வருகின்ற பொழுது தவறாமல் அவற்றை மூலத்தோடு ஒப்பிட்டுப் பார்த்துத் திருத்துவார்கள். ஏனெனில் புள்ளி விவரங்களில் அச்சுப்பிழைகள் எளிதாக விழும். புள்ளி விவரங்கள் மாறினால் செய்தியின் பொருள் சீர் குலைந்து விடும். ஆதலால் நிறையப் புள்ளி விவரங்கள் உள்ள படிகளை இரண்டு அச்சுப் பிழை திருத்துவோர் சேர்ந்து திருத்துவர். மூலத்தை ஒருவர் சரி பார்க்க, மற்றவர் உரக்கப் படித்துக் கொண்டு திருத்துவார்.

அச்சுப்படியில் இருக்கும் தவறுகளை, உரிய திருத்தக் குறியிட்டு, பக்கத்தின் ஓரங்களில் (Margin) இருக்கும் இடத்தில் திருத்துவார்கள். ஒவ்வொரு பிழையையும் திருத்தக் கூறும் குறிகள் (Marks) உள்ளன. அவற்றைப் பயன்படுத்துவார்கள். இந்தக் குறியீட்டு அடையாளங்களை அச்சுப் கோப்பவர்கள் அறிந்திருப்பார்கள்.

**அச்சுப்படியைச் செப்பனிடுதல்**

பொதுவாக அச்சுப்படியின் பிழைகளைத் திருத்தும் நிலையில் செய்தியைச் செப்பனிடும் (Editing) பணியைச் செய்வதில்லை. ஆனால்

சில வேளைகளில், அச்சுக்குச் சென்ற செய்தியில் புதிதாக நடந்த வற்றைச் சேர்க்க வேண்டியது இருக்கலாம்.அப்படிப்பட்ட வேளைகளில் துணையாசிரியர் இப்பணியைச் செய்வார்.

அச்சுப்பிழை திருத்துபவர் அவராகச் செய்தியின் உருவையோ, உள்ளடக்கத்தையோ மாற்றும் பணியைச் செய்யக் கூடாது.

## பிழையைத் திருத்தும் முறைகள்

அச்சுப்பிழையைத் திருத்துவதற்குப் பின்வரும் முறைகளைப் பின் பற்றுகின்றனர்.

புத்தகங்களில் அச்சுப் பிழையைத் திருத்தப் பின்பற்றும் 'வழக்கமான முறை' ஒரு வகையான பிழை திருத்த முறையாகும் (Formal Method). இந்த முறையில் ஒவ்வொரு தவறுக்கும் இரண்டு இடங்களில் குறியிட்டுத் திருத்துவார்கள். எந்த இடத்தில் தவறு இருக்கின்றதோ அந்த இடத்தில் ஓர் அடையாளக் குறி போடுவார்கள். தாளின் பக்கவாட்டில் அதற்கு நேராகச் செய்ய வேண்டிய திருத்தத்தைக் குறிப்பார்கள்.

இரண்டாவதாக, 'கோடிட்டுத் திருத்தும்' (Tracking) முறையைக் கையாளுகின்றனர். இம்முறையில் திருத்த வேண்டிய இடத்திலிருந்து பக்கத்தின் ஓரம் வரை ஒரு கோட்டினை இழுத்து என்ன திருத்தம் செய்ய வேண்டும் என்பதைக் குறிப்பிடுவார்கள். செய்தித்தாள்களில் இம் முறையைத்தான் பின்பற்றுகின்றனர்.

## பிழையைத் திருத்துபவருக்கான குறிப்புகள்

அச்சுப்படியைத் திருத்துகின்றவர்கள் கீழ்க்கண்டவற்றைக் கருத்தில் கொள்ளுதல் நலம்.

1. ஒரு வரியில் செய்கின்ற மாற்றம் பின்னால் பல வரிகளின் அமைப்பினைப் பாதிக்கும். ஆதலால் கூடியவரை, பின்வரும் வரிகளின் அமைப்பினைப் பாதிக்காமல் திருத்தங்கள் செய்வது நல்லது.
2. திருத்தங்களைப் பக்கத்தின் ஓரத்தில், பிழைகள் உள்ள வரிகளுக்கு நேராகக் குறிக்க வேண்டும். பிழையின் மீதே திருத்துவது கூடாது.
3. பொதுவாக, ஒரு வரியின் இடது பாதியில் தவறு இருந்தால் திருத்தத்தை இடது பக்க ஓரத்திலும், வலது பாதியில் தவறு இருந்தால் திருத்தத்தை வலது பக்க ஓரத்திலும் குறிப்பது சிறந்தது.
4. பிழைகளை ஓரம் வரை கோடிழுத்துக் (Tracked) காட்டும் பொழுது, மேலும் கீழும் உள்ள வரிகள் பாதிக்கப்படாமல்,

இருவரிகளுக்கும் இடையில் கவனமாகக் கோடிழுத்துக் குறிக்க வேண்டும்.

5. ஒரே வரியில் ஒன்றுக்கு மேற்பட்ட பிழைகள் இருந்தால், பிழையைக் குறிக்கும் கோடுகளை மேலாகவோ, கீழாகவோ, வலமாகவோ, இடமாகவோ, ஒன்றோடொன்று ஒன்றுபடாமல் தெளிவாகக் கோடிழுத்துக் காட்ட வேண்டும். கோடுகளின் மூலம் அச்சுக் கோப்பவரைக் குழப்பக் கூடாது.

6. ஒரு சொல்லில் ஒன்றுக்கு மேற்பட்ட பிழைகள் இருந்தால், அந்தச் சொல்லை நீக்கிவிட்டு, சரியான சொல்லைப் பக்க ஓரத்தில் எழுதிக்காட்டுவதே நல்லது.

7. எண்ணால் உள்ளவற்றின் இடையில் தவறு இருந்தால், தவறினைக் குறியிட்டுக் காட்டுவதைவிட, அந்தத் தொகையை முழுமையாக எழுதிக் காட்டுவதே சிறந்தது.

8. எழுத்துப் பிழையை மட்டுமன்றி எழுத்தின் அளவையும், செய்தியின் வடிவ அமைப்பையும் பிழை திருத்துபவர் கவனிக்க வேண்டும்.

9. பிழைகளைத் திருத்த வழக்கமாகப் பின்பற்றும் குறியீடுகளையே பயன்படுத்த வேண்டும்.

10. பிழைகளைத் திருத்தக் கொடுக்கின்ற அச்சுப்படி தெளிவாக இருக்க வேண்டும். மை சரியாகப் படாமலோ, மிகுதியாகப் பட்டோ இருந்தால், அச்சுப்படி திருத்துபவரால் பிழைகளைச் சரியாகக் கண்டு கொள்ள முடியாது.

## அச்சுப் பிழை திருத்தக் குறியீடுகள் (Marks in proof-Reading)

அச்சுப் பிழைகளை எப்படி சுட்டிக் காட்டவேண்டும் என்பதற்குப் பொதுவாக அனைவரும் பயன்படுத்துகின்ற சில அடையாளக் குறிகள் (Symbols)உள்ளன. நமது நாட்டில் ஆங்கிலேயர்களின் பழக்க முறையை ஒட்டியே திருத்தக் குறிகளைப் பயன்படுத்து கின்றனர். இந்திய மொழிகளிலும் ஆங்கில மொழியிலுள்ள குறிகளையே கையாளுகின்றனர்.

இந்தக் குறிகளை (Marks) இருவகைகளாகப் பிரிக்கலாம். ஒன்று, பக்க ஓரங்களில் குறிப்பது; மற்றது, எந்த இடத்தில் திருத்தம் செய்ய வேண்டுமோ, அத்தகைய குறிப்பினைக் காட்ட அந்த இடத்திலேயே குறிப்பது. பிழைகளை ஓரங்களில் குறித்துக் காட்டுவார்கள். பத்தி பிரித்தல், சொல்லைப் பிரித்தல், இரு சொற்களைச் சேர்த்தல் போன்றவற்றைத் திருத்தம் செய்ய வேண்டிய இடத்திலேயே குறிப்பார்கள்.

அச்சுப் பிழை திருத்தக் குறியீட்டு அடையாளங்களை,

(i) பொதுவானவை (General)

(ii) நிறுத்தக் குறியீடுகள் (Punctuation) தொடர்பானவை

(iii) இடைவெளி தர வேண்டியவை (Spacing)

(iv) இணைக்க வேண்டியவை (Alignment)

(v) எழுத்து வடிவம் (Type)

என்று பிரிக்கலாம்.

**✦ பொதுவானவை**

எழுத்துப் பிழை திருத்தக் குறியீடுகள், விடுபட்ட சொல்லைச் சேர்க்கச் சொல்லுதல் முதலான குறியீடுகள் பொதுவானவை என்னும் பிரிவில் இடம் பெறும்.

**✦ நிறுத்தக் குறியீடுகள்**

காற்புள்ளி (,), அரைப்புள்ளி (;), முக்காற்புள்ளி (:), முற்றுப் புள்ளி (.), வியப்புக்குறி (!), வினாக்குறி (?), ஒற்றை மேற்கோள் குறி (' '), இரட்டை மேற்கோள் குறி (" ") முதலான குறியீடுகள் (Punctuation) நிறுத்தக் குறியீடுகள் என்ற பிரிவில் அடங்கும்.

**✦ இடைவெளி தர வேண்டியவை**

ஒரு சொல்லுக்கும் அடுத்த சொல்லுக்கும் இடையில் இடைவெளி தருவதற்காக இடம்பெறும் குறியீடு (#), புதிய பத்தி தொடங்கக் குறிப்பிடும் குறியீடு ([) முதலானவை இடைவெளி தரவேண்டியவை எனப்படும்.

**✦ இணைக்க வேண்டியவை**

பிரிந்திருக்கும் எழுத்துகளையும் சொற்களையும் சேர்ப்பதற்கு இடப்படும் குறியீடும் ( ) இடப்பக்கம் தள்ளுக எனக்குறிப்பிடும் குறியீடும் (|←) வலப்பக்கம் தள்ளுக எனக் குறிப்பிடும் குறியீடும் (→|) மேலே உயர்த்துக என்னும் குறியீடும் ↑ கீழே தள்ளுக என்னும் குறியீடும் ↓ பத்திகளை இணைக்கக் குறிப்பிடும் குறியீடும் (~) முதலான குறியீடுகள் எல்லாம் இணைக்க வேண்டியவை எனப்படும்.

**✦ எழுத்து வடிவம்**

எழுத்துகள் பல புள்ளி (Point) அளவுகளில் உள்ளன. மேலும் சாய்வெழுத்து (Italic), தடித்த எழுத்து (Bold) என்னும் வடிவங்களும் உள்ளன. இவை பற்றிய குறியீடுகளை எழுத்து வடிவம் என்பர்.

# 17. செய்தி அமைப்பு

செய்தித்தாள் என்னும் சொல்லே செய்தியை அடிப்படையாகக் கொண்டது ஆகும். அந்தச் செய்தியை வழங்கும் முறையில் தான் ஒரு செய்தித்தாள் வாசகர்களைக் கவர இயலும். செய்தியை வழங்கும் முறையில் சிறப்பிடம் பெறுவது செய்தி அமைப்பு ஆகும். ஒரு செய்தி யில் இடம்பெறும் தலைப்பு, செய்தி முகப்பு, செய்தி விளக்கம் முதலியவற்றைச் சிறப்பாக அமைத்தல் வேண்டும்.

செய்திக்குத் தலைப்பிடுதல், செய்தி முகப்பு எழுதுதல், செய்தி இடம்பெறும் இடம் முதலியவற்றைப் பொறுத்தே ஒரு செய்திக்கு மதிப்பு ஏற்படும்.

செய்தித் தலைப்பானது, பார்த்தவுடன் வாசகரைப் படிக்கத் தூண்டும்படியாக இருக்க வேண்டும். செய்தியின் சுருக்கத்தைத் தலைப்பு வெளிப்படுத்த வேண்டும். அத் தலைப்பில் வேகமும் அழுத்தமும் இருக்க வேண்டும். செய்திகளுக்குத் தலைப்புகள்தாம் தனித்தன்மையை அளிக்க வேண்டும்.

சிறிய சொற்களில் செய்தியின் உட்கரு விளங்கும்படி மூன்று நான்கு சொற்களை மட்டுமே பயன்படுத்த வேண்டும். சுவரொட்டிகளில் தலைப்பைக் கவனமாகத் தேர்ந்தெடுத்துப் போட வேண்டும். சுவரொட்டியைப் பார்த்து நாளிதழ் வாங்குவோரைக் கவரும் வகையில் அத்தலைப்புகள் அமைதல் வேண்டும். எளிமையான, பழகிய சொற்கள் தலைப்பாக இருந்தால் உயிரோட்டம் உடையதாக இருக்கும்.

இதழ் உலகில் புதிய வரலாற்றை உருவாக்கிய சி.பா. ஆதித்தனார்

> தலைப்புகள் விறுவிறுப்பாக இருக்க வேண்டுமானால்
> துடிப்புள்ள சொற்களைப் பயன்படுத்த வேண்டும்

என்று கூறியுள்ளார். இது தலைப்புச் செய்திக்குச் சொல்தேர்வு மிகவும் இன்றியமையாததாகும் என உணர்த்துகிறது. தலைப்பில் இடம்பெறும் சொற்கள், பொருள் மயக்கம் தராத சொற்களாக இருந் தால் நேரடியாகப் பொருள் புரியும்.

## செய்தித் தலைப்பின் வகைகள்

செய்தித் தலைப்பை முதன்மை கருதி இரண்டாகப் பகுப்பர். அவை,

1. முதன்மைத் தலைப்பு
2. சாதாரணத் தலைப்பு

என்பவை ஆகும்.

## முதன்மைத் தலைப்பு

செய்தித் தாளில் இடம்பெறும் செய்திகளில் பெரும்பாலானவை ஒரு நாள் மதிப்புக் கொண்டவை. அந்த ஒரு நாள் மதிப்புக் கொண்ட செய்திகளில் எது முதன்மையானதோ அதன் தலைப்பு முதன்மைத் தலைப்பு எனப்படும். 'முதன்மைத் தலைப்பு எது?' என்பது இதழுக்கு இதழ் மாறுபடும். தற்காலத்தில் இதழ்கள் இந்திய அளவிலும் மாநில அளவிலும் வட்டார அளவிலும் வெளியாகின்றன. இந்திய அளவிலான இதழின் முதன்மைத் தலைப்புச் செய்தி இந்தியா முழுமைக்குமான செய்தியாக இருக்கும். அதே போன்று மாநிலம் முழுமைக்குமான செய்தி, மாநில அளவிலான இதழில் முதன்மைத் தலைப்பாக இருக்கும்.

இதழ்கள் பின்பற்றும் கொள்கைக்கு ஏற்பவும் முதன்மைத் தலைப்பு மாறுபடும். அரசியல் கட்சி சார்ந்த இதழ்கள், தாங்கள் சார்ந்திருக்கும் அரசியல் கட்சிக்கு விருப்பமான செய்தியை முதன்மைத் தலைப்புச் செய்தியாக வெளியிடும்.

## சாதாரணத் தலைப்பு

முதன்மைத் தலைப்பு அல்லாத பிற செய்திகள் அனைத்தையும் சாதாரணத் தலைப்புச் செய்தி எனலாம். இதிலும் செய்திகளின் தன்மைக்கு ஏற்பத் தலைப்பின் அளவு வேறுபடும். அவ்வாறு வேறுபடும் பல்வேறு தலைப்பு அமைப்புக்களைக் காண்போம்.

### ✦ நேர் வரிசை அடுக்குத் தலைப்பு

தலைப்புச் செய்திகளில் இடம்பெறும் சொற்களை மேலிருந்து கீழாக அமைத்துத் தலைப்புச் செய்தி வெளியிடுவது நேர்வரிசை அடுக்குத் தலைப்பு எனப்படும்.

**வேன் கவிழ்ந்து**
**சிறுமி பலி**

என்னும் செய்தியில் உள்ள இரு அடிகளும் சம அளவில் நேராக அமைந்துள்ளன.

✦ **மாறுவரிசை அடுக்குத் தலைப்பு**

தலைப்புச் செய்தியில் இடம்பெறும் சொற்களின் அடிகள் சம அளவில் இல்லாமல் முதல் அடியோ இரண்டாம் அடியோ உள்ளடங்கி இருப்பது மாறு வரிசை அடுக்குத் தலைப்பு எனப்படும்.

**இந்திய அணி**
**18 ஆம் தேதி அறிவிப்பு**

இச்செய்தியில் முதல் அடி உள்ளடங்கியும் இரண்டாம் அடி நீண்டும் அமைந்துள்ளன.

**மும்பையில் பிரபல வக்கீலைக்**
**கொல்ல முயற்சி**

இச்செய்தியில் இரண்டாம் அடி உள்ளடங்கி உள்ளது.

✦ **கவிழ் கூம்புத் தலைப்பு**

கூம்பு ஒன்றைக் கவிழ்த்து வைத்தாற் போன்று அமைக்கப்படும் தலைப்பைக் கவிழ் கூம்புத் தலைப்பு என்பர்.

**தமிழ் நாட்டில்**
**மீண்டும் சுனாமி**
**தாக்கும் அபாயம்**

கவிழ் கூம்புத் தலைப்புச் செய்தியில் பெரும்பாலும் மூன்று அடிகள் இடம்பெற்றிருக்கும்.

✦ **ஒருவரித் தலைப்பு**

ஒரு தலைப்புச் செய்தி ஓர் அடியில் இருந்தால் அது ஒரு வரித் தலைப்பு எனப்படும்.

18 நீதிபதிகள் இடமாற்றம்

என்னும் செய்தி முழுவதும் ஒரே வரியில் அமைந்துள்ளது.

✦ **நெற்றித் தலைப்பு**

தலைப்புச் செய்திக்கு மேல் சிறிய எழுத்துகளில் அடிக்கோடிட்டு அல்லது கோடிடப்படாமல் அமையும் தலைப்பை நெற்றித் தலைப்பு என்பர்.

**தனி தெலுங்கானா கோரிக்கை**
**ஆந்திர மந்திரி சபையிலிருந்து**
**5 மந்திரிகள் ராஜினாமா**

இத் தலைப்புச் செய்திக்கு மேலே அமைந்துள்ளது நெற்றித் தலைப்பு ஆகும்.

இந்த நெற்றித் தலைப்பானது சிறிய தொடராக இருந்தால் சிறு தொடர் நெற்றித் தலைப்பு என்றும் பெரிதாக இருந்தால் நீண்ட தொடர் நெற்றித் தலைப்பு என்றும் அழைக்கப்படும்.

**✦ உடுக்கைத் தலைப்பு**

உடுக்கையைப் போல் நடுப்பகுதி மெலிந்தும் மேலும் கீழும் அகன்றும் இருந்தால் அது உடுக்கைத் தலைப்பு எனப்படும்.

**குஜராத் வெள்ளச்சேதப் பகுதிகளை**
**விமானம் மூலம்**
**பிரதமர் நாளை பார்வையிடுகிறார்**

இச்செய்தியில் உள்ள முதல் அடியும் மூன்றாம் அடியும் அகன்றும் இரண்டாம் அடி குறுகியும் உடுக்கை போலக் காணப்படுவதால் இது உடுக்கைத் தலைப்பு எனப்படுகிறது.

**✦ உந்து தலைப்பு**

தலைப்புச் செய்தி உந்திக் கொண்டு எழுவது போல் அமைவது உந்து தலைப்பு எனப்படும். இத் தலைப்பானது கவிழ் கூம்புத் தலைப் புக்கு நேர் மாறானதாக நேர் கூம்பு வடிவத்தில் இருக்கும்.

**சட்ட மன்றத்தில்**
**அமைதி காக்க**
**நடவடிக்கை**

இத் தலைப்பில் மூன்றாம் அடியில் ஒரு சொல்லும் பிற அடிகளில் இரு சொற்களும் அமைந்துள்ளன. இது பார்ப்பதற்குக் கூம்பை நிறுத்தி வைத்தது போன்றும் உந்திக் கொண்டு எழுவது போன்றும் காட்சி அளிக்கும்.

**✦ கிடை நிலைத் தலைப்பு**

செய்தித் தலைப்பு ஒரே அடியில் சிறிதாக அமைக்கப்பட்டிருந் தால் அது கிடைநிலைத் தலைப்பு எனப்படும்.

ஒருவரித் தலைப்பிற்கும் இதற்கும் உள்ள வேறுபாடு நீளத்தைப் பொறுத்தது ஆகும்.

**பஸ்ஸில் முகமூடிக் கொள்ளை**

மூன்று சொற்களைக் கொண்ட இத்தலைப்பு அப்படியே ஒரே அடியில் சிறிதாக அமைந்துள்ளது.

**✦ மேற்கோள் தலைப்பு**

ஒருவருடைய கூற்றை அப்படியே கொடுத்து அதைத் தொடர்ந்து சிறு கோட்டுக்குப் பிறகு கூறியவர் இடம் பெற்றால் அது மேற்கோள் தலைப்பு என அழைக்கப்படும்.

**‘கலெக்டராக விரும்புகிறேன்’-**

**திருச்சி மாணவன் பேட்டி**

இவ்வகைத் தலைப்பில் சிறு இடைக்கோடு இடம் பெறாமல் தலைப்பு அமைப்பதும் உண்டு.

**✦ வினாத் தலைப்பு**

கேள்வி கேட்பது போல் அமைக்கப்படும் தலைப்பு வினாத் தலைப்பு எனப்படும்.

**சென்னையில் நடந்தது என்ன?**

இவ்வாறு வினாக் குறியிட்டு வினாத் தலைப்பு அமையும்.

**✦ ஐயத் தலைப்பு**

வானிலை அறிக்கையில் அடுத்த நாள் தொடர்பான வானிலைச் செய்திகள் பற்றிய அறிவிப்பு, ஐயத்திற்கு இடமானது ஆகும். இது ஓர் ஐயத் தலைப்பு எனப்படும்.

**தமிழ் நாட்டில் நாளை மழை பெய்யும் !**

இவ்வகைத் தலைப்பின் முடிவில் வியப்புக் குறி இடப்பட்டும் இடப் படாமலும் அமைந்திருக்கும்.

## செய்தி முகப்பு

ஒரு செய்தியில் தலைப்பினை அடுத்து இடம் பெறுவது முகப்பு ஆகும். செய்தியின் முதல் பத்தி முகப்பாகின்றது. இதனைச் செய்தியின் அறிமுகம் (Intro) என்றும் கூறலாம்.

ஒரு வாசகர் செய்தியின் முகப்பைப் படித்துவிட்டுச் செய்தியை முழுவதும் படிக்க வேண்டுமா இல்லையா என்பதைத் தீர்மானிப்பார். தலைப்பால் கவரப்பட்ட வாசகரைச் செய்தியில் ஈடுபாடு கொள்ளச் செய்து, முழுச் செய்தியையும் படிக்கும் ஆவலை நல்ல முகப்புப் பகுதி வளர்க்கும்.

செய்தியின் முதல் பத்தியாக அமையும் முகப்பு மொத்தச் செய்தியின் சுருக்கமாகத் திகழ்கின்றது. இது பெரும்பாலும் ஒரு வாக்கியமாகவோ, சில வாக்கியங்களாகவோ இருக்கும். நல்ல முகப்பு, 'என்ன? யார்? எங்கே? எப்பொழுது? ஏன்? எப்படி?' என்னும் ஆறு கேள்விகளுக்கும் உரிய விடைகளை உள்ளடக்கியதாக இருக்க வேண்டும் என்று கூறுவார்கள்.

முகப்பு மொத்தச் செய்தியையும் ஒருங்கிணைத்துக் கூறுகின்றது; செய்தியின் போக்கினைச் சுட்டிக் காட்டுகின்றது; செய்தியிலுள்ள தேவையான பகுதிகளைப் படம் பிடித்துக்காட்டி வாசகரின் ஆர்வத்தைத் தூண்டுகின்றது.

## விதிமுறைகள்

ஜேம்ஸ் எம். நீலும், சூசான்னே எஸ். பிரவுனும் முகப்பினை எழுதும் பொழுது பின்பற்ற வேண்டிய ஐந்து விதிகளைக் குறிப்பிடு கின்றனர்.

### 1. முகப்பு நேர்மையானதாக இருக்க வேண்டும்

செய்தியில் அடங்கியிருக்கின்ற விவரங்களையும், செய்தியின் போக்கினையும் உள்ளது உள்ளபடி முகப்பு எதிரொலிக்க வேண்டும். வாசகர்களைக் கவர வேண்டும் என்பதற்காகச் செய்தியில் 'இல்லாத தையும் பொல்லாததையும்' முகப்பில் கூறக் கூடாது.

### 2. பழக்கப்படாத பெயரை முதல் பத்தியில் பயன்படுத்தக் கூடாது

முகப்பில் இனந்தெரியாதவர்களின் பெயர்களைக் கூறுவதால் வாசகர்கள் ஒன்றும் புரிந்துகொள்ளப் போவதில்லை. எடுத்துக் காட்டாக, ''ஒரு கார் விபத்தில் நான்கு பேர் மாண்டனர்'' என்று முகப்பில் கூறினால் போதும். அவர்களின் பெயர்கள், தொழில், செய்தியில் அவர்களின் பங்கு ஆகியவற்றைத் தொடர்ந்து வரும் பத்திகளில் விளக்கலாம்.

### 3. கேள்வி கேட்கும் முகப்பினைத் தவிர்க்க வேண்டும்

வாசகர்களைக் கேள்விகேட்பதுபோல முகப்பினை அமைக்கக் கூடாது. எடுத்துக்காட்டாக, ''அமைச்சர் கூட்டத்தில் என்ன செய்தார்

என்று தெரியுமா?'' ''அவர் கட்சி மாறக் காரணமாக இருந்தவர் யாரென ஊகிக்க முடிகின்றதா?'' என்பது போன்ற கேள்விகளைக் கேட்டு வாசகர்களைத் திணற அடிக்கக் கூடாது.

## 4. மேற்கோளைத் தவிர்க்க வேண்டும்

முதல் பத்தி முழுக்க ஒரு மேற்கோளை மட்டும் கொண்டிருந்தால், அது செய்தியின் சாரத்தைக் கூறுவதாக இருக்காது. மேற்கோள் ஒரு சொற்பொழிவின் இடையில் எடுக்கப்பெற்றதாக இருந்தால், அதன் பொருளையே முகப்பில் வாசகர் வேறு கோணத்தில் புரிந்து கொள்ளும் நிலை ஏற்படும்.

## 5. பெரிய முகப்பாக இருக்கக் கூடாது

முதல் பத்தியை 25 சொற்களுக்கு மிகுதிப்படாத ஒரு வாக்கியத் திற்குள் அமைத்துக் கொள்ள வேண்டும். நீண்ட முகப்பாக இருந்தால் வாசகர் அதனைப் படிப்பதைத் தவிர்க்க விரும்புவர். எனவே செய்தியின் முகப்பு 25 சொற்களுக்கு மிகுதியாக இருக்கக் கூடாது.

## முகப்பின் இயல்புகள்

ரெங்கசுவாமி பார்த்தசாரதி, ஒரு நல்ல முகப்பில் நான்கு இயல்புகள் இருக்க வேண்டும் என்கிறார். அவை,

1. அது வாசகரைக் கவர்ந்திழுக்க வேண்டும்.
2. அது அவருக்கு ஏதாவது கூற வேண்டும்.
3. அது தெரிவிக்கும் செய்தியை மிக விரைவாகத் தெரிவிக்க வேண்டும்.
4. அது செய்தியை நேர்மையாகத் தெரிவிக்க வேண்டும்

என்பவை ஆகும்.

ஹோவார்டு ஹேய்ன் (Howard Heyn) என்பவர் ஒரு நல்ல முகப்பில் இருக்க வேண்டிய இயல்புகளாக

(1) அறிவிக்கும் தன்மை (Informing),
(2) சுருக்கம் (Brevity)
(3) தெளிவு (Clarity)
(4) எளிமை (Simplicity)
(5) நேராகக் கூறல் (Directiveness)
(6) உயிரோட்டம் (Activeness)

(7) அறிவார்ந்த நிலை (Objective)

*(8)* வனப்பு (Colourful)

*(9)* நல்ல சுவை (Good Taste)

ஆகியவற்றைக் கூறுகின்றார்.

## முகப்பின் வகைகள்

முகப்புகளை அவற்றின் உள்ளடக்க இயல்பினை ஒட்டிப் பல வகைகளாகப் பகுக்கின்றனர். அவற்றில் முக்கியமானவற்றை இங்கே காண்போம்.

+ சார முகப்பு **(The Digest Lead) :** செய்தியின் முக்கியமான விவரங்களை எல்லாம் தன்னகத்தே கொண்ட முகப்பினை 'சார முகப்பு' என்றும் 'தொகுப்பு முகப்பு' (The Summary Lead) என்றும் கூறுவர்.

> *ஸ்ரீநகர் ஜூலை 21: காஷ்மீர் மாநிலத் தலைநகரான ஸ்ரீநகரின் மையப் பகுதியிலேயே கார்குண்டு மூலம் தாக்குதல் நடத்தினர் பயங்கரவாதிகள். இதில் ராணுவ மேஜர் உள்பட 5 பேர் உயிரிழந்தனர். 17 பேர் காயம் அடைந்தனர். புதன்கிழமை காலை 9 மணிக்கு இத்துணிகரத் தாக்குதல் நடந்தது. (தினமணி, 21.07.2005)*

+ **சூழ்நிலை முகப்பு (The circumstantial Lead):** செய்தி நடந்த சூழலை விளக்கும் வகையில் முகப்பு அமையலாம். மனிதநேயத்துடன் கூடிய செய்திகளுக்கு இத்தகைய முகப்பு சிறப்பாக அமையும். எடுத்துக்காட்டு :

> *சிவகாசி, ஜூலை 26 - சிவகாசி அருகே மேலும் ஒரு பட்டாசு தொழிற்சாலையில் நேற்று வெடிவிபத்து ஏற்பட்டது. இதில் மூன்று கட்டிடங்கள் இடிந்து தரைமட்டமாயின. 10 தொழிலாளர்கள் படு காயம் அடைந்தனர். (தினத்தந்தி, 26.07.2005)*

+ **மேற்கோள் முகப்பு (The Quotation Lead) :** ஒரு மேற்கோளோடு முகப்பினை அமைக்கலாம். குறிப்பாக, சொற்பொழிவு தொடர்பான செய்திகளில் மேற்கோள் தந்து செய்தியைக் கூறுவது எடுப்பாக இருக்கும். எடுத்துக்காட்டு :

> *சென்னை, ஜூலை 26 - சுமத்ரா தீவு அருகே செப்டம்பர் மாதம் 15-ந் தேதிக்குள் 8 ரிக்டர் அளவில் மீண்டும் பூமி அதிர்ச்சி ஏற்படும் என்று சென்னை ஆராய்ச்சியாளர் கணித்துள்ளார். (தினத்தந்தி, 26.07.2005)*

+ **வருணனை முகப்பு (The Descriptive Lead) :** ஒன்றைப் படம் பிடித்துக் காட்டுவது போல அமைகின்ற முன்னுரைப் பத்தியை

'வருணனை' அல்லது விளக்க முகப்பு எனலாம். செய்தி நடைபெற்ற சூழலையும் தொடர்புடைய மனிதர்களையும் இந்த வகை முன்னுரை விளக்குகின்றது. எடுத்துக்காட்டு :

*புதுதில்லி, ஜூலை 21 : தில்லியில் 23 வயது இளம் பெண் கடத்தப்பட்டு ஓடும் காரிலேயே ஒரு கும்பலால் கற்பழிக்கப்பட்டுள்ளார். (தினமணி, 21.07.2005)*

+ **வியப்பினைத் தூண்டும் முகப்பு (The Suspected Interest Lead))** : வாசகரிடம் ஒரு வகை வியப்பை ஏற்படுத்தி அவரைச் செய்தியை முழுமையாகப் படிக்கச் செய்யும் வகையில் முகப்பு அமையும். அதன்பின்பு செய்தியை நடந்த கால வரிசையில் கூறலாம். எடுத்துக்காட்டு:

*ஆரணி, ஜூலை 15 - ஆரணி அருகே மோட்டார் சைக்கிளில் வந்த முகமூடி கொள்ளையர்கள் கார் டிரைவரை துப்பாக்கியால் சுட்டு கொலை செய்து, காரில் இருந்த வங்கி அதிகாரியிடம் இருந்து ரூ.10 லட்சத்தை கொள்ளை அடித்துச் சென்று விட்டனர்.*

*(தினத்தந்தி, 15.07.2005)*

+ **உருவக முகப்பு (Figurative Lead)** : உருவகமாகச் செய்தியின் சாரத்தை முகப்பில் கூறலாம். இதனை 'வண்ண முகப்பு' (Colour Lead) என்றும் குறிப்பிடலாம். இது படிப்பதற்குக் கவர்ச்சியாக இருக்கும். எடுத்துக்காட்டு :

*சென்னை, ஜூலை.15, சென்னை திருமங்கலத்தில் பட்டப்பகலில் வீட்டில் தனியாக இருந்த புதுப்பெண்ணை கட்டிப் போட்டுவிட்டு 50 பவுன் தங்க நகைகளை கொள்ளையடித்த வாலிபரை போலீசார் வலைவீசி தேடி வருகிறார்கள். (தினத்தந்தி, 15.07.2005)*

+ **கேள்வி முகப்பு (The Question Lead)** : செய்தியைப் படிக்கத் தூண்டும் வகையில் செய்தியின் சாரத்தைக் கேள்வியாக முகப்பில் அமைக்கலாம். அதனைப் படிக்கின்ற வாசகர், கேள்விக்கு விடை தேடும் வகையில் செய்தியை முழுமையாகப் படிப்பார். எடுத்துக்காட்டு :

*ஆரணி, ஜூலை 15, ரூ.10 லட்சம் கொள்ளை போனது எப்படி? என்பது பற்றி பணத்தை பறிகொடுத்த வங்கி அதிகாரி கூறினார். (தினத்தந்தி, 15.07.2005)*

+ **புதுமை முகப்பு (Oddity Lead)** : வியப்பிற்குரிய, செய்தியின் புதுமையான பகுதியைக் கொண்டு முகப்பை எழுதலாம். இது

வாசகரின் ஆர்வத்தைத் தூண்டும். இவ்வகை முகப்பைப் புதுமை முகப்பு என்று இதழாளர்கள் குறிப்பிடுவர். எடுத்துக்காட்டு :

*சென்னை, ஜூலை 22, மனைவி கொடுமைப்படுத்தி வருவதாக நடிகர் ஒருவர் சென்னை போலீஸ் கமிஷனரிடம் பரபரப்பான புகார் கொடுத்துள்ளார்.*

*(தினத்தந்தி, 22.07.2005)*

+ **குண்டு முகப்பு (The Bullet Lead) :** மிகச் சுருக்கமாகக் குறிபார்த்துச் சுட்ட துப்பாக்கிக் குண்டுபாய்வது போல, இத்தகைய முகப்பு அமையும். திடீரென்று வெடித்துச் சிதறும் செய்திக்கு இத்தகைய முகப்பு பொருத்தமாக இருக்கும். எடுத்துக்காட்டு :

*ஒட்டன்சத்திரம், ஜூலை 15 - ஒட்டன்சத்திரம் அருகே நடந்த கோவில் விழாவில் 32 எருமை மாடுகள் பலியிடப் பட்டு விசேஷ பூஜை நடத்தப்பட்டது.*

*(தினத்தந்தி, 15.07.2005)*

+ **'ஏன்' முகப்பு (Why Lead) :** ஒன்று நடப்பதற்கான காரணத்தைக் கூறி முகப்பு அமைக்கப்படும். அவ்வாறு அமைக்கப் படும் முகப்பினை 'ஏன் முகப்பு' என்கின்றனர். எடுத்துக்காட்டு :

*மைசூர், ஜூலை 26, தென்மேற்கு பருவமழை தீவிரமாக பெய்து வருவதால் கபினி அணையில் இருந்து வினாடிக்கு 40 ஆயிரம் கனஅடி தண்ணீர் திறந்து விடப் பட்டுள்ளது.*

*(தினமணி, 21.07.2005)*

+ **'என்ன' முகப்பு (What Lead) :** செய்தியில் என்ன நிகழ்ந்தது என்பதை முகப்பில் விளக்கிக் கூறுவர். அவ்வாறு அமைக்கப்படும் முகப்பு 'என்ன முகப்பு' என்று அழைக்கப்படும். எடுத்துக்காட்டு :

*சென்னை, ஜூலை 21: தமிழகத்தில் பல்வேறு பிரிவு களில் பணிபுரியும் ஒரு லட்சம் காவலர்கள் தேர்தல் காலங்களில் வாக்களிக்க முடியாமல் போவதாகவும் தங்களுக்கு வாக்குரிமை அளிக்க ஆவன செய்யுமாறும் தமிழ்நாடு காவல்துறை காவலர்கள் சங்கம் கோரிக்கை வைத்துள்ளது.*

*(தினமணி, 21.07.2005)*

+ **எப்பொழுது முகப்பு (When Lead) :** செய்தி நிகழ்ந்த காலத்திற்கு முதன்மை கொடுத்து முகப்பு எழுதப்படுவதும் உண்டு. அவ்வாறு எழுதப்படும் முகப்பை 'எப்பொழுது முகப்பு', என்று கூறுவர். எடுத்துக்காட்டு :

*புதுதில்லி, ஜூலை 21: நாடு முழுவதும் குடியிருப்புப் பகுதிகளில் இரவு 10 மணியிலிருந்து காலை 6 மணிவரை பட்டாசு, ஒலிபெருக்கி, ஹாரன்களைப் பயன் படுத்த தடை விதிக்கப்பட்டுள்ளது.*

*(தினமணி, 21.07.2005)*

+ **எங்கே முகப்பு (Where Lead) :** இந்த வகைச் செய்தி முகப்பில் செய்தி நடந்த இடத்திற்கு முக்கியத்துவம் தருவார்கள். எடுத்துக்காட்டு:

*காஞ்சீபுரம், ஜூலை 26: ஆடிட்டர் குருமூர்த்திக்கு குற்றப்பத்திரிகை நகல் காஞ்சீபுரம் கோர்ட்டில் வழங்கப் பட்டது.*

*(தினத்தந்தி, 26.07.2005)*

+ **யார் முகப்பு (Who Lead) :** நிகழ்ச்சியில் பங்கு பெற்றவர்களுக்கு முதலிடம் தந்து எழுதப் பெற்ற முகப்பு 'யார் முகப்பு' ஆகும்.

*சென்னை, ஜூலை 26 : நடிகர் விஷ்ணுவின் மனைவி, அவர் மீது நேற்று போலீஸ் கமிஷனரை சந்தித்து பரபரப்பான புகார் மனு ஒன்றை கொடுத்தார். தனது கணவர் பணத்துக்காக எதையும் செய்யத் தயங்காதவர் என்றும் அவர் ஆபாசப் படத்தில் நடித்தததை நேரில் பார்த் ததாகவும் அதில் நிஷா குறிப்பிட்டுள்ளார்.*

*(தினத்தந்தி, 26.07.2005)*

+ **எப்படி முகப்பு (How Lead) :** நிகழ்ச்சி நடந்த முறையை விளக்கும் வகையில் இத்தகைய முகப்பு அமையும். எடுத்துக்காட்டு:

*மாமல்லபுரம், ஜூலை 27, மாமல்லபுரம் அருகே அகழ்வாராய்ச்சி செய்தபோது முருகன்கோவில் இருந்த இடத்தில் வெண்கல விளக்கு கண்டுபிடிக்கப்பட்டது.*

*(தினத்தந்தி, 27.07.2005)*

## முகப்பில் தவிர்க்க வேண்டியவை

முகப்பில் சிலவற்றைத் தவிர்க்க வேண்டும். அவற்றை இங்கே காண்போம்.

1. முகப்பில் மிகுதியான சொற்களையும், கருத்துகளையும் சேர்த்து வாசகரைக் குழப்பக் கூடாது.
2. உருவகங்களைப் பயன்படுத்துகின்ற பொழுது மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். தவறான பொருளையோ இரண்டு அர்த்தத்தையோ உருவகம் தந்துவிடக் கூடாது.

3. முகப்பு, பொதுப்படையாக அமையக் கூடாது. குறிப்பிட்டுச் சிலவற்றைக் கூறவேண்டும்.

4. தலைப்பினை விழுங்கிவிடும் வகையில் முகப்பு இருக்கக் கூடாது. தலைப்புக்கு ஆதாரமாகவும், அரண்செய்வதாகவும் முகப்பு விளங்க வேண்டும்.

5. கூடியவரை கேள்விகள் மிகுந்து வருகின்ற முகப்பினைத் தவிர்க்க வேண்டும். வாசகர்கள் விடைகளை அறியவே செய்தித்தாளைப் படிக்கின்றனர்.

6. எதிர்மறை முகப்புகளை (Negative Lead) ஒதுக்க வேண்டும். உடன்பாட்டு முகப்புகளே வரவேற்கத் தக்கவை.

7. செய்தியில் இல்லாதவற்றையோ, நடக்காதவற்றையோ நடக்க முடியாதவற்றையோ முகப்பில் எழுதக் கூடாது.

நல்ல முகப்பு எளிமையாக, சுருக்கமாக, முழுமையாக, வீறு கொண்டதாக, கவர்ச்சியாக, நேரடியாக உள்ளத்தில் பதிவதாக, சரியானதாக இருக்கும். நல்ல முகப்புகள் மொழிநடையிலும் அணுகுமுறையிலும் வேறுபடும். ஆக்கத்திறனுள்ள துணையாசிரியர் புதுப்புது முறையில் முகப்புகளை எழுதுவார். வாசகர்கள் சுவைத்துச் செய்திகளைப் படிக்க நல்ல முகப்புகள் வழிவகுக்கும்.

## உடல்பகுதி (Body)

செய்தியின் தலைப்பையும் முகப்பையும் எழுதியபிறகு, செய்தியின் உடல் பகுதியை அல்லது செய்தி விளக்கத்தை எழுத வேண்டும். முதல்பத்தியான முகப்பில் செய்தியிலுள்ள முக்கியமான வற்றைக் கூறிவிடுவதால், மீதிச் செய்தியே செய்தியின் உடல் பகுதியாக வளர்கின்றது.

எந்தச் செய்தியிலும் தொடக்கம், இடை, இறுதி என்று மூன்று பகுதிகள் இருக்க வேண்டும். அவற்றை அமைக்கின்ற முறையில் செய்தியை எழுதியவரின் தனித்தன்மை வெளிப்படும்.

செய்தியின் உடல் பகுதியை எழுதுவதற்கு முன்னால் மூன்று குறிப் புகளைக் கவனத்தில் கொள்ள வேண்டும். முதலாவதாக, செய்தியை முழுமையாகப் படித்து, அதில் வாசகர்களுக்கு எவை முக்கிய மென்பதைத் தீர்மானித்துக் கொள்ள வேண்டும். இரண்டாவதாக, செய்திக்குத் தேவையான எல்லா விவரங்களும் இருக்கின்றனவா என்பதைக் கவனிக்க வேண்டும். மூன்றாவதாக, செய்தியை எவ்வளவு விரைவாகக் கூற முடியுமோ அவ்வளவு விரைவாகக் கூற வேண்டும்.

செய்தியின் உடல் பகுதியைப் பல வகைகளில் கூறுகின்றனர். அவை,

1. தர்க்க முறை அமைப்பு (Logical Order)
2. உச்சநிலைப்படுத்தும் முறை (Highlight Method)
3. கால வரிசை அமைப்புமுறை (Chronological order)
4. தலைகீழ்க் கூம்புமுறை (Inverted Pyramid Type)

என்பவை ஆகும்.

**தர்க்கமுறை அமைப்பு (Logical Order)**

ஒரு செய்தியை அதன் இயல்பான முறையில் விளக்குவது 'தர்க்க முறையாகும்'. இதில் முகப்பும், உடல்பகுதியும் இருக்கின்றன. ஒரு வலுவான தூணின் மீது ஒரு கூர்மையான இரும்புக் கம்பியை நட்டு வைப்பதைப் போன்றது இம்முறை என ஜேம்ஸ் எம். நீலும் சூசான்னே எஸ். பிரவுனும் உவமை கூறி விளக்குகின்றனர். மேலும் குத்துச் சண்டை வீரர், முதல் குத்தில் எதிரியை வீழ்த்திவிட்டு, பின் எளிதாக அடித்துப்போடுவதைப் போன்றது என்றும் இதனைக் கூறுவார்கள்.

முகப்பினை வலுவாக ஆதரித்து நிற்பதாகச் செய்தியின் உடல் இருக்கும். நாம் ஒரு நண்பரைத் திடீரென்று சந்திக்கின்றோம். அவர் புறப்படவிருக்கும் பேருந்தில் அமர்ந்திருக்கின்றார். அவருக்குப் பேருந்து புறப்படும்முன் ஒரு செய்தியைக் கூறவேண்டும். அவருக்கு அச்செய்தியை என்ன முறையில் கூறுவோமோ அதுதான் தர்க்கவியல் முறையாக இருக்கும். எடுத்துக்காட்டாக இருவருக்கும் வேண்டிய ஒருவருக்குத் திருமணம் முடிவான செய்தியைக் கூறுவதாக வைத்துக் கொள்வோம். பேருந்து எப்பொழுதும் புறப்பட்டு விடுமென்ற கால உணர்வோடு செய்தியைக் கூறுவோம். எப்படி?

> உங்களுக்குத் தெரியுமா? நமது நண்பர் பாண்டியனுக்குத் திருமணம் நிச்சயமாகி விட்டது. பெண் மதுரை, எம்.ஏ. படித்தவள். வேலை பார்க்கவில்லை. திருமணம் மதுரையில், மார்ச்சு 30 ஆம் நாள்.''

செய்தியில் ''திருமணம் நிச்சயமாகிவிட்டது'', என்பது முகப்பு. பின் வருவது அதற்கு ஆதாரமாக அமைக்கப்பெற்ற உடல். இயல்பாக விரைந்து செய்தியைக் கூறும் முறையாக இது இருப்பதால் இதனைத் தர்க்கவியல் முறை என்கின்றனர்.

இம்முறையை இதழ் ஆசிரியர்கள் விரும்புவதற்குச் சில காரணங்கள் உள்ளன.

1. சிலசொற்களில் செய்தியைக் கூறிவிடலாம்.
2. குறைந்த அளவு நேரத்தில் செய்தியை எழுதலாம்.
3. அச்சிட இதழில் குறைந்த அளவு இடம் போதும்.
4. இதனை எழுத மிகுதியாகத் திறமை வேண்டாம்.
5. விரைந்து செய்தியைப் படிக்க விரும்பும் வாசகருக்கு ஏற்ற முறை.

என்பனவே அக்காரணங்கள் ஆகும்.

பொதுவாக, எல்லாரும் முக்கியமாகக் கருதாத, ஆனால் ஒரு சிலர் அறிந்து கொள்ள வேண்டிய செய்திகளை இம்முறையில் எழுதலாம். எடுத்துக்காட்டாக, சில இடங்களில் நடைபெறும் விபத்துகள், பொது நலப் பணிகள், அமைப்புகளின் தேர்தல்கள் போன்றவற்றைக் கூறலாம்.

## உச்சநிலைப்படுத்தும் முறை (Highlight Method)

ஒரு நிகழ்ச்சியை முழுக்க விளக்க வேண்டியதில்லாமல் அதன் உச்ச நிலையை மட்டும் விளக்க இந்த முறையில் செய்தியைக் கூறலாம். ஒரு பேச்சாளர் ஒரு மணி நேரம் பேசி இருப்பார். அவருடைய பேச்சை அப்படியே வெளியிட முடியாது. அவர் வலியுறுத்திக் கூறிய உச்சநிலைக் கருத்தை மட்டும் செய்தியில் எடுத்துரைத்தால் போதும். விளையாட்டுப் போட்டிச் செய்திகளை இந்த முறையில் வெளியிடலாம்.

செய்தியின் சாரமாக - உயிர்நாடியாக - இருப்பதை மட்டும் வெளிச்சம் போட்டுக் காட்டுவது இம்முறையின் சிறப்பு ஆகும். முக்கியமற்றவற்றைச் செய்தியாளர் விளக்கச் சிரமப்பட வேண்டிய தில்லை.

## கால வரிசை அமைப்புமுறை (Chronological order)

ஒரு நிகழ்ச்சி எப்படி நடைபெற்றதோ, அதே கால வரிசையில் செய்தியை விளக்குவது இம்முறையாகும். பொதுவாக, ஒரு குற்றம் தொடர்பான செய்தியையோ அரசின் விசாரணை அறிக்கையையோ வளர்ச்சித் திட்டம் பற்றிய விவரங்களையோ இம்முறையில் வெளியிடலாம்.

வாசகர், செய்தியின் வளர்ச்சி முறையை அறிந்து கொள்ள உதவுவது இம்முறையின் சிறப்பு ஆகும். ஒரு செய்தி எப்படி என்ன வரிசையில் நடந்தது என்பதைச் சாதாரண சராசரி வாசகரும் புரிந்து கொள்ள இம்முறை உதவுகின்றது.

கால வரிசை அமைப்புமுறைச் செய்தி படிக்கச் சுவையாக இருக்குமெனக் கூற முடியாது. செய்தியை முழுமையாகப் படித்தால் தான் வாசகரால் செய்தியைப் புரிந்து கொள்ள முடியும். ஆதலால் பெரும்பாலும் இம்முறையை ஆசிரியர்கள் விரும்புவதில்லை. அரிதாகவே இதனைக் கையாளுகின்றனர்.

## தலைகீழ்க்கூம்பு அமைப்பு முறை (Inverted Pyramid Structure)

செய்தியின் இறுதியை - மிகவும் முக்கியமான பகுதியை - முதலில் கூறி, பின் முக்கியத்துவம் குறைந்தவற்றை அதாவது முக்கியத் துவத்தின் இறங்கு வரிசையில் கூறிச் செல்வதைத் தலைகீழ்க்கூம்பு அமைப்பு முறை அல்லது தலைகீழ்க்கோபுர அமைப்பு முறை என்று கூறலாம். இதில் செய்தி தலைகீழாக நிற்கின்றது.

> மிகவும் பழமையான, மிகவும் வசதியான, மிகவும் பயன்பாடுடைய, மிகவும் தவறாகக் கையாள்கின்ற செய்தி முறையாகத் தலைகீழ்க்கூம்பு முறை இருக்கின்றது. இது விவரங்களை, அவற்றின் குறைந்து செல்கின்ற முக்கியத்துவத்தில் கூறும் முறையாகும்

என்று ஜான் ஹோஹென்பெர்க் விளக்குகின்றார்.

இந்தச் செய்தி அமைப்பில் மிகவும் முக்கியமானது செய்தியின் தலைப்பு ஆகும். இது செய்தியின் முடிவாக வாசகர்களைக் கவர்ந்திழுக்கின்றது. மிகவும் முக்கியம் அற்றவைகள் செய்தியின் இறுதியில் வருகின்றன.

தலைக்கீழ்க்கூம்பு (கோபுர) அமைப்பு முறையில் செய்தியின் முடிவு முதலில் வருகின்றது. அதாவது செய்தியை அதன் இறுதியிலிருந்து சொல்லத் தொடங்கி, செய்தியின் தொடக்கத்தைக் கூறிச் செய்தியை முடிக்கின்ற முறையாகும்.

செய்தியின் முன்னுரையாக அதன் முக்கியமான பகுதி இடம் பெறுகின்றது. பின்னர், அதற்கு ஆதாரமாக இருக்கின்ற விவரங்கள் தொடர்கின்றன. அவற்றிற்கு வலுவளிக்கும் மேற்கோள்களும் கருத்துகளும் செய்தியின் பின்பகுதியில் இடம் பெறுகின்றன.

ஒரு செய்திக்கு வேண்டிய எல்லா வகையான விவரங்களையும் திரட்டிக் கொண்டு, அவற்றின் முக்கியத்துவத்தை முடிவு செய்தபின் செய்தியை எழுத வேண்டும். விவரங்களைச் சரியான முறையில் தக்க சொற்களின் மூலம் இணைத்து, செய்திக்கு முழுமையான உருவம் தரவேண்டும்.

## ✦ சிறப்புகள்

தலைகீழ்க்கூம்பு முறையில் செய்தியினை எழுதும் முறையில் சில தனிச்சிறப்புகள் உள்ளன. அவை,

1. **விறுவிறுப்பாகக் கூறல்:** செய்தியை நாடகப் பாங்கில் சுவையாகவும், விறுவிறுப்பாகவும் கூற முடிகின்றது. வாசகரைக் கவர்ந்திழுத்துப் படிக்க வைக்க நல்ல முறையாகும்.

2. **செய்திப் பதிவு முறை:** ஒரு செய்தியை இயல்பாகக் கூறுகின்ற, பேசுகின்ற முறையாக, தர்க்க இயல் முறை அமைந்துள்ளது; தந்தி வழிச் செய்திகளை எழுத ஏற்ற முறை.

3. **முக்கியமான செய்திகள் :** மிகவும் முக்கியமான செய்திகளை விரைவாகக் கூற ஏற்ற முறையாகும். தேர்தல் முடிவுகள், முக்கியமானவர்களின் மரணம் போன்றவற்றை எடுத்துக் காட்டாகக் கூறலாம்.

4. **குறைந்த அளவில் செய்தி :** சில சொற்களில் குறைந்த அளவு இடத்தில் செய்திகளைக் கூற ஏற்ற முறையாகும். ஆதலால் ஆசிரியர்கள் இம்முறையைப் பெரிதும் விரும்புகின்றனர்.

5. **விரைவாக வெளியிடல் :** செய்தித்தாளின் பதிப்பினை விரைந்து வெளிக்கொணர இம்முறை உதவுகின்றது. செய்தியின் இறுதி விவரம் வரும்வரை காத்திருக்காமல், முக்கியமான பகுதி தெரிந்தவுடன் செய்தியை எழுதி வெளியிடலாம்.

6. **எளிதாகச் செய்தியைக் குறைக்க :** செய்தியின் முக்கியமில்லாத பகுதி செய்தியின் இறுதியில் வருவதால், அதனை எளிதாக வெட்டிக் குறைக்க இம்முறை ஏதுவாக உள்ளது. செய்தியின் இறுதிப்பகுதியைக் குறைக்கின்றபொழுது செய்தியின் முக்கிய மான விவரங்கள் எவையும் விடுபட்டுப் போவதில்லை.

7. **விரைந்து படிக்க :** மிகுந்த வேலைகள் உள்ள வாசகர்கள் விரைந்து செய்தியைப் படித்து அறிய இம்முறை பெரிதும் உதவுகின்றது. செய்தியினை முழுமையாகப் படிக்காமலேயே செய்தியின் சாரத்தை அறிந்து கொள்ள இயலும்.

## ✦ குறைகள்

தலைகீழாகச் செய்தியைக் கூறுகின்ற இம்முறையில் சில குறைகள் இருப்பதனைச் சுட்டிக்காட்டுகின்றனர்.

1. ***மும்முறை கூறல் :*** இந்த முறையில் செய்தியின் சாரம் தலைப்பிலும், முகப்பிலும், உடல் பகுதியிலும் வருகின்றது. ஆதலால் 'கூறியதையே கூறல்' என்ற வகையில் வாசகருக்கு இது செய்தியின் சுவையைக் குறைக்கலாம்.

2. ***ஆர்வத்தைக் குறைத்தல் :*** செய்தியின் முடிவு முதலிலேயே தெரிந்து விடுவதால் செய்தியை முழுமையாகப் படிக்க வேண்டுமென்ற ஆர்வம் வாசகருக்கு இல்லாமல் போகின்றது. செய்தியில் இருக்கின்ற 'புதிர்' முதலில் விடுபடுவதனைக் குறையாகக் கூறுகின்றனர்.

3. ***ஆக்கத்திறனைப் பாதித்தல் :*** இது மிகவும் பழமையான முறை, செய்தியை இப்படித்தான் எழுத வேண்டுமென்று வரையறுப்ப தால் செய்தியைக் கூறுவதிலுள்ள ஆக்கத்திறன் பாதிக்கின்றது.

செய்தியின் அமைப்பு புதுமையாகவும், சுவையூட்டுவதாகவும், விறுவிறுப்பாகவும் இருந்தால் செய்தியின் மதிப்புக் கூடுகின்றது.

# 18. பக்க வடிவமைப்பு

இதழ்கள் கவர்ச்சியாகவும், அழகாகவும் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் பல இலட்சம் வாசகர்கள் இதழை விரும்பிப் பார்த்துப் படிப்பார்கள். செய்தித்தாளின் சிறப்பு எவ்வளவு செய்திகளை வெளியிடுகிறது என்பதைப் பொறுத்து அமைவது அல்ல, எப்படி எந்த அடிப்படையில் செய்தியை வெளியிடுகிறது என்பதைப் பொறுத்தே அமைகிறது. பக்க வடிவமைப்பு, செய்தித்தாளுக்குரிய மதிப்பைக் கூட்டுகிறது. செய்தித்தாளைப் பார்க்கவும் படிக்கவும் வைப்பது செய்தித்தாளின் வடிவம்தான் என்பதை எளிதில் அனைவரும் அறிவர்.

பக்க வடிவமைப்பு சிறப்பாக உள்ள ஒரு செய்தித்தாள் விற்பனையிலும் முதன்மை வகிக்கும். செய்தித்தாளில் உள்ள பக்கங்கள்தான் அதனுடைய சாளரங்கள். செப்பனிடப்பட்ட செய்திகள், படங்கள், சிறப்புக் கட்டுரைகள் போன்றவை சரியான பக்க வடிவமைப்பு இல்லையென்றால் சிறப்பாக அமைவதில்லை.

> நன்கு திட்டமிடப் பெற்ற கவர்ச்சியான செய்தித்தாள்கள்
> வாசகரைத் தடுத்து நிறுத்திப் படிக்கச் செய்யும் உத்தியே
> பக்க வடிவமைப்பு

என்கிறார் ரெங்கசுவாமி பார்த்தசாரதி.

## வடிவமைப்பு

இதழின் நிருவாக ஆசிரியர்தான் செய்தித்தாளின் பக்க வடிவமைப்பு எப்படி இருக்க வேண்டும் என்று முடிவு செய்கிறார். சில செய்தியாசிரியர்கள் வழிகாட்டுகின்ற வகையில் முதலில் 'மாதிரிப் பக்கங்கள்' (Dummies) என்ற ஒன்றை உருவாக்கிக் கொள்கின்றனர். இவற்றின் அடிப்படையில் செய்தித்தாளின் பக்கத்தை உருவாக்கவும் (Page Make up) வடிவமைக்கவும் செய்கின்றனர். எந்தப் பக்கத்தில் எவை, எப்படி இடம்பெற வேண்டும் என்பதைத் தீர்மானித்து அமைப்பதையே 'பக்க வடிவமைப்பு' என்கிறோம்.

எந்த வகை எழுத்தில் அச்சிடுதல், தலைப்பின் வகைகள், படங்கள் இடம்பெறும் இடம், செய்திகளின் இடம், அளவு, துணுக்குகள், கருத்துப் படங்கள், விளம்பரங்கள் போன்றவை

எப்படி இடம் பெற வேண்டும் என்பதும் பத்திகளின் அமைப்பு ஆகியவையும் பக்க வடிவமைப்பில் அடங்கும்.

ஒவ்வொரு பக்கத்திலும் ஒவ்வொரு விவரம் அமையும் நிலை, அவ்விவரத்தின் விளைவு முதலியவற்றை முன்கூட்டியே எண்ணிப் பார்த்து முடிவு செய்கின்றனர். எதனையும் அதன் போக்கில் நடக்க விடுவதில்லை. இந்த முயற்சியின் செயல் முறையையும் விளைவையும்தான் ''பக்க வடிவமைப்பு'' என்கிறோம் என்று ஜார்ஜ் சி. பாஸ்டியன் (George C. Bastian) என்பார் தெரிவித்துள்ளார்.

பக்க வடிவமைப்பில் ஒவ்வொரு செய்தித்தாளும் ஒவ்வொரு தனி முறையைப் பின்பற்றுகின்றன. பக்க வடிவமைப்பு, வாசகர்களின் கருத்தைச் சார்ந்து இருப்பதால் இதில் சிறப்புக் கவனம் செலுத்தி வருகின்றனர்.

### பக்க அமைப்பின் நோக்கங்கள்

இதழ்களில் பக்க வடிவமைப்பு என்பது வாசகரைக் கவர்தல் என்பதை அடிப்படையாகக் கொண்டது எனலாம். அவ்வாறு கவர்வதற்குத் தேவையானவற்றை ஒரு பக்கத்தில் இடம்பெறச் செய்வதில் ஒவ்வோர் இதழும் வேறுபடும். அவ்வகையில் பக்க வடிவமைப்பின் நோக்கங்களைப் பொதுப்படையாக இங்குக் காண்போம்.

#### கவர்தல்

வாசகனைக் கவர்வது பக்க அமைப்பின் முதன்மை நோக்கமாகும். ஒரு பக்கத்தில் இடம்பெறும் படம், செய்தி, விளம்பரம், தொடர் முதலியவற்றை எளிதில் இனங்காணும் வகையில் அமைத்தால் அவ்விதழ் வாசகனை எளிதில் கவரும்.

#### செய்தியின் முக்கியத்துவத்தைக் காட்டுதல்

பத்திரிகை படிக்கின்ற ஒரு வாசகன் ஒரு பக்கத்தை மேம்போக்காகப் பார்த்தவுடன் எது முக்கியமான செய்தி என்பதை இனம்காண, பக்க அமைப்புத்தான் பெரிதும் துணையாக இருக்கின்றது. தலைப்புகளின் அளவு, செய்தி இடம் பெற்றிருக்கும் இடம், எழுத்துகளின் வடிவம், துணைத் தலைப்புகள் ஆகியவற்றின் மூலம் எது முக்கியமான செய்தி என்பதை இனம் காட்டுவதும் பக்க வடிவமைப்பே ஆகும்.

எப்படி ஒருவர் அங்காடிக்குக் காய்கறி வாங்கச் செல்லும்பொழுது பசுமையான காய்கறிகளைப் பார்த்தவுடன் வாங்கத் தூண்டுகிறதோ அதைப்போல, சில இனிப்புகளைப் பார்த்தவுடனே தன்னையறியாமல் வாயில் நீர் ஊறுவதைப் போலச் செய்தித்தாள் விளங்க

வேண்டும். அறிவுத் தேவையின் காரணமாகத் தேடி வருபவர்களுக்கு உடனே இனம் பிரித்து வழங்கும் வகையில் பக்க வடிவமைப்பு விளங்க வேண்டும்.

## படிப்பதற்கு வசதியாக அமைத்தல்

செய்தித்தாளைப் படிக்கின்ற வாசகர் சிரமமின்றிப் படிப்பதற்கான சூழ்நிலையை ஓர் இதழின் வடிவமைப்பு ஏற்படுத்தித்தர வேண்டும். செய்திகள் அச்சிடப்பட்டிருக்கும் முறை எளிமையாகப் படிக்கும் வகையில் அமைந்திருக்க வேண்டும். ஒரு பத்திக்கும் அடுத்த பத்திக்கும் இடையில் இருக்கும் இடைவெளியும் வாசகனது படித்தலுக்குத் துணைபுரியும். ஒரு பத்தியையும் அடுத்த பத்தியையும் எளிதாகப் பிரித்துக் காட்டுவதற்குத் தினத்தந்தி நாளிதழ் கோடு போட்டுப் பிரிக்கிறது. தினமணி, தினமலர் முதலிய நாளிதழ்கள் இடைவெளி மட்டுமே விடுகின்றன.

நெற்றித் தலைப்பு, துணைத்தலைப்பு முதலியவற்றைக் கொடுப்பதன் மூலம் செய்தியின் அடுக்கு நிலைகளை வாசகர்கள் வசதியாகப் படிக்க முடியும். இதழின் நெடும்பத்தி தவிரவும் சிறு சிறு பத்திகளாகச் செய்தியை அமைப்பதும் படிப்பதற்கு வசதியாக அமையும். செய்தி விளக்கத்தின் இடையே சிறு சிறு தலைப்புகள் இருந்தால் அது வாசகர்களுக்கு விளக்கத்தைக் கொடுப்பதாக இருக்கும்.

## சுவை கூட்டுதல்

செய்தி வெறும் கவர்ச்சியாக மட்டும் இருந்தால் போதாது. படிக்கச் சுவை கூட்டுவதாகவும் இருக்க வேண்டும். ஒரே மாதிரியான செய்தி ஒரே பக்கத்தில் இடம்பெறாமல் பல்சுவைச் செய்திகள் இடம்பெறுமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். ஒரு பக்கம் முழுவதும் விளம்பரமாக இருந்து செய்திகள் எதுவும் இல்லை என்றால் விளம்பரத்தில் நாட்டம் இல்லாத வாசகர்கள் அந்தப் பக்கத்தைப் பார்க்காமலே விட்டு விடுவர். எனவே ஒவ்வொரு பக்கத்திலும் செய்தியும் இடம்பெறச் செய்தல் வேண்டும்.

## இதழை இனம் காட்டுதல்

பக்கம் அமைந்திருக்கின்ற முறையையும் அமைப்பையும் பார்த்தவுடன், இந்த அமைப்புள்ள இதழ் இதுதான் என இனம் காணுகின்ற வகையில், தனித்தன்மை கொண்டதாக ஒவ்வொரு பக்கத்தின் வடிவமும் இருக்க வேண்டும். இந்த முறை மக்களின் மத்தியில் ஓர் இதழின் தனித்தன்மையை, செல்வாக்கை உயர்த்திக் காட்டப் பெரிதும் துணை செய்யும் முறையாகும்.

## விரும்புவதைப் படிக்கத் துணை செய்தல்

வாசகர்கள் எல்லாரும் ஒரே மாதிரியான மனிதர்கள் அல்லர். ஒவ்வொருவரும் ஒவ்வொரு தன்மை உடையவர்களாக இருப்பார்கள். அனைவரையும் ஈர்க்கும் வகையில் அமைய வேண்டும். அவரவர்கள் விரும்பும் செய்திகளை இனங்காணவும் அவை பரவலாகக் கிடைக்கவும் பக்க அமைப்பு வாய்ப்பளிக்க வேண்டும். அதற்காகக் குறிப்பிட்ட வகையான செய்தி ஒவ்வொரு நாளும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் வருமாறு செய்தல் வேண்டும்.

## பயனை மதிப்பிட உதவுதல்

வாசகர்கள் ஒரு செய்தித்தாளின் மதிப்பினைப் பலவற்றின் அடிப்படையில் தீர்மானிக்கின்றனர். அவ்வாறு மதிப்பினைத் தீர்மானிக்கும் காரணிகளில் ஒன்று பக்க அமைப்பாகும். ஆதலால் செய்தித்தாள் பயன் மதிப்பீட்டில் உயரும் வகையில் பக்க அமைப்பு விளங்க வேண்டும்.

## மிகுதியான செய்திகள் படிக்க வாய்ப்பளித்தல்

பெரும்பாலான வாசகர்கள் செய்தித்தாள்களைப் படிக்க ஒதுக்குகின்ற நேரம் குறைவாகும். குறைந்த நேரத்தில் மிகுதியான செய்திகளைப் படிப்பதற்கு ஏதுவாகப் பக்க அமைப்பு இருக்க வேண்டும். மிகுதியான செய்திகளை வழங்க வேண்டும் என்ற நோக்கத்தில், செய்திகளை நெருக்கமாகக் கொடுத்துப் படிக்க முடியாதபடி செய்துவிடவும் கூடாது.

## பக்க மதிப்பு

ஓர் இதழ் சிறுவர் முதல் பெரியவர் வரை அனைவராலும் படிக்கப்படுகிறது. அத்தகைய இதழில் இவர்கள் அனைவருக்குமான செய்திகள் இடம்பெற்றிருக்க வேண்டும். ஒரு பக்கத்தில் சிறுவருக்கான படக்கதை ஏதேனும் இடம்பெற்றிருந்தால் அந்தப் பக்கத்தில் பெரியவர்களைக் கவரும் செய்தியையும் இடம் பெறச் செய்வது வடிவமைப்பு உத்தியாகும்.

செய்தித்தாளின் முதல் பக்கத்திலிருந்து இறுதிப் பக்கம் வரை செய்தி மதிப்புக் கொண்டவையாக இருக்க வேண்டும். முதல் பக்கத்தில் கவர்ச்சி மிகுதியாக இருக்கலாம். அதற்காகச் செய்தி மதிப்பு முதல் பக்கத்திற்கு மட்டும்தான் என்னும் நிலை வந்துவிடக்கூடாது. செய்தி மதிப்பு எல்லாப் பக்கங்களுக்கும் பொதுவானதாக இருக்க வேண்டும்.

## செய்தித்தாள் அளவு

செய்தித்தாள்கள் இரண்டு வகையான அளவுகளில் வெளி வருகின்றன. அவை,

1. பெரிய அளவு (Standard Size)
2. குறுகிய அளவு (Small Size)

என்பவை ஆகும்.

## பெரிய அளவு

ஆங்கில இதழான ஹிந்து, இண்டியன் எக்ஸ்பிரஸ், தமிழ் இதழ்களான தினத்தந்தி, தினமணி, தினமலர், தினகரன், மாலைமுரசு, மாலைமலர், தமிழ்முரசு, முரசொலி, மக்கள் குரல் ஆகியவை பெரிய அளவில் வெளிவரும் நாளிதழ்களாகும்.

## குறுகிய அளவு

பெரிய அளவிலிருந்து குறைந்து பாதியாக அமையப் பெறுவது குறுகிய அளவு இதழ் ஆகும். 'மதுரை மணி' என்ற செய்தித்தாளைக் குறுகிய அளவில் அச்சிட்டு வந்தார்கள். சில வார இதழ்களும் குறுகிய அளவில் வெளிவருகின்றன. புகழ்பெற்ற ஆங்கில வார இதழான 'பிளிட்ஸ் (Blitz) இந்த அளவில் வெளிவந்து கொண்டிருக்கின்றது. தற்போது நகரின் பல பகுதிகளிலிருந்து வெளிவரும் விளம்பர இதழ்கள் குறுகிய அளவிலேயே வருகின்றன. இதழின் அளவிற்கும் அதன் பக்க அமைப்பிற்கும் நெருங்கிய தொடர்பு உள்ளது. பெரிய அளவு நாளிதழில் ஒரு பக்கத்தை எட்டு வரிசையாகப் (Columns) பிரித்துச் செய்திகளை வெளியிடுவார்கள்.

சிறிய இதழ்கள் ஐந்து வரிசைகளில் செய்திகளைப் பிரித்து வெளியிடுவதுண்டு. பெரிய அளவு இதழ்களைவிடச் சிறிய அளவு இதழ்களில் பக்கம் வடிவமைப்பது தான் மிகவும் கடினமான பணியாகும்.

## மாதிரிப்படி (Dummy)

பொதுவாக ஒரு நாளிதழின் பக்க அமைப்பு எப்படி இருக்க வேண்டுமென்பதைக் காட்டும் வகையில் செய்தியாசிரியர் ஒரு மாதிரியைத் தயாரிப்பார். இதனைப் 'பொய்ப் பக்கம் தயாரித்தல்' என்று கூறுவர். இம்மாதிரிப்படி என்பது கட்டடத்தின் வரைபடம் போல அமைகிறது. பொறியியல் வல்லுநர்கள் முதலில் வரைபடத்தை (Blue Print) வரைந்து கொண்டு , பின்பு அதைப் போன்று கட்டடத்தை அமைப்பதைப் போல் நாளிதழில் முதலில் பக்க மாதிரியை வரைந்து

கொண்டு பின்னர் அதைப் போலவே செய்தித்தாளை உருவாக்கு கின்றனர்.

மாதிரிப் படியில் ஒவ்வொரு பக்கத்தையும் எப்படி நிரப்புகிறார்கள் என்ற திட்டம் இருக்கும். நடைமுறையில் மாதிரிப் பக்க அமைப்பிற்கும், செய்தித்தாளின் இறுதி வடிவத்திற்கும் இடையில் மிகுந்த வேறுபாடுகள் கூட இருக்கலாம். இறுதி நேரத்தில் திடீரென்று வருகின்ற அவசரச் செய்திகள் பக்க அமைப்பில் மாற்றங்களை ஏற்படுத்துகின்றன. மாதிரிப் படியை உருவாக்குபவர் செய்தியாசிரியர் ஆவார். அவரே ஒவ்வொரு நாளும் இதழின் வடிவமைப்பு எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைத் திட்டமிடுபவரும் ஆவார்.

## மாதிரிப்படியின் நோக்கம்

மாதிரிப் படியை அமைத்துக் கொண்டால் மட்டுமே எந்தச் செய்தி எங்கே இடம்பெற வேண்டும் என்று திட்டமிட இயலும். ஒரே செய்தி இரண்டு இடங்களில் இடம் பெறாமல் தவிர்ப்பதற்கும் இந்த மாதிரிப் படி உதவும். செய்தியின் மதிப்பிற்கேற்ப அளவைக் கூட்டவும் குறைக்கவும் மாதிரிப்படி துணை செய்கிறது. கடைசிச் செய்திக்காகச் சில இதழ்களில் இடம் ஒதுக்கப்பட்டிருக்கும். அந்த இடத்தின் அளவிற்கேற்ப, கடைசிச் செய்தி எதுவும் இல்லை என்றால் வேறு செய்தியை இட்டு நிரப்ப வேண்டியிருக்கும். அவ்வாறு நிரப்பு வதற்குத் தேவையான செய்தியின் அளவை மாதிரிப்படி நமக்குத் தெரிவிக்கிறது.

## முதல் பக்கம்

ஓர் இதழில் முதல் பக்கம் முதல் இறுதிப் பக்கம் வரை சிறப்பாக அமையத் தான் வேண்டும் என்றாலும்கூட முதல் பக்கத்தை மிகவும் சிறப்பாக அமைக்க, தனிக் கவனம் செலுத்த வேண்டும். காரணம் முதல் பக்கம்தான் பத்திரிகைகளுக்கு அட்டையாகவும் திகழ்கின்றது. அனைத்து வாசகர்களின் கண்களில் முதலில்படுவது முதல் பக்கம் தான். மரபு வழியில் செய்திகளை வெளியிடுகின்ற செய்தித்தாளாக இருந்தாலும், புதுமையாக விறுவிறுப்பாகச் செய்திகளை வெளியிடும் இதழாக இருந்தாலும் முதல் பக்க வடிவமைப்பில் கவனமாக இருப்பார்கள். ஒரு செய்தி முதலாவதாகவும், முக்கியமானதாகவும் இருந்தாலும் முதல் பக்கத்தில்தான் இடம்பெற வேண்டுமெனக் கருதுவார்கள். நல்லபடியாகவும், குறிப்பிடத் தக்க முக்கியச் செய்திகளை உள்ளடக்கியதாகவும் உள்ள படங்களை முதல் பக்கத்தில் வெளியிட்டு வாசகர்களின் மனத்தை ஈர்க்க முற்படுவார்கள். பல வகையான சிறப்புச் செய்திகளும் முதல் பக்கத்தில் இடம்பெ றும் வகையில் அமைப்பார்கள்.

முதல் பக்கத்தில் இடம்பெறும் செய்திகளுக்குச் சில வரையறைகளை வைத்துள்ளனர். அவற்றைக் காண்போம்.

1. செய்தியின் முக்கியத்துவம்
2. பரபரப்புச் செய்தி
3. வாசகர் ஆர்வம்

## செய்தியின் முக்கியத்துவம்

செய்தித்தாள் வெளியாகும் இடத்திற்கேற்ப, செய்தியின் முக்கியமும் மாறுபடும். இந்திய அளவில் வெளியாகும் இதழில் வெளிவரும் முதல் பக்கச் செய்திக்கும் மாநில அளவில் வெளி வரும் இதழின் முதல் பக்கச் செய்திக்கும் வேறுபாட்டைக் காண இயலும். எனவே ஒவ்வோர் இதழின் தன்மைக்கேற்பவும் முதல் பக்கச் செய்தி வேறுபடும் என்பதை அறிய முடிகிறது.

## பரபரப்புச் செய்தி

இந்திய அளவிலும் மாநில அளவிலும் வெளியாகும் இதழில் ஒரே செய்தியே முதல் பக்கத்தில் இடம்பெறுவதுண்டு. அவ்வாறு இடம் பெறக் காரணம் அந்தச் செய்தியிலுள்ள பரபரப்புத் தன்மையாகும். பரபரப்புத் தன்மை என்பது செய்தி ஆர்வத்தைக் குறிக்கும் சொல் ஆகும். இந்தியா முழுவதும் தேர்தல் நடைபெறுகின்ற போது, இந்தியா முழுவதும் தெரிந்த ஒருவரின் இறப்பின்போது ஒரே செய்தி எல்லா இதழ்களிலும் முதல் பக்கச் செய்தியாக இடம்பெறுவதைக் காண முடியும். இதன் மூலம் நாடு முழுவதும் அந்தச் செய்தி ஆர்வத்தை ஊட்டுகிறது என அறியலாம்.

## வாசகர் ஆர்வம்

வாசகர்கள் பல்வேறு இடங்களில் பல்வேறு சூழ்நிலைகளில் வாழ்பவர்கள். ஒருவருக்கு இருக்கும் ஆர்வமே மற்றவருக்கும் இருக்கும் என எண்ண இயலாது. எனவே வட்டாரங்கள் தோறும் வெளிவரும் இதழில் அந்தந்த வட்டாரச் செய்திகள் முதல் பக்கத்தில் இடம் பெறுவது உண்டு. கன்னியாகுமரியில் நடைபெறும் தேரோட்டம் கன்னியாகுமரியிலிருந்து வெளிவரும் இதழுக்கு முதல் பக்கச் செய்தியாகலாம். ஆனால் அதே செய்தி சென்னையிலிருந்து வரும் இதழுக்கு முதல் பக்கச் செய்தியாவதில்லை. சில வேளைகளில் அது சென்னையில் செய்தியாகக் கூட வராமல் போகலாம். எனவே வாசகர் ஆர்வத்தை ஒட்டியே முதல் பக்கச் செய்திகள் இடம்பெறும்.

## பக்க அமைப்புக் கொள்கைகள்

செய்தித்தாளின் ஒவ்வொரு பக்கமும் அழகாக அமைய வேண்டும் என்றால் பக்க வடிவமைப்பில் சில கொள்கைகளைப் பின்பற்ற வேண்டும். அதாவது அச்சிடுகின்ற முறையில் ஒரே பக்கத்தில் செய்திகளின் குவிப்போ, நெருக்கமான தலைப்புகளோடு குழப்பமான தோற்றமோ இல்லாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

ஒரு பக்கத்தில் ஒவ்வோர் இடத்தின் தன்மையையும் அறிந்து செய்தியை வெளியிடுவது நல்லது. செய்தித்தாளை நடுவில் மடிக்கின்றனர். இம்மடிப்பிற்கு (Fold) மேலுள்ள பக்கமும் கீழுள்ள பக்கமும் வாசகர்களைக் கவர்வதில் வேறுபடுகின்றன. சில செய்திகளை முதல் பக்கத்தில் தொடங்கி அவற்றின் தொடர்ச்சியை அல்லது விரிவினை வேறுபக்கத்தில் அச்சிட வேண்டியிருக்கும். பொதுவாக அன்றைய முக்கியமான செய்தியைச் செய்தித்தாளின் மடிப்புக்கு மேல் வலப்பக்கத்தில் அச்சிடுவார்கள். ஆனால் சில ஆசிரியர்கள் வாசகரின் கண்பார்வை இயல்பாகவே இடமிருந்து வலமாகத் தான் செல்லும் என்ற எண்ணத்தில் முக்கியச் செய்திகளைச் செய்தித்தாளின் மேற்பகுதியின் இடப்பக்கத்தில் வெளியிட வேண்டுமென்று கூறுவார்கள்.

தலையங்கம், சிறப்புக் கட்டுரைகள், கருத்துப் படங்கள், விளம்பரங்கள், கட்டம் கட்டிய செய்திகள் போன்றவற்றை ஓர் ஒழுங்குமுறைப்படி வழக்கமாக ஒரு குறிப்பிட்ட பக்கத்தில் அச்சிடுவது நல்லது. காரணம் வாசகருக்கு என்னென்ன செய்திகளுக்கு - விளம்பரங்களுக்குச் செய்தித்தாளின் எந்தெந்தப் பக்கத்தைப் புரட்ட வேண்டும் என்பது தெரிந்துவிடும்.

பொதுவாகப் பக்கங்கள் எவ்வாறு அமைய வேண்டும் என்பதைப் பற்றி இதழாளர்கள் பல கருத்துகளைக் கூறியுள்ளனர். அவற்றில் முக்கியக் கொள்கைகளாக (Important Principles) சிலவற்றை இங்கே காண்போம்.

### சமன்பாடு (Balance)

ஒரு செய்தித்தாளின் ஒவ்வொரு பக்கமும் சமன்பாட்டு நிலையில் அமைய வேண்டும். சமன்பாடு என்பது 'சமநிலையை'க் (Equilibrium) குறிக்கும். அதாவது ஒரு பக்கத்தில் ஏதாவது ஒரு பகுதியில் கனமான (Heavy) செய்திகளாகவும் மற்ற பகுதிகளில் கனமற்ற (Light) செய்தி களாகவும் வெளியிடக் கூடாது. ஒரு தராசின் இரு தட்டுகளும் சமநிலையில் இருக்க இருபக்கமும் ஒரே எடையுள்ள பொருள்களை வைப்பதைப்போலச் செய்தித்தாளின் எல்லாப் பகுதிகளையும் ஒரே

மாதிரி அமைக்க வேண்டும். செய்திகள் ஆங்காங்கே அமையும் பொழுது அவற்றைப் படிக்கின்ற வாசகரின் உள்ளத்தில் மன நிறைவு ஏற்பட வேண்டும். படங்களும் தலைப்புகளும் செய்தித்தாளின் தோற்றத்திலும் சமநிலையைத் தோற்றுவிக்கப் பெரிதும் உதவி செய்கின்றன. ஒவ்வொரு பக்கத்திலும் ஒவ்வொரு தகுதியுடைய செய்திகளை வெளியிட வேண்டும். எடுத்துக்காட்டாகப் பதின்மூன்று பக்கங்களைக் கொண்ட ஒரு செய்தித்தாள், பத்துப் பக்கத்தில் மட்டும் செய்திகளை இடம் பெறச் செய்துவிட்டு மீதமுள்ள மூன்று பக்கத்தில் வெறும் விளம்பரங்களை வெளியிடுவது பொருத்தமாகாது.

## வேறுபாடு (Contrast)

செய்தித்தாளின் தலைப்புகளையும், செய்திகளையும் அமைப்பதில் மாறுபட்ட, முரண்பட்ட தன்மையைப் புகுத்தினால் செய்தித்தாளின் பக்க அமைப்பு சுவையாக இருக்கும். அதாவது பெரிய எழுத்துத் தலைப்புச் செய்தி, அதற்கருகில் சிறிய எழுத்துத் தலைப்புச் செய்தி, பெரிய படம், அடுத்தே இன்னொரு சிறிய படம், கனமான செய்தி, அருகிலேயே கனம் குறைந்த செய்தி என்று மாற்றிப் பக்கத்தை அமைக்கின்ற பொழுது படிக்கின்ற வாசகர் சுவை குறையாமல் எல்லாவற்றையும் அவரவரின் இரசனைக்கேற்பப் படித்து இன்புறுவர்.

## சரியான அளவு (Proportion)

செய்தித்தாளின் பக்கத்தில் அமைகின்ற ஒவ்வொன்றும் சரியான அளவில் அமைய வேண்டும். படம், தலைப்பு, பக்கப்பகுப்பு, செய்தியின் அமைப்பு ஆகிய ஒவ்வொன்றும் சரியான நீள அகலத்தில் இருக்க வேண்டும். மொத்தப் பக்கத்தின் அளவோடு ஒப்பிடுகையில் ஒவ்வொன்றும் அமைந்திருக்கும் அளவு சரியானதாக இருந்து பக்க அழகைக் கூட்டுவதாக இருக்க வேண்டும்.

## ஒருமைப்பாடு (Unity)

செய்தித்தாளின் ஒரு பக்கத்தின் வடிவம் (Page Design) பல உணர்வுகளை எழுப்பாமல் ஒரே உணர்வினை ஏற்படுத்துவதாக இருக்க வேண்டும். ஒரு பக்கத்தில் அச்சாகியிருக்கும் ஒவ்வொன்றும் தோற்றத்தில் மற்றவற்றோடு இணைந்து நிற்க வேண்டும். செய்திகள் வெறும் தொகுப்பாக மட்டும் இல்லாமல் மொத்த உருவத்தில் பல் வேறு உறுப்புகளாகக் காட்சி தர வேண்டும்.

## செய்திகள் இடிக்காமை

செய்திகள் ஒன்றோடு ஒன்று இடிக்கக்கூடாது. ஒரே நபரைப் பற்றி ஒரே இடத்தில் இரு செய்திகளை அச்சிடுவது இடித்தலாகும்.

செய்தித் தலைப்புகளை நெருக்கி அச்சிடுவதிலும் செய்திகள் ஒன்றோடொன்று இடித்துக் கொண்டிருக்கும் தோற்றத்தைக் கொடுக்கும் செய்தித் தலைப்புகளுக்கு இடையில் போதுமான அளவு இடைவெளி இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும்.

**பார்வைபடும் இடங்கள்**

ஒரு செய்தித்தாளைப் படிக்கின்ற அல்லது புரட்டுகின்ற வாசகரின் பார்வையில் கட்டாயம் சில இடங்கள் கண்ணில்படும். அந்த முக்கியமாகப் பார்வைபடும் இடங்களில் (Focal Points) வாசகர்கள் அனைவரும் படிக்க வேண்டிய செய்திகளை வெளியிட வேண்டும். இது போன்ற செய்திகளுக்கு 'நெற்றிச் செய்திகள்' என்று பெயர். பொதுவாக வாசகரின் பார்வை படாத இடங்களில் முக்கியமற்ற செய்திகளை வெளியிட வேண்டும்.

**இடைவெளிகள் (Spaces)**

செய்தித் தலைப்புகளில் சொற்களுக்கு இடையிலும் வெவ்வேறு தலைப்புகளுக்கு இடையிலும் போதுமான இடைவெளி இருக்க வேண்டும். படங்களை அச்சிடுகின்ற பொழுதும் அவற்றைச் சுற்றி இடைவெளி தேவை. அவ்வாறு இடைவெளி இருந்தால்தான் ஒவ்வொன்றும் வாசகரிடம் எதிர்பார்க்கின்ற விளைவினை ஏற்படுத்தும் என்ற நம்பிக்கை இதழாளர்கள் நடுவே காணப்படுகின்றது. இந்த முறை வாசகர்களிடம் பெரும் வரவேற்பைப் பெற்று விளங்குகிறது.

**பக்க அமைப்புக்குத் துணை செய்யும் காரணிகள்**

செய்தித்தாளின் பக்க அமைப்பு மிகவும் அழகாகவும் சிறப்பாகவும் அமைய, பக்க அமைப்பாளர் இருவகையான காரணிகளைப் பயன்படுத்துகின்றனர். அவை, எழுத்துகளின் அமைப்பு, படங்களும் வரை படங்களும் என்பவை ஆகும்.

**எழுத்துகளின் அமைப்பு**

செய்திகளை அச்சிடும் எழுத்துகள் அளவாலும், தன்மையாலும் வேறுபடுகின்றன. பெரிய எழுத்துகளையும் சிறிய எழுத்துகளையும் தடித்த எழுத்துகளையும் சாய்வு எழுத்துகளையும் தக்க முறையில் அமைப்பது ஒரு பக்கத்தின் அழகைக் கூட்டுவதாக அமையும். இவ்வாறு அமைக்கும்போது தமிழ் எழுத்துகளின் வடிவம் மாறுபடாத வகையில் எழுத்துகளை அமைத்தல் வேண்டும்.

**படங்களும் வரைபடங்களும்**

செய்தித்தாளில் எங்கெல்லாம் படங்களையும் வரைபடங்களையும் பயன்படுத்தும் வாய்ப்பு கிடைக்கிறதோ அங்கெல்லாம் படங்களையும்

வரை படங்களையும் பயன்படுத்த வேண்டும். அவ்வாறு பயன்படுத்துவது வாசகர்களை எளிதில் கவரும். இவை இரண்டும் ஒரு பக்க அமைப்புக்கு அடிப்படையாக அமைகின்றன.

## பக்க வடிவமைப்பு வகைகள்

செய்தித்தாளின் பக்க அமைப்பு அதன் அமைப்பாளரின் கற்பனைத் திறன், கலைத்திறன், பட்டறிவு ஆகியவற்றின் அடிப்படையில் வேறுபடுகின்றது. குறிப்பிடத்தக்க பக்க அமைப்பு முறைகளில் சிலவற்றை இங்கே காணலாம்.

### சமநிலைப் பக்க அமைப்பு (Balanced Make up)

செய்தித்தாளில் ஒரு முறையான அமைப்பில் செய்திகள், படங்கள், கருத்துப் படங்கள், துணுக்குகள், விளம்பரங்கள் ஆகியவற்றை ஒரே சீராக அமைப்பது சமநிலைப் பக்க அமைப்பாகும். இதில் ஒரு செய்தித்தாளில் இடம் பெறும் மேற்கூறிய அனைத்தும் பல்வேறு பக்கங்களில் பரவலாக அமைக்கப்படும். எதுவும் மிகுதியாகக் கண்ணை உறுத்துவதாக வாசகர்களின் மிகுதியான கவனத்தைக் கவர்வதாக இருக்கக் கூடாது. இம்முறை அமைப்பு வாசகர்களுக்கு அலுப்பையும் சோம்பலையும் ஏற்படுத்தாமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்பது மிக அவசியமாகும்.

### பார்வையை ஈர்க்கும் பக்க அமைப்பு (The Focus Make - up)

வாசகர்களின் பார்வை, செய்தித்தாளின் பக்கத்தில் எப்படி பட்டு முன்னேறுமோ அதைப் போல அந்தப் பார்வைக் கோணத்தை மனத்தில் கொண்டு பக்கத்தை அமைப்பது சிறந்த முறையாகும். இம்முறையில் பக்கம் அமைக்கப் பட்டால் இதழானது வாசகர் நடுவே நன்மதிப்பைப் பெறும்.

### மாறுபாட்டுச் சமநிலைப் பக்க அமைப்பு (Contrast and Balanced Make-up)

செய்தித்தாளின் பக்கங்களைச் சமநிலையில் அமைக்கின்ற பொழுது இடையிடையே மாறுபட்ட முறைகளில் செய்திகளையும் படங்களையும் அமைக்கின்ற முறை மாறுபாட்டுச் சமநிலைப் பக்க அமைப்பு எனப்படும். அதாவது மூன்றடுக்குத் தலைப்புகள், இரட்டை வரித் தலைப்புகள், ஒற்றைவரித் தலைப்புகள், மூன்று பத்திச் செய்திகள், இருபத்திச் செய்திகள் ஆகியவற்றை மாற்றி, மாற்றி அமைக்கும் முறையே மாறுபாட்டுச் சமநிலைப் பக்க அமைப்பாகும்.

### கலப்பு முறைப் பக்க அமைப்பு (Mixed Make - up)

சமநிலைப் பக்க அமைப்பு முறைக்கு நேர் எதிரானது கலப்பு முறைப் பக்க அமைப்பாகும். இம்முறையில் எது எந்த இடத்தில்

இருக்குமென்று கூற முடியாது. எந்த ஒழுங்கு முறைக்கும் அடங்காமல் இருப்பது இம்முறையில் அடங்கும். கவர்ச்சி இதழ்கள் இம்முறையைப் பின்பற்றுகின்றன. இம்முறை ''சர்க்கஸ் பக்க அமைப்பு முறை'' (Circus Make - up) என்றும் வழங்கப்படுகிறது.

## பக்க அமைப்பில் கணினிப் பயன்பாடு

தற்காலத்தில் நாளிதழ்கள், பருவ இதழ்கள் அனைத்துமே கணினியின் துணைக்கொண்டு வடிவமைப்புச் செய்யப்படுகின்றன. இதழின் ஒவ்வொரு பக்கத்தையும் கணினித் திரையில் பார்த்து, எப்படி அமைத்தால் நன்றாக இருக்கும் என்று மாற்றி அமைத்துக் கொள்ள முடிகிறது. கணினியின் துணையுடன் ஓரிரு நொடிகளில் செய்தித் தலைப்பின் அளவைக் கூட்டவும் குறைக்கவும் முடிகிறது. நெற்றித் தலைப்பை அடிக்கோடிட்டுக் காட்டவோ, வெள்ளைத் தாளில் கறுப்பாக அச்சிடுவதற்கோ வெள்ளையாக அச்சிடுவதற்கோ (Reverse) வேண்டிய வசதிகளைக் கணினி தருகிறது.

## கணினிப் பயன்பாட்டுப் பக்க அமைப்பில் படங்கள்

செய்தி தொடர்பான நிழற்படங்களைக் கணினியின் துணையுடன் பெரிதாகவோ சிறிதாகவோ உடனே மாற்றியமைக்க முடியும். சில படங்கள் சரியாக இல்லாமலிருந்தால் அவற்றை மேம்படுத்தவும் கணினியில் உள்ள 'பட அமைப்பகம்' (Photoshop) உதவுகிறது. படத்தின் பின்னணியை (Background) மாற்றிப் புதிய பின்னணியை உருவாக்கவும் இந்தப் பட அமைப்பகம் துணைசெய்கிறது.

## கணினிப் பயன்பாட்டில் வரைகலை

கணினியில் நூற்றுக்கணக்கான எழுத்துருக்கள் உருவாக்கப் பட்டுள்ளன. அந்த எழுத்துருக்களைப் பயன்படுத்தி இதழை அச்சிட இயலும். முன்பே உருவாக்கப்பட்ட எழுத்துருக்கள் அல்லாமல் வேறு வடிவமான எழுத்துருக்களையும் கணினியின் துணையுடன் உருவாக்கிக் கொள்ள முடிகிறது.

வண்ணப் பக்கங்களை வடிவமைக்கும்போது அந்தப் பக்கங்களில் என்னென்ன வண்ணங்கள் இடம்பெறச் செய்ய வேண்டுமோ அந்த வண்ணங்களைக் கணினியின் மூலம் எளிதில் வடிவமைக்க இயலும். கலப்பு வண்ணங்களைத் துல்லியமாகக் கலந்து வடிவமைப்புச் செய்யவும் கணினி துணைபுரிகிறது.

# 19. ஆசிரியர் குழுவும் இதழ் நடையும்

செய்தித்தாள், செய்தி மலர்கள், செய்தி நிறுவனங்கள், செய்திக் கழகங்கள் ஆகியவற்றுடன் தொடர்புடையவர்களையும் இதழாளர் என்று அழைக்கின்றோம். ஆசிரியர்கள், துணை ஆசிரியர்கள், செய்தியாளர்கள், எழுத்தாளர்கள், செய்தி அறிக்கையினர், நிழற்படக் கலைஞர், கருத்துப்பட எழுத்தாளர், மெய்ப்புத் திருத்துநர், பக்க அமைப்பாளர் உள்ளிட்டோரையும் இதழாளர்கள் என்கிறோம்.

ஓர் இதழின் வளர்ச்சிக்கும், இயக்கத்திற்கும் இத்தகையோரின் சேவையும் மிகவும் இன்றியமையாதது. இவர்களின் பணி இல்லாவிட்டால் இதழ் இல்லை. பத்திரிகைத் தொழிலில் இவர்கள் ஒவ்வொருவரும் முக்கியத்துவம் பெறுகிறார்கள். இவர்களின் கூட்டு முயற்சியில் இதழியல் துறை இயங்குகிறது. இதழாளர்களைக் கல்வி, அனுபவம், தொழில் நுணுக்கம் ஆகியவற்றின் அடிப்படையில் ஆசிரியர்கள், அலுவலர்கள், அச்சுக் கலைஞர்கள் என்று பிரிக்கலாம்.

வார இதழ்களிலும் சிறிய நாளேடுகளிலும் அலுவலகம், தொழிற் கூடம் என்று இரண்டு பகுதிகள் உள்ளன. பெரிய நாளேடுகளின் தொழிற்கூடங்கள் ஆறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு இயங்குகின்றன.

1. ஆசிரியர் பகுதி, 2. வணிகப் பகுதி 3. விளம்பரப் பகுதி 4. எந்திரப் பகுதி 5. செய்திப் பகுதி 6. நிருவாகப் பகுதி எனப் பிரிக்கப் படுகின்றன. இப்பகுதிகளில் பணியாற்றுவோர் ஒருவருக்கொருவர் தொழில் முறையால் உயர்ந்தும் தாழ்ந்தும் விளங்கினாலும் ஒருவரையொருவர் உணர்ந்தும் ஒத்தும் செயலாற்ற வேண்டும். எந்திரப் பகுதியில் பணியாற்றும் கண்காணிப்பாளர் அச்சுக் கோக்கும் பகுதியில் பணிபுரியும் பணியாளர்கள் முதலானோருக்கு இடையில் ஓர் ஒருங்கிணைப்பு இருத்தல் அவசியம் ஆகும். விளம்பரம் கொடுக்க வேண்டுமானால் நகரச் செய்தியாளரை அணுக வேண்டும். அவரே தான் உள்ளூர்ச் செய்திகளுக்கும் பொறுப்பாளர். இதழ்த் துறையில் அவரவர்தொழில் உகந்ததும் உயர்ந்ததும் ஆகும். எனவே ஒவ்வொருவரும் கூட்டுறவாகச் செயல்பட்டால் மட்டுமே இத் தொழிலைச் சிறப்புற நடத்த முடியும்.

## ஆசிரியர் (Editor)

எந்த ஒரு செய்தித்தாளாக இருந்தாலும் சிறப்புற அமைய வேண்டிய பதவி ஆசிரியர் பதவியாகும். எப்படி ஒரு மரத்திற்கு ஆணி வேர் அவசியமோ அதேபோல இதழுக்கு ஆசிரியர் தேவை. செய்தித் தாளின் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் தந்தையாய், தாயாய் விளங்கிச் செய்தித்தாளின் வளர்ச்சிக்காகவும் இலட்சக்கணக்கான மக்களுக்காக உருவாக்கும் பெரும் பொறுப்பும் ஆசிரியருக்கு உண்டு. ஒரு சனநாயக நாட்டில் ஆசிரியர் என்பவர் தேர்ந்தெடுக்கப்படாத சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினராய் உள்ளார்.

## ஆசிரியரின் பணிகள்

செய்திகளைத் திரட்டித் தொகுத்தலும் தொகுத்த செய்திகளைப் பகுத்தலும் இப்படி பகுத்த செய்திகளை வகைப்படுத்தி வழங்கும் பொறுப்பும் வாய்ந்த பணி ஆசிரியரின் பணி ஆகும். செய்திகளை அச்சிடுதல், அழகுற அமைத்தல் என அமைந்துள்ள தொழில் நுணுக்கப் பணிகளை விட ஆசிரியரின் பணி அதிகத் திறமை வாய்ந்த பணியாகும்.

செய்தித்தாளின் உருவத்தைவிட உள்ளடக்கத்திற்கே மதிப்பு அதிகம். இலட்சக்கணக்கான வாசகர்களை ஈர்க்கும் வகையில் செய்தி களை வெளியிட வேண்டும்.

போர், வேலை, வேலையின்மை, பற்றாக்குறை தொடர்பான செய்திகளை வெளியிடுவதில் ஆசிரியர் மிகக் கவனமாக இருந்திட வேண்டும். புள்ளி விவரம் தருகின்ற நேரங்களில் செய்திகளுக்கு மதிப்பும் பொறுப்பும் அதிகமிருப்பதை எண்ணிப்பார்த்து அவர்களின் கவனத்தை அதிகமாகப் பணியில் காட்ட வேண்டும்.

செய்தித்தாளின் அழகைவிட அடக்கத்தைச் செம்மையாகச் செய்கின்ற ஆசிரியரின் பணி மிக முக்கியப் பணியாகும். சுருக்கமான இடங்களில் கலவரமான செய்திகளை விளக்கமாகத் தவறுதலின்றி அளிக்கும் எச்சரிக்கை பிற தொழில் நுணுக்கத் தொழிலாளர்களைவிட ஆசிரியருக்கே உரியதாக உள்ளது. நடந்த நிகழ்வை அறிவிக்கும் போக்கில் எடுத்துக் கூறும் போக்கில் செய்திகளை அமைக்க வேண்டும். பிற செய்தித்தாளில் இடம்பெறாத செய்திகளைக் கொடுப்பதில்கவனத்துடன் ஆசிரியர் இருக்க வேண்டும்.

ஒரு செய்தித்தாளின் தன்மையைப் பார்த்தவுடன் வாசகர்களை ஈர்க்கிறது என்றால் அந்தப் பெருமை நிச்சயம் ஆசிரியரையே சென்று சேரும். எனவே உண்மையிலேயே 'செய்தித்தாள்தான் ஆசிரியர்' என்பது மெய்ப்பித்துக் காட்டப்படுகிறது.

## ஆசிரியர் கடமையும் உரிமையும்

அன்றாடப் பணிகளைப் பிறருக்கு வரையறுத்துத் தருதல் ஆசிரியரின் முதற் கடமையாகும். வாசகர்களின் எண்ண ஓட்டங்களைப் புரிந்துகொண்டு அவற்றிற்குத் தக்கவாறு செய்திகளைச் சுவையுடனும் புதுமையான கருத்துகளுடனும் மிகுந்த எச்சரிக்கையுடனும் தருதல் வேண்டும். இதழின் விற்பனையைப் பெருக்கி அதன் வளர்ச்சிக்குத் துணை நிற்கும் வண்ணம் வாசகர்களை உருவாக்க வேண்டும். அதற்காக வாசகரிடையே போட்டிகளை வைத்துப் பரிசுகள் தரலாம். சில நாள்களில் இதழுடன் சேர்த்து இலவச இணைப்புகள் வழங்கி இதழை வளரச் செய்யும் பணியைத் தொடரலாம். செய்திப் பக்கங்களை வனப்புற அலங்கரித்தலும் செய்தித் தலைப்புகளை வகைப்படுத்திக் கவர்ச்சியோடு அளித்தலும் ஆசிரியரின் மேற்பார்வையின் கீழ் அடங்கும் பணிகளாகும்.

செய்தித்தாள் இயங்க அடிப்படை நாடியாகத் தொழில் புரிபவர் ஆசிரியரும் செய்தியாளருமாவர். செய்தியாளர் என்போர் இதழின் கண்களாகவும் காதுகளாகவும் வெளியிலே இருந்து சுழன்று பணியாற்றுபவர்கள். ஆசிரியர், இதழின் வாயாகவும் செய்திகளை அமைப்பதில் முடிவெடுப்பவராகவும் பணியாற்றுகின்றார்.

அதாவது ஆசிரியர் பொறுப்பு என்பது சட்டப்படியும் நடைமுறைப்படியும் செய்தித்தாள் வெளியிட்டதற்கும் வெளியிடத் தவறியவற்றிற்கும் பொறுப்பேற்க வேண்டிய பொறுப்பு ஆகும். செய்தித்தாளில் ஏதாவது ஒரு பக்கத்தில் அவதூறாகச் செய்தி வந்தால் அதற்காக ஆசிரியர் மீதுதான் வழக்குத் தொடருவார்கள். அவமதிப்புக்காக நீதிமன்றம், நாடாளுமன்றம், சட்டப்பேரவை ஆகியவற்றின் முன்னால் நிற்பதும் ஆசிரியரே.

## ஆசிரியரின் தகுதியும் தேவையும்

அதிகப் பொறுப்பு வாய்ந்த இதழாசிரியருக்கு உயர்ந்த கல்வியும் நிறைந்த அறிவும் சிறந்த அனுபவமும் வேண்டும். ஆசிரியர்கள் அன்றாட உலக நடப்பை அறிந்துகொள்ளும் வகையில் வசதிகள் செய்து தருதல் வேண்டும். அலுவலகப் பொருள்களும் ஆட்சி மற்றும் அறிவுத் துறை வழிகாட்டி நூல்களும் நிறைந்த நூலகமும் தனியாகவே இவருக்கு உண்டு.

இதழியல் துறையில் ஆசிரியராக இருப்பவர்களுக்குப் பல்துறை அறிவு, நாட்டு நடப்பு, உலகக் கண்ணோட்டம், நிருவாகத்திறன், கட்டுரைவன்மை, இலக்கிய அறிவு, சீரிய மொழிப் பயிற்சி, அரசியல், பொது அறிவு முதலியவை இருக்க வேண்டும். இவற்றை வளர்த்துக்

கொள்ள நூலகங்களை நிருவாகமே அளித்துள்ளன. அவ்வாறு ஆசிரியரிடம் எப்பொழுதும் இருக்க வேண்டிய கருவிகள் பின் வருபவை ஆகும்.

1. கையேடு
2. செய்தித்தாள் குறிப்பேடு
3. ஒப்பறி நூல்கள்
4. அகராதிகள்
5. கலைக் களஞ்சியங்கள்
6. தொலைபேசி எண் குறிப்பேடு
7. அஞ்சல் துறை வழிகாட்டி (தூதஞ்சல் வழிகாட்டி)
8. நகரமைப்பு வரைபடம்
9. உலகப் படம்
10. உலக உருண்டை

## ஆசிரியர் குழு

ஆசிரியர் குழுவில் இடம்பெறுபவர்களைப் பின்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. முதன்மை ஆசிரியர் (Chief Editor)
2. முதன்மைத் துணை ஆசிரியர் (Chief Sub Editor)
3. நிருவாக ஆசிரியர் (Managing Editor)
4. சிறப்பாசிரியர் (Special Editor)
5. செய்திப் பகுதி ஆசிரியர் (News Editor)
6. இரவுச் செய்தி ஆசிரியர் (Night Editor)
7. நகரச் செய்தி ஆசிரியர் (City Editor)
8. மாநிலச் செய்தி ஆசிரியர் (State News Editor)
9. விளையாட்டுப் பகுதி ஆசிரியர் (Sports Editor)
10. சமுதாயப் பகுதி ஆசிரியர் (Social Editor)
11. ஞாயிறு சிறப்புப் பகுதி ஆசிரியர் (Sunday Editor)
12. தந்திச் செய்தி ஆசிரியர் (Telegraphic Editor)
13. தனிக்கூறு இணைப்புப் பகுதி ஆசிரியர் (Feature Editor)
14. இலக்கியப் பகுதி ஆசிரியர் (Literary Editor)
15. கலைப்பகுதி ஆசிரியர் (Art Editor)

என்று பல்வேறு வகையான ஆசிரியர் பிரிவுகள் உள்ளன. இன்னும் பெரிய செய்தி நிறுவனங்களில் இசை, நிதி, வேளாண்மை, வானொலி, தொலைக்காட்சி, திரைப்படம் போன்ற சமூக இலக்கியத்துறைச் செய்திகளை வெளியிடத் தனித்தனி ஆசிரியர்கள் உள்ளனர்.

## ஆசிரியர் குழுவின் பொறுப்புகள்

இதழ்களின் வளர்ச்சிக்கேற்ப ஆசிரியர்களின் எண்ணிக்கை அமைகின்றது. ஆசிரியர்கள் ஒவ்வொருவருக்கும் பொறுப்புகள் அந்தந்த நிறுவனங்களுக்கேற்பப் பகிர்ந்தளிக்கப்படுகின்றன. ஆசிரியர் குழுவில் இடம் பெற்றுள்ளவர்களுக்குப் பொறுப்புகள் கீழ்க் காணுமாறு உள்ளன.

### ✦ ஆசிரியர்

செய்தித்தாளை இயக்கி மேற்பார்வை செய்தல், ஆசிரியர் பக்கங்களைக் கவனித்தல் முதலானவை இதழாசிரியரின் பொறுப்புகளாக உள்ளன.

### ✦ நிருவாக ஆசிரியர்

செய்திகளைத் தரவரிசைப்படுத்தலும் செய்திகளைத் தள்ளலும் கொள்ளலும் நிருவாக ஆசிரியரின் பொறுப்பு ஆகும். இவரே இதழுக்கு இறுதி வடிவம் கொடுப்பவர் ஆவார். சிறப்பாசிரியருக்குத் துணை புரிவதும் இவரது பொறுப்பாகும்.

### ✦ சிறப்பாசிரியர்

கதை, கட்டுரை, கவிதை, பொழுதுபோக்கு போன்ற சிறப்புப் படைப்புகளைத் தொகுத்துத் தருகிறார். வாசகர்கள் எழுதியனுப்பும் படைப்பிலக்கியங்களைத் தேர்வு செய்வதும் இவரே.

### ✦ முதன்மைத் துணை ஆசிரியர்

துணையாசிரியர்களின் பணிகளை மேற்பார்வை செய்வது முதன்மைத் துணையாசிரியரின் பொறுப்பாகும். செய்திகளைச் செய்தித்தாளில் அமைவுற அமைத்து வெளியிடும் பொறுப்பும் இவருடையதுதான்.

### ✦ செய்தி ஆசிரியர் (News Editor)

செய்தித்தாளில் இடம் பெறும் அனைத்துச் செய்திகளுக்கும் இவரே பொறுப்பு. செய்திப் பகுதியின் பொறுப்புகளை வகிப்பவர் இவர். பெரும்பாலும் அனைத்துச் செய்திகளையும் செய்தித்தாளில் இடம் பெறச் செய்வது இவரால் மட்டுமே முடியும். செய்திப்

பணிகளை மேற்பார்வை செலுத்துவதும் இவருக்கென்றே உள்ள பணியாகும். செய்தித்தாளைத் திட்டமிட்டு உருவாக்குவதில் ஆசிரியருக்குத் துணையாக விளங்குகிறார்.

ஆசிரியரின் கண்களாகவும், காதுகளாகவும் செய்தி ஆசிரியர் விளங்குகின்றார். கடலைப் போன்று உலகமெங்கும் பரந்து உள்ள செய்திகளை நீரோடைபோல் கொட்டுவது இவரது பணியாகும். அச் செய்திகளையெல்லாம் வகை வகையாகப் பிரித்தெடுத்து வாசகப் பெருமக்கள் காலையில் காபி குடிக்கும் பொழுது பெறக்கூடிய அறிவாகவும் கல்வியாகவும் இருப்பவர் செய்தி ஆசிரியரே.

செய்தி ஆசிரியர் ஆசிரியருடைய மனச்சாட்சியின் கண்காணிப்பாளராகத் திகழ்கின்றார். ஆசிரியரின் நம்பிக்கையையும் ஆதரவையும் பெற்றவராகச் செய்தித்தாளை உருவாக்கும் பொழுது எந்த வகையான மோதலையும் கருத்து வேறுபாடுகளையும் தவிர்ப்பவராக அவர் விளங்க வேண்டும்.

செய்தித் தாளுக்கு வரவேண்டிய அனைத்துச் செய்திகளும் சரியாக வருகின்றனவா என்பதையும் அவற்றில் ஏதாவது முக்கியமான செய்திகள் விடுபட்டுள்ளனவா என்பதையும் பார்க்கும் முழுப் பொறுப்பு, செய்தி ஆசிரியருடையதாகும். உரிய காலத்திற்குள் செய்திகளுக்கேற்ற இடத்தினைச் செய்தித்தாளில் அளித்துச் செய்திகளை மக்களுக்கு அளிக்க வேண்டியது தலையாய பணியாகும். நேரம் தவறினால் செய்திகள் மதிப்பிழந்து போய் விடும்.

கால வளர்ச்சியின் காரணமாக இரவு பகல் பாராமல் உலகத்திலுள்ள அனைத்து மக்களும் உழைத்துக் கொண்டே இருக்கிறார்கள். எப்பொழுது வேண்டுமானாலும் போராட்டங்கள், வன்முறைகள், புரட்சிகள் ஏற்படலாம். எனவே எதிர்பாராத செய்திகள் எப்பொழுது வேண்டுமானாலும் வரலாம். செய்தி ஆசிரியர் அவற்றை விரைந்து முயன்று பெற்றுத் தலைமைச் செய்தியாளருக்கு அறிவித்து அவற்றைப் பற்றிய உண்மையான விவரங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும்.

பெரிய பெரிய செய்தித்தாள்களில் நாள்தோறும் காலையில் செய்தி ஆசிரியர் ஒரு காலைச் செய்திக்கூட்டம் நடத்துவார். இக்கூட்டத்தில் ஆசிரியரோ அல்லது அவரது உதவியாளரோ பங்கேற்பார். பல்வேறு துறைகளைச் சார்ந்தவர்களும் இக்கூட்டத்தில் பங்கு பெறுவார்கள். இக்கூட்டத்தில் முன்பு வெளிவந்த இதழை மதிப்பிட்டு இனி இதழ் எப்படி வரவேண்டும் எனத் தீர்மானிப்பார்கள்.

இன்னும் பெரிய நாளிதழ்களில் இரவு நேரச் செய்தியாசிரியர் என ஒருவர் செயல்பட்டு வருவார். இவர் பகல் நேரச் செய்தியாளரிடத்தில்

நெருங்கிய தொடர்பு உடையவராக இருப்பார். அப்போதுதான் கூறியது கூறல், மிகைபடக் கூறல் ஏற்படாமல் இருக்கும்.

பெரிய பெரிய தலைவர்களின் மரணம், பெருத்த மக்கள் சேதம், விமான விபத்து, இரயில் விபத்து, ஆட்சிக் கலைப்பு முதலியவை பற்றிய செய்திகள் நள்ளிரவிலும் வந்து கொண்டே இருக்கும். அவற்றை உடனடியாகச் செய்தித் தாளில் கடைசி நேரச் செய்தியாகச் சேர்ப்பது இரவு நேர ஆசிரியர் பணியாகும்.

### ✦ வணிகப் பகுதி ஆசிரியர்

வணிகப் பகுதி, நிதி, தொழில் போன்ற துறைச் செய்திகளுக்கும் கருத்துரைகளுக்கும் வணிகப் பகுதி ஆசிரியர் பொறுப்பு வகிப்பார்.

### ✦ விளையாட்டுப் பகுதி ஆசிரியர்

விளையாட்டு தொடர்பான செய்திகளைக் கவனிப்பது விளையாட்டுப் பகுதி ஆசிரியரின் கடமையாகும்.

### ✦ கலைப்பகுதி ஆசிரியர்

திரைப்படம், பிற கலைகள், பொழுதுபோக்கு ஆகியன தொடர்பான செய்திகளைப் பார்த்துச் செய்தியாக்குவது இவரது பணியாகும்.

### ✦ சிறப்புப் பகுதி ஆசிரியர்

செய்தித்தாளில் அறிக்கைகள், தனிக்கட்டுரைகள், சிறப்புக் கட்டுரைகள் முதலியவற்றைத் தவிர்ப்பதும் வெளியிடுவதும் இவருடைய பணியாகும்.

### ✦ நகரச் செய்தியாசிரியர்

நகரத்தின் செய்திகளைச் சேகரிக்கும் பொறுப்பு நகரச் செய்தியாசிரியரின் பணியாகும். புதுப்புதுச் செய்திகளை முதல் பக்கத்தில் சுடச்சுடத் தருபவரும் இவரேதான்.

### ✦ தந்திப் பகுதி ஆசிரியர்

தந்திவழிச் செய்திகளைத் தேர்வதும் தொகுப்பதும் தலைப்பிடுவதும் ஆகிய பொறுப்புகளைத் தந்தி ஆசிரியர் செய்து வருகின்றார்.

### ✦ இலக்கியப் பகுதி ஆசிரியர்

இலக்கண இலக்கியம் சார்ந்த செய்திகளையும் கருத்துகளையும் வெளியிடும் பணி இவரைச் சாரும்.

### ✦ தனிச் செய்தியாசிரியர்

உள்நாட்டு, வெளிநாட்டுச் செய்தி அறிக்கைகளைத் தயாரித்து வழங்குபவர் தனிச் செய்தியாசிரியர் ஆவார். நாட்டில் நிகழக்கூடிய பொதுவான முக்கியச் செய்திகளைச் சிறப்பாக அரசியல் செய்திகளையும் இவர் பொறுப்பேற்று எழுதி வருகின்றார்.

## துணையாசிரியர்கள்

இதழ் ஆசிரியர்களுக்கு உதவியாளராக விளங்கிச் செயல்படுவதால் இவர்கள் உதவியாசிரியர்கள் அல்லது துணை ஆசிரியர்கள் எனப்படுகின்றனர்.

இதழியல் துறையில் மேல்மட்ட அறிவாளிகள்தாம் துணை ஆசிரியர்கள். மக்களிடம் பெயர் பெற்றிருக்கும் செய்தித்தாளுக்குக் கவர்ச்சியையும் சுவையையும் துணையாசிரியர் குழுவினர் வழங்குகின்றனர்.

இதழியல் திறனாய்வாளர்கள் துணையாசிரியர்களுக்கு உரிய தகுதிகளாகக் கூறியவற்றைக் காணலாம்.

1. துணையாசிரியர்களிடம் மிகவும் நுட்பமான இருவகை அறிவாற்றல் இருக்க வேண்டும். செய்திகளைக் கவனமாக ஆராய்தல், செய்திகளின் தன்மைகளைப் புரிந்து கொள்ளுதல் என்பனவே அந்த அறிவாற்றல் ஆகும்.
2. நல்ல மொழி நடையில் செய்திகளை அமைக்க வேண்டும்.
3. நாட்டு நடப்பினையும் நிகழ்ச்சிகளையும் அவற்றின் போக்கினையும் நன்கு அறிந்தவராக இருக்க வேண்டும்.
4. தாம் பணியாற்றும் செய்தித்தாள் பற்றியும் அதன் கொள்கைகள் பற்றியும் நன்கு தெளிவாகப் புரிந்திருக்க வேண்டும்.
5. எப்பொழுதும் கவனத்துடனும் விழிப்புடனும் செயல்பட வேண்டும்.
6. நூல்கள், நாடகங்கள், செய்தித்தாள்கள், பருவ இதழ்கள், மதிப்புரைகள், சட்டம், அரசின் அமைப்பு முறை, இடங்களின் பெயர்கள், அரசியல் மற்றும் சமுதாயத் தொடர்புகள், புவியியல், வரலாறு, மனித இயல்பு, வாழ்க்கை முறைகள் முதலியவற்றை அறிந்து கொள்ள வேண்டும்.
7. இலக்கியத் தரம், செய்தியின் தகுதி போன்றவற்றை உணர்கின்ற ஆற்றலைப் பெற்றிருக்க வேண்டும்.

8. சின்னஞ்சிறு விவரங்களையும் அறிந்தவராக விளங்க வேண்டும்.
9. பொது அறிவை மேல்நிலையில் பெற்றவராக இருக்க வேண்டும்.
10. துணையாசிரியர் ஒரு வழக்குரைஞரைப் போல எதனையும் துருவி ஆராய்ந்து விரைவாக ஒரு முடிவுக்கு வரும் ஆற்றலைப் பெற்றிருக்க வேண்டும்.

ஆசிரியர்கள் இல்லாத நேரத்தில் அவர்களின் கடமைகள் எல்லாம் துணையாசிரியர்களின் கடமையாகும். கருத்துரை, மதிப்புரை, விமர்சனம், திறனாய்வு முதலியவற்றைச் செய்வதும் துணையாசிரியர்களின் பணியாகும். செய்திகளை விரித்தும் தொகுத்தும் தலைப்பு வழங்கியும் எழுதுவது அவர்களின் பொறுப்பாகும். சில வேளையில் மெய்ப்புத் திருத்தும் பணியும் இவர்களுக்குக் கூடுதல் பொறுப்பாக அமையலாம். செய்திப் பக்கங்களை உருவாக்குவதே இவ்வாசிரியர்களின் தலையாய பணியாகும்.

## மெய்ப்புத் திருத்துநர்

பெரிய இதழ்களில் மெய்ப்புத் திருத்தும் பணி (Proof Reading) பெரிய பணியாக அமைந்திருக்கும். குறித்த நேரத்தில் வெளிவரும் தன்மை கொண்ட நாளிதழில் பிழை இல்லாமல் இருக்க வேண்டும். அவ்வாறு பிழையில்லாமல் இதழ் வெளிவருவதற்கு அப்பணியைத் துணையாசிரியர்கள் மட்டும் பார்த்தால் போதாது. எனவே மெய்ப்புத் திருத்துநர்கள் நியமிக்கப்படுகிறார்கள். அந்த மெய்ப்புத் திருத்துநர்கள் செய்யும் பணியைத் துணையாசிரியர்களில் ஒருவர் மேற்பார்வையிடுவார்.

இதழாசிரியர் பணி எவ்வாறு கால வரையறை இல்லாத பணியோ அதைப் போன்றே மெய்ப்புத் திருத்துநரின் பணியும் கால வரையறை இல்லாத பணிதான் என்றாலும் மெய்ப்புத் திருத்துநர் என்பவர் பணியாளராகக் கருதப்படுவதால் பகல் நேர மெய்ப்புத் திருத்துநர், இரவு நேர மெய்ப்புத் திருத்துநர் என்று பிரித்துப் பணி வழங்கப் படுகிறது. பிழை திருத்தம் பற்றி முன்பே விளக்கப் பட்டுள்ளது. மெய்ப்புத் திருத்துநர் என்னும் பிழை திருத்துநரும் ஆசிரியர் குழுவில் இடம் பெறுபவர் என்பதால் இங்கும் குறிப்பிடப்பட்டுள்ளது.

## இதழ் நடை

எந்தவொரு இதழுக்கும் தனிச்சிறப்பை வாசகர் நடுவே ஏற்படுத்துவது அவ்விதழின் மொழி நடையாகும்.

மொழி நடைக்குத் தடை இல்லை என்பதுதான் உண்மை. ஆனால் அம்மொழியானது பல பரிமாணங்களில் வலம் வந்து

கொண்டிருக்கிறது. இருவர் பேசிக் கொள்ளும் பொழுது அவ்விருவருக்கு மட்டுமே புரிந்து கொள்ளும் மொழி நடையில் பேசிக் கொள்கிறார்கள். இந்த நேரத்தில் அவர்கள் பேசிக் கொண்டது சரியான மொழி நடையா என்று பார்ப்பது முக்கியம் அல்ல; புரிந்து கொள்வது தான் முக்கியம். இதே போல்தான் ஆசிரியர்கள் மாணவர்களிடம் பேசுவதும் பேச்சாளர்கள் மேடையில் பேசுவதும் அமையும். ஆனால் இதழியல் மொழிநடை என்பது முற்றிலும் மாறுபட்ட ஒன்றாகும். படிக்கத் தெரிந்த அனைவரும் படித்து எளிமையாகப் புரிந்து கொள்ளும் வகையில் அமைய வேண்டும். ஒரு செய்தித்தாளில் வரும் செய்திகளைப் படிக்க, விளக்கம் தெரியாமல் பிறரின் உதவியையோ அல்லது அகராதியின் உதவியையோ நாடும்படி இருக்கக் கூடாது. எனவே பேச்சு வழக்கில் இருக்கின்ற மொழி நடையைப் பயன்படுத்த வேண்டும். புரிகின்ற மொழியில் எழுதினால் மட்டும் போதாது; பேசுகின்ற மொழியில் எழுதுதல் வேண்டும்.

## தமிழ் இதழியல் நடை வளர்ச்சி

தமிழ் மொழிக்கும் ஆங்கில மொழிக்கும் இடையே நிறைய வேறுபாடுகள் உள்ளன. அதாவது ஆங்கில இதழ்களில் தொடக்கம் முதலே பெரும்பாலானோர் ஆங்கிலப் புலமை உள்ளவர்களாகவே இருந்தனர். எனவே அன்று முதல் இன்று வரை ஆங்கில மொழிநடை உயர்வானதாகவே இருந்து வருகிறது. மேலும், ஆங்கிலம் அந்நிய மொழி என்பதால் அதில் 'பேச்சு வழக்கு வேறுபாடுகள்' ஏற்படுவதில்லை. எனவே, எழுத்து நடைக்கும் பேச்சு நடைக்கும் பெரிய வேறுபாடு எதுவும் இருக்காது.

தமிழ் இதழ்களை முதலில் தொடங்கியவர்கள் தமிழ் மொழிப் புலமை பெற்றவர்கள் அல்லர். அரசியலில் விழிப்புணர்வை உருவாக்கும் நோக்கில் இதழ்களைத் தொடங்கினார்கள். அக்காலத்தில் எழுதப் படிக்கத் தெரிந்த மக்கள் மிகக் குறைவாக இருந்தனர். எனவே மொழி உணர்வில்லாமலேயே இதழ்கள் வந்து கொண்டிருந்தன. இதழ்களுக்கு எழுதுபவர்கள் தயங்காது பேச்சுத் தமிழில் எழுதுவதையே இதழியல் தமிழாகக் கொண்டு எழுதி வந்தனர். ஆங்கிலமும், வடமொழியும் கலந்த கலவையாகவே தமிழ் நடை இருந்து வந்தது. எடுத்துக்காட்டாக, ''தஞ்சை டெல்டாவுக்கு மேட்டூர் அணை, ஜலம் பிப்ரவரி 11 வரை சப்ளை நீடிக்கும்'' என்று தான் எழுதி வந்தார்கள்.

தமிழ் இதழ்களின் மொழிநடையில் பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியவர் திரு.வி.க. அவர்களே. உணர்ச்சி, விறுவிறுப்பு, வேகம் போன்ற நடைப்போக்குகளை 'தேச பக்தன்', 'நவசக்தி' என்ற

இதழ்களில் பயன்படுத்தினார். உறங்கிக் கிடந்த தமிழ் எழுத்தாளர் களையும், தமிழ் மக்களையும் தட்டி எழுப்பினார்.

## மொழிநடை நூல்

பெரும்பாலும் வெளிநாட்டுச் செய்தித்தாளின் நடைமுறையைத் தமிழ் இதழ்களும் பின்பற்றி வருகின்றன. வெளிநாட்டில் ஒவ்வொரு நாளிதழும் தங்களுக்கென்று 'மொழிநடைக் கையேடு' (Style Book) ஒன்றை வைத்திருக்கும். அதைப் போன்றே தமிழ் இதழ்களிலும் காணப்படுகிறது. சி.பா. ஆதித்தனாரின் 'இதழாளர் கையேடு' என்னும் நூல் இவ்வகையைச் சேர்ந்தது ஆகும். தமிழ் மொழியை எப்படி எல்லாம் பயன்படுத்தலாம் என்பதை அந்நூல் தெளிவாக விளக்குகிறது. சில இடங்களில் இலக்கண மரபு மீறப்பட்டும் சில இடங்களில் மரபு மீறாமலும் இந்நூலில் இதழ் மொழி நடையை அவர் அமைத்துள்ளார்.

இலக்கணப்படி 'அஃதாவது' என்று எழுதுவதே சரி. ஆனால் பேச்சு வழக்கில் 'அதாவது' என்றே பேசுகிறோம். எனவே 'அதாவது' என்றே பயன்படுத்த வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார். 'உடல்', 'பயிற்சி' என்னும் சொற்களைச் சேர்க்கும் போது 'உடற்பயிற்சி' என்று சேர்க்காமல் 'உடல் பயிற்சி' என்றே எழுத வேண்டும் என்று இதழாளர் கையேடு தெரிவிக்கிறது. 'ஒரு, ஓர்' என்னும் எண்ணுப் பெயரை இடத்திற்கேற்பப் பொருந்துமாறு 'ஒருநாள்' ஓர் அறிவிப்பு' என்று எழுத வேண்டும் என இலக்கண மரபுப்படி குறிப்பிட்டுள்ளார்.

## தனிநடை

எல்லாச் செய்தித்தாள்களும் ஒரே மாதிரி எழுத வேண்டும் என்பதில்லை. வாசகர்களுக்குச் செய்திகளை அறிவித்தல் என்பது இன்றியமையாதது என்பதால் அவ்வாசகர்கள் எளிதாகப் புரிந்து கொள்ளும் வகையில் மொழிநடை அமைய வேண்டும். ஒருவர் மற்றொருவரைப் போல் இருப்பதில்லை. இதைப் போலத்தான் மொழிநடையிலும் ஒவ்வோர் இதழும் ஒவ்வொரு நடையைப் பின்பற்றலாம். ஆனால் எளிமை, இனிமை, சுருக்கம், தெளிவு முதலியவை இதழின் உயிர் மூச்சாக விளங்க வேண்டும்.

## பிழையற்ற மொழி நடை

இதழ்களின் நடை இலக்கண, இலக்கிய நடையாக இருக்க வேண்டும் என்பதில்லை. ஆனால் இலக்கணப் பிழைகளுடன் அமையக் கூடாது. எழுத்துப் பிழைகளையும், இலக்கணப் பிழைகளையும் நீக்கி எழுத வேண்டும். மேலும் தொடர் அமைப்புத்

தவறுகள் நிகழாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். ஏனெனில் படிக்கின்ற வாசகர்கள் தவறாகப் பொருள் புரிந்து கொள்ள ஏதுவாக அது அமைந்து விடும்.

## தெளிவு

இதழில் சொல்லுகின்ற கருத்துக்களை நேரடியாகச் சொல்லுவது மிகவும் நன்று. ஒன்றைச் சொல்ல மற்றொன்றைச் சுட்டிக்காட்டி எழுதும் முறை, வாசகர்களைப் பொருள் புரியாமல் வைத்து விடும்.

மொழி நடை தெளிவாக அமைய வேண்டுமானால் உடன்பாட்டு வாக்கியங்களைப் பயன்படுத்துவது நல்லது. முடிந்தவரை எதிர்மறை வாக்கியத்தைத் தவிர்த்தல் மிக நன்று. சிறுசிறு வாக்கியங்களாக எழுதினால் அவ்வளவாகப் பிழைகள் ஏற்படா.

புதிய சொற்களைப் பயன்படுத்தும் பொழுது கவனமாக இருக்க வேண்டும். அச்சொற்களுக்கு விளக்கமும் தரவேண்டும். இல்லை யென்றால் வாசகர்கள் முழுமையாகப் புரிந்து கொள்ள இயலாது.

கால்புள்ளி, அரைப்புள்ளி, முக்காற் புள்ளி, முற்றுப்புள்ளி போன்ற நிறுத்தக் குறிகளைச் சரியான இடத்தில் பயன்படுத்த வேண்டும். புள்ளிகளைச் சரியாகப் பயன்படுத்தாவிட்டால் தவறுகள் எளிமையாக வர வாய்ப்புள்ளது.

இரு பொருள் தரும் சொற்களைப் பயன்படுத்தாமல் தவிர்ப்பது சிறந்த முறையாகும். வேற்றுமை உருபுகளைச் சரியான இடத்தில் பயன்படுத்த வேண்டும்.

### பிறமொழிச் சொற்கள்

பிறமொழிச் சொற்களைத் தமிழ் இதழாளர்கள் தவிர்த்து எழுதுவது நல்லது. பேச்சுத் தமிழில் கலந்துள்ள பிறமொழிச் சொற்களைப் பயன்படுத்தும் போது அதற்கெனச் சில வரையறைகளைச் சி.பா. ஆதித்தனார் குறிப்பிட்டுள்ளார். ''ஸ, ஷ, க்ஷ, ஜ, ஹ ஆகிய வடமொழி (கிரந்த) எழுத்துகளைக் கூடியவரை தவிர்க்க வேண்டும். சொல் சிதையாதபடியும், உச்சரிப்பு மாறாத படியும் அவற்றைப் பேச்சு வழக்கில் உள்ள தமிழ் எழுத்துகளில் மாற்றி எழுத வேண்டும்.

'ராஜேஸ்வரி' என்பதை 'ராஜேசுவரி' என்றும் 'செக்கஸ்லோவா கியா' என்பதைச் 'செக்கசுலோவாகியா' என்றும் 'பட்டாஸ்' என்பதைப் 'பட்டாசு' என்றும் எழுத வேண்டும்.

ஆனால், 'மாஸ்கோ' என்பதை 'மாசுகோ' என்றோ 'பாகிஸ்தான்' என்பதைப் 'பாகிசுதான்' என்றோ எழுதக் கூடாது. இது உச்சரிப்பதற்குக்

கடினமாக இருக்கும். 'பஸ்' என்பதை 'பசு' என்று எழுதினால் பொருள் மாறிவிடும்.

'ராமஸ்வாமி' என்பதை 'ராமசுவாமி' என்று எழுதக் கூடாது. 'ராமசாமி' என்று எழுதவேண்டும். இது உச்சரிப்பதற்கு எளிதாக இருக்கும்.

'ஜாதி' என்பதை 'சாதி' என்று எழுதலாம். ஆனால் 'ராஜாஜி' என்பதை 'ராசாசி' என்றோ 'எம்.ஜி.ஆர்' என்பதை 'எம்.சி.ஆர்' என்றோ எழுதக் கூடாது.

'கக்ஷி' என்பதைக் 'கட்சி' என்றும் 'ரக்ஷாபந்தன்' என்பதை 'ரட்சாபந்தன்' என்றும் எழுத வேண்டும்.

சொல்லுக்கு முதலில் வரும் 'க்ஷ' என்ற எழுத்தை 'ச' என்று எழுதலாம். எடுத்துக்காட்டாக 'க்ஷத்திரியர்' என்பதைச் 'சத்திரியர்' என்று எழுத வேண்டும்.

'ஹரியானா' என்பதை 'அரியானா' என்றும் 'ஹெலிகாப்டர்' என்பதைக் 'கெலிகாப்டர்' ('எலிகாப்டர்' அல்ல) என்றும் 'ஹோமியோபதி' என்பதை 'ஓமியோபதி' என்றும் 'ஹெரால்டு' என் பதை 'எரால்டு' என்றும் எழுதலாம். ஆனால் ஆங்கிலேயர் பெயர் களான 'ஹீத்' என்பதைக் 'கீத்' என்றோ 'ஈத்' என்றோ எழுதக் கூடாது. 'ஹோம்' என்பதைக் 'கோம்' என்றோ 'ஓம்' என்றோ எழுதக் கூடாது. உச்சரிக்கக் கடினமாக இருக்கும்; பொருளும் மாறிவிடும்.

சில வடமொழிச் சொற்களை எவ்வாறு தமிழில் பயன்படுத்த வேண்டும் என்பதை,

| | | |
|---|---|---|
| ஜலம் | - | தண்ணீர் |
| புஷ்பம் | - | பூ |
| ராஜ மானியம் | - | மன்னர் மானியம் |
| புருஷன் | - | கணவன் |
| க்ஷேத்திரம் | - | புண்ணிய ஊர் |
| க்ஷயரோகம் | - | காச நோய் |
| பலஹீனம் | - | பலவீனம் (பலஹீனம் அல்ல) |
| ஹிருதயம் | - | இதயம் (இருதயம் அல்ல) |

என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## சிறப்புத் தேர்ச்சி

வணிகம், பொருளாதாரம், அரசியல், நாட்டு நடப்பு, திரைப் படம், விளையாட்டு வளர்ச்சித் திட்டங்கள் என்று தனித்தனியாக

எழுதத் தற்பொழுது இதழாளர்கள் உள்ளனர். இதற்காக அவர்களுக்குத் தனிப் பயிற்சியளித்துக் கொள்ள வேண்டும்.

ஓர் இதழாளர் எந்தத் துறை சார்ந்த பணியைச் செய்ய இருக்கிறாரோ, அந்தத் துறை பற்றிய தெளிவு கொண்டவராக இருத்தல் வேண்டும். வணிகச் செய்திகள் பற்றி எழுதுபவர் வணிகத்தின் வரலாற்றை அறிந்தவராக இருத்தல் வேண்டும். இதைப் போன்றே ஒவ்வொரு துறை சார்ந்த இதழாளரும் சிறப்புத் தேர்ச்சி பெறுதல் தேவையாகும். இவை அனைத்துக்கும் பொதுவாகத் தமிழ் இதழாளர்கள் அனைவரும் தமிழ்மொழியில் சிறந்த புலமை உடையவராக இருத்தல் வேண்டும். அவ்வாறு புலமை பெறாமல் தமிழ் இதழியல் துறைக்கு வந்துவிட்டால் தமிழ் அறிவைப் பெறச் சிறப்புப் பயிற்சி மேற்கொள்ள வேண்டும்.

# 20. இதழ்களில் விளம்பரம்

ஒரு செய்தியை அல்லது கருத்தைத் திட்டமிட்ட நபர்களின் நினைவில் நிறுத்துவதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் ஊடகத்தின் (Medium) வழியாகச் சொல்லப்படுவதே விளம்பரம் எனப்படுகிறது. ஒருவர் ஒரு இலட்சம் ரூபாய் நன்கொடை வழங்கினார் என்று வானொலியிலோ, தொலைக்காட்சியிலோ தெரிவிக்கப்பட்டால் அது செய்தியாகிறது. அதுபோல ஒரு கடைவாசலில் ''அதிரடி விற்பனை'', ''தள்ளுபடி விற்பனை'', ''யுகப்புரட்சி'' என்றெல்லாம் எழுதிவைத்திருந்தால் அதுவும் பொதுமக்களுக்கான ஒரு செய்தியாகவே கருதப்படும். இதுவே ஊரின் பல இடங்களிலும் எழுதி வைக்கப்பட்டிருக்குமானால் அது விளம்பரமாகிறது. ஒரு பொருளின் உற்பத்தியும் விற்பனையும் விளம்பரத்தைச் சார்ந்தே உள்ளன.

## விளம்பர வாயில்கள்

விளம்பரங்கள் மூன்று வகையான வழிகளில் நம்மை அடைகின்றன. அவையாவன:

1. படித்தல்
2. பார்த்தல்
3. கேட்டல்

என்பவை ஆகும். இவற்றில் படித்தல் என்னும் வாயில் வழியாகவே இதழ்களில் விளம்பரம் செய்யப்படுகிறது.

## விளம்பர நோக்கமும் வகையும்

அனைத்து விளம்பரங்களும் அனைவருக்கும் பயன்படுவதில்லை. அவரவர்க்கு வேண்டிய விளம்பரங்களையே ஒவ்வொருவரும் தேர்ந்தெடுத்துப் பார்க்கின்றனர். இத்தகைய குறிப்பிட்ட சில மாந்தர்களுக்காகச் (Target People) செய்யப்படும் விளம்பரங்கள் அவற்றின் நோக்கங்களைப் பொறுத்துப் பின்வருமாறு வகைப்படுத்தப்படுகின்றன.

1. தூண்டுதல் விளம்பரங்கள் (Persuasive)
2. விளக்கமுறை விளம்பரங்கள் (Informative)
3. நிறுவன விளம்பரங்கள் (Institutional)
4. முதலீட்டு விளம்பரங்கள் (Financial)

5. வரி விளம்பரங்கள் (Classified)

6. வணிக விளம்பரங்கள் (Trade)

7. கூட்டு முறை விளம்பரங்கள் (Co-sponsoring)

8. தொழிலக விளம்பரங்கள் (Industrial)

9. அரசு விளம்பரங்கள் (Govt)

## தூண்டுதல் விளம்பரங்கள்

விளம்பரங்களின் தலையாய நோக்கம் விற்பனையைப் பெருக்குவதே ஆகும். இந்த நோக்கத்தை நிறைவு செய்யுமாறு பொருள்களை வாங்கத் தூண்டும் வண்ணம் விளம்பரங்கள் அமைய வேண்டும் என்பர். இவ்வாறு அமைந்த விளம்பரங்களைத் தூண்டுதல் விளம்பரங்கள் என்பர். இவை பொதுவாக நுகர்வோரை விளிப்பன வாகவும், அவர்களை நோக்கி வினவுவது போலவும் நேரடிமுறையில் அமைந்திருக்கும். இதனை விளித்தல் நிலை கூறல், எதிர்மறை நிலை கூறல், நேரடி விளிப்பு என்ற வகைகளில் அடக்குவர்.

## விளக்கமுறை விளம்பரங்கள்

சிலவகை விளம்பரங்களில் விற்பனைப் பொருளைப் பற்றிய விளக்கம் விரிவாகக் காணப்படும். இவ்வகை விளம்பரங்கள் வாடிக்கையாளர்களை விளிக்கும்முறை, வினாத்தொடுக்கும் முறை போன்ற உத்திகள் அமைந்தும், உத்திகள் இன்றி, விற்பனைப் பொருளின் விளக்கமாவும் அமைந்திருக்கும்.

## நிறுவன விளம்பரங்கள்

பெரிய நிறுவனங்கள் சமுதாய நலனைக் கருதிச் சமுதாயத்திற்குத் தேவைப்படும் சில அறிவுரைகளையும், வழிமுறைகளையும் வெளியிடுகின்றன. இவை நிறுவன விளம்பரங்கள் எனப்படும். ஆண்டுமலர், தீபாவளிமலர், தொழில்மலர், திருவிழாக்கள், கருத்தரங்குகள், மாநாடுகள், விளையாட்டுப் போட்டிகள் ஆகியவற்றில் இதுபோன்ற விளம்பரங்கள் காணப்படும். தற்காலத்தில் தொலைக்காட்சியில் இதுபோன்ற விளம்பரங்கள் இடம்பெறுகின்றன.

## முதலீட்டு விளம்பரங்கள்

வங்கிகள், சிறுசேமிப்புத் திட்டம், பங்குதாரர் திட்டம், சீட்டுக் கம்பெனிகள் முதலியவை தொடர்பான விளம்பரங்கள் முதலீட்டு விளம்பரங்கள் எனப்படும். இவை முதலீடு செய்பவரைக் கருத்தில் கொண்டு வெளியிடப்படுகின்றன. பணமுதலீடு செய்பவரைத் தூண்டும் வண்ணமும், கவர்ந்திழுக்கும் போக்கிலும், இலவசப் பரிசுப்

பொருள்களை அறிவிக்கும் பாங்கிலும் இத்தகு விளம்பரங்கள் அமைந்திருக்கும். பொதுவாகக் 'கனவை நனவாக்குவது' என்ற கருத்து இத்தகு விளம்பரங்களின் மைய இழையாக விளங்கும்.

## வரி விளம்பரங்கள்

விளம்பரங்களின் அளவைக் கொண்டு கட்டணம் வசூலிக்காமல் விளம்பரத்திலுள்ள வரிகளின் எண்ணிக்கையை அடிப்படையாகக் கொண்டு கட்டணம் நிர்ணயிப்பதுண்டு. வரிகளின் எண்ணிக்கையால் கட்டணம் பெறப்படும். இத்தகு விளம்பரங்கள் 'வரி விளம்பரங்கள்' எனப்படுகின்றன. விளம்பரங்களின் தன்மைக்கேற்றவாறு இவை விற்பனை, புத்தகம், கல்வி, வேலை வாய்ப்பு, மணமகன் தேவை, இடம், நிலம், வீடு தேவை என்று இன்னபிற வகைகளாக வெளிவரும். விற்பனை அதிகமாக உள்ள நாளிதழ்களில் - பெரும்பாலும் ஆங்கில நாளிதழ்களில் வரிவிளம்பரங்கள் பக்கம் பக்கமாக வெளியாகின்றன.

ஆங்கில இதழ்களில் இவை Match Makers (Matrimonial, Space Hunt (Real Estate), Education, Talent Bank, Situation Vacant (Wanted, Appointment) ஆகிய தலைப்புகளில் வெளியாகின்றன. வரிவிளம்பரங் கள் அதிகமாக இடம் பெறுவதால் நாளிதழின் விற்பனை அதிகரிக்க வாய்ப்புண்டு. எனவே சில நாளிதழ்கள் இத்தகு வரிவிளம்பரங்களுக்குக் கட்டணச் சலுகைகளையும் அறிவிக்கின்றன. சில இதழ்களில் வெளியாகும் வரிவிளம்பரங்களுக்கு எழுத்தெண்ணிக் கட்டணம் வசூலிக்கப்படுகின்றது. சில இதழ்களில் வரிவிளம்பரத்தில் உள்ள சொற்களின் எண்ணிக்கை அடிப்படையிலும் கட்டணம் வசூலிக்கப் படுகிறது.

## வணிக விளம்பரங்கள்

இவை வாடிக்கையாளர்களுக்காக அன்றி வணிகரைக் கருத்தில் கொண்டு செய்யப்படும் விளம்பரங்களாகும். புதிதாக ஒரு பொருளை அறிமுகப்படுத்தும்போது அதற்கான முகவர்கள், விற்பனையாளர்கள் தேவை என்றும், விற்பனைப் பிரதிநிதிகள் இல்லாத ஊர்களுக்கு அவர்கள் நியமிக்கப்படுவார்கள் என்ற நோக்கிலும், விற்பனை செய்யப்பட்ட பொருளுக்கு எப்பொழுதும் எந்த இடத்திலும் விற்பனைக்குப் பின் சேவை உண்டு என்பதைத் தெரிவிக்கும் முகமாகவும் இவை விளம்பரப்படுத்தப்படுகின்றன.

## கூட்டு முறை விளம்பரங்கள் (Co-sponsoring)

இரு நிறுவனங்கள் கூட்டாகத் தரும் விளம்பரங்கள் இவ்வகையில் அடங்கும். இவ்வகை விளம்பரங்கள் தொலைக்காட்சிகளில் அதிகப் பங்கு வகிக்கின்றன. ஒரு தொடரை அல்லது நிகழ்ச்சியை இரண்டு

முதல் எட்டு நிறுவனங்கள் இணைந்து வழங்கும் போக்கு பரவலாகக் காணப்படுகிறது. ஒரு நிறுவனத்தின் பொருளை வாங்கும் போது மற்றொரு நிறுவனத்தின் பொருள் இலவசமாக வழங்கப் படுவதையும் இவ்வகையில் அடக்கலாம். இதழ்களில் குறிப்பிட்ட சில சிறப்பு நாள்களில் பிற நிறுவனப் பொருளை இலவசமாக வழங்குவதும் உண்டு.

## தொழிலக விளம்பரங்கள்

பெரும் தொழிலகங்கள் தாங்கள் உற்பத்தி செய்யும் பொருள்களைத் தங்கள் தொழிற்சாலையின் பெருமையுடனும் ஆற்றலுடனும் இணைத்துக் காட்டிச் செய்யும் விளம்பரங்களைத் தொழிலக விளம்பரங்கள் எனலாம்.

## அரசு விளம்பரங்கள்

மக்களுக்கு அரசாங்கம் செய்துள்ள நன்மைகள், திட்டங்கள், ஒப் பந்தப் புள்ளிகள் (டெண்டர்), அறிவிப்புகள், அறிவிக்கைகள் (Notices), வேலை வாய்ப்பு அறிவிப்புகள், ஏல விளம்பரங்கள், பரிசுச் சீட்டு விளம்பரங்கள், சாதனைகள் முதலியவை அரசின் சார்பில் வெளி யாகும் விளம்பரங்களாகும். இவற்றுள் மைய அரசின் விளம்பரங்களும் மாநில அரசின் விளம்பரங்களும் அடங்கும். பிற மாநில அரசுகள் தாம் செய்துள்ள சாதனைகளை நாளிதழ்களில் சிறப்பு மலர் இணைப்பாக (Pull out supplement) வெளியிடுகின்றன. இவை யும் அரசு விளம்பர வகையில் அடங்கும்.

இதழ்களின் பொருளாதாரத்தைப் பொறுத்தவரையில் அரசு விளம்பரங்கள் முக்கியமானவையாகக் கருதப்படுகின்றன. அரசு விளம்பரங்களை அதிகமாகப் பெறும் நாளேடு நிதி நெருக்கடியின்றிக் 'கவலைப்படாமல்' வெளிவருகிறது.

## விளம்பரத்தின் வடிவமைப்புக் கூறுகள்

ஒரு நல்ல விளம்பரத்திற்குப் பின்வரும் வடிவமைப்புக் கூறுகள் இன்றியமையாதவை ஆகும்.

1. முக்கியத் தலைப்பு (Main headline, Master head)
2. துணைத் தலைப்பு (Sub-headline)
3. முக்கிய வரைபடம் (Dominant illustration)
4. மாதிரி வரைபடம் (Model Illustration)
5. விவர வரிகள் (Copy block / Copy Matter)
6. வணிக உரிமக் குறியீடு (Trademark / Logo symbol)
7. விளம்பரத் தொடர் (Bromide)

## முக்கியத் தலைப்பு

விளம்பர வாசகத்தின் (Copy matter) இன்றியமையாத பகுதியே முக்கியத் தலைப்பு எனப்படுகிறது. தலைப்பைத் தேர்ந்தெடுப்பதில் அதிகக் கவனம் தேவை. தலைப்புத் தொடர் தெளிவாகவும், கவர்ச்சி யாகவும் இருத்தல் வேண்டும். இத்தொடரில் தேவையில்லாமல் கடினமான சொற்களைப் பயன்படுத்தலாகாது. தலைப்புத் தொடர் சுருக்கமாகவும் கவனத்தைச் சுண்டியிழுப்பதாகவும் இருத்தல் வேண்டும். படங்களால் கவரமுடியாது என்ற நிலையில் கவர்ச்சியான தலைப்பு அவசியமாகிறது.

## துணைத் தலைப்பு

விளம்பரத் தொடரின் இறுக்கத்தைத் தளர்த்திச் செறிவை ஊட்டுவதற்குத் துணைத் தலைப்பு தேவைப்படுகிறது. சுருக்கமான தலைப்புத் தொடரின் விளக்கமாக இது அமைகிறது. விற்பனைப் பொருளைப் பற்றிய இன்றியமையாத ஓரிரு செய்திகள் இத்தலைப்பில் இடம்பெறுகின்றன.

## முக்கிய வரைபடம்

ஓராயிரம் வார்த்தைகள் சொல்ல வருவதை ஒரு படம் உணர்த்தி விடும். உலக அரங்கில் செய்திகளை உணர்த்துவதற்கு இன்றும் வெறும் படங்களை மட்டும் பயன்படுத்தும் முறை உள்ளது. பன்னாட்டு மக்கள் வந்து செல்லுகின்ற விமான நிலையங்கள், பன்மொழி பேசும் மக்கள் வந்து செல்லுகின்ற இரயில் நிலையங்கள், பன்மொழி பேசும் மக்கள் வாழுகின்ற பெருநகரங்கள், கல்வியறிவு பெறாதோர் அதிகமாக வசிக்கும் ஊர்கள் ஆகிய எல்லா இடங்களிலும் மொழிகளும் எழுத்துகளும் உணர்த்த இயலாத அறிவிப்புகளை யெல்லாம் படங்களும் குறிகளும் எளிதில் உணர்த்தி விடுகின்றன. எடுத்துக்காட்டாக, விமானநிலையங்களிலும் இரயில் நிலையங் களிலும் காணப்படும் கழிவறைகள், ஓய்வு அறைகள், உணவு விடுதிகள் ஆகியவற்றிற்கான வரைபட அறிவிப்புகளைச் சுட்டிக் காட்டலாம்.

தொலைக்காட்சியில் காட்டப்படும் சில காட்சிகளைக் கண்ட அளவிலேயே (உரையாடல்களோ, எழுத்துகளோ தேவையில்லை) குழந்தைகள் கூட அது இன்ன பொருளுக்கான விளம்பரம் என்பதை முன்கூட்டியே சொல்லிவிடுகின்ற ஆற்றலைப் பெற்றுள்ளனர். அந்த அளவிற்குப் படங்கள் குறியீடுகளாகப் பயன்படுகின்றன. எனவே படங்களை 'விளம்பரங்களின் கண்கள்' எனலாம். படங்களைத் தேர்வு செய்வதற்கென்றே விளம்பர நிறுவனங்களில் தனிப்பிரிவுகள் உள்ளன. படங்களை வரைதல், நிழற்படங்கள் எடுத்தல், மாதிரிகள் (Model) செய்தல், வெட்டி ஒட்டுதல் (Cutting Pasting), வண்ணங்கள் தேர்ந்

தெடுத்தல், எழுத்து வகைகளைத் (Types) தேர்ந்தெடுத்தல் ஆகியன இப்பிரிவின் பணிகளாகும்.

**மாதிரி வரைபடங்கள்**

விளம்பரத்தின் முக்கிய வரைபடத்திற்குத் துணையாக அமையும் பிற வரைபடங்களை மாதிரி வரைபடங்கள் எனலாம். முக்கியத் தலைப்பிற்குத் துணைத் தலைப்புகள் ஆற்றுகின்ற பணியை முக்கிய வரைபடத்திற்கு மாதிரி வரைபடங்கள் ஆற்றுகின்றன.

**விவர வரிகள்**

விற்பனை செய்யப்படும் பொருளைப் பற்றிய மேலதிக விவரங்கள் இப்பகுதியில் இடம்பெறும். நுகர்வோர் ஒருவர் இப்பொருளின் மேன்மையைப் பேசுவது போலவும் இது அமையும். இப்பொருளை வாங்குவதால் அடையும் நன்மை, கிடைக்கும் இலாபம், விற்பனைத் தரம் இன்ன பிற செய்திகள் இப்பகுதியில் இடம்பெறும்.

**வணிக உரிமக் குறியீடு**

விளம்பரத்திற்கு உட்படுத்தப்படும் விற்பனைப் பொருளின் பெயரை அல்லது நிறுவனப் பெயரை வடிவமைத்து, அதற்கென அரசினரிடம் உரிமம் பெறுவர். அவர்களைத் தவிர அந்த வடிவமைப்பைப் பிறர் பயன்படுத்தலாகாது என்பது இதன் பொருளாகும். இவ்வாறு அமையும் விற்பனைப் பொருளின் பெயர் வடிவமைப்பு அல்லது நிறுவனப் பெயரின் வடிவமைப்பு வணிக உரிமக்குறியீடு (Registered Trade Mark - TM) எனப்படுகிறது.

**விளம்பரத் தொடர்**

மேற்சொன்னவாறே வடிவமைக்கப்பட்ட சொற்களை அல்லது தொடர்களை ஒரு நிறுவனம் விளம்பரத்திற்காகப் பயன்படுத்தும் போது அது அந்நிறுவனத்தின் விளம்பரத் தொடர் (Bromide) எனப்படுகிறது. இதைப் பயன்படுத்துவதற்கும் இந்நிறுவனத்தினர் அரசிடம் உரிமம் பெற்றிருப்பர்.

ஒரு விளம்பரத்தில் இங்கு விளக்கப்பட்ட அனைத்து வடிவமைப்புக் கூறுகளும் இடம்பெறும் எனக் கூறவியலாது. இவற்றுள் ஒன்றோ, சிலவோ ஒரு விளம்பரத்தில் இடம் பெறுவதுண்டு. விளம்பரத்தின் அளவுக்கும் கற்பனை நயத்துக்கும் ஏற்ப இவை வேறுபடுகின்றன.

**விளம்பர வகைகள் (Classification of Advertisement)**

பொதுவாக விளம்பரங்களைப் பல்வேறு வகைகளில் பிரித்துக் காண முடியும். அவ்வாறு பிரிக்கப்படும் விளம்பர வகைகள் பல. அவற்றுள் சிலவற்றை இங்கே காண்போம்.

1. பொருள் விளம்பரம்
2. காட்சி விளம்பரம்
3. வரி விளம்பரம்
4. அறிவிப்பு விளம்பரம்
5. நிறுவன விளம்பரம்
6. நிதி விளம்பரம்
7. செய்தி வடிவ விளம்பரம்
8. பொருளாதார விளம்பரம்
9. முழுப்பக்க விளம்பரம்
10. சில்லறை விளம்பரம்
11. கூட்டுறவு விளம்பரம்
12. தொழில் விளம்பரம்
13. அரசு விளம்பரம்
14. வணிக விளம்பரம்
15. சட்ட விளம்பரம்

## பொருள் விளம்பரம்

பல்வேறு பொருள்களைப் பற்றி இதழ்களில் விளம்பரம் செய்தல் பொருள் விளம்பரம் எனப்படும். புதிதாக உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களைப் பற்றி விளம்பரங்கள் இதழ்களிலும் தொலைக்காட்சி யிலும் தொடர்ந்து வருதலைக் காணலாம். சோப்பு, பவுடர், ஷாம்பூ, மின்னியல் பொருள்கள், மின்னணுப் பொருள்கள் முதலான பொருள்கள் பற்றி விளம்பரம் செய்யப்படுகிறது.

## காட்சி விளம்பரம்

நிறுவனங்களும் வணிகர்களும் காட்சி விளம்பரங்களை வெளி யிடுகின்றார்கள். இதழில் எந்தப் பக்கத்தில் விளம்பரம் அமைகின் றதோ, அதற்கேற்ற கட்டணம் உண்டு. முதல் பக்கத்தில் பத்திரிகையின் இருபுறமும் அமைந்துள்ள காது விளம்பரங்களுக்குத் தனிக்கட்டணம் உண்டு.

## வரிவிளம்பரம்

வேலைவாய்ப்பு, வாடகை வீடு, திருமணம் போன்ற விளம்பரங்கள் சொற்களின் எண்ணிக்கைக்கேற்ப அமையும். வரிக்கேற்பக் கட்டணம் அமைவதால் 'வரி விளம்பரங்கள்' என்று வழங்குவர். வரிவிளம்பரங்களால் இதழ்களுக்கும் நல்ல வருவாய் கிடைக்கிறது. இதழ்களில் காணப்படும் வரி விளம்பரங்களின் பகுப்பை இங்கே காண்போம்.

கட்டி முடிக்கப்பட்ட தொகுப்பு வீடுகள்
புதிய பொருள்களின் அறிமுகம்
கல்வி
மனை விற்பனை
தங்குமிடம்
தற்போதைய வேலை வாய்ப்பு
நினைவு
சீட்டு நிறுவனங்கள்
பொதுத்துறை ஒப்பந்தப்புள்ளி
தொலைக்காட்சி
வானவூர்தி
டெண்டர்
சித்த வைத்திய சாலைகளின் அறிவிப்புகள்

என்பவை வரி விளம்பரங்களாக இடம்பெறுகின்றன.

## அறிவிப்பு விளம்பரம்

விமானம், கப்பல், இரயில் புறப்படும் நேரம், கால தாமதம் பற்றிய அறிக்கைகள் இவ்வகையைச் சார்ந்தவையாகும்.

## நிறுவன விளம்பரம்

நிறுவனம் பற்றிய விளம்பரங்கள் இந்த வகையைச் சார்ந்தவையாகும். நிறுவனச் சிறப்புகளைக் கூறி நிறுவனப் பொருள்களை வாங்கத் தூண்டுபவையாகும்.

## நிதி விளம்பரம்

நிதி நிறுவனங்கள், சீட்டு நிறுவனங்கள், வங்கிகள் முதலீடு, தவணை, சீட்டு முதலான விவரங்களடங்கிய விளம்பரங்கள் இந்த வகையைச் சார்ந்தவையாகும்.

## செய்தி வடிவ விளம்பரம்

விளம்பரங்களைச் செய்திகளைப் போல் வெளியிடுவதும் உண்டு, வாசகர்களை இழுக்க இப்படிப்பட்ட உத்தி கையாளப்படுகின்றது. செய்தி போன்ற அமைப்பு இத்தகைய விளம்பரங்களுக்கு உண்டு. விளம்பரம் எனச் சுட்டிக் காட்டுவதற்காகக் கடைசியில் விளம்பரம் என இருக்கும்.

## பொருளாதார விளம்பரம்

கூட்டத்தின் அறிக்கைகள், தலைவரின் சொற்பொழிவு, கம்பெனியின் பங்குதாரர்களுக்காக வெளியிடப்படுவது.

## முழுப்பக்க விளம்பரம்

திரைப்படத் தயாரிப்பாளர், அரசு செய்தி விளம்பரத் துறையினர் ஒரு பக்க அளவில் விளம்பரம் செய்வர். அதனை முழுப்பக்க விளம்பரம் என்பர்.

## சில்லறை விளம்பரம்

மேலை நாடுகளில் சில்லறை விற்பனைக்காகத் தனி விளம்பரம் கொடுப்பர். தற்பொழுது நம் நாட்டிலும் பின்பற்றப் படுகின்றது. உதாரணமாகப் பெண்களின் அழகு தரும் பொருள்களைப் பற்றி விளம்பரம் செய்தல் சில்லறை விளம்பரமாகும்.

## கூட்டுறவு விளம்பரம்

கூட்டுறவு நிறுவனங்கள் சேமிப்புக்கு அதிக வட்டி தருவதாகச் செய்கின்ற விளம்பரங்கள் ஆகும். கூட்டுறவு வீடு கட்டுவோர் சங்கம் முதலியவற்றின் விளம்பரங்களும் இவ்வகை சார்ந்தவை ஆகும்.

## தொழில் விளம்பரம்

மெழுகுவர்த்தி, ஊதுபத்தி முதலான குடிசைத் தொழில் முதல் பல்வேறு வகையான தொழில்கள் தொடர்பான விளம்பரங்களைத் தொழில் விளம்பரங்கள் என்பர்.

## மூலப் பொருள் விளம்பரம்

மூலப்பொருள் எந்திரங்கள் பற்றிய விளம்பரங்கள் இப்பிரிவில் அடங்கும். கணினி, நகல் எடுக்கும் எந்திரம் முதலியவற்றின் விளம்பரமும் மூலப் பொருள் விளம்பரம் ஆகும்.

## அரசு விளம்பரம்

(i) ஏலக்குத்தகை விளம்பரங்கள்

(ii) அரசின் செயல் திட்ட விளம்பரங்கள்

(iii) போலியோ, எய்ட்ஸ், குடும்ப நலத்திட்ட விளம்பரங்கள்

முதலானவை அரசு விளம்பரங்கள் ஆகும்.

## சட்ட விளம்பரம்

சொத்துத் தகராறு தொடர்பாக உரிமையாளர் சார்பாக வழக்குரைஞர் வெளியிடும் விளம்பரங்கள் சட்ட விளம்பரம் எனப்படும். பொருளடிப்படையில் விளம்பரங்களை இன்னும் பகுக்கலாம் என்பது குறிப்பிடத்தக்கது.

## விளம்பர முகவர் நிறுவனங்கள்

வணிகர்களுக்கும் செய்தித்தாளுக்குமிடையே பாலமாக அமைந்து செயல்படுபவர் விளம்பர முகவர். இவர்கள்தான்

விளம்பரம் பற்றிய செய்திகளையும் உத்திகளையும் வணிகரிடம் கூறி அவர்களிடம் விளம்பரம் பெற்று, அதற்குரிய செய்தித்தாளைத் தேர்ந்தெடுத்து விளம்பரம் வெளிவரச் செய்வர்.

அனைவரையும் கவரும் விதத்தில் விளம்பரத்தை வடிவமைப்பதும் இவர்கள் பணியாகும். செய்தித்தாளிடம் இவர்கள் தரகு பெறுவர். வணிகர்கள் இத்தகைய விளம்பர நிறுவனங்களை நாடி வருகின்றனர். இத்தகைய விளம்பர நிறுவனங்கள் பெரிய நகரங்களில் இருக்கின்றன.

இந்திய விளம்பர சபை விளம்பரம் பற்றிய அறிவுரைகளையும், உதவிகளையும் வழங்குகிறது. பத்திரிகையின் எண்ணிக்கை அடிப்படையில் விளம்பரங்கள் அளிக்கப்படுவதுண்டு.

இந்திய விளம்பர முகவர் சங்கம் 1945 இல் தொடங்கப்பட்டு இந்திய விளம்பர அலுவலகம் மூலம் அரசு விளம்பரங்கள் அளிக்கப் படுகின்றன. மக்கள் தொடர்புத்துறை மூலம் மாநில அரசு விளம்பரம் அளிக்கிறது.

## விளம்பர உத்திகள்

விளம்பரங்களில் நாளும் புதுமை புகுத்தப்படுகின்றது. பாதி ஆங்கிலமும் பாதி தமிழும் கலந்து மக்களைக் கவர வேண்டும் எனக் கருதி விளம்பரம் செய்கின்றனர். தலைகீழாக எழுதி மக்களைக் கவரும் நோக்கில் விளம்பரம் செய்யப்படுகிறது. இவ்வாறு செய்யப்பட்டு வரும் விளம்பரங்களில் தற்பொழுது பல உத்திகள் கையாளப்படுகின்றன.

### உரையாடல் உத்தி

இருவர் உரையாடுவது போல் விளம்பரம் அமைத்து அதன்மூலம் பொருளை அறிமுகம் செய்வது உரையாடல் உத்தி எனப்படும்.

### வினா விடை உத்தி

வினாக்களைக் கேட்பது போன்று அமையும் விளம்பரங்கள் வினாவிடை உத்தி வகையைச் சார்ந்தவை ஆகும். இவ்வகை விளம்பரம் 'எய்ட்ஸ் நோய்' விளம்பரத்திற்குப் பயன்படுத்தப் படுகிறது.

### சிறப்புக் கூறும் உத்தி

ஒரு குறிப்பிட்ட பொருளைப் பயன்படுத்துபவர் அதன்மூலம் பலன் பெறுவதை வெளிப்படுத்துமாறு விளம்பரம் அமைப்பது சிறப்புக் கூறும் உத்தி ஆகும்.

## வேற்றுமைப்படுத்தும் உத்தி

ஒரே வகையான இரண்டு பொருள்களில் ஒன்றைப் பயன் படுத்துபவர் வளம் பெறாமல் இருப்பதையும் இன்னொன்றைப் பயன்படுத்துபவர் வளம் பெற்றிருப்பதையும் காட்டுவது வேற்றுமைப் படுத்தும் உத்தி ஆகும்.

இவ்வாறு பல வகையான உத்திகளை வணிக நோக்கில் விளம்பரங்களில் பயன்படுத்துகின்றனர்.

## திரைப்பாடல் உத்தி

திரைப்படப் பாடல்களின் மெட்டுகளில் அல்லது திரைப்படப் பாடல்களைப் போட்டு விளம்பரம் செய்வது திரைப்பாடல் உத்தி எனப்படும்.

## போலச் செய்யும் உத்தி

சமுதாயத்தில் புகழ் பெற்ற ஒருவரைப் பார்த்து அவரைப் போல இருக்க விரும்புவது மனித இயல்பு. திரைத் துறையில் பிரபலமாக இருக்கும் ஒருவர் பயன்படுத்தும் பொருளை எல்லோரும் பயன்படுத்துவர் எனக் கருதித் திரைத் துறையினரின் படங்களைப் போட்டு விளம்பரம் செய்வது போலச் செய்தல் என்னும் உத்தி ஆகும்.

## வெற்றிட உத்தி

சில நாளிதழ்களில் ஒரு குறிப்பிட்ட பகுதியை விளம்பரதாரர் வெற்றிடமாக விடுவர். 'அதில் என்ன அறிவிக்கப்படும்' என அறியும் ஆவலைத் தூண்டும் வகையில் இவ்வகை வெற்றிட உத்தியைப் பயன்படுத்துவர்.

தற்காலத்தில் விளம்பரத்தின் வாயிலாக எந்தப் பொருளையும் விற்றுவிடும் தன்மையைக் காணமுடிகிறது. ஒருவர் துண்டறிக்கையின் வாயிலாக விளம்பரம் செய்தால் ஆகும் செலவினைவிட இதழ்களின் வாயிலாகச் செய்யும் விளம்பரத்தின் செலவு குறைவு ஆகும். படித்தவர், படிக்காதவர் என்னும் பாகுபாடு இல்லாமல் இதழ்களின் வாயிலாக விளம்பரம் அனைவரையும் சென்று சேர்கிறது.

மின்னணு ஊடகங்கள் வாயிலாகச் செய்யப்படும் ஊடகங்களின் நிலைபேற்றினைவிட இதழ்களின் வாயிலாகச் செய்யும் விளம்பரம் நீடித்த தன்மை கொண்டுள்ளது.

# துணை நூல்கள்


1. பழநி. அரங்கசாமி, 'செய்தி உலகம்', முத்தமிழ் நிலையம், மதுரை.
2. சி.பா. ஆதித்தனார், 'இதழாளர் கையேடு' ராணிமுத்து, சென்னை - 7.
3. கி. இராசா, மக்கள் தகவல் தொடர்பியல், பாவை பதிப்பகம், சென்னை.
4. சு. இன்னாசி, மா. எட்வர்ட் சாலமோன் ராஜா, 'இதழியல்', சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை - 5.
5. சோ. கலைவாணி, 'பத்திரிகைக் கலை', சாரதா பப்ளிக்கேஷன்ஸ், குற்றாலம்.
6. எஸ். கிருஷ்ணன், 'விளம்பரத் தொழில்', பார்த்திபன் பதிப்பகம், மதுரை.
7. மா.பா. குருசாமி, 'இதழியல் கலை', தேன்மொழி பதிப்பகம், திண்டுக்கல்.
8. க. குளத்தூரான், 'தமிழ்ப் பத்திரிகைகள்', ஜெயகுமாரி ஸ்டோர்ஸ், நாகர் கோவில்.
9. க. குளத்தூரான், 'இந்திய விடுதலைக்கு முந்தைய இதழ்கள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை - 113.
10. இரா. கோதண்டபாணி, 'இதழியல்', கற்பக நூலகம், மதுரை.
11. சு. சக்திவேல், 'இதழியல்', மணிவாசகர் பதிப்பகம், 8/7, சிங்கர் தெரு, பாரிமுனை, சென்னை - 108.
12. மா.சு. சம்பந்தன், 'தமிழ் இதழியல் சுவடுகள்', தமிழர் பதிப்பகம், 243, லிங்கி செட்டி தெரு, சென்னை - 1.
13. மா.சு. சம்பந்தன், 'தமிழ் இதழியல் களஞ்சியம்', தமிழர் பதிப்பகம், 243, லிங்கி செட்டி தெரு, சென்னை - 1.
14. மா.சு. சம்பந்தன், 'இந்திய விடுதலைக்கு முந்தைய இதழ்கள்', உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை - 113.

15. மா.சு. சம்பந்தன், 'தமிழ்ப் பத்திரிகைகள்', தமிழர் பதிப்பகம், 243, லிங்கி செட்டி தெரு, சென்னை.

16. முனைவர் சா. சவரிமுத்து, 'இதழியல் மக்கள் தகவலியல்', மணிமொழி பதிப்பகம், எப்.4, டெக்கான் அடுக்ககம், 28, எல்.ஐ.சி. குடியிருப்பு, கிழக்குத் தாம்பரம், சென்னை - 59.

17. அ.மா. சாமி, 'தமிழ் இதழ்கள் தோற்றம் - வளர்ச்சி', நவமணி பதிப்பகம், 12, இரண்டாவது தெரு, நகர வளர்ச்சிக் குடியிருப்பு, சென்னை - 4.

18. அ.மா.சாமி, 'இதழாளர் ஆதித்தனார்', உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை - 113.

19. அ.மா. சாமி, 'இசுலாமிய இதழ்கள்'', நவமணி பதிப்பகம், 12, 2 ஆவது பெருந்தெரு, நகர வளர்ச்சிக் குடியிருப்பு, சென்னை-4.

20. அ.மா. சாமி, 'இந்து சமய இதழ்கள்', நவமணி பதிப்பகம், 12, 2 ஆவது பெருந்தெரு, நகர வளர்ச்சிக் குடியிருப்பு, சென்னை - 4.

21. அ.மா. சாமி, 'கிறித்தவ சமய இதழ்கள்' நவமணி பதிப்பகம், 12, 2 ஆவது பெருந்தெரு, நகர வளர்ச்சிக் குடியிருப்பு, சென்னை- 4.

22. ஆ. சிவசுப்பிரமணியன், 'தமிழ் அச்சுத் தந்தை அண்ட்ரிக் அடிகளார்', உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை - 113.

23. எம்.செல்லையா, 'செய்திகள்', பழனியப்பா பிரதர்ஸ், சென்னை - 14.

24. சிலம்பு செல்வராசு, 'பாரதி இந்தியா', உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தரமணி, சென்னை - 113.

25. சோமலெ, 'தமிழ் இதழ்கள்', சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை - 5.

26. தங்க மணியன், 'பத்திரிகையியல்', மாணிக்கம் பதிப்பகம், மானச கங்கோத்திரி, மைசூர் - 570 006.

27. லேனா. தமிழ்வாணன், 'தமிழ்ப் பத்திரிகைகளின் தோற்றமும் வளர்ச்சியும்', மணிமேகலை பிரசுரம், 4, தணிகாசலம் சாலை, தியாகராய நகர், சென்னை - 17.

28. எஸ்.சி.பட், 'இந்தியப் பத்திரிகைகள் 1955 முதல்', பப்ளிகேஷன்ஸ் டிவிஷன், தகவல், ஒலிபரப்புத் துறை அமைச்சகம், இந்திய அரசு.

29. க. பட்டாபிராமன், 'தமிழ்ப் பத்திரிகைகள்', அருணோதயம், சென்னை- 14.

30. டாக்டர் கு. முத்துராசன், 'இதழியல் வளர்ச்சியும் மொழி பெயர்ப்பும்', ஐந்திணை பதிப்பகம், 279, பாரதி சாலை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

31. இராம. முத்தையன், 'விளம்பரம்', தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை.

32. ஜான். லோப்பல், 'மக்கள் தொடர்புக் கலை', நர்மதா வெளியீடு, சென்னை.

33. அ. விநாயகமூர்த்தி, 'விளம்பரக் கலை', பாலமுருகன் பதிப்பகம், மதுரை.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| Essays and Tributes on Tirukkural (1886-1986) | 100.00 |
| இந்தியச் சூழலில் மொழிஇழப்பு ஒரு சமுதாய மொழியியல் பார்வை | 60.00 |
| பழந்தமிழில் அறிவியல் | 45.00 |
| நீறணி பவளக் குன்றம் | 35.00 |
| உலகப் பகுத்தறிவு நீரோட்டத்தில் பெரியார் | 35.00 |
| கலீலியோ முதல் கலாம் வரை | 35.00 |
| குலோத்துங்கன் கவிதைகள் ஒரு கோபுர தீபம் | 60.00 |
| தமிழறிஞர் அடிகளாசிரியரின் சிறுவர் இலக்கியப் பாடல்கள் | 30.00 |
| நாமக்கல் கவிஞரின் தமிழ்ப்பணி | 30.00 |
| ஈழத்தில் கண்ணகி கலாச்சாரம் | 30.00 |
| சிறுபஞ்சமூலம்- ஒரு சமூகவியல் பார்வை | 30.00 |
| மீளும் வரலாறு:அறியப்படாத நந்தனிக் கதை | 40.00 |
| சங்கத் தமிழ் பகுதி 1 | 100.00 |
| சங்கத் தமிழ் பகுதி 2 | 100.00 |
| சங்கத் தமிழ் பகுதி 3 | 115.00 |
| சங்கத் தமிழ் பகுதி 4 | 130.00 |
| சங்கத் தமிழ் பகுதி 5 | 110.00 |
| ம.பொ.சி.யின் வாழ்க்கை வரலாற்று இலக்கியங்கள் | 60.00 |
| தொல்காப்பியம், சங்க இலக்கியம் பதிப்பும் பதிப்பாளரும் | 160.00 |
| இந்தி நாடகப்பனுவல் (ஆடிமாதத்தில் ஒரு நாள்) | 50.00 |
| திராவிட இயக்கத்தில் அன்னை மணியம்மையின் பங்கு | 40.00 |
| பண்பாட்டுப் பார்வையில் திருமந்திரம் | 70.00 |
| காரைக்கால் அம்மையார் பாடல்கள் ஓர் ஆய்வு | 40.00 |
| Freudism in the Novels of James Joyce and T.Jankiraman: A comparative study | 125.00 |
| இலக்கணத்தொகை யாப்பு பாட்டியல் | 290.00 |
| தென்கிழக்கு ஆசியா நாடுகளில் தமிழ்ப்பண்பாடு | 310.00 |
| பதிற்றுப்பத்து மூலமும் ஆராய்ச்சிப்புத்துரையும் | 170.00 |
| தமிழ் மொழிபெயர்ப்பு முன்னோடிகள் | 185.00 |
| மனிதப் புனிதர் கக்கன் | 110.00 |
| மொழிபெயர்ப்பு:ஒரு கவின்கலை | 75.00 |
| மூவர்தமிழ் மூன்று பார்வைகள் | 50.00 |
| காமன்வெல்த் நாடுகளின் கவிதைகள் | 100.00 |
| அறிஞர்கள் பார்வையில் பேரறிஞர் அண்ணா | 145.00 |
| அறிஞர் அண்ணா-மொபசான் சிறுகதைகள்-ஒப்பாய்வு | 160.00 |
| இராசேந்திர சோழன் வெளியிட்ட எசாலம் செப்பேடுகள் | 55.00 |
| கடலடியில் தமிழர் நாகரிகம் | 55.00 |
| கடற்பொறியியற் கலைச்சொற்கள் (குறுங்கலைக்களஞ்சியம்) | 150.00 |
| சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள் | 55.00 |
| படைப்பு நெறிமுறைகள் | 160.00 |
| Sangam Classics: New Perspectives | 165.00 |
| சங்க அகப்பாடல்கள் தோழிக்கூற்று | 170.00 |
| தமிழ் நாடக வகையும் வரலாறும் | 110.00 |
| வா.செ.கு. என்ற ஆளுமையாளர் | 50.00 |
| உ.வே.சா.வின் குறுந்தொகை உரைத்திறன் | 45.00 |
| மருதத்தில் மக்கள் வாழ்வியல் | 40.00 |

**712 இதழியல் உலகம் 120.00**